ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

எறும்பியப்பா அருளிச்செய்த

# ‘விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்’

## – விளக்கவுரையுடன் கூடியது



எறும்பியப்பா


பதிப்பாசிரியர் :

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர்



வெளியீடு :

விஜய வருடம் ஐப்பசி – ரேவதி (15.11.2013)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## எறும்பியப்பா அருளிச்செய்த

# 'விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்'
# - விளக்கவுரையுடன் கூடியது

பதிப்பாசிரியர்

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ. அ. கிருஷ்ணமாசார்யர்

விளக்கவுரை: புதுச்சேரி கைங்கர்யஸ்ரீமான். பெருமாள் ராமானுஜதாஸர்

விஜய வருடம் ஐப்பசி - ரேவதி
(15.11.2013)

விலை: ரூ.400/- தபாற்செலவு தனி.

# நூல் விளக்கம்

| | |
|---|---|
| நூலின் பெயர் | 'விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்' - விளக்கவுரையுடன் கூடியது |
| தலைப்பு | சமயம் |
| பதிப்பாசிரியர் | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர் |
| வெளியீட்டு நாள் | 15.11.2013. |
| தாள் | 18 Kg.Maplitho. |
| அச்சு | Offset Printing, 12 points |
| அளவு | Demy 1/8 |
| அச்சகம் | ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம், 214,கீழைஉத்தரவீதி,ஸ்ரீரங்கம், திருச்சி-6. ☎: 0431-2434398, 2435641. |
| பக்கங்கள் | 500 |
| படிகள் | 250 |
| விலை | ரூ.400/- |
| உரிமை | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ, ஸ்ரீரங்கம். |
| நூல் கிடைக்குமிடம் | ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம், 214, கீழை உத்தர வீதி, ஸ்ரீரங்கம்,திருச்சி-6. ☎:0431 - 2434398, 2435641. Cell: 98842 89887, 90424 53934 Website: www.srivaishnavasri.com E-Mail: reachsrivaishnavasri@gmail.com |

ஸ்ரீ:

# முன்னுரை

ஸ்ரீமணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில் ஒருவர் எறும்பியப்பா. இவர் சோளஸிம்ஹபுரத்துக்கு அண்மையில் உள்ள எறும்பியென்னும் கிராமத்தில் அவதரித்தவர். மஹாகவி, மஹாவித்வான். ஸ்ரீமணவாளமா முனிகள் விஷயமாக இவர் வரவரமுனிசதகம், வரவரமுனி காவ்யம், வரவர முனிசம்பூ, வரவரமுனிநாடகம், பூர்வதின சர்யா, உத்திரதினசர்யா போன்ற க்ரந்தங்களை அருளிச் செய்துள்ளார்.

'விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்' என்ற இந்த நூல் ஸ்ரீமணவாளமாமுனிகளுடைய காலத்திற்குப்பிறகு எழுந்ததோர் நூலாகும். ஸ்ரீமணவாளமாமுனிகளின் சிஷ்ய ரான போரேற்றுநாயனார் என்பாருடைய சிஷ்யர் ஸ்ரீசேனா பதியாழ்வானுக்கும், எறும்பியப்பாவிற்கும் இடையே நிகழ்ந்த ஸம்ப்ரதாய தொடர்புடையதான வினாக்களுக்கு விடைகளாக இந்த நூல் அமைந்துள்ளது. ஸ்ரீமணவாளமா முனிகளுடைய காலத்திற்குப் பிறகு ஸ்ரீமணவாளமாமுனி களால் 'மூர்க்கர்' என்று குறிப்பிடப்பட்ட சில ஸ்ரீவைஷ்ண வர்கள் விபரீதார்த்தங்களைப் பரப்ப முற்பட்டனர் என்பது இந்த நூல் வாயிலாக அறியப்படுகிறது. பூர்வர்களுடைய ஆசாரங்களுக்கும் அனுஷ்டானங்களுக்கும் விபரீதமான வகையில் நூதன அனுஷ்டானங்களையும், ஆசாரங்களையும் சிலர் பரப்ப முற்பட்டனர்.

அதற்கான அகச்சான்றுகள் இந்த நூலின் இறுதிப் பகுதியில் காணப்படுகின்றன.

''இவ்வதிமாத்ர ப்ரவ்ருத்திக்கு ஐதிஹ்யம், எம்பெருமானார் தர்ஶநம் நிர்வஹித்துக் கொண்டு போருகிற காலத்திலே யாதவப்ரகாசன், இவருடைய வைபவமெல் லாங்கண்டிருந்தும், மாத்ருவசநத்தாலும் பகவத் ஆஜ்ஞையாலும் அவரை யாஶ்ரயித்து, ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திலே ப்ரவ்ருத்திக்கக் கண்டு தத் புத்ர ஶிஷ்யர்கள் ஸஹிக்கமாட்டாதே, இத்தர்ஶநத்திலே அபேத ப்ருவ்ருத்தி யுண்டாம்படி தூஷிக்க வேணுமென்று நினைத்து நம்பூர்வாசார்யர்கள்; *(293)* ''ப$_4$த்திரஷ்டவித$_4$ாஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சே$_2$பி வர்த் ததே ஸ விப்ரேந்த்$_3$ரோ முநிஸ்ரீமாந்'' (ப$_4$ாரதம்) என்றருளிச் செய்த பகவதாஜ்ஞையாலே விலக்ஷண ஸம்பந்த ஸ்வீகாரத்தை அங்கீகரிக்க;

அதுவே ஹேது வாக்கி ஸர்வவர்ண ஸாங்கர்யம் உண்டாக்கி, சரம ஶ்லோகத்திலே ஸர்வதர்மத்யாகத்தை விதித்ததே ஹேதுவாக்கி, *(294)* ''இத$_3$ம் குரு - இத$_3$ம் மாகார்ஷீ'' என்கிற விரண்டும் த்யஜிக்க வேணுமென்று நிஷித்தாநுஷ்டாநத்தையும் ப்ரவேஶிப்பித்து, இது சரமதர்ம மென்று சில க்ரந்தங்களை கல்பித்து, தத்கால வர்த்திகளான சில ஆஶுரப்ரக்ருதிகளை மோஹிப்பிக்க அர்த்தகாம பரவஶருக்கு ஸஹகாரமாகையாலே, தாவாநலம் போலே வ்யாபித்து வாரா நிற்க, அக்காலத்திலே எம்பெருமானார் சிலரைப் பிடித்து ஶிக்ஷித்து க்ரந்தங்களை வாங்கி முறித்து தத்க்தமாக்கிப் பொகட்டாலும், கலிதோஷத்தாலே மீளவும் அன்றைக்கன்று அபிவ்ருத்தமாய் ஶிஷ்டர் கர்ஹிப்பர் என்று வெளியிடாதே, ஸ்வகோஷ்டிக்கநுகுணமானார்க்கே இது, ஶிஷ்டாசாரமென்று சொல்லிக்கொண்டு, இத்தர்ஶநத்துக்கு அநர்த்த

*கரராய்த்திரியா நின்று கொண்டு, பிள்ளைலோகா சார்யர் காலத்திலும், நீர் பண்ணினவிபரீத ப்ரஶ்நங்களைச் சிலர் சங்கிக்க, அதின்மேலே ஸ்ரீவசநபூஷண திவ்ய ஶாஸ்த்ரம் பகவதாஜ்ஞையாலே பிறந்ததென்று சில ஜ்ஞாநாதிகர் அருளிச்செய்வர்.*

இதன் பொருளாவது:

''ஸர்வதர்மாந்'' என்ற சரமச்லோகத்துக்கு எதிர்த் தட்டான பொருளைக் கற்பிப்பவர் வரம்புகடந்த நிலைக்குச் சரித்திரம்; எம்பெருமானார் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தை வளர்த்துக் கொண்டு வரும்போது, யாதவப்ரகாசன் இவருடைய பெருமையெல்லாம் தெரிந்திருந்தும் அவன் தாய் வார்த்தையாலும் தேவப்பெருமாள் கட்டளையாலும் எம்பெருமானாரைச் சரணடைந்து ஸ்ரீவைஷ்ணவ சிந்தாந் தத்தில் புகுந்தது கண்டு, அவனுடைய சீடர்களும், மக்களும் பொறுக்க மாட்டாமல் இந்தச் சமயத்துக்குத் தீய ஒழுக்கங் களைக் கற்பித்துத் தூற்றவேண்டும் என்று நினைத்து நம்முடைய பூருவாசாரியர்கள்;

(293) ''மிலேச்சனாயிருந்தாலும் - தாழ்ந்த சாதியில் பிறந்தவனானாலும் பகவானிடத்தில் முன்னர்க் கூறப்பெற்ற எட்டுவித பக்தியையுடையவனாயிருந்தால் அவனை, அந்தணன், முனிவன், திருவாளன், கவிஞன்'' என்று அருளிச் செய்த பகவானது ஆணையாலே உயர்வான ஸம்பந்தத்தை ஏற்றுக் கொண்டு அங்கீகரிக்க, அதையே காரணமாக்கி சாதிக் கலப்பை யுண்டாக்கி, சரமச்லோகத்தில் ஸர்வ தர்மத்தையும் விடுவதை விதித்திருப்பதை ஏதுவாக்கி, (294) ''இதைச் செய்- இதைச் செய்யாதே'' என்று ''நல்லதைச் செய்தலும் தீயன தவிர்த்தலும் வேண்டும்'' என

வேதம் விதித்த இவ்விரண்டையும் விட்டுவிட வேண்டும் என்று சொல்லி தீயவொழுக்கத்தை உட்புகுத்தி, இதுவே மேலான இறுதியான தரும மென்று சில நூல்கள் எழுதி அக்காலத்திலுள்ள சில அசுரமனங் கொண்டவர்களை மயங்கச் செய்யவே, பணம் முதலிய பொருளிலும் இன்பத்திலும் வேட்கையுள்ளவர்களுக்கு இக்கெட்ட வொழுக்கம் துணை செய்ய சௌகரியமாகையாலே, எரிக்கும் தீயைப்போல் எங்கும் பரவாநிற்க, அக்காலத்திலே எம்பெருமானார் அவர்களில் சிலரைப் பிடித்து தண்டித்து அந்த நூல்களை வாங்கி முறித்து நெருப்பிலிட்டார்;

அவ்வாறு செய்தும் கலியின் கொடுமையாலே அந்நூல்கள் மீண்டும் அன்றைக்கன்று வளர்ந்து சான்றோர் பழிப்பர் என்று வெளியிடாதே, தங்கள் கூட்டத்தார்க்கே இது சிஷ்டாச்சாரம் என்று கூறிக் கொண்டு இந்த ஸ்ரீவைணவ சமயத்துக்குக்கேடு செய்து திரியாநிற்க, ஸ்ரீபிள்ளையுல காசிரியர் காலத்திலும் இந்தத் தொற்றுநோய் பரவி, 'நீர் கேட்ட விபரீதமான வினாக்களைக் கேட்டு ஐயமுற, அதன் பின்னர் ஸ்ரீவசநபூடணம் என்னும் திவ்விய சாத்திரம் இறைவன் அரங்கன் ஆணையிலே அவதரித்து எனச் சில நிறை ஞானத்தர் அருளிச் செய்வர்'.

இந்த நூல் 15ஆம் நூற்றாண்டில் நிலவியிருந்த சமுதாயச்சூழலை மிகத்தெளிவாக வெளிப்படுத்துகிறது. எறும்பியப்பா பலப்ரமாணங்களை மேற்கோள்காட்டி ஸ்ரீசேனாபதியாழ்வானின் பல்வேறு வினாக்களுக்கு விடையளித்துள்ளார். எம்பெருமானார் காலத்தில் 'நீறுபூத்த நெருப்பு' போல் இருந்த பல அபிப்ராய பேதங்கள் மாமுனிகள் காலத்தில் விரிவாகக் காணப்பட்டன.

திருவாய்மொழி 1-4-7 பாசுர வ்யாக்யானத்தில் நம்பிள்ளை நூதன ஆசாரமான பலமுறை நமஸ்கரிப்பது கூடாது என்பதை கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார். இதுபோன்று சில இடங்களில் நூதன ஆசார அநுஷ்டானங்களை நம்பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

ஈடு: ("திருவடியின் தகவினுக்கு என் பிழைத்தாள்) "தேவரீர் க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோ" என்று நம்பிள்ளை அருளிச்செய்யும்படி.

'யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில்' காணப்படும் கீழ்க்கண்ட குறிப்புகளை 'விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயத்தில்' காணப் படும் சில குறிப்புகளோடு இணைத்து பொருள் கொள்ள வேண்டும்.

இப்படியெழுந்தருளியிருக்கும் பிள்ளைலோகாசாரியர் பரமரஹஸ்யமுமாய் திவ்யசாஸ்த்ரமுமான ஸ்ரீவசனபூஷணத்தை ஸர்வரும் அதிகரித்து ஈடேறலாம்படி யருளிச் செய்து லோகத்தை வாழ்வித்தருள, அத்தைக்கண்டு பாகவதோச் ச்ராயம் (பாகவதர்களுடைய உயர்நிலை) பொறுக்க மாட்டாத சில அஸூயாளுக்கள் (பொறாமையையே வடிவெடுத்தவர் கள்) நம்பெருமாள் பக்கலிலே சென்று;

"பெருமாளே! பிள்ளைலோகாசார்யர் ஸ்ரீவசனபூஷணமென்று ஒரு ரஹஸ்யக்ரந்தமிட்டு தர்சனத்தையெல்லாம் வ்யர்த்தமாக்கினார்" என்று பெருமாளுடனே கோள்சொல்ல, அத்தைக்கேட்ட பெருமாளும் சீறி, பிள்ளைலோகாசார்யரை யழைத்துவிட, அவ்வளவிலே அவர் நீராட எழுந்தருளியிருக்க, நீராடியெழுந்தருளுகிற அழகிய மணவாளப்

பெருமாள் நாயனார் இவ்விசேஷங்கேட்டு பெருமாள் ஸந்நிதியில் சென்றவாறே பெருமாளும், அர்ச்சக முகேந, ''நாயனாரே! நாம் அநந்தமான அவதாரம் பண்ணினது தர்மஸம்ஸ்த்தாப நார்த்தமன்றோ? நீங்கள் ரஹஸ்யக்ரந்த மிட்டு அத்தை வ்யர்த்தமாக்கு கிறது என்?'' என்று வினவியருள;

அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும், ஸ்ரீவசன பூஷண ஸ்தாபநார்த்தமாகச் செய்தருளின ஆசார்யஹ்ருதய மாகிற ப்ரபந்தத்தை, பெருமாள் ச்ரோதாவாய் தாம் வக்தாவாக, ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சொன்னாற் போலே இவர் ஆசார்யஹ்ருதயத்தை விண்ணப் பஞ்செய்து தலைக்கட்டினவாறே பெருமாள் மிகவுகந்தருளி ''இதுவும் நாம் செய்ததொன்றன்றோ?'' என்று கோள் சொன்னவர்களை வாரியடித்துத் தள்ளி விட்டருளி நாயனா ருக்குத் தம் ஸர்வ பரிஜந பரிச்சதங்களோடே (உபகரணங் களோடே) ப்ரஹ்மரதம் ப்ரஸாதித்து உபலாளித்துத் திருமாளி கையே போகவிட்டருளினார். இவ்வைபவங் கேட்டுப் பிள்ளைலோகாசார்யரும் 'வளர்த்த தனால் பயன் பெற்றேன்' என்று அதிஸந்தோஷத்துடனே ஆலிங்கித்துக் கொண்ட ருளினார்.''

எம்பெருமானார் காலந்தொடங்கி விபரீதார்த்தங்களை வெளியிட்டு வந்த ஸ்ரீவைஷ்ணவ குத்ருஷ்டிகள் அவ்வப் போது காளான்கள் போல் காணப்பட்டன. கி.பி. 1323ஆம் ஆண்டு நிகழ்ந்த முகம்மதியர்களுடைய படையெடுப்பி னால் திருவரங்கப்பெருநகர் பாழ்பட்டது. பன்னீராயிரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் கொல்லப்பட்டனர். பல ஆசார்ய புருஷர்கள் திருவரங்கத்தைவிட்டு அகன்று, பல பகுதிகளுக்குச் சென்று விட்டனர். பல நூல்கள் அழிக்கப்

பட்டன. பெருமளவில் பண்பாட்டுச் சிதைவு ஏற்பட்டது. இத்தகைய நிகழ்வுகளால், அவ்வப்போது களையப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ குத்ருஷ்டிகள் மாமுனிகள் காலத்தில் மீண்டும் காணப்பட்டனர். அவர்கள் எழுப்பிய பல்வேறு விபரீதார்த் தங்களுக்கு விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயத் தில் கேள்வி பதில் வடிவில் எறும்பியப்பா பதில் அளித்துள்ளார்.

இந்த நூல் பாஞ்சஜன்யம் மாத இதழில் 2000ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தொடங்கி வெளிவந்தது. வைகுண்ட வாசியான ஸ்ரீ.உ.வே. திருமலை அனந்தாழ்வான், கிருஷ்ணமா சார்யர் ஸ்வாமி விளக்கவுரை எழுத 2001ஆம் ஆண்டு அக்டோபர் இதழ்வரை வெளிவந்தது. ஸ்வாமியி னுடைய கண்களில் ஏற்பட்ட கோளாறு காரணமாக அவரால் மேற்கொண்டு விளக்கவுரை எழுதித்தர இயலவில்லை. ஐந்து ஆண்டுகளுக்குப்பிறகு, பாஞ்சஜன்யம் 2006ஆம் ஆண்டு பிப்ரவரி மாத இதழ் தொடங்கி 2013ஆம் ஆண்டு செப்டம்பர் மாதஇதழ் வரை புதுச்சேரி கைங்கர்ய ஸ்ரீமான். பெருமாள் ராமானுஜதாஸர் அவர்களால் எழுதப்பெற்ற விளக்கவுரையுடன் மாதந்தோறும் 'விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயம்' பாஞ்சஜன்யம் இதழ்களில் வெளியிடப்பட்டது. சில பிழைத்திருத்தங்களோடு தற்போது இந்த நூல் புத்தகவடிவில் வெளியிடப்படுகிறது. இந்த நூல் வெளி வருவதற்கு 2010ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ஒலிக்குறி யீடுகளுடன் கூடிய நூலை உபகரித்தருளின புத்தூர் ஸ்ரீ.உ.வே. ரகுராமன் ஸ்வாமி, பிழை திருத்தம் செய்தருளிய ஸ்ரீ.உ.வே. வேங்கடேசன் ஸ்வாமி, விளக்கவுரை எழுதி உபகரித்த புதுச்சேரி கைங்கர்யஸ்ரீமான் ப்ரபந்ந வித்வான் பெருமாள்ராமானுஜதாஸர் ஆகியோர் திறத்து அடியே னுடைய க்ருதஜ்ஞையை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலிற்குக் கருத்துச் செறிவுடன் கூடிய அணிந்துரைகளை உபகரித்தருளிய மதுரைப்பேராசிரியர். முனைவர். ஸ்ரீ.உ.வே. இரா. அரங்கராஜன் ஸ்வாமி மற்றும் தில்லை திருச்சித்ரகூடம் அ.வெ. ரங்காசார்யர் ஸ்வாமி ஆகியோர் திருவடிகளில் அடியேன் சிரம் தாழ்த்தி தண்டனிடுகிறேன்.

கணிப்பொறியில் தட்டச்சு செய்து, குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் இந்த நூல் வெளிவர உதவிசெய்த திருமதி. திலகம் அழகேசன் மற்றும் குமாரி. சித்ரா ஆகியோருக்கும், பிழைதிருத்தம் செய்வதில் உதவிபுரிந்த அடியேனுடைய குமாரன் வாசுதேவன், இந்த நூலை அச்சிட்டுத்தந்த திரு.ராஜன் உரிமையாளர். R.N.R. Printers ஆகியோர்க்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவரங்கம், அடியேன் ராமாநுஜதாஸன்,
6.11.2013. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ
அ. கிருஷ்ணமாசார்யன்.

★★★

ஸ்ரீ:

## அணிந்துரை-1

மதுரைப்பேராசிரியர் முனைவர்.ஸ்ரீ.உ.வே.இரா.அரங்கராஜன் ஸ்வாமி.

ஸ்ரீமந்மணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களான வானமாமலைஜீயர், திருவேங்கடஜீயர், பட்டர்பிரான்ஜீயர், கந்தாடையண்ணன், எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளார், பிரதிவாதிபயங்கரம்அண்ணா ஆகியோரைக் குறிக்கும் பாடல் ஒன்றைப் பிள்ளைலோகம்ஜீயர் தாம் எழுதிய 'யதீந்திர ப்ரவணப்ரபாவம்' என்ற நூலில் காட்டியுள்ளார். அப்பாடல் வருமாறு:-

**"பாராருமங்கை திருவேங்கடமுனி பட்டர்பிரான்**
**ஆராமம் சூழ்கோயில் கந்தாடை யண்ணன் எறும்பியப்பா**
**ஈராரும் அப்பிள்ளை அப்பிள்ளார் வாதிபயங்கரர் என்**
**பேரார்ந்த திக்கயம்சூழ் வரயோகியைச் சிந்தியுமே".**

இவ்எண்மருள் எறும்பியப்பா என்ற தேவராஜகுரு எம்பெருமானாருக்கு வடுகநம்பியைப் போல் 'தேவுமற்று அறியாதே' ஸ்ரீமணவாளமாமுனிகளுக்கு அத்யந்தம் அபிமதமாயிருந்தார். போரேற்றுநாயனாரின் சிஷ்யராயிருந்தவர் சேனாபதியாழ்வான். இவர் மாமுனிகள் விஷயமாக நூற்றந்தாதி இயற்றியவர். 'விலக்ஷண மோக்ஷாதிகாரிநிர்ணயம்' என்ற நூல் எறும்பியப்பாவிற்கும், போரேற்று நாயனாரின் சிஷ்யரான சேனாதிபதியாழ்வானுக்கு இடையே நடந்த உரையாடலாக அமைந்துள்ளது.

### எறும்பியப்பாவின் திருநக்ஷத்திரத் தனியன்:-

**துலா ரேவதி ஸம்பூதம் வரயோகி பத$_3$ாச்ரிதம்|**
**ஸர்வ வேத$_3$ாந்த ஸம்பூர்ணம் அப்பாசார்ய மஹம் ப$_4$ஜே||**

**எறும்பியப்பாவின் நித்யத் தனியன்:-**

**ஸௌம்ய ஜாமாத்ரு யோகீ$_3$ந்த்$_3$ர சரணாம்பு$_3$ஜஷட்பத$_3$ம்|**
**தே$_3$வராஜ கு$_3$ரும் வந்தே$_3$ தி$_3$வ்யஜ்ஞானப்ரத$_3$ம் ஶுப$_4$ம்||**

'விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்' என்ற அரிய நூல் தமிழ் எழுத்துக்களில் கி.பி. 1904ஆம் ஆண்டு அச்சிடப் பட்டது. பத்திகள் பிரிக்காமல் ச்லோகங்களுக்குப் பிரிவில்லாமல் அச்சிடப்பெற்றது. மணிப்பிரவாள நடையில் அமைந்த உரைநடை நூலான இது கிடைத்தற் கரிதாகி விட்டது. இந்த நூலை முழுவதுமாக நல்ல முறையில் தெளிவாகவும், விளக்கக் குறிப்புகளோடும் அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும் என்று உணர்ந்தேன். அத்தகைய ஆர்வத்தைத் தூண்டும் வகையில் முதற்கண் இந்நூலின் ஸாரமான அர்த்தங்களை மட்டும் சுருக்கி 'வைகுந்தம் புகும் மண்ணவர் யார்?' என்ற தலைப்பில் சிறுநூலொன்று கி.பி. 1987ஆம் ஆண்டு வெளியிட்டேன். அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது.

'விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்' கி.பி. 2010ஆம் ஆண்டு கோயில் ஆத்தான் ஸ்ரீ.உ.வே. விஜயராகவாசார்யர் ஸ்வாமியால், வானமாமலை வித்வான் ஸ்ரீ.உ.வே.என்.எஸ். க்ருஷ்ண அய்யங்கார் ஸ்வாமியின் சதாபிஷேகமஹோத்ஸவ மலராக வெளியிடப்பட்டது. மணிப்பிரவாள உரைநடைப் பகுதிக்குத் தமிழ் விளக்கவுரை கொடுக்கப்படவில்லை. மேலும் வடமொழி ச்லோகங்களுக்குப் பொருளும் கொடுக்கப்படவில்லை. இந்நிலையில், இந்த உயரிய நூலைப் பலவிதமான பரிஷ்காரங்களுடன் புதுச்சேரி கைங்கர்ய ஸ்ரீமான். பெருமாள் ராமாநுஜதாஸர் உருவாக் கினார். அதனை ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி பாஞ்சஜன்யம் மாத இதழில் தொடர்ச்சியாக

வெளியிட்டார். அஃது இப்போது தனிநூலாக வெளிவருகிறது. ஸ்ரீவைஷ்ணவ வுலகு குறிப்பாக தென்னாசார்ய ஸம்ப்ரதாய நிஷ்டர்கள் போற்றும் படியாக இந்த நூல் வெளிவருவது இந்த நூற்றாண்டு செய்துள்ள பெரும் பேறாகக் கருதத்தகும். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தின் நீண்ட கால வரலாற்றில் பல சரிவுகளையும், எதிர்ப்புகளையும் நம்முடைய முன்னோர்களான மேலையார்கள் சந்தித்து, அவற்றால் திருமால் அடியார்கள் குழப்பம் அடையாதவாறு உண்மை யான அர்த்தங்களை உபதேசித்தும், அவற்றை க்ரந்தங்களாக எழுதி உபகரித்தும் பெரும் தொண்டாற்றி யிருக்கின்றனர். கி.பி. 14 ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்கி போலி யான வேஷதாரி வைஷ்ணவர்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களுக்கு முற்றிலும் முரண்பட்ட பொருளை ப்ரசாரம் செய்து பாமரர்களை மயக்கி வெறுக்கத்தக்க துராசாரங்களை அநுஷ்டானம் என்ற பெயரால் புகுத்தி வந்தனர்.

எம்பெருமானுடைய வாத்ஸல்யத்திற்கு விரைவில் இலக்காக வேண்டினால் தோஷங்களைச் செய்து கொண்டேயிருக்கவேண்டும். அவன் தோஷ போக்யன் என்பது அப்போதுதான் உறுதிப்படும். 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்ற விதியை உண்மையாக்க மது, மாம்ஸங் களைத் தின்னுதல், பிறன்மனை நயத்தல் போன்ற மிகவும் அஞ்சத்தக்க அபாயமான ஒழுக்கங்களைத் தழுவவேண்டும்; ஒருமுறை ஆசார்ய ஸம்பந்தம் முற்பட்டால் போதும். அது பின்னர் எப்படிப்பட்ட இழிசெயல்களைச் செய்தாலும் மோக்ஷத்தை உண்டாக்கியே கொடுக்கும். ஸர்வேச்வரனும் எளிவரும் இயல்வினன் ஆதலால் குற்றங்களை நற்றமாகக் கொண்டு ரக்ஷித்தருள்வான் என்ற போலி வாதங்களைப் பரப்பி அறியாதவர்களை வஞ்சிக்கத் தொடங்கினர்.

அப்போது ஸ்ரீவைஷ்ணவ ஸத்ஸம்ப்ரதாயமுடைய பெரியோர்கள் அவர்களுடைய கோட்பாடுகளைச் கண்டித்து வந்தனர். அம்முறையில் 'விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயம்' என்ற நூல் அவதரித்தது. போலி வைணவர்களாய்ப் புல்லுருவிகளாய் முளைத்தவர்களின் வரலாற்றுச் செய்திகளை முதன்முதலாக வெளிபடுத்திய மஹான் கோயில் வரயோகிராமாநுஜதாஸர் என்பவர் ஆவார். 'ஸ்ரீவிஷ்ணு தத்வ விளக்கம்' என்ற நூலை அப்பெரியார் இயற்றி கி.பி. 1872ஆம் ஆண்டு வெளியிட்டார். அதில் 'சண்டி ப்ரசண்டி மதவாத கண்டனம்' என்ற பகுதியில் பள்ளமடைஸம்ப்ரதாயம் பற்றியும் அரிய செய்திகளை வெளியிட்டுள்ளார். அந்நூல் இன்று கிடைப்பது அரிது. தேடிப்பார்க்க வேண்டும்.

இந்நிலையில் அடியேன் எதிர்பார்த்தபடியே 'விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்' என்ற பொக்கிஷம் விளக்கங்களுடன் வெளிவந்துள்ளது. அடியார்கள் இந்த நூலிற் கண்ட விஷயங்களை நன்கு உள்ளத்தில் கொண்டு மாமுனிகள்பால் மாச்சரியம் கொண்டு இகழ்வோர் முன் எடுத்தியம்பி உண்மை அறிவைப் பரப்புமாறு வேண்டுகிறேன். கைங்கர்ய ஸ்ரீமான் பெருமாள் ராமாநுஜதாஸர் மற்றும் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி திறத்திலும் ஸ்ரீவைஷ்ணவ உலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

அடியேன் தொண்டர் பாததுளி,
அரங்கராஜன்.

"மதுரா", எண்.1,ஜீவரத்தினம் நகர்,
மெயின்ரோடு, அடையார்,
சென்னை - 600 020,
அலைபேசி: 97914 57614.

***

ஸ்ரீ:

## அணிந்துரை-2

முனைவர். ஸ்ரீ.உ.வே.அ.வெ. ரங்காசார்யர், M.A., Ph.D.,
151. வடக்கு ரத வீதி,
தில்லை திருச்சித்ரகூடம் (சிதம்பரம்)-1,
தொலைபேசி எண்: 04144-220425.

நாள்:18.11.2013.

''விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்'' என்னும் இச்சீரிய நூல் ஸ்ரீமந்மணவாளமாமுநிகளின் சிஷ்யரான எறும்பியப்பா என்ற தேவராஜகுருவிற்கும், ஸ்ரீமணவாளமா முனிகளால் நவரத்னங்கள் என்று கொண்டாடப்பட்டவர் களில் ஒருவரான பேரேற்று நாயனாருடைய சிஷ்யரான ஸேநாபதியாழ்வானுக்கும் நடந்த உரையாடலாக அமைந் துள்ளது.

எறும்பியப்பாவை ஸேநாபதியாழ்வான் முதலானோர் தண்டனிட்டு, மோக்ஷமடையவிரும்பும் அடியோங்களுக்கு மோக்ஷம் பெற உரியவர்களாய், ஐஶ்வர்ய கைவல் யார்த்திகளைவிட வேறுபட்டிருக்கும் சிறப்பைப் பெற்ற பெரியோர்களுடைய ஸ்வரூபத்தைத் தேவரீர் அறுதியிட்டு அருளிச் செய்ய வேண்டும் என்று வேண்டி நின்றார்கள்.

இந்த நூல் அவரித்த சூழ்நிலையை ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் அறிந்து கொண்டால்தான் இந்த நூலின் சிறப்பினை முழுமையாக உணர்ந்து கொள்ள முடியும்.

அநாதியான ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தமானது வேதம், இதிஹாஸபுராணங்கள், பகவத்கீதை, ப்ரஹ்ம

ஸூத்ரங்கள் ஆகியவற்றால் ''ஸ்ரீமந்நாராயணனே பரம் பொருள்'' என்று அறுதியிடப்பட்டது. எனினும் அவ்வப் போது மாறுபட்ட கருத்துக்களும் நிலவி வந்தன. இவற்றை ஆழ்வார்கள் தங்களுடைய அருளிச் செயல்களில் விரிவாக விளக்கி நாராயண பரத்வத்தை நிலை நாட்டினார்கள்.

முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கையாழ்வார் முதல் பாசுரத்திலேயே அப்போது இருந்த மாற்றுக் கருத்தான திருமாலுக்கு சேஷமான விபூதியை ஸ்வதந்த்ர மென்றும், அந்யசேஷமென்றும் எண்ணும் அஞ்ஞானமான இருள்நீங்கும்படி பூமி, கடல் ஆகியவற்றை அகல் நெய்யாக உருவகப்படுத்தி, சூரியன் முதலியவை தானாகவே இயங்கவில்லை; பூமி மட்டத்திற்கு மேம்பட்ட ஸமுத்ரம் பூமியை மூழ்கச் செய்யாமல் இருப்பது ஈச்வரன் ஆணைக்கு உட்பட்டு இயங்குகின்றன என்பதை ''வையம்தகளியா'' என்ற பாசுரத்தில் தெளிவுபடுத்தினார்.

பூதத்தாழ்வார் பரம்பொருள் நாராயண சப்த வாச்யன் *(நாராயணன் என்னும் சொல்லால் குறிக்கப்படுபவன்)*, ஸர்வ ஸ்மாத்யன் *(எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்தவன்)*, ஸமஸ்த கல்யாண குணவிசிஷ்டன் *(அனைத்து விரும்பப் படும் நற்குணங்களுக்கும் இருப்பிடமானவன்)* என்று அறுதி யிட்டார். பேயாழ்வார் ஸ்ரீயப்பதியே தத்வம் என்று காட்டினார்.

இவ்வாறாக நாராயண பரத்துவத்திற்கு அவ்வப்போது நிலவிய மாற்றுக் கருத்துக்களுக்குப் பதில் சொல்லி நாராயணபரதத்வத்தை நிலைநாட்டினர் முதலாழ்வார்கள் என்பதனை அவர்கள் பிரபந்தங்களைக்கொண்டு அறிய முடிகிறது.

அடுத்து வந்த திருமழிசையாழ்வார் காலத்தில் நிலவிய கருத்துக்களுக்குப் பதில் சொல்லித் தெளிவுபடுத்துவதாக அமைந்துள்ளது நான்முகன் திருவந்தாதியின் முதற்பாசுரமே. **முதல் வாதம்:** வேதம் ஹிரண்யகர்ப்பன், ருத்ரன் போன்றவர்களை ஜகத்காரணமாகக் கூறுகின்றனவே. எனவே மூவருமே முக்கியமானவர்கள். இதற்கு ஆழ்வார் நாராயணன் ஒருவனே ஜகத்காரணபூதன் என்பதை ''நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முனும் தான்முகனாய் சங்கரனைத்தான் படைத்தான்'' என்று ப்ரஹ்மாவும், ருத்ரனும் நாராயணனால் படைக்கப்பட்டவர்கள். அனைவருக்கும் நாராயணன் அந்தர்யாமி. அதனால் பிரமன், சிவன் ஆகியோர் உண்டாக்கப்பட்ட ஜீவர்களே. ஆக ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம் ஆகியவற்றிற்கும் மூலகாரணம் நாராயணனே என்று ஆழ்வார் தெரிவித்துள்ளார்.

**அடுத்தவாதம்:** சில வேத வாக்கியங்களைக் கொண்டு ப்ரஹ்ம ருத்ராதிகளுக்குக் காரணம் நாராயணன் ஒருவனே என்று ஏற்பட்டாலும், அது ஒரு கல்பத்தில் ஆகலாம். மற்றொரு கல்பத்தில் ப்ரஹ்மனோ, ருத்ரனோ முன் இருந்து படைக்கலாம். அப்போது அந்தந்த மூர்த்திகள் முதன் மூர்த்தியாக தேவன் என ஆகலாமே என்பதாகும்.

இதற்கு ஆழ்வார் பதில் 'தேறுங்கால் தேவன் ஒருவனே'. அதாவது ஒன்றே பரம்பொருள். அருள்புரிபவனும் அவனே. ''**திவ்யோ தேவ ஏகோ நாராயண:**'' என்பதைத் தமிழில் அறிவித்துள்ளார்.

**இதற்கு மேல் ஒரு வாதம்:** வேதங்கள் நாராயணன் பரதேவதை என்று சில இடங்களிலும், சிவனே ஜகத் காரணன். (''சிவ ஏவ கேவல:'') என்றும் சொல்லியுள்ளதே.

அதனால் இருவருமே பரமாத்மா என்று கொள்ளுவது தான் பொருந்தும்.

**இதற்கு ஆழ்வார் பதில்:** கங்கையைத் தலையில் வைத்துக் கொண்டிருக்கும் சிவன் தேவாதி தேவனான எம்பெருமானோடு ஒருபடிப்பட்டவன் என்பது கொள்ளத் தகாதது. நாராயணன் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்.

**இதற்கு மேல் ஒருகேள்வி:** பாற்கடலைக் கடைந்த போது பரமசிவனைக் கொண்டுதானே விஷத்தினின்று எல்லோரையும் மீட்க நினைத்தது. ஆதலால் பரமசிவனே ஸர்வரக்ஷகன்.

**இதற்கு ஆழ்வார் பதில்:** சிவபெருமானே நாராயண பரத்துவத்தை தன் சிஷ்யர்களான அகஸ்தியர், புலஸ்த்யர், தக்ஷன், மார்க்கண்டேயர் ஆகியோருக்கு உரைத்தான் என்பதை ''ஆலநிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கு மேலை யுகத்துரைத்தான் மெய்தவத்தோன் ஞாலம் அளந்தானை ஆழிக் கிடந்தானை ஆல்மேல் வளர்ந்தானைத் தான் வணங்குமாறு'' என்றும் பாசுரத்தில் (நான்முகன்திருவந்தாதி - 17) தெளிவுபடுத்தியுள்ளார். உண்மையான தவத்தை உடைய சிவன் உலகம் அளந்தவனும், பாற்கடலில் பள்ளி கொண்டவனும், ஆலிலைமேல் வளர்ந்த பெருமானைத்தான் வழிபடும் முறையாகிய நல்வழியை முன்யுகத்தில் ஆலமரத்தின் நிழலின் கீழே நான்கு சீடர்க்கு உரைத்தான் என்று விளக்கியுள்ளார்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் அப்போதுள்ள வாதங்களுக்குப் பதில் சொல்லுவதாக அமைந்துள்ளதையும் கருத்தில் கொள்ள வேண்டும். ''உயர்வற உயர்நலமுடைய

வன்'' என்றே முதல் வரியில் அருளிச் செய்துள்ளார். இந்த இடத்து வியாக்யானத்தில், ''குத்ருஷ்டிகளுடைய மிடற்றைப் பிடித்தாப் போலே நலமுடையவன் என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி கண்டாயே'' என்று பிள்ளைப் பிள்ளை ஆழ்வானுக்கு ஆழ்வான் பணித்தபடி. (24,000ப்படி) அதாவது ''ஆகந்துக மின்றிக்கே ஸ்வரூப அநுபந்தியாயிருக்கும்'', என்றபடி (36,000ப்படி) இதிலிருந்து அப்போதுள்ள வாதம் ஸர்வேச்வரன் உண்டு, அவனுக்கு குணங்கள் கிடையாது என்பது தெரிகிறது.

இதனை அடுத்து ஆழ்வார் ஸ்ரீமந் நாராயணனே பரதேவதை. ஆகையால் மற்ற தெய்வங்களை விட்டு அவனையே பற்றுங்கள் என்பதை ''ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று - நான்முகன் தன்னொடு தேவருலகோடு உயிர் படைத்தான் - நாடிநீர் வணங்கும் தெய்வமும் உம்மையும் முன்படைத்தான் - பரந்த தெய்வமும் பல்லுலகும் படைத்து அன்று உடனே விழுங்கி, கரந்துமிழ்ந்து கடந்திடந்து கண்டும் தெளியகில்லீர் - பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் நாயகன் அவனே - இலிங்கித்திட்ட புராணத்திலும் சமணரும் சாத்தியரும், வலிந்து வாது செய்வீர்களும் மற்றும் நும் தெய்வமும் ஆகி நின்றான்''.

என்று பலபடியாக கருத்துக்களுக்குப் பதில் அருளிச் செய்து நிறைவாக ''புக்கடிமையினால் தன்னைக் கண்ட மார்க்கண்டேயனவனை, நக்கபிரான் அன்று உய்யக் கொண்டது நாராயணனருளே'' என்று அறுதியிடுகிறார்.

திருமங்கையாழ்வார், ஸ்ரீமந்நாதமுநிகள், ஸ்ரீஆளவந்தார், ஸ்ரீமத்ராமாநுஜர் ஆகியோர் காலத்திலும் வாதபிரதி

வாதங்கள் நிகழ்த்தியே ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்த்து வந்துள்ளனர்.

திருமங்கையாழ்வார் சைவர்களோடு வாதம் செய்து திவ்யதேசங்களைக் காத்ததாக இராமானுச நூற்றந்தாதி 54ஆம் பாசுரமான ''நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன'' என்ற பாசுரத்தின் உரையில் பிள்ளைலோகம் ஜீயர் தெரிவித்துள்ளார். ''பர சமய பஞ்சுக்கு அனலின் பொறி பரகாலன் பனுவல்களே'' என்ற ஆழ்வானின் தனியனும் இதனை அறிவிக்கிறது. ''மற்றும் ஓர் தெய்வம் உளதென்று இருப்பாரோடு உற்றிலேன்'' (பெரியதிருமொழி 8-10-3) ''எம்பெருமான் உண்டு உமிழ்ந்த எச்சில் தேவர் அல்லாதார் தாமுளரோ?'' (பெரியதிருமொழி 11.6.2) ''புதுத்தெய்வம் கொண்டாடும் தொண்டீர்! பெற்ற தாயிருக்க மணை வெந்நீர் ஆட்டுதிரோ?'' (பெரியதிருமொழி 11-6-6) என்று அக்கால வாதங்களுக்கு தக்க பதில் அளித்து காத்துள்ளார்.

ஸ்ரீமந்நாதமுநிகள் நம்மாழ்வாரிடமிருந்து நாலாயிரத்தைப் பெற்றவுடன், பக்தியோகத்தால் கண்ணனை அனுபவிப்பதிற் காட்டிலும் திருவாய்மொழி குணாநுபவத்தோடு கூடிய அர்ச்சாவதார அனுபவமே சிறந்தது என்ற புதியதும் மிக எளியதும் ஸர்வாதிகாரமானதுமான வழியைத் தெரிவித்து ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்பினார். இதற்கு மக்களிடையே பரந்த ஆதரவும், பிறசமயத்தினரின் எதிர்ப்பும் ஏற்பட்டது.

மேலும் தமது க்ரந்தமான ந்யாயதத்வத்தில் அப்போது பேசப்பட்ட சார்வாகம் முதலிய வேதபாஹ்ய குத்ருஷ்டிகளின் வாதங்களைக் களைந்து, ஜீவாத்ம ஸ்வரூபம் ஸ்வயம் பிரகாசகமாய், ஜ்ஞானாநந்த ஸ்வரூபனாய், ஸ்ரீமந் நாராயணனுக்கு நித்யசேஷம் என்று தெரிவித்து, கர்ம,

ஞானயோகங்களால் எம்பெருமானைக் கண்டு, பக்தியை அனுஷ்டித்து, அவனது திருவடிகளில் பூர்ண அனுபவத்துடன் தொண்டு செய்வதே பரமபுருஷார்த்தம் என்று விளக்கி ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை நிலைநாட்டினார்.

இதற்கு எழுந்த எதிர்ப்புக் காரணமாக, ஸ்ரீமந் நாதமுநிகள் கடைசி காலத்தில் வைணவத் தலைநகரமான ஸ்ரீரங்கத்தில் வாசம் செய்ய முடியாமல் காட்டுமன்னனார் கோயிலுக்கே எழுந்தருளும்படி ஆயிற்று.

இதனை அடுத்து ஆளவந்தார் சோழராஜாவின் சபைக்குச் சென்று, புறச்சமயவாதிகளை வாதப்போரில் தோற்கடித்து, வெற்றிகொண்டு, ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்ட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

இதற்காக ஸித்தித்ரயம் என்ற நூலையும் அருளிச் செய்தார். சோழர்களின் எதிர்ப்பைப் பற்றிய குறிப்பை தமது ஸம்வித்ஸித்தியில், ''ஏக மேவ அத்விதீயம்'' என்ற அத்வைத மாயா வாதங்களைக் கண்டிக்கும் இடத்தில் ''எவ்வாறு சோழ மன்னன் ஒருவனே அத்விதீயனாக இப்போது உளன்'' என்றால் அவனே அனைத்து மன்னர்களிலும் தனிப்பெரும் தலைவன். அவனுக்குச் சமமாகவும் அவனைக் காட்டிலும் உணர்ந்தவனாகவும் வேறொரு மன்னன் இப்போது இல்லை'' என்றே பொருள் கொள்ள வேண்டுமோ அவ்வாறே ''அத்விதீயன்'' என்றால் ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் அனைவருக்கும் பிரதானமாயிருக்கும் நாராயணனே என்று அறுதியிட வேண்டும் என்று விஷ்ணு பரத்வத்தை விளக்கியுள்ளார்.

மேலும் வேதமந்திரங்களை மட்டுமே பிரமாணமாகக் கொண்ட மீமாம்ஸகர்களும் மற்றும் நையாயிகர்களும், அத்வைதிகளும் பாஞ்சராத்ர ஸம்ஹிதைகள். அவற்றின் அடிப்படையில் அமைந்த ஆராதனை முறைகளைக் குறித்து பற்பல தூஷணங்களைச் செய்தபோது அவர்களுடைய வாதங்களை மறுத்து, பாஞ்சராத்ரத்தின் பெருமையை ''ஆகம ப்ராமாண்யம்'' என்ற நூலில் நிலைநாட்டினார். இந்நூலின் தொடக்கத்தில் ''நேர்மை சிறிதும் அற்றவர் களான எனது சமகாலத்தினர்கள் சிலர் கம்பீரமானதாகவும், குணங்களால் சிறந்து விளங்குகின்ற எனது வார்த்தைகளை நிந்திக்கிறார்கள். நிந்திக்கட்டுமே. ஸாரம் அஸாரம் இவை களை உள்ளபடி சீர்தூக்கிப் பார்ப்பவர்களும், பொறாமை யற்றவர்களும் நேர்மையானவர்களும் என் க்ரந்தத்தை நிச்சயம் புகழ்வார்கள்'' என்று தெரிவித்துள்ளார். இதிலிருந்து ஆளவந்தார் காலத்திலிருந்த எதிர்ப்புகளை உணரமுடிகிறது.

ஸ்ரீவைஷ்ணவத்தைப் பன்மடங்கு வளர்த்த எம்பெரு மானார் காலத்தில், தமது 60 சாதுர்மாஸ்யம் முடித்த காலத்தில் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு ஏற்பட்ட தொல்லைகள் உச்சகட்டத்தை அடைந்தன. அதன் காரணமாக எம்பெரு மானார் ஸ்ரீரங்கத்தை விட்டு மேல் நாட்டுக்கு வெள்ளை சாற்றிக் கொண்டு வெளியேற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

கூரத்தாழ்வானும், பெரியநம்பிகளும் சோழராஜ சபைக்குச் செல்ல வேண்டிய நிலையில் கூரத்தாழ்வான் எம்பெருமானாரின் காஷாய திரிதண்டங்களைத் தரித்து, தானே எம்பெருமானாரான கோலத்துடன் சென்று ஏழுநாள்கள் வாதபிரதிவாதம் நடத்தினார். ஏழாம்நாள் வாதத்தில் உலகை அளக்க, நாராயணன் தமது இடதுகாலை

உயரே நீட்டினான். அந்தக் காலை ப்ரஹ்மன் கண்டு, கமண்டல தீர்த்தத்தாலே கழுவினான். அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தை சிவன் தலையில் தரித்து பரிசுத்தமானான். இத்தாலே பரம்பொருள் யார் என்பதை நீயே வரையறை செய்து கொள் என்று தெரிவித்தார். இதன் விளைவாகக் கூரத்தாழ்வான் ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்திற்குத் தமது தர்சனத்தை (கண்களை) இழக்கும்படியாயிற்று. பெரிய நம்பிகள் உயிரிழக்க நேரிட்டது. இந்த விவரங்களை கூரேச விஜயத்தில் காணலாம்.

இராமாநுசர் தம் காலத்தில் இருந்த மாற்றுக் கருத்துக் களை தான் வென்றதை திருவரங்கத்தமுதனார் தமது இராமானுச நூற்றந்தாதியில்;

*''தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன்*
*சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும் - நான் மறையும்*
*நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனர் நீள்நிலத்தே*
*பொற்கற்பகம் - எம் இராமாநுசமுனி போந்தபின்னே'' (99)*

தர்க்கம் செய்யும் திறமையினால் தங்கள் மதத்தைக் காப்பவர்களான ஜைனரும், பிடித்த பிடியை விடாத பௌத்தரும், பசுபதியின் சொல்லாகிய சைவ ஆகமத்தை கற்ற தமோ குணம் படைத்த சைவர்களும், சூனியமே தத்துவம் என்று வாதம் புரியும் மாத்யமிக மதத்தவரும், நான்கு வேதங்களையும் ஏற்காமல் தவறான பொருளைக் கற்பனை செய்யும் குத்ருஷ்டிகளும், கற்பகவிருட்சம் போன்ற வள்ளல் தனம் வாய்ந்த இராமானுச முனிவர் இவ்வுலகில் எழுந்தருளியபின் நசித்து விட்டனர் என்றும், அதன் விளைவாக ''நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன.

நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது'' (இராமானுச நூற்றந்தாதி-54) என்று எடுத்தியம்பியுள்ளது நோக்கத்தக்கது.

இராமானுசரின் கடைசி காலத்தில் எழுந்த மாற்றுக் கருத்துக்களை இந்நூலாசிரியரான எறும்பியப்பா தமது நூலில் இவ்வாறு தெரிவித்துள்ளார். (பத்தி 278, பக்கம் 462)

''எம்பெருமானார் தர்சனம் நிர்வகித்துக் கொண்டு போருகிற காலத்திலே, யாதவ பிரகாசன் இவருடைய வைபவங்கள் எல்லாம் கண்டிருந்தும், மாத்ரு வசனத்தாலும், பகவத் ஆஞ்ஞையாலும் அவரை ஆச்ரயித்து ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திலே பிரவர்த்திக்கக் கண்டு, தத் புத்ர சிஷ்யர்கள் ஸஹிக்க மாட்டாதே, இத்தர்சநத்திலே அபேத ப்ரவ்ருத்தி உண்டாம்படி தூஷிக்க வேணுமென்று நினைத்து, நம்முடைய பூர்வாசார்யர்கள் பகவத் ஆஞ்ஞையாலே விலக்ஷண ஸம்பந்த ஸ்வீகாரத்தை அங்கீகரித்ததை ஹேது வாக்கி, சரம ச்லோகத்திலே ஸர்வ தர்மத்யாகத்தை விதித்ததையும் ஹேதுவாக்கி தீய ஒழுக்கத்தை உட்புகுத்தி சரம தர்மம் என்றும் சில நூல்களை எழுதி, பரவச் செய்து அக்காலத்திள்ள அசுரமனங்கொண்ட சிலரை மயங்கச் செய்தனர். இது எரிக்கும் தீயைப்போல எங்கும் பரவிற்று.

அப்போது எம்பெருமானார் சிலரைப்பிடித்து தண்டித்து, அந்த நூல்களை வாங்கி நெருப்பிலிட்டார். அவ்வாறு செய்தும் அந்நூல்கள் வளர்ந்து வந்தன. மேலும் பிள்ளைலோகாசார்யர் காலத்தும் இது பரவி விபரீதமான வினாக்களைக் கேட்டு, அதற்குத் தக்க பதிலாக ஸ்ரீவசன பூஷணம் என்னும் திவ்ய சாஸ்த்ரம் அரங்கர் ஆணையாலே அவதரித்தது. இதனை ''உய்ய நினைவுடையீர் உங்களுக்குச்

சொல்லுகின்றேன்'' (உபதேசரத்தினமாலை-56) உங்களுக்கு ஸ்ரீவசநபூஷணம் திருமந்திரம் போன்றவற்றில் நிஷ்டை உண்டாக வேணுமென்று அடியேனுடைய ஆசார்யரான மாமுநிகள் உபதேசம் செய்வர் என்று (பக்கம் 465) எறும்பியப்பா இந்த நூலில் கூறியுள்ளார்.

மேலும், பூர்வாசார்யர்கள் அனைவரும் ஆசரித்த அனுஷ்டானங்களை அறியாதவர்கள் கண்டபடி சொல்கின்ற வார்த்தைகளைக் கேட்டு மனம் திரியாமல் முன்னோருடைய சீரிய நிஷ்டையையே அநுவர்த்திக்க வேணும். (உபதேசரத்தினமாலை 67) என்றும், முன்னோர்கள் அருளிச் செய்த வற்றை முறை தப்பாமல் ஸதாசார்யனிடத்தில் கேட்டுணர்ந்து, அதை அப்படியே மனனம் பண்ணிப் பேசாமல், தமது நெஞ்சில் தோன்றின தான்தோன்றி அர்த்தங்களைச் சொல்லி இந்த அர்த்தமே சுத்த ஸம்ப்ரதாய உபதேச பரம்பரையாய் வந்தது என்று பொய் பேசுபவர்கள் மூர்க்கராகக் கொள்ளத் தக்கவர்கள் (உபதேசரத்தினமாலை 71) என்ற பரம ஸாத்விகரான மாமுநிகளின் பாசுரங்கள் அக்காலத்தில் நிலவிய எதிர்மறை நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

இந்நிலைமாமுநிகள் காலத்திற்குப் பிறகும் இருந்தது. அதனால் மாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களான ஆசார்யர்களும் க்ரந்தங்களை அருளிச் செய்து, பூர்வாசார்யர்களின் போதம் அநுஷ்டானங்களைக் கட்டிக் காக்க வேண்டியதாயிற்று. 16ஆம் நூற்றாண்டிலும் பூர்வாசார்யர்களின் கொள்கைகளுக்கு முரண்பட்ட கருத்துக்களை வெளிப் படுத்தி, ராமாநுஜ ஸித்தாந்தத்தில் பிளவை உண்டாக்கிய நவீனர்களின் வாதங்களுக்குப் பிள்ளைலோகம் ஜீயர்

'ஸ்ரீவைஷ்ணவ சமய, ஆசார நிஷ்கர்ஷம்'' என்ற மிகப்பெரிய க்ரந்தத்தை அருளிச் செய்து 10 அத்யாயங்களில் 548 தலைப்புகளில் தினவடங்க பதில் அளித்துள்ளார்.

பரவஸ்து பட்டர் பிரான் ஜீயர் ஸ்வாமி ஸகல வேத ஸாரமாயும் ஸ்ரீவசன பூஷண தாத்பர்யமான ஆசார்ய அபிமானமே அந்திமோபாயம் என்பதனையும், ஆசார்ய விஷயமாக மங்களாசாஸனம் பண்ணுகையே அநவரத கைங்கர்யம் என்பதையும் தம்முடைய 'அந்திமோபாய நிஷ்டை' என்னும் க்ரந்தத்தில் நிலைநாட்டியுள்ளார்.

அஷ்டதிக்கஜங்களில் மற்றொருவரான எறும்பி யப்பா ''விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்'' என்ற இந்த நூலை இயற்றியுள்ளார். இந்நூல் எழுதப்பட்டதிற்கான காரணத்தை பேராசிரியர் முனைவர்.இரா.அரங்கராஜன் தம்முடைய ''வைகுந்தம் புகும் மண்ணவர் யார்'' என்ற புத்தகத்தில் கீழ்க்கண்டவாறு தெரிவித்துள்ளார்.

''கி.பி. 14ஆம் நூற்றாண்டு தொடங்கி போலியான வைஷ்ணவர்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களுக்கு முற்றிலும் முரண்பட்ட பொருளைப்ரசாரம் செய்து, பாமரர்களை மயக்கி அருவருக்கத்தக்க துராசாரங்களை அநுஷ்டானம் என்ற பெயரால் நிகழ்த்தி வந்தனர். எம்பெருமானுடைய வாத்ஸல் யத்திற்கு இலக்காக வேண்டுமானால் தோஷங்களைச் செய்து கொண்டே இருக்க வேண்டும். ''ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய'' என்ற விதியை உண்மையாக்க மது அருந்துதல், மாமிசப் பண்டங்களைத் தின்னுதல், பிறர்மனை நயத்தல் போன்ற அஞ்சத்தக்க அபாயமான ஒழுக்கங்களைத் தழுவ வேண்டும். ஒருமுறை ஆசார்ய ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும். அது பின்னர் எப்படிப்பட்ட இழிசெயல்களைச் செய்தாலும்

மோக்ஷத்தை உண்டாக்கியே கொடுக்கும். ஸர்வேச்வரனும் எளிவரும் இயல்வினனாய்க் குற்றங்களை நற்றமாகக் கொண்டு ரக்ஷித்தருளுவான் என்ற போலி வாதங்களைப் பரப்பி, அறியாதவர்களை வஞ்சிக்கத் தொடங்கினர்.

அப்போது ஸ்ரீவைஷ்ணவ ஸத் ஸம்ப்ரதாயமுடைய பெரியோர்கள் அவர்களுடைய கோட்பாடுகளைக் கண்டித்து வந்தனர். அம்முறையில் ஒரு நூல் வடிவமாக அவதரித்ததே ''விலக்ஷணமோக்ஷாதிகாரிநிர்ணயம்'' என்ற க்ரந்தமாகும்.

இப்படிப்பட்ட க்ரந்தத்தில் கூறப்பட்டுள்ள தத்துவங்களை அனைவரும் உள்ளபடி அறிந்து தெளிவுபெற்று, அநுஷ்டிக்க வேண்டும் என்ற பரந்த உள்ளம் கொண்ட ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கிருஷ்ணமாசார்யர், புதுவையில் வாழும் அன்னம் போன்று ஸார அஸார விவேகியாகவும், பிரபன்ன குலதிலகராயும் ஸத்ஸம்பிரதாயம் பற்றி பல நூல்களை ஸ்ரீவைஷ்ணவ உலகிற்கு வழங்கிய பெருமாள் ராமாநுஜ தாஸரைக் கொண்டு எளிய நடையில் உரைவிளக்கம் பெற்று, அதனை பாஞ்சஜன்யத்தில் மாதந்தோறும் வெளியிட்டு, இப்போது மூலம், விளக்கத்துடன் 484 பக்கங்களில் முழுநூலாக ஸ்ரீமத் எறும்பியப்பா ஸ்வாமியின் திருநக்ஷத்ரமான ஐப்பசி ரேவதி (14.11.2013) அன்று சோளஸிம்ஹபுரத்திலே வெளியிட்டு மஹோபகாரம் செய்துள்ளார்.

இந்நூல் ஆரம்பத்தில் 1. ஜாயமாந கால கடாக்ஷம், (கருவிலே திருவுடைமை), 2. அர்த்த பஞ்சக ஞானம் (ஐம்பொருள் அறிவு), 3. சிஷ்ய லக்ஷணங்கள் (நன் மாணாக்கர்கள் இலக்கணம்), 4. ஸத் சிஷ்ய ஸம்பந்த பிரபாவம் (நன்மாணாக்கர்களால் வரும் நன்மை), 5.

ஸதாசாரிய லக்ஷணங்கள் (நல்லாசிரியர் இலக்கணங்கள்), ஆகியவை களை முதலில் விளக்கி, அதன்பின் பலரால் எழுப்பப்பட்ட ஆக்ஷேபங்களையும், அவற்றிற்கான தெளிவான பதில் விளக்கங்களை விரிவாகத் தந்து, நிறைவாக எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பெற்ற குருபரம்பரை யில் அந்வயித்த ஸதாசார்யனை அடைந்து, பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெற்று, ஞான, பக்தி, வைராக்யங்களை வளர்த்துக் கொண்டு ஸ்ரீவசனபூஷணம் போன்ற ரகசியநூல்களின் அனுபவத்திலே காலத்தைக் கழித்து, தம்மை அடைந்தோரைக் காப்பதையே விரதமாக உறுதிபூண்டு, உபேயமான பேற்றில் ஆர்த்தியை உடைய எம்பெருமானாரை சரணடைந்து சுகமாக வாழ்ந்திருக்கும் அதிகாரி புருஷனே 'விலக்ஷணமோக்ஷாதிகாரி' - 'வைகுந்தம் புகும் மண்ணவர் ஆவார்' என்று எறும்பியப்பா தமது சீடர்களுக்கு அருளிச் செய்தார் என்று நிறைவு பெறுகிறது.

**இந்த க்ரந்தத்தில் தெரிவிக்கப்படும் விஷயங்கள்:**

1. பிறக்கும்போதே எம்பெருமான் கடாக்ஷத்தை பெற்ற பாக்யசாலிகளுக்கே மோக்ஷத்தில் இச்சை பிறக்கிறது.

2. ஞானத்தினால் மோக்ஷம் உண்டாகும் என்பதால், அர்த்த பஞ்சக ஞானம் உண்டாக வேணும்.

3. அந்த ஞானத்தை வேத வேதாந்த ஸாரார்த்தங்களை பூரணமாக அறிந்தவனும், பகவத்விஷயம் தவிர்ந்த இதர விஷயங்களில் வைராக்யமுடைய ஸதாசார்யனிடம் உபதேசம் பெறவேணும்.

4. மனவடக்கம், பொறியடக்கம் முதலிய ஆத்ம குணமுள்ள சிஷ்யனுக்கே ஆசாரியன் உபதேசிக்க வேணும்.

5. வேத வேதாந்தம் அறிந்தவன், ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவன் என்ற இரண்டும் ஸதாசார்ய லக்ஷணங்கள் ஆகும். (பக்கம் 10)

6. உடல், செல்வம், அறிவு, இருப்பிடமான வீடு, செயல், நற்பண்புகள், பிராணன் ஆகியவற்றை ஆசாரியனுக்காக எவன் தரிக்கிறானோ அவனே சிஷ்யனாவான். (பக்கம் 11) இவ்வாறு ஸச்சிஷ்ய லக்ஷணம் உடையவனுக்கே ஆசார்யன் ஹிதோபதேசம் செய்ய வேண்டும். இப்படி இராதவனைச் சேர்த்துக் கொள்ளவொண்ணாது. (பக்கம் 12)

7. சிறந்த சிஷ்ய ஸம்பந்தம் ஆசார்யனுக்குப் பிறவிக் கடலைத் தாண்டுவிப்பது போன்று. தாழ்ந்த சிஷ்ய ஸம்பந்தம் கேட்டினை விளைவிப்பதாய் முடியும்.(பக்கம். 16)

8. ஸதாசார்ய லக்ஷணங்களோடு கூடின மிகச்சிறந்த ஆசார்ய ஸம்பந்தமே மோக்ஷஸாதனமாக்கும்.

9. ஸதாசார்ய லக்ஷணங்களின் விபரம்: பக்கம் 19-23இல் கொடுக்கப்பட்டுள்ளன.

10. ஆஹார நியதி, ஸஹவாஸ நியதி, அநுவர்த்தன நியதி என்ற மூவகை நியதிகளை கடைப்பிடிக்க வேண்டும்.

ஆஹார நியதியாவது, ஜாதி துஷ்டம், ஆச்ரய துஷ்டம், நிமித்த துஷ்டங்களை அறவே விட்டுவிட வேண்டும். இவற்றின் விபரம் பக்கம் 24-26இல் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆஹார நியதியில் எழுப்பப்பட்ட சில தடைகள் விடைகள் (பக்கம் 27-29)

1. ஆசாரப் பிரதாநரான இராமபிரான் சீதையைப் பிரிந்திருந்த போது மது, மாமிசம் சாப்பிடவில்லை என்று இராமாய ணத்தில் சொல்லப்பட்டுள்ளதே? இதனால் சீதையோடு கூடியிருந்தபோது அவற்றைச் சாப்பிட்டார் என்று தோன்று கிறதே, அதனால் ஆஹார நியதியில் மது மாம்ஸங்களை விலக்கச் சொல்வது எப்படிப் பொருந்தும்?

**பதில்:**

இராமபிரான் க்ஷத்ரிய குலத்துக்குரிய மது மாம்ஸங் களைக் கூட கைக்கொள்ளவில்லை என்று அனுமன் தெரிவித்தது இராமபிரானின் வைராக்யத்தையே காட்டு கிறது. இதனால் யாவரும் மது, மாமிசம் சாப்பிடலாம் என்று கூறுவது பொருந்தாது.

11. ஸ்ரீராமாயணத்தில் இராமபிரான் இந்திரன் முதலான தேவர்களை ஆராதித்தார் என்று சொல்லப்பட்டுள்ளதே? அதுபோன்று பரமைகாந்தி ஸ்ரீவைஷ்ணவர்களும் அவர்களை வணங்கலாமா?

**பதில்.** ஸ்வதந்த்ரரான இராமபிரான் அவதார காலத்தில் அநுஷ்டித்தவை என்று கருதி பிராட்டிக்கும் இணையான ஸ்வரூபத்தை உடைய பரமைகாந்திகளால் பிறதேவதைகளை வணங்க இயலாது. அவர்களுக்கு அநந்யார்ஹசேஷத்வமே ஸ்வரூபம்.(பக்கம் 30-31)

12. பகவத்கீதையில் சரம ச்லோகத்தில் ''ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய'' - எல்லா தர்மங்களையும் விட்டு விட்டு என்னைப்பற்று என்று விதிக்கப்பட்டிருக்கிறதே? அப்படி யானால் வர்ணத்துக்குத் தக்கதான மதுமாமிசங்களையும் விட வேணுமென்று தெரிகிறதே? அதை விடுவதானால், முன்னர் அதைச் செய்ய வேண்டாமா?

**பதில்:** அதர்மங்களைச் செய் என்று சாஸ்திரம் சொல்லாமையாலே, அதர்ம அநுஷ்டானம் பிரபன்னனுக்கு வாராது. (பக்கம் 32-33)

எனவே ஆஹார நியதி நல்லாசிரியனால் அவசியம் கடைப்பிடிக்க வேண்டும்.

13. எல்லாப் பொருள்களும் ப்ரஹ்மத்திற்குச் சரீரமாயிருப்பன. பரம்பொருளுக்கு இருப்பிடம் என்று நினைத்திருக்கும் உத்தமர்களுக்குத் தள்ளத்தக்கவையும் உண்டோ?

**பதில்:** ப்ரஹ்மாத்மகம் என்ற அபிப்ராயத்தால் பெரியோர்களுக்கு உலகியல் பொருள்களில் சாஸ்திரங் களில் விலக்கப்பட்ட இழிவான பொருள்கள் ஏற்கத்தக்கன அல்ல. (பக்கம் 34-40)

**14. ஆசார்ய லக்ஷணம்**

ஞானமும், ஒழுக்கமும் உள்ளவனே நல்லாசாரியன் ஆவான். ஞானமில்லாதவன் கண்ணில்லாக் குருடன் போலே. அநுட்டானம் என்னும் ஒழுக்கம் இல்லாதவன் முடவனைப்போலே. எனவே இரண்டும் உள்ளவனே ஸதாசாரியன் ஆவான்.

இறைவனுடைய ஆணைகளான சாஸ்திரங்கள் விதிக்கும் ஆசார அநுஷ்டானங்களை உதாஸீனம் செய்து, அவற்றிற்கு விரோதமான விபரீத ஆசாரங்களையும் பின்பற்றுகிற ஆசாரியன் பகவானுடைய வெறுப்புக்கு ஆளாகிறான். தன்னையடைந்த சிஷ்யனுக்கும் ஆத்ம நாசத்தை செய்து அதோ கதிக்கு ஆளாக்குகிறான்.

சிஷ்யன் ஸமர்ப்பித்த த்ரவ்யங்களில் பற்றற்று, அவற்றை அவனுக்கே மீளவும் கொடுத்து, அவற்றை பகவத் பாகவத கைங்கர்யங்களுக்கு உபயோகிக்கச் செய்து, தன்னுடைய தேக யாத்ரையை ஸத்வ நிஷ்டர்களான ஸாதுக்களால் ஸமர்ப்பிக்கப்பட்ட பொருளைக் கொண்டு எளிய வாழ்க்கை நடத்திக் கொண்டு, சிஷ்யனுடைய ஆத்மாவை உயர்கதியை அடைவிக்கச் செய்வதையே கடமையாகக் கொண்டவனே ஸதாசார்யனாகிறான். இதன் விபரங்கள் (பக்கம் 42-48 இல் கொடுக்கப்பட்டுள்ளன.)

### 15. ஆசாரியர்கள் இரண்டு வகை.

ஆசாரியனுடைய செயல்கள் இரண்டு வகைப்படும். 1. சேர்ப்பித்தல். 2. உபாயமாக இருத்தல். சேர்ப்பித்தலாவது திருத்திப் பணி கொள்ளுவதற்குத் தக்கவரை தேர்வு செய்து, இறைவனுக்குப் பல்லாண்டு பாடுபவர்களாக ஆகக் கடவர் என்று தேறிய பின்னர் அவர்களை நாராயணனுடைய திருவடிகளில் சரண் அடையச் செய்து, ஆன்ம இயல்புக்குப் பொருந்த நடக்கும்படி திருத்திப் பணி கொள்ளுதல்.

உபாயமாக இருத்தலாவது, ஞானமின்மையும் ஒழுகத்தக்க ஆற்றலில்லாத குருடர், முடவர், செவிடர் முதலியவர்களுக்காகத்தானே பகவானிடத்தில் சரணாகதி பண்ணித்தானே அவர்களை மோக்ஷம் அடையும்படி செய்தல். (பக்கம் 52-53) உதாரணம் ராமாநுஜர் ஊமைக்கு அருள் செய்தது.

16. ஸமித்தை வெட்டுவதற்குப் பயன்படும் சிறிய ஆயுதம், விலங்கு முதலியவற்றை வெட்டும் பெரிய ஆயுதம் ஆகிய இரண்டையும் ரஸகுளிகை பொன்னாக்குவதுபோல, நல்ல மனிதர்கள், தீய மனிதர்கள் ஆகிய இரு வகைப்பட்டவர்க

ளையும் ஆசாரியனுடைய பாத ஸேவை நன்மையை விளை விக்கும் என்று சான்றுகள் கூறுகின்றனவே. (பக்கம் 56)

**பதில்:** சீடன் அறிவற்றவனாய் ஒரு சடப் பொருளைப் போல ஆசாரியனிட்ட வழக்காயிருந்தால், தனக்கு ஞான அனுட்டானங்கள் இல்லை என்ற குறை இல்லாது, நல்லாசிரியனுடைய தொடர்பால் முக்தனாய் வீடுபேற்றை அடைவான். ஆனால் தனக்கு ஒவ்வாத தீய ஒழுக்கத்தில் ஈடுபாடு உண்டானால் அழிவையே தரும். (பக்கம் 58)

17. ஒருவன் தீய ஒழுக்கம் உள்ளவனாகவும், எதையும் உண்பவனாக இருந்தபோதிலும், பகவான் நாராயணனை உறுதியுடன் சரணமடைவானாகில் அவன் இறைவன் மகிமையால் குற்றமற்றவனாக சொல்லப்பட்டுள்ளதே?

**பதில்:** ஆசாரியனை அடைந்த பின்னரும் ஒருவன் தன் நெஞ்சறிய தீய ஒழுக்கத்தை மேற்கொண்டால் அவனுக்கு ஆசாரிய ஸம்பந்தம் பொய்யாகிவிடும். இதனால் ஆசாரிய அபிமானமும், தீய நடவடிக்கைகள் சூழ்ந்தவிடத்தும் பயன்தராது. (பக்கம் 59-61 இந்த விஷயத்தில் நம்மாழ்வார், ஆளவந்தார், ஸ்ரீமணவாளமாமுனிகள் நிலை (பக்கம் 63-66இல் காண்க.)

18. பிராணிகளுக்கும், விலங்குகளுக்கும் ஆசாரிய அபிமானமே உத்தாரகம். நம்பிள்ளை அபிமானத்தால் ஆலமரம் மோக்ஷமடைந்தது (பக்கம் 66-69) இராமபிரான் ''புற்பா முதலாப் புல் எறும்பாதி ஒன்றின்றியே நற்பாலுக் குய்த்தனன்''. (பக்கம் 74-75)

19. பிரதமப் பிரபன்னரும் சரம பிரபன்னரும் ஸதாசாரியன் திருவடியைப் பற்றியவர்களில் முதல்நிலைஅதிகாரிகள்

என்றும், கடைநிலை அதிகாரிகள் என்றும் இருவகைப் படுவார்கள்.

முதல்நிலை அதிகாரி தனது ஆசாரியன் உபதேசித்த படியே பகவானுள்ளே அடிமைப்பட்டவனாய், அவனிடத்தில் மிக்க பக்தியுடையவனாய் மனைவி, செல்வம், நல்ல பிள்ளைகள், தாய் தந்தையர் எல்லாம் இறைவனே என்ற நம்மாழ்வார்போல இருப்பவர்.

இரண்டாம்நிலை அதிகாரி ஆசாரியன் உதவியினால் பகவான், அவனது சிறப்பியல்புகளை நன்றாக மனதில்பட்டு, ஆதிப்பிரானையும் வணங்காது நம்மாழ்வாரைத் தவிர வேறொரு விஷயத்தை அறியாத மதுரகவியாழ்வாரைப் போல இருப்பவர். (பக்கம் 85-86)

20. பகவானை அடைதல் அரியதாகவும், ஆசார்யனை அடைதல் எளிதாயிருக்கும் என்று கூறுவது ஏன்?

**பதில்:** மறையின் பொருளான இறை விஷயத்தை அறிந்து கொள்ளவும் அதன்படி ஒழுக முடியாத ஊமையர், செவிடர்களையும் கடைத்தேற்றுவதாலும், ஆசாரியனை இறைவனைப்போல சாஸ்திரத்தால் அறிய வேண்டும் என்றில்லாமல், கண்ணால் நேரே காணத்தக்கவனாக இருப்பதாலும், சீடனை வலியுறுத்தித் திருத்தி இறைவ னுக்குப் பயன் கொள்ளத் தகுதியுடையவனாக ஆக்குவதால் நல்லாசிரியனை அடைதல் இறைவனைக் காட்டிலும் சிறந்தது. மேலும், இறைவனையே பற்றியவனுக்கு மோக்ஷ பயன் உண்டோ இல்லையோ என்ற ஐயம் உண்டு. அவன் தொண்டில் ஈடுபட்டவர்களுக்கு மோக்ஷத்தில் ஐயம் இல்லை.

21. இப்படிப்பட்ட சீடனுக்கு மூன்று ரஹஸ்யங்களும், திவ்ய தேசங்களில் ஈடுபாடும், ஆழ்வார் அருளிச்செயல் அனுபவமும் வேண்டும்.

**ஆழ்வார் அருளிச்செயல்களை ஓதத்தகுதி பெற்றோர்:**

ஆழ்வார் அருளிச் செயலுக்கு அதிகாரிகள் இவ்வுல கில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் முக்தர்களாவர். உலகியல் பற்றுக்களை முற்றும் துறந்தவர்கள். எவ்வளவு சோதனை எதிரிட்டாலும், மேலையார் சென்ற நெறிகளைத் துறக்காதவர் கள். துன்ப இன்பங்களைச் சிறிதும் அடையாதவர்கள். எம்பெருமானே உபாயம் என்று துணிந்தவர்கள். ஆசார்ய அபிமானமே உத்தாரகம் என்று உறுதி பூண்டவர்கள். (பக்கம் 98-101)

22. பிரபன்னன் ஆத்மாவின் இயல்பையும் அவ்வியல்புக் கேற்ற வழியினையும், அவ்வழியால் அடையும் பயனையும் தெரிவிக்கும் மந்திரங்களாலும், அவற்றின் விரிவான திவ்யப் பிரபந்தங்களாலும் பொருளோடு கூடியே மனனம் செய்ய வேண்டும்.

**தடை:** ''கூறுதல் வல்லார் உளரேல் கூடுவர் வைகுந்தமே'' என்று ஆழ்வார் அருளிச் செய்திருக்கும்போது ஏன் பொருளோடு அறிய வேண்டும்?

**விடை:** ஆழ்வாரே ''அறியக் கற்றுவல்லார் வைட்டணவர்'' என்று அருளிச் செய்துள்ளாரே. இதைப்போலேவே திருமந்திரம், த்வயம் முதலிய மந்திரங்களையும் பொருளோடு கூடியே மனனம் செய்ய வேண்டும். (பக்கம் 102-112)

23. பிரபந்தங்களை அறிந்து அவற்றின்படி அநுஷ்டானம் பண்ணும் முறை (பக்கம் 118-137) கீதையில் கண்ணன் கூறியவாறு, பகவானுடைய குணங்களை போதித்துக் கொண்டு, ஆத்ம இயல்புக்கு இழுக்கு வாராதவாறு, இறைவனுடைய குணாநுபவ கைங்கர்யங்களாலே பொழுதைக் கழித்துக் கொண்டு அஹங்காரம் அற்றவராய், பாகவத அபசாரத்திற்கு நடுங்கி, எச்சரிக்கையுடன் வாழ்பவர்கள் மோக்ஷாதிகாரிகள் என்பர் ஸ்ரீமந்மணவாளமாமுனிகள். (பக்கம் 136)

ஆழ்வார் ஆசாரியர்களில் அநேகர் ஸம்ஸாரத்தில் புத்ர தாராதிகளோடே வாழ்ந்துள்ளார்களே - அவர்கள் முக்தி யோக்யரோ?

**விடை:** ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமாக, மாமுநிகள் வரை எல்லோரும் உள்ளும் புறமும் பற்றற்றவர்கள் என்று நினைதல் வேண்டும். இதன் விளக்கம் (பக்கம் 137-169 வரை.)

25. முற்பிறவிகளில் செய்த புண்யத்தாலே வைணவ இல்லங்களில் பிறந்தும் அதன் சிறப்பை அறியாமல் அசுர மனம் கொண்டவர்களுக்கு இறைவன் விபரீத புத்தியைப் பிறப்பித்து புறம்பே தள்ளிவிடும். இதற்குக் காரணங்கள் மூன்று. பிற தெய்வங்கள், பிறஸாதனங்கள், இவ்வுலக இன்பங்களில் ஈடுபாடு. இவையே தன் பக்கல் நின்றும் பிரிந்து போவதற்கு 'வைத்த மாயங்கள்' என்று ஆழ்வார் அருளிச் செய்துள்ளார். (பக்கம் 171)

**26. ஈச்வராபிமானமும் ஸதாசார்ய அபிமானமும்:**

ஸதாசார்ய அபிமானத்திலே ஒதுங்கி, பிரியாது வாழப்பெற்றால், எம்பெருமான் தன்னுடைய லீலைக்கு

விஷயமாகாதபடி ஸதாசாரியன் காத்தருள்வான். அதற்காகவே ஸதாசார்ய அபிமானத்தை வேண்டுகிறது.

ஸர்வேச்வரனுடைய அபிமானத்திலே ஒதுங்கினாரைத் தன்னுடைய லீலைக்கு ஆட்படுத்துவானோ என்னில், எம்பெருமானைத் தவிர்ந்த விஷயங்களில் பற்றற்று, அஹங்காரம் சிறிதுமின்றி ஆர்த்தி பெருகியவர்களைத் தவிர மற்றவர்களை அவன் தன்னுடைய லீலையாகிற மாயைக்கு வசப்படுத்துகிறார்.

## 27. பிரபத்தி எளிய உபாயமா?

''நம்மாழ்வார் தொழுதெழு'' என்று தொழுகையே போதும் என்று சொல்லிப் பின்பு ''வீடுமின் முற்றவும்'' என்று இறைவனைத் தவிர்ந்தவைகளில் உள்ள பற்றை விட வேண்டும் என்று கூறி, ஸ்வாமியான இறைவனைச் சார்ந்து சரணாகதி நெறியிலே ஈடுபடுங்கள் என்று அருளிச் செய்தார். இப்பிரபத்திநெறி எளிமை என்றாலும், செய்வது அருமை என்று ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச் செய்துள்ளார். (பக்கம் 205)

**தடை:**

என்னைச் சரண் அடைந்தவன் மிக்க பாவியானாலும் மோக்ஷம் அடைவான் என்று எம்பெருமானே கூறியிருக்கும்போது, அஞ்சும்படி கூறுவது பொருந்துமா?

**பதில்:**

''பெரிய பாவங்களைச் செய்தவனாயினும் தன்னைப் பற்றிய மாத்திரத்தால், விரைவில் பக்தியில் ஈடுபட்ட நெஞ்சையுடையவனாய், தீயவற்றில் ஈடுபாடற்ற

தன்மையை நன்கு அடைகிறான்'' என்று இறைவனால் சொல்லப்பட்டதேயன்றி, மரணம் அடையும் வரையிலும் தீய ஒழுக்கத்தை மேற்கொண்டாலும், மோக்ஷம் அடைவான் என்று யாண்டும் கூறவில்லை. (பக்கம் 233)

28. எம்பெருமான் தன் தடையற்ற சுதந்திரத்திற்காக சிலரை முக்தனாம்படி செய்யும்போது, இவ்வளவு நியமங்கள் தேவையா? அயோத்தியிலும் ஆயர்பாடியிலும் வாழ்ந்த உயிரற்ற, உயிருள்ளவைகளுக்கும், விதுரன், மாலாகாரன், ததிபாண்டன் முதலியோருக்கு பஞ்சஸம்ஸ்காரம், ஆசாரிய அபிமானம் ஆகியவற்றை உண்டாக்காமல், அவையில்லா மலேயே அவர்களுக்கு மோக்ஷம் கொடுக்கப்பட்டுள்ளதே?

**பதில்:** எம்பெருமான் எளிமையானவனாக இருந்து மோக்ஷம் கொடுத்தாலும், நம்முடைய ஆசாரியர்கள் அவன் தானாகவே சிலருக்குள் கொடுக்கும் மோக்ஷத்தை விரும்பால், ''தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே'' - என்று எனக்காக என்று மோக்ஷத்தைக் கொடுக்க வேண்டாம். யான் உமக்காகப் பயன்படுவதானால் அந்த மோக்ஷத்தை எனக்கு அளிக்க வேண்டும் என்று வைகுந்தம் போனார்கள். (பக்கம் 236-238)

29. இறைவனையே உபாயமாகப் பற்றினால் அஞ்ச வேண்டும்படியாக இருக்கும். ஆசாரிய அபிமானத்தில் ஒதுங்கினால் அஞ்சவேண்டியதில்லை என்று பிள்ளை உலகாசிரியர் ஸ்ரீவசனபூஷணத்தில் கூறியுள்ளாரே என்று ஸேனாபதியாழ்வான் கேட்டார்.

இதற்கு எறும்பியப்பா ஆசாரிய அபிமானத்தை உடையவனுக்கு அஞ்ச வேண்டாம் என்றது சீடன் தீய வழி

செல்லாதபடி, நல்லவை தீயவைகளைத் தெளிவாகக் கூறி அதன்படி ஒழுகச் செய்து, செயல் நன்றாகத் திருத்திப் பணி கொண்டு அவனை ஆசார்யன் இறைவனிடம் சேர்ப்பிப்ப தால் ஆசாரிய அபிமானமே உத்தாரகம் என்றார் பிள்ளை உலகாசிரியர். இதற்கு அநுஷ்டானம் எம்பெருமானார் பிள்ளையுறங்காவில்லிதாசருக்கு, ''நீர் அஞ்ச வேண்டா நான் பெற்றேனாகில் நீரும் பெறக் குறையில்லை'' என்று அருளிச் செய்தது. (பக்கம் 247)

### 30. பிராட்டி புருஷகாரம்

பாபிகளானாலும், பிராட்டி புருஷகாரத்தாலே நினைத்த பேறு கிட்டுமே? என்று காகாசுர வரலாறு தெரிவிக்கிறதே? எனவே புருஷகாரமே போதுமே?

**பதில்**

எம்பெருமானைத் தஞ்சமென்று பற்றுகிறபோது, சீவனால் முற்பிறவிகளில் செய்யப்பட்ட குற்றங்களைக் கண்டு, இறைவன் பொறுக்க மாட்டேன், தண்டித்தே தீருவேன் என்று சீறுகிற சமயத்தில், சாஸ்திரங்கள் பழுது படாமைக்காக நீர் உம்மை அடைந்த ஜீவனை தண்டிக் கலாமோ? அவ்வாறு தண்டித்தால், உமது அருள், பொறை இவைகள் உயிர்வாழ்வது எவ்வாறு? என்று பிராட்டி தெரிவித்து, அவரை சமாதானப்படுத்தித் தன் அடிமைத் தொழிலாலும், உபதேசத்தாலும், அழகாலும் இறைவனது அருள், பொறையுடைமையாலும் குணங்களைத் தலை யெடுக்கப் பண்ணிக்காத்தருள்வான் என்பதன்றி, இவன் தீய வழி நடந்தாலும் பெரிய பிராட்டியார் புருஷகாரம் செய்து பாதுகாப்பாள் என்பது பொருளல்ல. (பக்கம் 252-260)

### 31. எம்பெருமானின் நிர்ஹேதுக கிருபை

எம்பெருமான் தன்னுடைய இயற்கை இன்னருளால் ''வெறிதே அருள் செய்வதாக'' நம்மாழ்வார் அருளிச் செய்துள்ளார். அதனால் பாபிகளும் தீயவர்களும் அவ்வ ருளால் முக்தி அடையலாம் அல்லவா?

**பதில்:** இறைவன் ஒருவனை முதன்முதலில் கடாக்ஷம் பண்ணும்போது, பிராட்டியின் புருஷகாரத்தையோ, வேறு காரணத்தையோ எதிர்பார்க்காமல் எனது இச்சையாலே அவனைக் கடாக்ஷிக்கிறான். ஆனால் அவன் விஷ்ணு பக்தனாம்போது, பிரபந்நநிலையை அடையவேண்டும். அதனை அடுத்து ஏகாந்தி நிலையை அடைய வேண்டும். நிறைவாக பரமைகாந்தி நிலையை அடைய வேண்டும் என்ற நெறிகள் இருப்பதால் வெறிதே அருள் செய்வர் என்றால், ஒருவன் வைஷ்ணவனாக வேண்டும் என்பதே இல்லையாகி விடும். (பக்கம் 273-275)

32. ஒரு சாரார் இறைவனுக்குத் தன் அடியார் தீய ஒழுக்கம் மேற்கெண்டால் உகப்பாயிருக்கும்; அதோடு தன் குணங் களையும் ஒளிரச் செய்யும், ''உள்ளத்தில் பகைமையும், புறத்தில் நண்பன் என்று கூறிக் கொண்டு என்னைத் தஞ்சம் அடைபவனை யான் விடமாட்டேன். காத்தே தீருவேன். அப்படிப்பட்டவன் குற்றமுள்ளவனாகவும் இருக்கட்டுமே. அவனைக் காப்பதனை நல்லோர்கள் ஏற்றுக் கொள்வர்'' என்று இராமபிரானே கூறியுள்ளாரே என்பர். மேலும் திருமந்திரத்தில் நமப்பதத்தில் தன்னைத் தான் காத்துக் கொள்ளுதல் கூடாது எனக் கூறப்பட்டுள்ளது. தீயவற்றைச் செய்யாமல் விட்டால் தன்னைத்தான் காத்துக் கொள்ளும் நிலை வந்துவிடும். அதனால் தன்னுடைய காப்பில் தனக்கு உரிமை இல்லை எனக் கூறுகிற திருமந்திரத்திற்கு இதுவே

பொருள்; அதன் விரிவான த்வயம், சரம ச்லோகங்களுக்கும் இதுவே கருத்தென்றும் முரண்படக் கூறுகிறார்களே?

**பதில்:**

இது விபரீத ஞானத்தின் பயனாகும். இவ்வாறு தன் நெஞ்சில் தோற்றுகிற அர்த்தங்கள் மேலான அர்த்தங்கள் என்று கூறுகிறவர்களைத் தவிர்த்து, ஸாத்விக குணமும், ஞான அனுட்டானம் சிறந்தவரோடு வாழ வேண்டும். (பக்கம் 277-283)

**33. வாத்ஸல்ய குணம்:** சிலர் இறைவனுக்கு தன்னைச் சேர்ந்தவர்கள், இழிவான செயல்களைச் செய்தால் மிக உகப்பாக இருக்கும். அது இறைவனுடைய வாத்ஸல்ய குணத்தைப் பிரகாசிக்கச் செய்யும் என்று கூறுகிறார்களே?

**பதில்:** இது தவறு. வாத்ஸல்யம் என்பது குற்றங்களை நற்றமாகக் கொள்ளுவதாகும். ஒரு மனிதன் இறைவனான தன்னைச் சரணடைய வரும் காலத்தில் அவனிடத்திலுள்ள குற்றங்களை இன்பமாகக் கொண்டு அவனிடத்தில் அன்பு செய்வான். ஆனால் சரணாகதி செய்த பிறகு தெரிந்தே செய்யும் தீய ஒழுக்கங்களை ஏற்றுக் கொள்ள மாட்டான். எனவே, கெட்ட ஒழுக்கங்களை எல்லாம் விட்டு, மிக்க ஆர்த்தியென்றும் துடிப்பு உண்டானால் ஒழிய இறைவனுக்கு இவனிடத்தில் தோஷ போக்யத்துவமும் இரக்கமும் உண்டாகாது. (பக்கம். 286 -287.)

**34. ஆர்த்தியும் அத்யவஸாயமும்:** எனவே, இறைவன் இவனைக் காப்பதற்குக் கருவி ஆர்த்தியல்லது (துடிப்பு) இல்லை. இந்த ஆர்த்தி குறைவற்றிருந்தால் ஜீவன், பரமன் ஆகிய இருவர் இயல்பும் நிறம் பெறும் என்று பெரிய

வாச்சான் பிள்ளை தமது மாணிக்கமாலையில் அருளிச் செய்துள்ளார். எனவே, விரோத செயல்களிலிருந்து மீட்சியும், ஆர்த்தியில்லாதவனுக்கு நல்லாசிரியர் ஸம்பந்தமும், பிராட்டியின் புருஷகாரமும் ஜீவபர ஸம்பந்த ஞானமும் பலனளிக்காது. (பக்கம் 288-89)

35. பேற்றிற்குத் தகுதி பெறும் பிரபன்னன் இழி செயல்களை ஒழிப்பது மட்டும் போதாது. மற்ற உபாயங்களில் முயற்சிகளையும் விட்டொழிக்க வேண்டும். இதனைத் ''தீர்ப்பாரையாமினி'' என்ற திருவாய்மொழிப் பதிகத்தில் ஆழ்வார் அருளிச் செய்திருக்கிறார். அந்தத் திருவாய்மொழியின் உள்ளுறைப் பொருளைக் கருத்தில் கொள்ள வேண்டும். (பக்கம் 289 -96).

**36. அத்யவஸாயம்:** ஆகையால் ஜீவனுக்கும் இறைவனுக்கும் சொல்லப்பட்ட சம்பந்தம் மாத்திரம் போராது. அதற்கேற்ற ஒழுக்கம் உண்டாக வேண்டும். ''ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ'' என்றபடி ஒழுக்கம் உண்டானால், என்னையே பயனாக அடைவாய், என்னிடத்தில் இடையறாத மனத்தைச் செலுத்தியவனாக ஆவாய், என்னிடம் அன்பு உடையவனாக ஆவாய், என்னை வணங்குவாய், என்னையே மேலான கதியாக உடையவனாவாய்; இது சத்தியம், எனக்கு மிகவும் இனியன் அல்லவா என்று கண்ணனைப் பற்றியவனுக்கு உண்டாகும் பயன்களைப் பட்டியலிட்டுள்ளான் கண்ணன். (பக்கம் 302-307)

எனவே, தரும அதருமங்களைவிட்டு, இறைவனை உபாயமாக ஏற்றுக் கொண்டு, குறைவு ஏற்படாது செயல்பட்டால், இறுதி காலத்தில் தடைகளை நீக்கி இவனை இறைவன் முக்தனாக்குவான். அப்படியிருந்தும் மரண காலத்தில் பிள்ளை, மனைவி, உறவினர், செல்வம்

ஆகியவற்றில் பற்றுக்கொண்டு வாழ்ந்தானே ஆனால், இறைவன் இவ்வாத்மாவை விரைந்து அங்கீகரிக்க நினைத்தான் அல்லன், மீண்டும் பிறப்பது தப்பாது என்று ஸ்ரீமணவாளமாமுநிகள் கூறுவர். யானும் இதையே மேலான வார்த்தை என்று உங்களுக்குக் கூறுவேன் என்று எறும்பி யப்பா அருளிச் செய்தார். (பக்கம் 315 -316.)

இதனைக் கேட்ட ஸேநாபதியாழ்வான் மனம்வருந்தி, இப்படிப்பட்ட ஆர்த்தியுள்ள அதிகாரி யாவர்? ''எங்கினித் தலைப்பெய்வன்'' என்று ஏங்கி, இறைவனை இழந்தோம் என்று அவர் திருவடிகளிலே விழுந்து அழத்தொடங்கினார்.

எறும்பியப்பாவும் அவரை எடுத்து அணைத்து நீர் துன்புற வேண்டாம். இவ்வாறு அச்சமும் கழிவிரக்கமும் உண்டானால், எம்பெருமான் தானே உமக்கு வேண்டிய ஆத்ம குணங்களை உண்டாக்கித் தானே கைக் கொள்ளுவன். உம்மைக் காப்பதற்கு நீர் முயல வேண்டாம். நல்லாசிரியன் அபிமானமே நற்கதிக்கு வழி என்று மன உறுதி கொண்டு இருந்தால் எம்பெருமான் இறுதிக் காலத்தில் மேலான ஆர்த்தியை உண்டாக்கிக் காப்பான் என்றார்.

## 37. இராமானுசரே உத்தாரக ஆசாரியர்.

மேலும் இராமானுசரே உயர்கதிக்கிட்டுச் செல்லும் உத்தாரக ஆசாரியராக நம்மாழ்வாராலே அருளிச் செய்யப் பட்டு ஸ்ரீமந் நாதமுநிகள் தொடங்கி, ஸ்ரீமணவாளமாமுநிகள் வரை அங்கீகரிக்கப்பட்டுள்ளதால், எம்பெருமானாரே சரணம் என்று காட்டுகிற ஸதாசாரியன் அபிமானத்திலே ஒதுங்கியிருந்த ஆசாரியனே ஸதாசாரியன் ஆவான் என்று எறும்பியப்பா அருளிச் செய்தார். (பக்கம் 325-332).

## 38. அடியார்களை வழிபடும்முறை

அடுத்து ஸேநாபதியாழ்வான் அடியேனுக்கு பாகவதர் களைப் பின்பற்றும் முறைமையை அருளிச் செய்ய வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

அதற்கு எறும்பியப்பா இது மூன்று வகையாக இருக்கும். **1. ஸத்கார யோக்யர்** - (பாராட்டிற்குரியவர்) இவர்களுடைய நாம ரூபங்கள் இவர்களுக்கு முதன்மையாக இருக்கும். ஸ்ரீவைஷ்ணவ சிந்நங்களான திருமண்காப்பு, துளசி மாலைகள், திருவிலச்சினை தரித்திருப்பார்கள். இவர்களை சக்திக்கேற்றவாறு பாராட்டி ஸந்மானிக்க வேண்டும்.

**2. ஸஹவாஸயோக்யர்:** (உடன் வாழற்குரியோர்) இவர்கள் நிறை ஞானம் பெற்றவர். இவர்கள் சரமோபாய நிஷ்டராய், த்ருப்தப்பிரபன்னராய் இருப்பார்கள். இவர்க ளோடு எப்போதும் கூடி வாழத்தக்கவர்கள்.

**3. ஸதாநுபயோக்யர்:** இவர்கள் அனுஷ்டானத்தை முதன்மையாகக் கொண்டவர்கள். இவர்கள் இருள்தருமா ஞாலமான இந்நிலவுலகில் வெறுப்படைந்து, பகவதநுபவம் கிடைக்காவிடில் துடிப்படைந்து, தம்முடம்பை மறந்து கிலேசித்து, உறக்கமற்று, எம்பெருமான் நாமங்களையே புகற்றி, அவ்வெம்பெருமானார் காண வேண்டும் என்ற அலமாப்புற்று, அவனைப் பிரிந்து கண நேரமும் இருக்க முடியாத மஹாத்மாக்கள் ஆவர். இவர்களை ஆசார்யர்களாகக் கொள்ளலாம். அவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தையும் கொள்ளலாம்.

### 31. பிறர் உயிர் வாழ்வில் இரக்க உணர்வு:

இறைவனைத் தவிர்ந்த பிற உபாயங்களை பூரண மாக விட வேண்டும் என்று பிரபத்தி சாஸ்திரங்கள் கூறும் போது, பிறர்பால் இரக்கத்தாலே சிலவற்றைச் செய்யும்படி கூறப்பட்டதே? உபாயாந்தரங்களை முழுமையாகத் துறக்க வேண்டாமா?

**பதில்:** பிரபன்னனானவன் தனக்கு அது விதிக்கப் பட்ட கருமங்கள் என்றும், அதுவே நம்மைக் காப்பாற்றும் என்றும் நினையாமல் பிறர்க்காக இரக்கத்தாலே அவற்றை அநுஷ்டித்தால் 'எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கி றேன்' என்று கூறிய இறைவனால் விடுவிக்கப்பட்ட பாவங்களில் சேர்ந்து விடுமாகையாலே இவனுக்கு அவை தடையாகாது. (பக்கம் 356-360)

### 40. ஸ்ரீபாததீர்த்தம் பெறுதல்:

பூரண அதிகாரிகளைப் பிரார்த்தித்து, அவர்கள் தம்முடைய தாழ்ச்சியை முன்னிட்டு ஸ்ரீபாததீர்த்தம் கொடாமல் ''நீசனேன் நிறை ஒன்றுமிலேன்'' என்று சிராய்த்துத் தள்ளிக் கொண்டு வந்தாலும், அவனைப் பன்முறை பிரார்த்தித்து தனது ஆசாரியர் திருமேனியே என்று அவர் திருவடியை விளக்குகிற அவர் திருக்கையாலே கொல்வதால் தன்யனானேன் என்று கூறி அத்தீர்த்தத்தைப் பருக வேண்டும்.

தீர்த்தம் கொடுப்பவர் தனது ஆசாரியனது உருவத்தை தியானித்துக் கொண்டு, குருபரம்பரையை முன்னிட்டு, த்வயத்தை உச்சரித்து அன்புடன் கொடுப்பதே ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததாகும். (பக்கம் 364-366.)

41. ''பயிலும் திரிவுடையார் எவரேலும்'' என்றபடி தாழ்ந்த மரபில் பிறந்தவர் உயர்ந்தோர் என்றால் அவர்கள் செய்யும் தொழிலும் உயர்ந்ததாகக் கொள்ளும்படி ஆகிவிடுமே? அப்போது சாஸ்திர விரோதமும், ஸ்வரூப விரோதமும், உபாயத்திற்கும் பயனுக்கும் குற்றம் சொல்லவருமே என்று கேட்டார் ஸ்ரீஸேநாபதியாழ்வான்.

**பதில்:** எட்டுவிதமான பக்திகளும், உலகத்தார் தொடர்பும், உறவினர் தொடர்பினையும் ஒன்றாக விட்டுவிட்டு, பகவானின் அடிமைக்கேற்ற அகங்காரமற்ற பிறவியும், அகங்காரமில்லாத செயலும் உடைய சிறந்தவரே உயர்ந்தோர் ஆவர். சாஸ்திரம் தப்பிடொப்பவர் சிறந்தோர் ஆகமாட்டார். (பக்கம் 371-380).

42. இறைவனைச் சரணடைந்த பின்னரும் எத்தன்மை தாழ்ந்த ஒழுக்கமுடையரானாலும், அவர் உயர்ந்தவர் என்ற பொருள் ''பயிலும் திருவுடையார் எவரேலும்'' என்பதற்கு தோன்றாதோ என்னில், தாழ்ந்த பிறப்பொழுக்கத்தை இறைவனைச் சரண் அடைவதற்கு முன்பிருந்த நிலையில் கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்ளாமல் பிரபந்நன் ஆன நிலையிலும் கொண்டால், முதற்படி, சரமபடி என்ற விஷய ஞான பக்திகள் இல்லையாய் விடும். ஆகையால் அவ்வாறு சொல்ல வொண்ணாது. (பக்கம் 379-380).

43. பகவான் நம்மைக் காக்கச் செயல்படும்போது அதற்கு விரோதமாக நாம் நம்மைக் காக்கச் செயல்படுவதைவிட வேண்டும் என்று சரம ச்லோகத்திலே விதித்தால், அதனையே காரணமாக்கித் தீய ஒழுக்கத்தை மேற்கொள்ளு தல் என்று தன்னடையே சொல்லிற்றாகாதோ? ஆகாது. அவை மயக்கமுடைய அறிவினை உடையராய், உண்மை

நூலிற் கூறியவற்றை ஏற்காதவர்களது சொல்லும் செயலும் உயர்வடைய விரும்புபவர்களுக்கு சான்றாகாது. (பக்கம் 426-427) கெட்டவர்கள் தொடர்புடைய குரு, மந்திர தேவதைகள் நல்லோர்க்கு விடத்தக்கன என்று மாணிக்கமாலையில் பெரியவாச்சான் பிள்ளையும் அருளிச் செய்துள்ளார். (பக்கம் 431) எனவே பூருவாசாரியருடைய உபதேசத்திற்கும் அநுஷ்டானத்திற்கும் விரோதம் வராதவாறு நன்றாக ஆராய்ந்து, நிலை நின்ற பொருளைக் கூறுகின்ற பரம வைதிகமான அதிகாரிகளுடைய பேச்சும் ஒழுக்கமுமே சிறந்ததெனக் கொள்ளுதல் வேண்டும். ஸ்ரீவசனபூஷணம், திருமந்திரம் போன்றவற்றில் நிஷ்டை உண்டாக வேண்டும் என்று மாமுநிகள் கூறுவர்.

44. நம் பூருவாசாரியர்கள் அனைவரும் எம்பெருமானைப் பற்றுதல் கையைப் பிடித்துக் காரியம் கொள்ளுவது போல. ஆசாரியனைப் பற்றுதல், காலைப் பிடித்துக் காரியம் கொள்ளுவது போல என்று, ஆசாரியனையும் இறைவனை யும் சேர்த்து ஒருவராகவும், ஆசாரியன் சீடனுக்கு உதவி புரிபவன் என்று வேறாகவும் சொல்லியிருக்கிறார்களே என்று ஸேனாபதியாழ்வான் நிறைவாகக் கேட்டார்.

**எறும்பியப்பா அருளிய பதில்:**

ஆசாரியனை வெறும் பகவான் என்றும் சொல்லக் கூடாது. வெறும் பரிசுத்த ஆத்மா என்றும் கூற முடியாது. நரங்கலந்த சிங்கம் என்று மனித உருவும் சிங்க உருவும் கூடிய நரசிங்க அவதாரம் போல மிகவும் ஆச்சரியப்படத் தக்கதாயிருக்கும். இப்படி இறைவனும் ஆழ்வாரும் சேர்ந்த ஆசாரியராக இருக்கும் தன்மை நம்மாழ்வார் ஒருவரிடத் திலேயே உள்ளது. அவருடைய திருவடியாக இருக்கும்

எம்பெருமானாரே எல்லாருக்கு உயர்ந்த ஆசாரியர் என்பது எல்லா ஆசாரியராலும் ஒருமுகமாக அங்கீகரிக்கப்பட்ட பொருளாகும். (பக்கம் 479-81) எனவே, எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றிருக்கும் அதிகாரிகளோடு கூடி ஸ்ரீவசனபூஷணம் ஆசாரிய ஹ்ருதயம் போன்ற இரகசிய நூல்களின் அநுபவத்தையே காலம் கழித்துக் கொண்டு, எம்பெருமா னாரை யாவர் சரணம் அடைகிறார்களோ அவர்கள் அச்சமற்று சுகமாக வாழக்கடவர்கள் என்று எறும்பியப்பா தமது சீடர் களுக்கு அருளிச் செய்தருளினார்.

இவ்வாறு ஆழ்வார்கள் காலந்தொடங்கி இன்றுவரை ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு பல எதிர்ப்புகளையும், சரிவுகளையும் நம்முடைய ஆசார்யர்கள் சந்தித்து, அதனால் திருமால் அடியார்கள் குழப்பம் அடையாதவாறு உண்மை நிலைகளை உபதேசித்தும், க்ரந்தங்களாக எழுதியும் உபகரித்துள்ளனர். அம்முறையில் அவதரித்ததே ஸ்ரீமந் எறும்பியப்பா ஸ்வாமி அருளிச் செய்த 'விலக்ஷண மோக்ஷாதிகாரிநிர்ணயம்' என்ற நூலாகும். இந்நூலின் எளிய விளக்கத்தை கலையிலங்கு மொழியாளரான முனைவர். இரா. அரங்கராஜன் ஸ்வாமி 1987இல் வெளியிட்டார். இப்போது ஸ்ரீவைஷ்ணவத்தை உலகளவில் வளர்த்து வரும் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ ஸ்வாமி முழுநூலையும் பிரபன்னகுல திலகர் பெருமாள் ராமாநுஜதாஸர் மூலம் விரிவான ஆழமான விளக்கங்களுடன் வெளியிட்டிருப்பது ஸ்ரீவைஷ் ணவத்திற்குக் கிடைத்த அரிய பொக்கிஷமாகும். விளக்க வுரை ஆசிரியரின் உபயவேதாந்த ஆழ்ந்த பரந்த நுண்மாண் நுழைபுலம் பாண்டித்யத்தைப் பக்கந்தோறும் தெரிவிக்கிறது. பதிப்பாசிரியருக்கும், உரையாசிரியருக்கும் ஸ்ரீவைஷ்ணவ உலகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது. ✱✱✱

**பதிப்பாசிரியர் குறிப்பு:**

இந்த நூலில் பலப்ரமாணங்கள் எடுத்தாளப் பட்டுள்ளன. அவை அனைத்தின் ஆகரங்களும் கிடைக்க வில்லை. கிடைத்தவற்றிர்க்கு மாத்திரம் ஆங்காங்கே பொருள் விளக்கமும், குறிப்பும் தரப்பட்டுள்ளன. மற்றைய இடங்களில் (?) என்று குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றினு டைய ஆகரத்தை பெரியோர்கள் தந்துதவக்கூடுமானால் இந்நூல் மேலும் சிறப்புறும். மூலத்தில் குறிப்பிடப்பட்டுள்ள எண்ணிற்கு விளக்கவுரையில் பொருள் விளக்கம் தரப் பட்டுள்ளது. அந்த இடங்களில் மூலத்தில் குறிப்பிடப் பட்டுள்ள 'எண்ணே' கீழே விளக்கவுரையிலும் கொடுக்கப் பட்டிருக்கும்.

மூலநூல் பத்திகளாகப் பிரிக்கப்படவில்லை. விளக்க வுரையுடன் கூடியதாக இந்த நூல் பதிக்கப்பட்டுள்ளதால், மூலநூல் பல பத்திகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இதைக் கருத்தில் கொண்டிடுமாறு ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்.





ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயேநம:

## எறும்பியப்பா அருளிச்செய்த

# விலக்ஷணமோக்ஷாதி$_4$காரிநிர்ணயம்

## எறும்பியப்பா தனியன்

*ஸௌம்யஜாமாத்ருயோகீ$_3$ந்த்$_3$ர சரணாம்பு$_3$ஜ ஷட்பத$_3$ம் |*
*தே$_3$வராஜ கு$_3$ரும்வந்தே$_3$ தி$_3$வ்யஜ்ஞாந ப்ரத$_3$ம் ஶுப$_4$ம் ||*

அழகிய மணவாளமாமுநிகளின் திருவடித்தாமரைகளில் வண்டுபோல் படிந்து ரஸாநுபவம் செய்பவரும், தம்மையண்டினவர்களுக்கு உயர்ந்த ப்ரஹ்ம ஜ்ஞானத்தை அளிப்பவரும், அறிவினாலும் அநுஷ்டாநத்தாலும் சோபிப்பவருமான தேவராஜகுருவென்னும் எறும்பியப்பாவை வணங்கித் துதிக்கிறேன். (எறும்பியப்பா - மணவாள மாமுநிகளுடைய சிஷ்யர்கள் எண்மரில் ஒருவர்)

## போரேற்று நாயனார் தனியன்

*ஶமத$_3$மாதி$_3$கு$_3$ணைகநிகேதநம்*
*சரமபர்வணிநிஶ்சலசேதஸம் |*
*யதிவராங்க்$_4$ரி ஸரோருஹஷட்பத$_3$ம்*
*ஸமரபுங்க$_3$வ ஸத்$_3$கு$_3$ருமாஶ்ரயே ||*

## போரேற்றுநாயனார் தனியன் விவரணம்

மனவடக்கம், பொறியடக்கம் முதலிய நற்குணங்களுக்கு ஒப்பற்ற கொள்கலமானவரும், சரமபர்வமாகிய ஸ்ரீமணவாளமாமுநிகளென்னும் ஆசார்யரிடத்தில் அசையாமல் ஊன்றிய மனம் படைத்தவரும், யதிராஜரான எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளில் வண்டு போல் படிந்திருப்பவருமான போரேற்று நாயனாரென்னும் ஸதாசார்யரைத் தஞ்சமடைகிறேன்.

போரேற்று நாயனார் - நவரத்னங்கள் என்று கொண்டாடப்படுபவர்களான ஸ்ரீமணவாளமாமுனியின் சிஷ்யர்கள் ஒன்பதின்மரில் ஒருவரென்று பெரிய திருமுடி யடைவு தெரிவிக்கிறது.

கந்தாடை போரேற்றுநாயனாருக்கு ஆசார்யர் பெரிய ஜீயர். ஸ்ரீபாஷ்யம் ப்ரஸாதித்தருளினவர் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா.

ஸேனாபதியாழ்வானுடைய ஆசார்யன் போரேற்று நாயனார். அதனால் அவருடைய தனியன் இந்த நூலில் இடம்பெற்றுள்ளது. ✱✱✱



ஸ்ரீ:

# எறும்பியப்பா அருளிச்செய்த விலக்ஷணமோக்ஷாதி$_{4}$காரிநிர்ணயம்

**1. மூலம்:**

*ஸ்ரீமத்$_{3}$ வரவரமுனிசிஷ்யரான எறும்பியப்பாவை ஸச்சி$_{2}$ஷ்யரான ஸேநாதிபதியாழ்வான் முதலானோர் தாளும் தடக்கையும் கூப்பிப் பணிந்து 'மோக்ஷிச்சு$_{2}$க் களான (மோக்ஷத்தில் விருப்பமுடையவர்களான) அடியோங்களுக்கு மோக்ஷாதி$_{4}$காரிகளான விலக்ஷண ருடைய ஸ்வரூபத்தை நிர்ணயித்து அருளிச் செய்ய வேணும்' என்று அபேக்ஷிக்க (வேண்டி நிற்க), அப்பாவும் 'இன்று நாம் இவ்வர்த்த$_{2}$த்தை நிர்ணயிக்குமதொன்றாய் இருந்ததோ? ஸாமாந்ய விசேஷ விப$_{4}$ாகமற ஸகல சாஸ்த்ரங்களும், வேத$_{3}$வேத$_{3}$ாந்த வேத்$_{3}$யனான கீதாசார் யனும், ருஷிகளும், ஆழ்வார்களும் ஆசார்யர்களுமாக எல்லாரும் கி$_{3}$ரிசிக$_{2}$ரப்ரதீ$_{3}$பமாக ப்ரகாசிப்பித்த தொன்றன்றோ? (மலை உச்சியில் விளங்கும் தீபம் போலே) ஆனாலும் லோகஹிதார்த்த$_{2}$மாக நீர் பண்ணின ப்ரஶ்நத்துக்கு (கேட்ட கேள்விக்கு) அஸ்மத$_{3}$ாசார்ய யோக்தங்களான அர்த்த$_{2}$ விசேஷங்களை விண்ணப்பம் செய்கிறேன் - கேளிகோள் என்று அருளிச் செய்யும்படி. ஶ்ரிய:பதியாய் நிகி$_{2}$லஹேயப்ரத்யநீக கல்யாணை கதாநனான ஸர்வேச்வரன் நிரங்குஶ ஸ்வதந்திரனுமாய், பரமகாருணிகனானவனொருவனாகையாலே, ''மன் பல்லுயிருகளுமாகிப் பலபல மாய மயக்குக்களால் இன்புறுமிவ் விளையாட்டுடையான்'' (திருவாய். 3-10-7)*

***என்கிறபடியே அநேக வித₄ங்களான மோஹக்ருத்யங்களாலே (மோஹத்தை உண்டு பண்ணும் செயல்களாலே) லீலாவிபூ₄தி சேதநரோடே விளையாடாநின்று கொண்டு, யாரேனும் சிலரை ஸம்ஸாரத்தில் நின்றும் உத்₃த₄ரிப்பிக்க வேணுமென்று திருவுள்ளமானவளவில்;***

**விளக்கவுரை:**

ஸ்ரீமணவாளமாமுனிகளின் சிஷ்யராகிய எறும்பி யப்பாவை, போரேற்று நாயனாரின் சிஷ்யரான ஸேநாபதி யாழ்வான் மற்றும் பலர் தாளும் தடக்கையும் கூப்பித் தெண்டன் ஸமர்பித்து மோக்ஷமடைய விரும்புகிற அடியோங்களுக்கு, மோக்ஷம் பெற உரியவர்களாய் ஐச்வர்ய கைவல்யார்த்திகளை விட வேறுபட்டிருக்கும் சிறப்பைப் பெற்ற பெரியோர்களுடைய ஸ்வரூபத்தை தேவரீர் அறுதியிட்டு அருளிச்செய்ய வேணும் என்று வேண்டிக் கொள்ள எறும்பிப்பா, இப்போது நாம் இவ்விஷயத்தைப் புதிதாக அறுதியிட வேண்டியதாக உள்ளதோ? ஸாமாந்ய சாஸ்த்ரம் விசேஷ சாஸ்த்ரம் என்னும் வாசியில்லாமல் எல்லா சாஸ்த்ரங்களும், வேதவேதாந்தங் களால் பரம்பொருளாக அறியப்படுகிற கீதாசார்யனான கண்ண பிரானும் பராசராதி மஹர்ஷிகளும் நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களும், நாதமுனி முதலான ஆசார்யர்களுமாக எல்லோரும்;

மலையுச்சியில் ஏற்றிவைத்த விளக்குப்போலே விளக்கிவிட்ட விஷயமன்றோ இது? அப்படி இருந்த போதிலும் உலகோரின் நன்மையை விரும்பி நீங்கள் கேட்ட கேள்விக்கு எம்முடைய ஆசார்யரான மணவாளமாமுநிகள் அருளிச் செய்த அர்த்த விசேஷங்களை விண்ணப்பம் செய்கிறேன், கேளுங்கள், என்று அருளிச் செய்யும்படி இது:-

திருமகள் மணவாளனாய் எல்லாக் குற்றங்களுக்கும் பகையாய் (எல்லாக் குற்றங்களும்) தன்னிடம் இல்லாம லிருப்பதோடு, தன்னையடைந்தவர்களுடைய குற்றங்கள னைத்தையும் போக்கவல்லனாய்) நற்குணங்க ளுக்கு ஒரே இருப்பிடமான ஸர்வேச்வரன் (ஸ்ரீமந்நாராயணன்) தடை யில்லாத சுதந்திரத் தன்மையுடையவனுமாய் எல்லையற்ற கருணையை இயல்பாகக் கொண்டவனொருவனாகையாலே **மன்பல்லுயிர்களுமாகிப் பலபல மாயமயக்குக்களால் இன்புறும் இவ்விடையாட்டுடையான்,** (திருவாய். 3-10-7) என்று ஆழ்வார் அருளியபடியே, அநேக விதங்களான மோஹிப்பிக்கும் செயல்களாலே லீலா விபூதியாகிய இவ்வுலகிலுள்ள ஜீவாத்மாக்களோடு விளையாடா நின்று கொண்டு, யாரையாவது சிலரை இந்த ஸம்ஸாரத்திலிருந்து தாண்டுவிக்க வேணுமென்று தன் திருவுள்ளத்தில் தோன்றியவளவில்,

**2. மூலம்:**

*ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே₂ ப்₄ராம்யமாணே ஸ்வகர்மபி₄:|*
*ஜீவே து₂:க₂ாகுலே விஷ்ணோ: க்ருபா கா(அ)ப்யுபஜாயதே:||*

*(அஹிர்புத்₄ந்ய ஸம்ஹிதை)* என்று இச்சேதநன் ஸம்ஸார சக்ரஸ்த₂னாய் ஸ்வார்ஜித புண்ய பாபங்களாலே ஜந்ம மரண நிரயபதநாதி₃ து:க₂ங்களை அநுப₄வித்துக் கொண்டு படுகிறபாட்டைக் கண்டு அவன்மேலே க்ருபை ஜநித்து,

நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா |
கேவலம் ஸ்வேச்ச₂யைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் க₃தாசந ||

*(லக்ஷ்மீதந்த்ரம்)* என்கிறபடியே பட்டத்துக்கு

***உரிய ஆனையும் அரசும்போலே தன் நிர்ஹேதுக க்ருபையாலே விசேஷகடாக்ஷம் பண்ணும்.***

**விளக்கவுரை:**

''இங்ஙனம் ஸம்ஸாரமாகிற பிறப்பு இறப்புத் தொடர்ச்சியாகிய சக்கரத்தில் அகப்பட்டிருந்து தமது நல்வினை தீவினைகளாலே சுழற்றப்பட்டவனாய்த் துன்பம் நிறைந்தவனாயிருக்கும் ஜீவாத்மாவினிடத்தில் விஷ்ணு வுக்கு, ''காரணமேதும் காண முடியாததொரு கருணை உண்டாகிறது.'' (அஹிர்புத்$_4$ந்ய ஸம்ஹிதை) என்றபடியே, இந்த ஜீவன் ஸம்ஸாரசக்ரத்தில் இருந்து கொண்டு தானீட்டிய புண்ணிய பாவங்களாலே பிறத்தல், இறத்தல். நரகத்தில் வீழ்தல் முதலிய துக்கங்களை அநுபவித்துப்படுகிற கஷ்டங் களைக் கண்டு அவன் திறத்தில் கருணையுண்டாகப் பெற்று ''நான் பிராட்டியின் புருஷகாரத்தினாலோ (பரிந்துரையின் பலனாகத்தாலோ) கருமயோகம், ஞானயோகம் முதலிய வேறுகாரணங்களினாலோ, அன்றிக்கே, சுதந்திரனான என்னுடைய இச்சையினால் மட்டுமே எவனொருவனை எப்போதாவது ஒரு சமயத்தில் கடாக்ஷிப்பேன் (லக்ஷ்மீ தந்த்ரம்) என்கிறபடியே பட்டத்துக்கு உரிய ஆனையும் அரசனும் போலே தனது நிர்ஹேதுகமான (ஒரு காரணத் தையும் எதிர்பாராமல்) க்ருபையாலே விசேஷகடாக்ஷத்தைப் பண்ணுவான்.

*3. மூலம்:*

***ஜாயமாநம் ஹறி புருஷம் யம் பச்யேந் மது$_4$ஸூத$_3$ந: |***
***ஸாத்த்விக: ஸ து விஜ்ஞேய: ஸவை மோக்ஷார்த்த$_2$ சிந்தக:||***

***(ப$_4$ாரதம்மோக்ஷத$_4$ர்மம்) என்று அந்த ஜாயமாந***

***கடாக்ஷத்தாலே பரம ஸத்த்வ நிஷ்ட$_2$னாய் மோக்ஷா பேக்ஷை பிறந்து ''ஜ்ஞாநாத் மோக்ஷ: அஜ்ஞாநாத் ஸம்ஸார:'' என்று சொல்லுகிற அந்த மோக்ஷம் அநுஷ்ட$_2$ாந பர்யந்தமான அர்த்த$_2$ பஞ்சக ஜ்ஞானத்தாலே லபி$_4$க்கும தொன்றாகையாலே தத$_3$ப$_4$ாவத்தில் பௌ$_4$ந: புநர்ஜந்ம மரண ரூப ஸம்ஸாரது:கமே மேலிடுமதொழிய உஜ்ஜீ விக்க விரகில்லையென்று.***

**விளக்கவுரை:**

''பிறந்து கொண்டிருக்கிற எந்த மனிதனை மதுஸூதநன் கடாக்ஷிக்கிறானோ, அந்த மனிதனே ஸத்துவ குணம் நிறைந்தவனாக அறியத்தக்கவன். அவனே மோக்ஷமாகிய புருஷார்த்தத்தைப் பற்றி ஆராயுமவன்'' (பாரதம் - மோக்ஷதர்மம்) என்று கூறப்பட்ட ஜாயமாந கடாக்ஷத்தாலே, முடிவெல்லையாக உயர்ந்த ஸத்துவ குணத்தில் ஊன்றிய வர்களாய் அதனாலே மோக்ஷம் பெற வேணுமென்றும் ஆசையுண்டாகப்பெற்று ''ஜ்ஞானத்தினால் மோக்ஷம் உண்டாகும், அஜ்ஞானத்தினால் ஸம்ஸாரம் உண்டாகும்'' என்று சொல்லப்படுகிற அந்த மோக்ஷமானது அநுஷ்டானத் திலே முடிவு பெறுகிற அர்த்த பஞ்சக ஜ்ஞாநத்தினாலே (அடையத்தக்க பரம்பொருள். அடையும் ஜீவாத்மா, அடைவதற்குரிய உபாயம், அடைந்து பெறும் பயன், அடையவொட்டாமல் தடை செய்யும் பகை ஆகிய இவ்வைந்தினையும் உள்ளபடியே அறிகையாலே) கிடைப்ப தொன்றாகையாலே. அந்த அர்த்த பஞ்சகஜ்ஞாநம் உண்டாகாதபோது மேன்மேலும் பிறப்பும் இறப்புமாகிய ஸம்ஸாரத்துன்பமே மேலிடுவதொழிய மோக்ஷம் பெற்று உய்யவழியில்லையென்று நினைத்து,

**4. மூலம்:**

*"தத்$_3$விஜ்ஞாநார்த்த$_2$ம் ஸ கு$_3$ருமேவாபி$_4$க$_3$ச்சே$_2$த்*
*ஸமித் பாணி: ஶ்ரோத்ரியம் ப்$_3$ரஹ்ம நிஷ்ட$_2$ம்*
*தஸ்மை ஸ வித்$_3$வாந் உபஸந்நாய ஸம்யக்*
*ப்ரஶாந்த சித்தாய ஶமாந்விதாய*
*யேநாக்ஷரம் புருஷம் வேத$_3$ ஸத்யம் ப்ரோவாச தாம்*
*தத்த்வதோ ப்$_3$ரஹ்ம வித்$_3$யாம்"*

*(முண்டகோ. 1-2-12,13)* என்று ஶ்ருதியில் சொல்லுகிறபடியே அந்த முமுக்ஷு சேதநன் தத்$_3$விஜ்ஞாந லாபத்துக்காக ஶுஶ்ருஷா பரனாய்க்கொண்டு, வேத வேதாந்த ஸாரார்த்த$_2$வித்தமனாய் அபரமாத்ம வைராக்$_3$ய பூர்வகமாக பரப்$_3$ரஹ்மாநுபவைக நிஷ்ட$_2$னாயிருக்கிற ஸதாசார்யனை ஆஶ்ரயிக்க வேணும். அவனும் ஶமத$_3$மாத்$_3$யாத்ம கு$_3$ண ஸம்பந்நனான இவன் நெஞ்சை நன்றாக சோதி$_4$த்து ப்$_3$ரஹ்ம ப்ராப்தி ஸாத$_4$நமான விஜ்ஞாநத்தை உபதே$_3$சித்து தத$_3$நுரூபாநுஷ்ட$_2$ானங்களை நன்றாகத் தெரியும்படி ஶிக்ஷித்து வைக்க,

**5. மூலம்:**

இவனும் இவற்றை லபி$_4$த்து (பெற்று) க்ருத க்ருத்யனாய் மோக்ஷாதி$_4$காரியாய் உஜ்ஜீவிக்கும்.

இந்த ஶ்ருதியில், 'ஸம்யக் ப்ரஶாந்த சித்தாய' என்கிறவிடங்களில் சொன்ன ஶமத$_3$மங்கள் இரண்டும் ஆத்ம குணங்களில் ப்ரத$_4$ாநங்களாகையாலே, இவை யிரண்டும் சொல்லுகை ஸச்சி$_2$ஷ்ய லக்ஷணங்களெல்லாத் துக்கும் உபலக்ஷணம் (குறிப்பினால் உணர்த்துவது).

**விளக்கவுரை:**

''பரமாத்மாவை அடையும் (மோக்ஷம் பெறும்) உபாயத்தை நன்றாக அறிந்து கொள்வதற்காக அம்மனிதன். வேதாந்தமறிந்தவனாய் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் பெற்று (ப்ரஹ்மத்தை த்யானிக்கும் போது, ப்ரஹ்மத்தைக் கண்ணால் கண்டாப்போலே தெளிவாக மனத்தினால் காணப்பெற்று) அதில் மனம் ஊன்றியவனான ஆசார் யனையே நோக்கி ஸமித்துக்களைக் (தீவளர்க்கும் சுள்ளி களைக்) கையிலேந்திக் கொண்டு (அல்லது) கை கூப்பிக் கொண்டு செல்லக் கடவன். மோக்ஷோபாயமறிந்த அந்த ஆசார்யன் - தன்னிடம் ப்ரஹ்ம ஜ்ஞாநோபதேசம் பெறுவதற்காக மனவடக்கமும் பொறியடக்கமும் உடைய வனாய் முறைப்படி வந்து கிட்டிய அந்த சிஷ்யனுக்கு உருவமாறுபாடும் குணமாறுபாடுமில்லாத பரம புருஷனை தான் எத்தகைய ஞானத்தின் வாயிலாக அறிந்து கொண்டி ருக்கிறானோ; அத்தகைய ப்ரஹ்ம ஜ்ஞாநத்தை உள்ளபடியே பூர்ணமாக உபதேசிக்கக்கடவன்'' (முண்டகோ.1-2-12,13) என்ற ச்ருதியிலே சொல்லுகிறபடியே;

முற்கூறிய மோக்ஷமடைய விரும்பும் ஜீவன் ப்ரஹ்மஜ்ஞாநத்தைப் பெறுவதன் பொருட்டு ஆசார்ய னுக்குப் பணிவிடை செய்வதில் ஊன்றியவனாய், வேத வேதாந்த ஸாரார்த்தங்களைப் பூர்ணமாக அறிந்தவனும், பரமாத்மாவினின்றும் வேறுபட்ட நீச விஷயங்களில் வைராக்யம் முன்னாகப் பரமாத்வாகிய ஒரே விஷயத்தில் மனம் ஊன்றியிருக்கப்பெற்றவனுமான ஸதாசார்யனைத் தஞ்சம் பற்ற வேணும். அந்த ஆசார்யன் ஶமம் தமம் முதலிய ஆத்ம குணங்கள் நிறையப்பெற்ற இச்சிஷ்யனு டைய நெஞ்சை உண்மையில் இவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானம்

பெற விருப்பமுள்ளதா? என்று நன்றாக ஆராய்ந்தறிந்து பரப்ரஹ்மத்தை அடைவதற்கு உபாயமான ப்ரஹ்ம ஜ்ஞானத்தை உபதேசித்து, அந்த ஜ்ஞாநத்துக்குத் தக்க அநுஷ்டானங்களையும் நன்றாகத் தெரியும்படி கற்பித்துத் திருத்தி வைக்க, இந்த சிஷ்யன் அவற்றைப் பெற்றுத் தன்காரியம் நிறைவேறப் பெற்றவனாய் மோக்ஷம் பெறத்தகுதியை அடைந்து பின்பு மோக்ஷம் பெற்று உய்ந்து போவான்.

இவ்வேதச் சொற்றொடரில் கூறிய ஶமதமங்கள் (மனவடக்கமும் பொறியடக்கமும்) இரண்டும் ஆத்ம குணங்களில் சிறந்தவையாகையாலே இவற்றைச் சொல்லுகை நற்சீடனுக்கு உள்ள நற்பண்புகளெல்லா வற்றையும் குறிப்பினால் உணர்த்துவதாகும்.

6. மூலம்:

*"ச்ரோத்ரியம்ப்$_3$ரஹ்மநிஷ்ட$_2$ம்" என்று சொல்லுகிற இரண்டும் ஸத$_3$ாசார்ய லக்ஷணங்களெல்லாத்துக்கும் உப லக்ஷணம். ஸச்சிஷ்ய லக்ஷணங்கள் எவையென்னில்*

*"ஶரீரம்வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்ம கு$_3$ணா நஸூந்| கு$_3$ர்வர்த$_2$ம் த$_4$ாரயேத்$_3$ யஸ்து ஸ சிஷ்யோ நேதர: ஸ்ம்ருத:||" (ஜயாக்$_2$யஸம்ஹிதை) என்கிறபடியே ஶரீரார்த$_2$ ப்ராண க்$_3$ருஹ க்ஷேத்ர புத்ரத$_3$ாராதிகளொன்றும் தனக்கு ஶேஷ மென்று நினையாதே அங்குத்தைக்கு ஶேஷமாக்கி ப்ருத$_2$க் ப்ரயத்ந மொன்றுமின்றிக்கே அவன் நினைவிலே ஒதுங்கி க்ரய விக்ரயார்ஹனாயிருக்குமவனாய்;*

விளக்கவுரை:

வேதவேதாந்தமறிந்தவன், ப்ரஹ்மஸாக்ஷாத்காரம்

பெற்றவன் என்று சொல்லுகிற இரண்டும் நல்லாசிரியரின் நற்பண்புகள் எல்லாவற்றுக்கும் உபலக்ஷணமாகும். நல்ல சீடனின் நற்பண்புகள் எவையென்னில், ''உடல் செல்வம் அறிவு இருப்பிடமான வீடு செயல் நற்பண்புகள் பிராணன் ஆகிய இவற்றை ஆசார்யனுக்காக எவன் தரிக்கிறானோ, அவனே சிஷ்யனாவான், வேறொருவனல்லன் என்று பெரியோர்களால் கருதப்பட்டான்'' (ஜயாக்2யஸம்ஹிதை) என்கிறபடியே, உடல் செல்வம், பிராணன், வீடு, நிலம், மகன், மனைவி ஆகிய இவற்றில் ஒன்றும் தனக்கு உரியதென்று நினையாமல் ஆசாரியனுக்கே உரியதாக ஆக்கி, தனக்கென்று தனிப்பட்ட முயற்சி ஏதுமின்றிக்கே, ஆசார்யனது நினைவிலே ஒதுங்கி அவன் தன்னை மற்றொருவனுக்கு விற்கவும் வாங்கவும் தகுதி பெற்றிருக்கு மவனாயிருந்து, 'நல்ல விஷயங்களில் சென்ற புத்தியை யுடையவனும் நல்லோர்க்குப் பணிவிடை செய்யுமவனும், தத்துவ ஞானம்பெற விருப்பமுடையவனும் அதற்காக ஆசார்ய ஶுஶ்ரூஷையில் ஆசையுடையவனும் யான் எனதென்னும் செருக்கற்றவனும் தரையில்விழுந்து தெண்டனிடுவதில் ஊன்றியவனும்;

**7. மூலம்:**

*''ஸத்3புத்3த்தி4: ஸாது4ஸேவீ ஸமுசித சரித:, தத்த்வ போ3த4ாபி4லாஷீ - ஶுஶ்ரூஷுஸ் த்யக்தமாந: ப்ரணிபதந பர: ப்ரஶ்ந கால ப்ரதீக்ஷ: ஶாந்தோ தாந்தோ(அ)ஸூயு: ஶரணமுபகத: ஶாஸ்த்ர விஶ்வாஸ ஶாலீ ஶிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவி த3பி4மதம் தத்த்வத: ஶிக்ஷணீய: (ந்யாஸ விம்சதி-3) என்கிறபடியே ஸத்3விஷயங்களிலே ப்ரவண மான பு3த்3தி4யையுடையனாய், ஸாது4ஸேவாரதனாய், ஸத3நுஷ்ட2ாந ஸம்பந்நனாய், தத்த்வஜ்ஞாநா பேக்ஷை*

*யுடையனாய், கு₃ருஶுஶ்ரூஷாநிரதனாய், நிரபி₄மாநி யாய், ப்ரணிபாத நமஸ்க்ரியாபரனாய், ப்ரஶ்நகாலநிரீக்ஷக னாய், ப₃ாஹ்யா ப்₄யந்தரேந்த்₃ரிய நிக்₃ரஹமுடையனாய், பிறர் உயர்த்தி ஸஹிக்கமாட்டாத அஸூயையில்லாதவ னாய், ஶரணாகதனாய், ஶாஸ்த்ர விஶ்வாஸமுடைய னான ஶிஷ்யன் ப்ராப்தனானால் தத்த்வதஶ் ஶிக்ஷணீய னென்று சொல்லப்பட்ட இக்குணங்களுடைய ஸச்சி₂ஷ்ய லக்ஷண ஸம்பந்நனானவனுக்கு ஹிதோபதேஶம் பண்ணக் கடவன்.*

**விளக்கவுரை:**

ஆசார்யனிடம் ஸத்விஷயங்களைக் கேட்டறிந்து கொள்வதற்கு ஏற்ற தருணத்தை எதிர்பார்ப்பவனும் மனமும் பொறிகளும் நீசவிஷயங்களில் செல்லாமல் அடங்கப் பெற்றவனும் ஆசார்யரிடம் பொறாமையற்றவனும், ஆசார் யனுடைய வீட்டிலேயே இருப்பவனும், சாஸ்திரப் பொருள் களில் நம்பிக்கையுடையவனும் செய்ந்நன்றி மறவாதவனு மான சிஷ்யன் இப்படியிருக்கிறானா என்று ஆசார்யனுடைய பரீக்ஷைக்கு இலக்காகி, அவனுக்கு அபிமதனானால் (இவன் இந்த தன்மைகளையுடையவனே என்று நினைத்த ஆசார்யனுடைய விருப்பத்திற்கு இலக்கானவனாகில்) அச்சிஷ்யன் ஆசார்யனால் உள்ளபடி பூர்ணமாக ஸத்விஷ யங்களைக் கற்பிக்கக் கடவனாகிறான் (ந்யாஸ விம்ஶதி-3) என்கிறபடியே இக்குணங்களையுடைய - நல்ல சிஷ்யனுக்கு இருக்க வேண்டிய லக்ஷணங்கள் நிறையப் பெற்றவனுக்கு ஆசார்யன் ஹிதோபதேசம் செய்ய வேண்டும்.

**8. மூலம்:**

*இப்படியிராதவனைச் சேர்த்துக்கொள்ள வொண்*

ணாது. ஸ்வக்₂யாதிலாப₄பூஜா(அ)நுவர்த்தநாதிகளுக்காக (புகழ், பேறு, பூஜை இவற்றில் நாட்டம் கொண்டவனாய்), தே₃வதாந்தர ஸாத₄நாந்தர விஷயாந்தரபரராய்த் திரிகிற ப₃த்₃த₄ ஸம்ஸாரிகளைப் பத்துப்பேரைக் கூட்டிக் கொண்டு 'தன்நெஞ்சில் தோற்றினதே சொல்லி' (உபதேச -71) என்கிறபடியே பூர்வர்களுடைய வசநாநுஷ்ட₂ாநங்களை விட்டுத் தன்னுடைய துர்வாஸநையாலே (தீயபற்று) தனக்குத் தோற்றின விபரீதார்த்த₂ங்களைச் சொல்லிக் கொண்டு அவர்களாலே அர்த்த₂ார்ஜநாதிகளைப் பண்ணிக் கொண்டு தே₃ஹபரவஶனாய்த் ஆசார்யன் "யஜமாந க்ருதம் பாபம் த்₃ரவ்ய மாஶ்ரித்ய திஷ்ட₂தி" என்று சேதந தோஷம் அவன் த்ரவ்யத்தைப் பற்றிக் கிடக்கையாலே "சிஷ்யபாபம் கு₃ரோரபி" என்கிறபடியே அநதி₄காரியான ஶிஷ்யா பி₄மாநதூ₃ஷித த்₃ரவ்யத்₃வாரா அவன் பாபமும் மேலிட்டுத் தன்னதும் அவனதும் கொண்டு மேலிட்டு உருமாய்ந்து போமாகையாலே;

**விளக்கவுரை:**

இப்படியிராதவனை ஆசார்யன் சேர்த்துக்கொள்ளுதல் கூடாது, தன்னை உலகோர் புகழ்வதற்காகவும் தனக்குப் பொருள் கொடுப்பதற்காகவும், தன்னைப் பூஜிப்பதற்காகவும், தனக்குப் பணிவிடை செய்வதற்காகவும், திருமால் தவிர்ந்த வேறு தெய்வங்களையும், மோக்ஷம் பெறுவதற்காகக் கருமயோகம், ஞானயோகம், பக்தி யோகம் முதலான மற்ற உபாயங்களையும் நீசமான உலக விஷயங்களையும் பற்றித்திரிகிற ஸம்ஸாரிகள் பத்துப்பேரைத் தன்னோடு சேர்த்துக் கொண்டு, "தன்நெஞ்சில் தோற்றினதே சொல்லி" (உபதேச-71) என்கிறபடியே, முன்னோர்களுடைய உபதே

சங்களையும் அநுஷ்டானங்களையும் விட்டு விட்டுத் தன்னுடைய நெடுநாளாகப் பழகிப்போந்த தீயபற்றினால் தனக்குத் தோன்றிய சாஸ்திரத்தோடு மாறுபட்ட பொருள் களைச் சொல்லிக் கொண்டு, அவர்கள் வாயிலாகப் பொருளீட்டுதல் முதலிய தீய காரியங்களைச் செய்து கொண்டு தன்னுடலைக்காப்பதிலேயே பரவசனாய்த் திரிகிற ஆசார்யன் "பொருளையுடையவன் செய்த பாவம் அவனது பொருளைப் பற்றிக் கிடக்கிறது என்று மனிதன் செய்த குற்றம் அவனுடைய திரவியத்தைப் பற்றி நிற்கிற தாகையாலே" "சிஷ்யனுடைய பாவம் ஆசார்யனுக்கும் உண்டு" என்கிறபடியே தகுதியற்ற சிஷ்யன் ஆவான்.

9. மூலம்:

*ஶிஷ்யனாகிலுமாம், ஆசார்யனாகிலுமாம் விலக்ஷண ஸம்பந்தமே வேண்டுவதென்று ஸதாசார்ய ஸம்பந்தத் தோபாதி ஸச்சிஷ்ய பம்பந்தமும் உபாதேயமாக நினைத்து விலக்ஷணரையே சேர்த்துக் கொள்ள வேணும். ஆகையாலேயிறே "ஸோ(அ)யம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்த$_2$ாம் யத்ஸம்ப$_3$ந்த$_4$ாத$_3$மநுத கத$_2$ம் வர்ண்யதே கூரநாத$_2$:" என்று பூர்வோத் தராசார்யர்களுக்கு முக்திப்ரத$_3$ராக பரஸித்தராண எம்பெருமானாரும் குரோர் வசநாதிக்ரமணம் பண்ணித் தெற்காழ்வான் கோயிலிலே அபேக்ஷித்த ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாருக்கும் திருமந்த்ரார்த்தத்தை வெளியிட்ட அபசாரத்தாலே தமக்கு துர்க்கதியை நிஶ்சயித்து ஸச்சிஷ்யரான கூரத்தாழ்வான் ஸம்பந்தத்தாலே தமக்கு முக்திகரஸ்தமாயிற்றென்று காஷாய வஸ்த்ரத்தை ஏறிட்டு கூத்தாடினாரென்று ப்ரஸித்தமிறே.*

**விளக்கவுரை:**

அவன் எனதென்று நினைத்தலால் கொள்ளத்தக்க (அவனது) பொருளின் வாயிலாக, அச்சிஷ்யனுடைய பாவமும் மேலிட்டு அவனதும் தன்னதுமாகக் கொண்டு பாவங்கள் மிக அதிகமாகி (ஆசார்யன்) உருமாய்ந்து போவானாகையாலே (தீய சீடனை ஆசார்யன் சேர்த்துக் கொள்ளக் கூடாது.)

சிஷ்யனாக இருந்தாலும் இருக்கலாம், சிறந்தவரோடு தொடர்பே நமக்கு வேண்டும் என்று ஸதாசார்யனோடு உண்டான தொடர்புபோல் ஸச்சிஷ்யனோடு உண்டாகும் தொடர்பும் கொள்ளத்தக்கதாகவே நினைத்து விலக்ஷணரையே (மிகச் சிறந்தவரையே) சேர்த்துக் கொள்ள வேண்டும். ஆகையாலேயன்றோ (தம்முடைய திருவடி ஸம்பந்தத்தாலே பிற்பட்ட ஆசார்யர்களும், திருமுடி ஸம்பந்தத்தாலே (தொடர்பாலே) முற்பட்ட ஆசார்யர்களும் மோக்ஷம் பெறும் படிக்குத்தக்க பெருமையை உடைய) அத்தகைய ராமாநுஜ முநிவரும் தமது மோக்ஷம் தம் கையிலிருப்பதாக யாருடைய ஸம்பந்தத்தாலே அறுதியிட்டாரோ அப்படிப்பட்ட கூரத் தாழ்வான் அறிவாற்றல்கள் குறைந்த நம்மாலே எங்ஙனம் வருணிக்கத்தக்கவராவர்?

**10. மூலம்:**

**''கு$_3$ரோர்வசோதிக்ரமணே நிச்சித்ய ஸ்வஸ்யது$_3$ர்க$_3$திம்|**
**பராநர்த$_2$ாஸஹிஷ்ணுத்வாத் மந்த்ரம் ப்ரோவாச ப$_4$ாஷ்யக்ருத்''||**

என்றா நின்றதிறே.

*இப்படி விலக்ஷண சிஷ்யஸம்பந்தம் உத்தாரக மோபாதி, அவிலக்ஷண சிஷ்யஸம்பந்தமும் அநர்தகர*

*மாய்த் தலைக்கட்டும் ஸத்புத்ரஸம்பந்தம் பிதாவுக்கு நரக ஸமுத்தரண ஹேதுவாய் அபதேப்ரவ்ருத்த புத்ர ஸம்பந்தம் அவன் பண்ணின நிஷித்தாநுஷ்டாநத்தாலே '...... பித்ரூந் ப்ராசயதே யம:' என்று பித்ருவர்கத்துக் கெல்லாம் விநாசஹேதுவாமென்று சாஸ்த்ரம் சொல்லா நின்றதிறே.*

**விளக்கவுரை:**

என்று முன்பும் பின்புமுள்ள ஆசார்யர்களுக்கு முக்தியளிக்க வல்லவரென்று பிரசித்திபெற்ற எம்பெரு மானாரும், திருக்கோட்டியூர் நம்பிகளின் வார்த்தையை மீறித் தெற்காழ்வான் (திருக்கோட்டியூரெம்பெருமான்) கோயி லிலே ஆசைப்பட்டுக் கேட்ட ஸ்ரீவைஷ்ணவர்களனைவர்க் கும் திருமந்த்ரம் மற்றும் சரமச்லோகத்தின் பொருளை உபதேசித்ததனாலுண்டான அபசாரத்தாலே (பாபத்தாலே) தமக்கு நரகமுண்டாகு மென்று நிச்சயித்து, நல்ல சிஷ்யரான கூரத்தாழ்வானுடைய தொடர்பாலே தமக்கு மோக்ஷம் கையிலுள்ள தென்று மகிழ்ந்து தமது காவியுடையை ஆகாசத்திலே வீசியெறிந்து கூத்தாடினாரென்பது பிரசித்த மன்றோ? குருவின் ஆணையை மீறியது காரணமாகத் தமக்கு நரகம் வருமென்று அறுதியிட்டிருந்தும், ஸ்ரீபாஷ்ய காரர் உலகிலுள்ள பிறரெல் லாம் திருமந்த்ரார்த்தமறியாமல் ஸம்ஸாரத்தில் வருந்துவதைக் கண்டு பொறுக்கமாட்டாத வராகையாலே திருமந்த்ரார்த்தத்தை வெளியிட்டு அருளினார் என்று கூறப்படுகிறதன்றோ?

இப்படி சிறந்த சிஷ்யஸம்பந்தம் ஆசார்யனுக்குப் பிறவிக் கடலைத் தாண்டுவிக்குமாப்போலே தாழ்ந்த சிஷ்யஸம்பந்தமும் கேட்டினை விளைவிப்பதாய் முடியும். நல்ல மகனோடுண்டான தொடர்பு அவன் தகப்பனுக்கு

நரகத்தைத் தாண்டுதற்குக் காரணமாகி, தீய வழியில் செல்லும் மகனுடைய தொடர்பு அவன் செய்த தீய செயல்களாலே பித்ருக்களை பாவப்பயன் அனுபவிக்கும்படி செய்கிறான்; யமன் என்று,

**11. மூலம்:**

*“ஸ ஹி வித்$_3$யாதஸ்தம் ஜநயதி தச்ச்$_2$ரேஷ்ட$_2$ம் ஜந்ம க$_3$ரீயாந் ப்$_3$ரஹ்மத$_3$: பிதா கு$_3$ரு: பிதா முமு க்ஷோஸ்து” (ஆபஸ்தம்ப தர்மஸூத்ரம் 1.1.16), என்று ஶிஷ்ய ஆசார்யர்களுக்குப் பிதா புத்ரஸம்ப$_3$ந்த$_4$ம் சொல்லப் பட்டதிறே. ஆகையாலே அபதே$_2$ப்ரவ்ருத்த சிஷ்ய ஸம்பந்தம் தத்த்ரவ்ய பரிக்ரஹத்$_3$வாரா ஸர்வாநர்த் ஹேதுவாய் நசிப்பிக்கும். இப்படி சிஷ்ய ஸம்பந்தமே அபாயமான பின்பு ஜ்ஞாநுஷ்டாந ஹீந குரு ஸம்பந்தம் விநாஶஹேது வென்னுமிடம் சொல்ல வேண்டாவிறே.*

**விளக்கவுரை:**

பித்ருவர்க்கமனைத்துக்கும் (தமப்பன் முதலிய முன்னோர் திரளனைத்துக்கும்) அழிவு தருமென்று சாஸ்த்ரம் கூறுகின்றதன்றோ? அந்த ஆசார்யன் அச்சிஷ்யனை அறிவி னால் (அறிவுதந்து) பிறப்பிக்கிறானல்லவா? அந்த அறிவுப் பிறப்பு உடற் பிறப்பை விடச் சிறந்தது. (ஆபஸ்தம்ப தர்மஸூத்ரம் 1-1-16) மந்த்ரத்தை உபதேசித்து அறிவை யுண்டாக்கிய ஆசார்யன் பெற்ற தகப்பனைவிட மிக உயர்ந்த தகப்பனாவான். மோக்ஷம் பெற விரும்புமவனுக்கோ என்னில் ஆசார்யன் தமப்பனாகிறான் என்று சிஷ்யனுக்கும் ஆசார்யனுக்கும் முறையே மகனுக்கும் தந்தைக்குமுள்ள உறவு முறை சொல்லப்பட்டதன்றோ? ஆகையாலே தீநெறிக்கண் செல்லும் சிஷ்யனோடு உண்டாகும் தொடர்பு

அவன் தரும் பொருளைக் கொள்ளுவதன் வாயிலாக ஆசார்யனுக்குக் கேடுகளனைத்தையும் விளைத்து அவனை நாசமாக்கிவிடும். இப்படிப்பட்ட சிஷ்ய ஸம்பந்தமே ஆபத்தை விளைவிக்குமானால் அறிவும் அநுஷ்டாநமும் இல்லாத குருவோடு உண்டாகும் தொடர்பு, சிஷ்யனுக்குக் கேட்டை விளைக்கு மென்பதைப் பற்றித் தனிப்படச் சொல்ல வேண்டுவதில்லையல்லவா? அறிவற்ற ஆசார்யனைப் பற்றிய சிஷ்யன் எங்ஙனம் மோக்ஷமடையப் போகிறான். உடைந்துபோன படகில் ஏறியவன் பிரயாணம் தடைபட்டு, எங்ஙனம் கரைசேர மாட்டானோ, அப்படியே;

**12. மூலம்:**

*“ஜ்ஞாநஹீநம் கு$_3$ரும் ப்ராப்ய குதோ மோக்ஷமவாப்நுயாத் - பி$_4$ந்ந நாவாய்ரய ஸ்தப்$_3$தே$_4$ா யத$_2$ா பாரந் ந க$_3$ச்ச$_2$தி”* என்று அநர்த்த$_2$ ஹேதுவாகச் சொல்லப் பட்டதிறே. ஆகையாலே ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயேத்யாதி$_3$ ஸதாசார்ய லக்ஷண லக்ஷிதரான பரம விலக்ஷண ஸம்பந்தமே மோக்ஷ ஹேதுவாய்க் கரையேற்றும்.

*“ஸித்$_3$த$_4$ம் ஸத்ஸம்ப்ரத$_3$ாயே ஸ்தி$_2$ரதி$_4$ யமநக$_4$ம் ய்ரோத்ரியம் ப்$_3$ரஹ்மநிஷ்ட$_2$ம் ஸத்த்வஸ்த$_2$ம் ஸத்ய வாசம் ஸமயநியதயா ஸாது$_4$வ்ருத்த்யா ஸமேதம்| ட$_3$ம்ப$_4$ாஸூயாவிமுக்தம் ஜிதவிஷயக$_3$ணம் தீ$_3$ர்க்க$_4$ப$_3$ந்து$_4$ம் த$_3$யாளும் ஸ்க$_2$ாலித்யே ஶாஸிதாரம் ஸ்வபரஹித பரம் தே$_3$ஶிகம் பூ$_4$ஷ்ணுரீப்ஸேத்” (ந்யாஸ விம்சதி - 1)*

**விளக்கவுரை:**

இதுவும், ‘‘ஜ்ஞாநம் இல்லாத ஆசார்யஸம்பந்தம் சிஷ்யனுக்குக் கேட்டையுண்டாக்குமதாகச் சொல்லப்பட்டதல்லவா?’’ ஆகையாலே ‘ஸித்தம்ஸத்ஸம்ப்ரதாயே’ என்று

தொடங்கும் ந்யாஸ விம்சதி முதல் ச்லோகத்தில் சொல்லிய ஸதாசார்ய லக்ஷணங்களோடு கூடின மிகச்சிறந்த ஆசார்ய னோடு உண்டாகும் ஸம்பந்தமே மோக்ஷகாரணமாகிச் சிஷ்யனைக் கரையேறச் செய்யும்.

ஸத்தையை (-எடுத்தமனிதப்பிறவிக்குத் தக்க சிறந்த பயனை) அடைய விரும்பும் சிஷ்யன் - நாதமுனிகள், ஆளவந்தார், எம்பெருமானார் முதலிய ஆசார்யர்கள் வழியாக வரும் நல்ல ஸம்ப்ரதாயத்தில் - (நல்ல அறிவு ஆசாரம் இவற்றின் மரபில்) நிலைத்திருப்பவனும், ஸ்திரமான புத்தியை உடையவனும், குற்றமற்றவனும், வேதாந்தமறிந் தவனும், எம்பெருமானிடம் மனம் ஊன்றியவனும், ஸத்துவ குணத்தில் நின்றும் அசையாதவனும், உண்மையே பேசு மவனும், சிஷ்டாசாரத்தின் வரையறைக்கு உட்பட்ட நல்ல செயல்களோடு கூடியவனும், ஆடம்பரம் பொறாமை முதலிய குற்றங்களால் விடப்பட்டவனும், (பொறிகளை அடக்கியதனால்) நீச விஷயங்களைவென்றவனும், நடுவில் விட்டுப்போகாமல் நெடுகிற உறவையுடையவனும்;

**13. மூலம்:**

*என்கிறபடியே ஸத்ஸம்ப்ரத$_3$ாய ஸித்தனாய், ஸுஸ்திர புத்தியை உடையனாய், உபதேஶபலாதி விப்ரதிபத்தி தோஷமில்லாதவனாய், வேதாந்ததாத்பர்ய மறிந்தவனாய், பகவதே$_3$கநிஷ்ட$_2$ாக$_3$ரிஷ்ட$_2$னாய், குண த்ரயவஶ்யரைப்போலே ஸுக$_2$து$_3$:க$_2$ாதி$_3$களில் ஹர்ஷ ஶோகங்களடையாதே, "ஸமது$_3$:க$_2$ஸுக$_2$ஸ்வஸ்த$_2$ஸ் ஸமலோஷ்டாஶ்ம காஞ்சந: | துல்யப்ரியாப்ரியோதீத: துல்யநிந்த$_3$ாத்மஸம்ஸ்துதி: | மாநாவமாநயோஸ்துல்ய: துல்யோ மித்ராரிபக்ஷயோ: | ஸர்வாரம்ப$_4$ பரித்யாகீ$_3$ கு$_3$ணாதீதஸ்ஸ உச்யதே" || (?) என்கிறபடியே.*

**விளக்கவுரை:**

அருள் மிக்கவனும், சிஷ்யன் தவறி நடந்தால் சிக்ஷித்துத் திருத்துமவனும், தனக்கும் பிறர்க்கும் நன்மையைத் தேடுமவனுமான ஆசார்யனை - அடைய விரும்பவேண்டும் (-விரும்பியடைய வேண்டும்) (ந்யாஸ விம்சதி - 1) என்கிறபடியே நல்லாசிரியர்மரபில் நிலை பெற்றிருப்பவனாய், மிகவும் திடமான புத்தியை உடையவனாய், சிஷ்யனுக்குத்தான் உபதேசம் செய்வதற்கு என்ன பயன் என்பது முதலான நினைவற்றவனாய், குற்றமில்லாதவனாய், வேதாந்தத்தின் உண்மைக் கருத்தை அறிந்தவனாய், பகவானொருவனிடமே ஊன்றிய மன முடைமையினாலே மிகவுமுயர்ந்தவனாய், ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கட்கும் வசப்பட்டவர்கள் போல் சுக துக்கம் முதலியவை நேர்பட்டபோது மகிழ்ச்சி யும் சோகமும் அடையாமல், சுக துக்கங்களை ஸமமாக எண்ணுமவனும் தனது இயற்கையான நடுநிலையில் நிற்பவனும், மண்கல், பொன்னாகிய இவற்றை ஸமமாக நினைப்பவனும், விரும்பத்தக்கவைகளையும் வெறுக்கத் தக்கவைகளையும் ஸமமாக எண்ணுமவனும் மனம் கரையாமல் தைரிய முற்றவனும்;

தன்னைப் பிறர் புகழ்ந்தாலும், பழித்தாலும் ஸமமாக நினைப்பவனும், தன்னைப் பிறர் பூஜித்தாலும் அவமதித் தாலும் ஸமமாக, எண்ணுமவனும், தோழர்களையும் பகைவர்களையும் ஒரே விதமாக நினைப்பவனும், தனது நன்மைக்குத் தான் சிறிதும் முயற்சி செய்யாமல் (எம்பெருமானையே நம்பி) இருப்பவனுமாக யாவன் ஒருவன் இருக்கிறானோ அவன் முக்குணங்களையும் கடந்தவனாகச் சொல்லப்படுகிறான்.

**14. மூலம்:**

***த்ரிகுணாதீதனாய், ஶுத்3த4 ஸத்வஸம்பந்நனாய் யத2ா த3ர்ஶந ஸாமர்த்2யயத2ா த்3ருஷ்டார்த2வாதி3த்வங்களுடையனாய், ப்ராக்தநஶிஷ்டாசாராநுகு3ணமான ஸாது4வ்ருத்தியாலே ஆஹாரநியதி, ஸஹவாஸநியதி அநுவர்த்தநநியதிகளோடே கூடியிருக்குமவனாய் டம்ப4ா ஸூயாதி3க ரஹிதனாய் க3ாந ஶயீரவண - அங்க3நாபரிஷ்வங்க3ாதி3 க்ஷுத்3ர ஶப்3த3ாதி விஷயங்களில் நசையற்றவனாய் அவன் விட்டாலும் தான் விடாதே நிற்குமவனாய்ப் பராநர்த்த2ம் ஸஹிக்கமாட்டாதே பரமத3யாளுவாய், இவன் தப்பி நடக்குமிடத்தில் அபதே2 ப்ரவ்ருத்தனாகாதபடி கழுத்திலே கட்டிக்கொண்டு ஶிக்ஷிக்க வல்லனாய், நிஷித்3த4 ப்ரவ்ருத்திகளொன்றும் ப்ராமாதி3கமாகவும் தன்பாடு சாராதபடி குறிக்கொண்டு வர்த்தித்துத் தனக்கும் பிறர்க்கும் ஹிதபரனாயிருக்கும் ஆசார்யனைப் பற்றித் தத3ா ஜ்ஞாநு வர்த்தநம் பண்ணுமவனாய்த்து ப4க3வத் ப்ரியதமனாய் முக்தனாவது.***

**விளக்கவுரை:**

முக்குணங்களையும் கடந்தும் ரஜோகுணமும் தமோ குணமும் கலசாத ஸத்துவகுணமே நிறையப் பெற்றதும் உள்ளதை உள்ளபடியே அறியுமாற்றலையும் அறிந்தபடியே சொல்லுமாற்றலையும் பெற்றும், முன்னைய பெரியோர் களின் அநுஷ்டானத்தோடு சேர்ந்த நற்செயல்களாலே உணவில் நியமம், சேரிடமறிந்து சேருகையில் நியமம், பணிவிடை செய்வதில் நியமம் இவற்றோடே கூடியும், ஆடம்பரம் ஆசூயை முதலிய துர்குணங்களின்றியே, பெண்களின் பாட்டுக்களைக் கேட்டல் அவர்களை

அணைத்தல் முதலிய நீசமான சப்தாதி விஷயங்களில் நசையறப்பெற்றும், சிஷ்யன் தன்னை விட்டாலும் தான் அவனை விடாமலிருந்தும், பிறர் துன்பம் பொறுக்க முடியாத பரமதயாளுவாயிருந்தும், சிஷ்யன் வழிதவறிச் செல்லும் போது அவனை விடாமல் கழுத்தில் கட்டிக் கொண்டு ஶிக்ஷிக்க வல்லவனாயிருந்தும், தன்னிடம் தீய செயல்க ளொன்றும், தானறியாமலும் வாராதபடி ஊக்கமுடையவனா யிருந்தும் தனக்கும் பிறர்க்கும்;

**15. மூலம்:**

***"ஞானமநுட்டானமிவை நன்றாயுடையனான குருவையடைந்தக்கால் மாநிலத்தீர் தேனார் கமலத் திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும்." (உபதேசரத்தினமாலை - 61) என்று அஸ்மதாசார் யோக்தம்.***

***ஸத்$_3$ாசார்யன் ஸத்ஸம்ப்ரதாய ஸித்$_3$த$_4$னாகை யாவது "பழுதிலாவொழுகலாற்று" (திருமாலை - 42) என்கிறபடியே ப்ரபந்ந ஜநகூடஸ்தரான ஆழ்வார் தொடங்கி ஸ்வாசார்ய பர்யந்தமான வம்சப்ரவாஹத்தில் நடுவே ஒரு அபி$_4$ஶஸ்த ஸம்பந்தம் கலசாதே நிர்துஷ்டனாயிருக்கை. உபதேஶபலாதி விப்ரதிபத்தி தோஷமில்லாதவனாகையாவது;***

**விளக்கவுரை:**

நன்மையையே நாடுமவனாயும் இருக்கும் ஆசார் யனைப்பற்றி, அவனுடைய ஆணையைப் பின்செல்லும் ஶிஷ்யனே பகவானுக்கு மிகவும் பிரியனாய் முக்தியடையப் பெறுவான். "ஞானமநுட்டானமிவை நன்றாக உடையனான குருவை யடைந்தக்கால் மாநிலத்தீர் தேனார் கமலத்

திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும்'', (உபதேச - 61) என்று அஸ்மதாசார்யரான மணவாளமாமுனிகளால் அருளிச்செய்யப்பட்டது.

ஸதாசார்யன் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தனாகையாவது - ''பழுதிலாவொழுகலாற்று'' (திருமாலை - 42) என்கிற படியே ப்ரபத்தி செய்யும் பெரியோர்களுக்கு மூல புருஷரான நம்மாழ்வார் தொடங்கி தன்னுடைய ஆசார்யன் வரையில் உண்டான ஜ்ஞானவம்சபரம்பரையில் நடுவில் ஒரு பாவியின் ஸம்பந்தமும் இல்லாமல் தோஷமற்றவனா யிருக்கை. உபதேசபலம் முதலியவற்றில் நினைவற்ற வனாகிய தோஷமில்லாதவனாயிருக்கையாவது, உபதேசம் செய்வதற்குப் பயன் - இவ்வுலகில் அனுபவிக்கப்படும் செல்வம் முதலியவையும், சிஷ்யன் மோக்ஷம் பெறுவதும் சிஷ்யனோடு கூடி வசித்தலும் ஆகியவை ஸித்திப்பது என்று நினையாமல், உபதேசம் பெற்ற சிஷ்யன் பகவானுக்கு மங்களாசாஸனம் செய்யத்தகுதி பெறுவதே உபதேசத்தின் பயன் என்று நினைத்திருக்கையும்;

**16. மூலம்:**

***உபதேஶபலம் த்ருஷ்ட ஶிஷ்யோஜ்ஜீவந ஸஹ வாஸங்கள் ஸித்திக்குமதென்று நினையாதே, பகவத் விஷய மங்களாசாஸநத்துக்கு அர்ஹநாவதென்று (தகுதியுடையவனென்று) நினைத்திருக்கையும், தான் ஆசார்யனென்றும், ஶிஷ்யனைத் தனக்கு ஶிஷ்ய னென்றும் பாராதே ஸப்ரஹ்மசாரியாக நினைத்திருக் கையும். ஆஹார நியதியாவது ஜாதி துஷ்ட - ஆச்ரயதுஷ்ட நிமித்த துஷ்டங்களைப் பரித்யஜித்துப் (அறவே விட்டுவிட்டு) பவித்ரங்களுமாய் விலக்ஷண பரிக்ரஹங்களுமாய்ப் பரிஶுத்தங்களுமான பகவத்***

**பாகவத ஶேஷங்களை ஸ்வீகரிக்கை. ஜாதி துஷ்டங்களான "லஶுநம் மத்$_3$யமாம்ஸாநி மூலகங்க்$_3$ருஞ்ஜநம் தத$_2$ா | திலபிஷ்டம் தத$_2$ாஸீக்$_3$ரும் பி$_3$ல்வம் கோஶாதகீம் தத$_2$ா || அலாபு$_3$ம் ஶ்வேதவார்த்தாகம் விட்$_2$வநீகம் ததை$_2$வச | ஏவமாதீ$_3$ந்ய ப$_4$க்ஷ்யாணி ஶாஸ்த்ரது$_3$ஷ்டாநி யே நரா:| க$_2$ாத$_3$ந்தி தே நரா யாந்தி விண்மூத்ர க்ரிமிபே$_4$ாஜநம்" என்று த்யாஜ்யங்களாக சொல்லப்படுகிற நிஷித்$_3$த$_4$த்$_3$ரவ்யங்கள். (?)**

**விளக்கவுரை:**

தான் ஆசார்யனென்றும், சிஷ்யனைத் தனக்கு சிஷ்யனென்றும் நினையாதே, சிஷ்யனைத் தன்னாசார்யனிடத்தில் தன்னோடு கூடி ஓதிய மாணாக்கனென்று நினைத்திருக்கையும் ஆகும்.

உணவில் நியமமாவது - தாழ்ந்த ஜாதியில் சேர்ந்த (சாஸ்த்ரத்தால் விலக்கப்பட்ட) உணவுப் பொருள்களையும், பாவம் செய்தவர்களின் ஸம்பந்தம் பெற்ற உணவுப் பொருள்களையும், மற்றும் சிலகாரணங்களால் குற்ற மடைந்த உணவுப் பொருள்களையும் அறவே விட்டிட்டு, சாதித்தூய்மையுடையனவும், நல்லோர்களின் ஸம்பந்தம் பெற்றனவும், சிலகாரணங்களால் குற்ற முண்டாகாதனவுமான - பகவான் பாகவதர்கள் ஆகியவர்கள் அமுதுசெய்த மிச்சத்தை உணவாகக் கொள்ளுகையே ஆகும். சாஸ்த்ரம் விலக்கிய தாழ்ந்த சாதியில் சேர்ந்த உணவுகளான - வெள்ளைப்பூண்டுகள், மாம்ஸம், முள்ளங்கி, வெங்காயம், பிண்ணாக்கு, முருங்கை, வில்வம், புடல், சுரைக்காய், வெண்கத்திரி ஆகிய இவை முதலான - சாஸ்திரம் விலக்கிய;

உண்ணத்தகாத பொருள்களை எந்த மக்கள் உண்ணு கின்றார்களோ அவர்கள் மலம், மூத்திரம், புழு இவற்றை நரகத்தில் தின்பவராவர் என்று விடத்தக்கவைகளாகச் சொல்லப்படுகின்ற தீயபொருள்கள்.

**17. மூலம்:**

*ஆனால் ஆசாரப்ரத$_4$ாநரான பெருமாள் "நமாம்ஸம் ராக$_4$வோ பு$_4$ங்க்தே ந சாபி மது$_4$ஸேவதே" (ஸ்ரீராமஸுந்தர காண்டம் 36-41) என்று ஸீதாவிச்லேஷ ஸமயத்தில் மது$_4$மாம்ஸவர்ஜநம் பண்ணினாரென்று சொல்லுகையாலே கூடியிருக்கும் தசையில் அநுப$_4$வித்தா ரென்று தோற்றுகிறதிறே. "மர்யத$_3$ாநாஞ்ச லோகஸ்ய கர்த்தாகாரயிதா ச ஸ: (ஸ்ரீராமஸுந்தர 35-11) என்றும்," "த$_4$ர்ம ஸம்ஸ்த$_2$ாப நார்த$_2$ாய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$" (கீதா. 4-8) என்றும் த$_4$ர்ம ஸம்ஸ்த$_2$ா பநார்த$_2$மாகத் திருவவதரித்த அவதாரங்களில் ஆசரித்த த$_4$ர்மம்.*

**விளக்கவுரை:**

ஆனால் சிஷ்டாசாரத்தையே முக்கியமாகக் கொண்ட சக்ரவர்த்திருமகன் இராகவன் மாம்ஸத்தை உண்பதில்லை. மதுவையும் பருகுவதில்லை. (ஸ்ரீ ராமாயணம் ஸுந்தர 36-41) என்று சீதையைப் பிரிந்தநேரத்தில் மதுமாம்ஸங் களை விட்டிருந்தாரென்று சொல்லுகையாலே சீதையோடு கூடியிருக்கையில் அவற்றை உபயோகித்தாரென்று தோற்றுகிறதல்லவா? "ஶாஸ்த்ரம் கூறிய தருமவரம்புகளை அந்த இராமபிரான் (மீறாமல்) அநுஷ்டிப்பவனும் உலகத்தாரையும் அநுஷ்டிக்கும்படி செய்பவனுமாகிறான்". (ஸ்ரீராமா - ஸுந்தர 35-11) என்றும், "தருமங்கள் நிலை

நாட்டுகையாகிற பயனுக்காகவே ஒவ்வொரு யுகத்திலும் தோன்றுகிறேன்.'' (கீதை 4-8) என்றும் தர்மஸம்ஸ்தாபநத்துக்காக அவதரித்த அவதாரங்களில் அநுஷ்டிக்க தருமம் நமக்குக் கைக்கொள்ளத்தக்கதாகாதோ என்னில்,

**18. மூலம்:**

***உபாதேயமாகாதோ என்னில் பெருமாள் ஸாமாந்ய தர்மநிஷ்டராகையாலே க்ஷத்ரிய குலங்களுக்கு அநுகுணமான மாம்ஸங்களையும், ராஜாக்கள் ஸ்வீக ரிக்கிற நாநாஸுகந்த புஷ்பரஸ ஸமுதாயமான மதுவையும் ஸ்வீகரித்தாரித்தனை போக்கி ஸ்வவர்ணவிருத்தமான மதுமாம்ஸபரிக்ரஹம் பண்ணிற்றில்லையே. வர்ணதர்மிகளுக்குத் தாரதம்யாநு குணமாகச் சில த்யாஜ்யம், சில உபாதேயமானவை யெல்லாம் ஸத்வப்ரசுரரான பரமைகாந்திகளுக்கு 'உபே$_4$வித்வாந் புண்ய பாபே விதூ$_4$ய' என்கிறபடியே பகவதநுபவ வ்யதிரிக்தங்கள் த்யாஜ்யங்களாய் விடுமதொழிய உபாதேயமென்னக் கூடாது.***

***''ப்ராஹ்மணஸ்ய'', ''மதூ$_4$கமைக்ஷவந்தாளம் கார்ஜூரம் பாநஸம் தத$_2$ா, த்$_3$ராக்ஷம் மது$_4$ஜமாரிஷ்டம் மைரேயம் நாளிகேரஜம் | இத்யேகாத$_3$ஶமத்$_3$யாநி நிஷித்$_3$த$_4$ாநி த்$_3$விஜந்மநாம் | ஸுராம்பு$_3$க்ருதகே$_3$ாமூத்ர பயஸாமந்யதமமக்$_3$நிஸ்பர்ஶாத்$_3$த$_3$ாஹகஶக்திம் க்ருத்வா பீத்வா மரணாத் ஶுத்$_3$தி$_4$ம் ப்ராப்நுயாத்'' என்று ஸத்த்வப்ரசுரமான ப்$_3$ராஹ்மண்யத்துக்கே மரணாந்தங்களான நிஷித்$_3$த$_4$ த்$_3$ரவ்யங்கள் ஶுத்$_3$த$_4$ ஸத்த்வ நிஷ்ட$_2$ராய் க்ராமகுலாதி$_3$ வ்யபதேஶங்களின்றிக்கே, ஸர்வவர்ணாஶ்ரம விலக்ஷணராய் ப$_4$க$_3$வதே$_3$கவ்ய பதே$_3$ஷ்டவ்யரான பரமைகாந்திகளுக்கு நினைக்கவும் கூடாதிறே.***

***நித்யங்களான இந்த நிஷித்$_3$த$_4$ த்$_3$ரவ்ய ஸ்வீகாரம் வர்ணத்தைப் பற்றியே நிஷித்$_3$த$_4$மன்றிக்கே, "த்$_3$ரவ்யம் நிந்த்$_3$யஸுராதி$_3$தை$_3$வத மதிக்ஷுத்$_3$ரஞ்ச ப$_3$ாஹ்யாக$_3$மோத்$_3$ருஷ்டிர்தே$_3$வலகாஶ்ச தே$_3$ஶிகஜநா தி$_3$க்$_3$தி$_3$க்$_3$தி$_3$ கே$_3$ஷாம் க்ரம:" என்று க்ஷுத்$_3$ர தே$_3$வதா விஷய - ப$_3$ாஹ்யாக$_3$ம ப்ரவர்த்தக நிஷித்$_3$த$_4$ க்ருத்யங்களாகையாலே ஶிஷ்டக$_3$ர் ஹிதங்களிறே. 'யஜந்தே ஸாத்த்விகா தே$_3$வாந்' (கீதா 17-4) என்று தேவர்களெல்லாரும் ஸாத்விகர்க்குப் பூஜ்யரென்று பெருமாள் ருத்$_3$ரேந்த்$_3$ராதி$_3$த் யாதிகளை அவதாரங்களில் ஆராதித்தாரென்று, அநந்யார்ஹ ஶேஷத்வாத்யா காரஷட்கத்தாலே பிராட்டியோடொப் பரான பரிசுத்தாத்மாக்களுக்கு தேவதாந்தரபஜநம் பண்ண வொண்ணாதிறே.***

***இன்னமும் அவதாரப்ரயுக்தாதிமாநுஷ சேஷ்டி தங்கள் த்ருஷ்டாந்தங்களானால் ப்ரஹ்மஜந்மாவான ராவணனை ஸம்ஹரித்தாரென்று ப்ரஹ்மஹத்யாதிகளும், க்ருஷ்ணனை அநுஸரித்துப் பரஹிம்ஸை பரதார பர த்ரவ்யாபஹாராதிகளும் உபாதேயமாகக் குறையில்லை யிறே.***

**விளக்கவுரை:**

சக்ரவர்த்திதிருமகன் பொதுவான தருமங்களில் ஊன்றியவராகையாலே க்ஷத்ரியஜாதிகளுக்குத் தகுந்த மாம்ஸங்களையும், அரசர்கள் கைக்கொள்ளுகிற நறுமண முள்ள பலவகை புஷ்பங்களின் சேர்க்கையாகிற மதுவையும் கைக்கொண்டாரே தவிர, தனது க்ஷத்திரியஜாதிக்குத் தகாத மதுவையும், மாம்ஸங்களையும் கைக்கொள்ளவில்லையே? அந்தந்த ஜாதிதர்மங்களை அநுஷ்டிப்பவர்களுக்கு ஜாதிகளின் ஏற்றத்தாழ்வுகளுக்கு ஏற்றபடி, தள்ளத்தக்கவை

சிலவும் கொள்ளத்தக்கவை சிலவுமாகிற இவையெல்லாம் ஸத்துவகுணம் நிறைந்த பரமைகாந்திகளுக்கு (ஸ்ரீமந் நாராயணனையே பரம்பொருளாக அறுதியிட்டு அவனிடமும் வேறுபயனை எதிர்பாராமலிருக்கும் உயர்ந்த தகுதிபடைத்துள்ளவர்களுக்கு), ''ஜ்ஞாநியானவன் புண்ணிய பாபங்களிரண்டையும் உதறித்தள்ளிவிட்டு'' என்கிற படியே பகவானை அனுபவிப்பது தவிர வேறு விஷயங்கள் தள்ளத்தக்கவையேயொழியக் கொள்ளத் தக்கவைகளாகக் கூறுதல் பொருந்தாது.

''ப்ராஹ்மணனுக்கு - இலுப்பை, கரும்பு, பனை, பேரீச்சம், பலா, திராக்ஷை, தேன், மோர், தாதகிமலர், வெல்லம், செங்கழுநீர் இவற்றின் கூட்டம், தேங்காய் ஆகிய இவற்றைக் காய்ச்சி இறக்கிய பத்துவகைச் சாராயங்கள் விலக்கப்பட்டுள்ளன''. ''கள், நெய் பசுமூத்திரம், பால் ஆகிய இவற்றில் ஏதாவது ஒன்றை அடுப்பிலிட்டுக் காய்ச்சி எரிக்கும் சக்தியை உண்டாக்கிக் குடித்து, முற்கூறிய ஸுராபானங்களைக் குடித்ததனால்,

**19. மூலம்:**

*ஆனபின்பு மஹாபாதகங்களும் ப்ரபந்நதர்மங்களாய் ப்ரவர்த்திக்க வேண்டி வருகையாலே அப்படி சொல்ல வொண்ணாது. அது உண்டாயிடுக; சரம ச்லோகத்தில் ப்ரத$_2$மபதத்தில் ஸர்வஶப்$_3$த$_3$த்துக்கு ஸங்கோசம் வாராதபடி நிவ்ருத்திரூப த$_4$ர்மத்யாகத் துக்காகப் பரிக்ரஹித்தாலோ என்னில், தன்னையும் ஈச்வரனையும் ப$_2$லத்தையும் பார்த்தால் அவை புகுரவழியில்லை என்று முமுக்ஷுப் படியில் (சரம ச்லோகப்ரகரணம்) பரிஹ்ருதமாய்த்திறே. 'காட்டினாலும்'*

*என்று காட்டுகையை அங்கீகரித்தபின்பு ஸங்கோசம் ஏதுக்காக என்னில், ''பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளியுரைத்த கணக்கறு நலத்தனன்'' (திருவாய். 1-3-5) என்று ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான ஸர்வச்வரன் ஷட்ஸமயவாதம் நசிக்கும்படி ஸந்மார்க் கத்தை விசாரித்து அருளிச்செய்த சரமச்லோகத்துக்கு நிஷித்தா நுஷ்டாநம் உட்பொருளென்றால் குரு மந்த்ர தேவதா பரிபவங்களும் விபரீதார்த்த ப்ரதிபத்தியும் ஸர்வோப நிஷத்ஸாரபூதமான ஸர்வகீதாசாஸ்த்ரஸாரமாய்;*

**விளக்கவுரை:**

உண்டான பாவம் நீங்கப்பெற்று சுத்தியை அடையக் கடவன்'' என்று ஸத்துவகுணம் நிறைந்த ப்ராஹ்மண ஜாதிக்கே முற்கூறியபடி இறந்துபட்டா லொழியத் தீராத பாபங்களை உண்டாக்கும் தீயபொருள் களை ரஜோகுணமும் தமோகுணமும் சிறிதும் கலசாத சுத்தமான ஸத்துவ குணமொன்றிலேயே ஊன்றி, இன்னவூரான், இன்ன குலத்தான் என்ற பெயர்களாலே வழங்கப்படாமல் எல்லா வருணத்தாரிலும் எல்லா ஆச்ரமத்தாரிலும் சிறந்து ஸ்ரீராமதாஸன், ஸ்ரீக்ருஷ்ணதாஸன் என்றாப்போலே பகவத்ஸம்பந்தத்தையிட்டே குறிப்பிடத் தக்க பரமை காந்திகளுக்கு நினைத்தலும் கூடாதன்றோ?.

இகழத்தக்க இந்த தீயபொருள்களை உட்கொள்ளுவது ஜாதியைப்பற்றி மட்டும் விலக்கப்பட்டதன்றிக்கே

**20. மூலம்:**

*''உபாயாபாயநிர்முக்தோ மத்$_4$யமாம் ஸ்தி$_2$தி மாஸ்தி$_2$த:'' (?) என்கிறபடியே உபாயாபாயநிர்முக்தமான ப்ரபத்தி பரிப$_4$வமும் வருமாகையாலே விநாஶஹேது*

*வாமிறே. ஆகையாலே ''உச்சி₂ஷ்டமபி சாமேத்₄யம் பே₄ாஜநம் தாமஸப்ரியம்'' கீதை (17-10) என்று அமேத்ய வஸ்துக்கள் தாமஸருக்கோழிய ஸத்த்வ நிஷ்டர்க்கு த்யாஜ்யங்களாயிருக்கும்.*

*த்ரிகு₃ணாதீ₄நாத்மக க்ரியாதீ₄ந 'சேதநருக்கன்றோ கு₃ணாநுகு₃ணமாக த்யாஜ்யங்களும் உபாதேயங்களு மாயிருப்பது. 'ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம' (சாந்தோ 3-14-1) என்று ஸமஸ்தவஸ்துக்களும் ப்ரஹ்மாத்மா மென்று புத்திபண்ணியிருக்கும் அதிகாரிகளுக்கு த்யாஜ்யங்களாமவையும் உண்டோ என்னில், இவன் த்ரிகு₃ணாத்மகமான ப்ரக்ருதியை விட்டு முக்தனான பின்பிறே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதியெல்லாம் அநுபாவ்யமாய்ப் போருவது. ப்ரக்ருதி விசிஷ்டராயிருந் தாலும் அவன் மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார் போல்வாரும் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரும் அபரோக்ஷ ஜ்ஞாநிகளாய் ஸமஸ்த வஸ்துக்களிலும் ஸர்வேச்வரனை ஸாக்ஷாத்கரித்து விஷயஸ்த்ராக்நிகள் முதலாக ப்ராதி கூல்ய மற்று 'அறியுஞ்செந்தீயைத் தழுவி அச்சுத னென்னும் மெய்வே வாள்' (திருவாய். 4-4-3) என்றும்,*

**விளக்கவுரை:**

'தேவதைகள் - மிகவும் தாழ்ந்த சிவன் முதலியோர்; அவர்களுக்குப் படைப்பவையோ - தருமநூலாலிகழப்பட்ட ஸுராபானங்கள் முதலியன; அத்தாட்சியான நூலோ - வேதத்துக்குப் புறம்பான சைவாகமம் முதலியன; ஆசார்யர்களோ - கூலிக்குப் பூசைசெய்யுமவராய் ஆவேசம் வந்து ஆடும் பூசாரிகள்; சீச்சீ என்ன இவர்களின் ஆசாரம்? (''தீர்ப்பாரை யாமினி'' ப்ரவேசத்திலுள்ளது. த்ரவ்யம் நிந்த்ய

ஸுராதி தைவதமதி க்ஷுத்ரஞ்ச பாஹ்யாகமோ த்ருஷ்டிர் தேவகலகாச்ச தேசிகஜநா:- திருவாய்மொழி 4-6) என்று தாழ்ந்த தேவதைகளைப் பற்றிய வேதத்துக்கு முரண்பட்ட சைவாகமத்தில் சொல்லப்பட்ட தீய செயலாகையாலே இப்பொருள்களை உட்கொள்ளுதல் சிஷ்டர்களால் துஷ்ட மென்று இகழப்பட்டதிறே.

''ஸத்துவகுணம் மிக்கவர்கள் தேவர்களை ஆராதிக் கிறார்கள்'' (கீதை. 17-4) என்கிறபடியே தேவர்களனைவரும் ஸாத்த்விகர்களுக்குப் பூசிக்கத்தக்கவரே என்று நினைத்து, எம்பெருமான் தனது அவதாரங்களில் ருத்ரன், இந்திரன், சூரியன் ஆகியவர்களைப் பூசித்தானென்றுகொண்டு, (1) எம்பெருமானொருவனுக்குத் தவிர வேறொருவருக்கும் ஆட்படாமை, (2) வேறொருவரையும் உபாயமாகக் கொள் ளாமை, (3) வேறொருவரையும் அநுபவியாமை, (4) எம்பெருமானைப் பிரிந்தால் துன்புறுகை, (5) சேர்ந்தால் இன்புறுகை (6) தன்னுடைய செயல்களெல்லாம் எம்பெரு மானிட்ட வழக்காகப் பெறுகை என்கிற ஆறுவகைப்பட்ட தன்மைகளாலே பெரியபிராட்டியா ரோடொத்தவர்களான மிகத்தூய்மையுடைய பெரியோர்களுக்கு வேறுதேவதை களைப் பூசித்தல் தகாதிறே. மேலும் எம்பெருமானுடைய அவதாரங்களில் உண்டான மனித வரம்பிற்கு மீறிய செயல் கள் நாம் பின்பற்றுவதற்கு த்ருஷ்டாந்தமானால் (உதாரணங் களாகிவிடுமானால்) ப்ராஹ்மணனான ராவணனைப் பெருமாள் அழித்தாரென்று ப்ரஹ்மஹத்தி யாதிகளும், கண்ணபிரானைப் பின்பற்றிப் பிறரை ஹிம்ஸித்தல் பிறர் பொருளையும் பிறர் தாரங்களையும் அபஹரித்தல் முதலிய செயல்களும் கூட நமக்குக் கொள்ளத்தக்கதாகி விடுமன்றோ? அப்படியானால் மஹாபாதகங்களும்

கூடப்ரபந்நர்களின் தருமங்களாகி அவற்றில் நாமும் மூளவேண்டிவருமாகையாலே அப்படி சொல்லல் தகாது.

அது அப்படியானால் ஆயிடுக. 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' (கீதா 18-66) என்ற சரமச்லோகத்தில் 'ஸர்வ' என்பதற்கு ஸங்கோசம் (சுருக்கம்) வாராதபடி, அதர்மத்திலிருந்து மீளுதலாகிற தருமத்தையும் விடுவதற்காக, அதர்மமாகிற மதுமாம்ஸமுண்ணுதலைக் கைக்கொண்டால் என்னஎன்றால் - 'தன்னையும் ஈச்வரனையும் பலத்தையும் பார்த்தால் அவை புகுரவழியில்லை' (எம்பெருமானுகப்பதையே செய்ய வேண்டிய சேஷனாகிய தன்னைப் பார்த்தாலும், தருமத்தையும் விடச்சொல்லிய எம்பெருமானைப் பார்த்தாலும், தன்னுடைய முயற்சிக்குப் பயன் அவனுக்கு உண்டாகும் ப்ரீதியேயாகையாலே அப்பயனைப் பார்த்தாலும் அவ்வதர்மங்கள் நம்மிடம் புகுர வழியில்லை) (முமுக்ஷுப்படி 210) என்று அக்கேள்விக்கு விடையிறுக்கப் பட்டதிறே. 'காட்டினாலும்' (தருமசப்தம் அதர்மத்திலிருந்து மீறுதலைக் காட்டிற்றேயாகிலும்) (முமுக்ஷு 209) என்று அதர்ம நிவ்ருத்தியைக் காட்டுதலை ஒப்புக்கொண்ட பின்பு தர்மசப்தத்திற்குச் சுருக்கமெதற்கு? அதர்ம நிவ்ருத்தியையும் அது காட்டுகிறதென்று கூறக்கூடாதா? என்றால் ''பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளியுரைத்த கணக்கறு நலத்தனன்'' (திருவாய் 1-3-5) என்று இயற்கையாகவே எல்லாமறியுமவனான ஸர்வேச்வரன் லோகாயதம், ஜைநம், பௌத்தம், நையாயிகம், வைசேஷிகம், சைவம் என்னும் புறச்சமயங்களின் துர்வாதம் தொலையும்படி நல்லமார்க்கத்தை ஆராய்ந்து அருளிச்செய்த கீதாசரமச்லோகத்துக்கு அதர்மங்களையநுஷ்டிப்பது உட்பொருளென்று கூறினால், குரு-மந்த்ர-தேவதைகளை அவமானம் செய்வதும் சாஸ்த்ரத்தோடு முரண்பட்ட பொருள்களைக் கொள்ளுவது

மாகிய அதர்மங்களும் ஸர்வோபநிஷத்துக்களின் ஸாரமாகிற ஸர்வ கீதாசாஸ்த்ரத்திற்கும் ஸாரமாகி ''உபாயமான தருமங்களிலிருந்தும் அபாயமான அதர்மங்களிலிருந்தும் விடுபட்டவனாய் நடுவான நிலையில் நன்றாக நின்றவன்'' என்கிறபடியே உபாயத்திலும் அபாயத்திலும் சேராத ப்ரபத்தியின் பரிபவமும் (அவமானமும்) வருமாகையாலே முற்கூறிய ஆத்மஸ்வரூபத்திற்கு விநாசகாரணமாகுமிறே. ஆகையாலே, ''ஆசார்யர் முதலிய பெரியோர்களல்லாத மற்றவருண்டு மிச்சமான உணவும் பெருமாள் அமுது செய்யாததால் அசுத்தமான உணவும் தமோகுண முள்ள வருக்கு ப்ரியமானது'' (கீதா. 17-10) என்று அசுத்தமான பொருள்கள் தாமஸருக்குத் தவிர ஸத்துவத்தில் நிலை நின்றவர்க்கு நீக்கத்தக்கவைகளாயிருக்கும்.

முக்குணங்களால் உண்டாகும் செயல்களுக்கு வசப்பட்டவர்களுக்கன்றோ அவரவர்களின் குணங்களுக்குத் தக்கப்படி தள்ளத்தக்கவைகள் சிலவும் கொள்ளத்தக்கவைகள் சிலவுமாயிருப்பது.

**21. மூலம்:**

''நாக்$_3$நிர் த$_3$ஹதி நைவாயம் ஶஸ்த்ரைஶ்சி$_2$ந்நோ ந சோரகை$_3$: । க்ஷயம் நீதோ ந வாதேந ந விஷேண ந க்ருத் யயா ॥ ஸத்த்வாஸக்தமதி: க்ருஷ்ணே த$_3$ஶ்யமாநோ மஹோரகை$_3$: । ந விவேத$_3$ாத்மநோ க$_3$ாத்ரம் தத்ஸ்ம்ருத் யாஹ்லாத$_3$ஸம்ஸ்தி$_2$த:'' (ஸ்ரீவிஷ்ணு. 1-19-59, 60) என்றும் எல்லாம் அநுகூலங்களாய், ''ஸர்வபூ$_4$தாத்மகே தாத ஜக$_3$ந்நாதே$_2$ ஜக$_3$ந்மயே । பரமாத்மநி கே$_3$ாவிந்தே$_3$ மித்ராமித்ரகத$_2$ா குத:'' ॥ (ஸ்ரீவிஷ்ணு 1-19-37) என்று ஸர்வஸமராய்,

**விளக்கவுரை:**

'இவையனைத்தும் ப்ரஹ்மமன்றோ' (சாந்தோக்யம் 3-14-1) என்று எல்லாப்பொருள்களும் ப்ரஹ்மாத்மகம் (ப்ரஹ்மத்துக்குச் சரீரமாயிருப்பன) என்று நினைத்திருக்கும் உத்தமாதிகாரிகளுக்குத் தள்ளத்தக்கவைகளும் உண்டோ? என்றால், இந்த ஜீவாத்மா ப்ரக்ருதியை (இவ்வுலகங்களை) விட்டு முக்தியைப்பெற்ற பின்பன்றோ ப்ரஹ்மத்துக்குச் சரீரமாக இருக்குமித்தன்மையைக் கொண்டு லீலாவிபூதி யெல்லாம் (இவ்வுலகப்பொருள்களனைத்தும்) அனுபவிக்கத் தக்கவைகளாக ஆவது. ப்ரக்ருதி ஸம்பந்தத்தோடு கூடியிருந்த போதிலும் எம்பெருமானால் மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்போல்வார் சிலரும் ப்ரஹ்லா தாழ்வான் போல்வார் சிலரும் எல்லாப்பொருள்களையும் உள்ளோடு புறம்போடு வாசியில்லாமல் நேரேயறியும் ப்ரத்யக்ஷஜ்ஞாநவான்களாய் எல்லாப் பொருள்களிலும் ஸர்வேச்வரனிருப்பதை நேரே கண்டு, விஷம், ஆயுதம், நெருப்பு முதலிய பொருள்களில் ப்ராதிகூல்யம் (பகைமை) நீங்கி 'அறியுஞ் செந்தீயைத் தழுவி அச்சுதனென்னும் மெய் வேவாள்'. (திருவாய்மொழி 4-4-3) என்றும், 'இந்த ப்ரஹ்லாதனை நெருப்பு கொளுத்தவில்லை; இவன் ஆயுதங்களால் வெட்டப்படவில்லை; ஸர்ப்பங்கள், சூறாவளிக்காற்று, விஷம், க்ருத்யை (ஏவப்பட்ட பிசாசு) இவற்றாலும் அழிக்கப்படவில்லை. அந்த ப்ரஹ்லாதனோ வென்னில் எம்பெருமானிடத்திலேயே ஊன்றிய எண்ண முடையவனாய் அவனைத்யானம் செய்த மகிழ்ச்சியில் நிலைபெற்றிருந்தானாகையால், பெரும்பாம்புகளால் கடிக்கப்பட்டிருந்த போதிலும் தன்னுடம்பைத் தான் அறியவில்லை. (விஷ்ணு 1-19-59,60)

**22. மூலம்:**

***''புகழுநல்லொருவனென்கோ பொருவில்சீர்ப் பூமியென்கோ'' (திருவாய். 3-4-1) என்று தொடங்கி "யாவையும் யவரும் தானாய்" (திருவாய். 3-4-10) என்றும் ''நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்'' (திருவாய் 6-3-1) என்றும் ''நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்'' (திருவாய். 6-9-1) என்றும் ப்ருதிவ்யாதி பூதங்களும் பௌதிகங்களும் மற்றுமுண்டான சேதநா சேதநங்களெல்லாம் வ்யாபித்து அவனேயென்னலாம்படி அவனுக்கு ப்ரகாரதயா ஶேஷமாயிருக்கிறபடியை அநுஸந்தித்தாரித்தனை போக்கி ப்ரஹ்மாத்மகங் களென்று லஶஂந க்ருஞ்ஜநாதிகளை அநுபவித்தா ரில்லையே.***

**விளக்கவுரை:**

என்று சொல்லுகிறபடி பிரதிகூலமான அக்நிமுதலி யவைகளும் அநுகூலங்களாகி, 'தந்தையே! எல்லாவுயிர் களையும் உடலாகக் கொண்டிருப்பவனும் மற்றுமுள்ள ஜடப் பொருள்களையும் உடலாகக் கொண்டிருப்பவனும் தனக்கு வேறொருவனை ஆத்மாவாகப் பெற்றிராதவனும் லோகங்கட் கெல்லாம் தலைவனும் கோவிந்தனுமான விஷ்ணுவினிடத் தில் நண்பனென்றோ பகைவனென்றோ கூறுவது எதற்கு? (விஷ்ணு 1-19-37) என்கிறபடியே எல்லாவற்றையும் ஸமமாக நினைப்பவர்களாய், 'புகழுநல்லோருவனென்கோ பொருவில்சீர்ப் பூமியென்கோ' (திருவாய். 3-4-1) என்று தொடங்கி 'யாவையும் யாவரும் தானாய்' (திருவாய். 3-4-10) என்றும் 'நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுகமாய்' (திருவாய் 6-9-1) என்றும் பூமி முதலிய

பூதங்களும் அவற்றிலிருந்து தோன்றிய பௌதிகப் பொருள்களும் மற்றுமுள்ள சேதநரும் அசேதனமுமாகிய எல்லாவற்றிலும் வியாபித்து அவையெல்லாம் அவனே யென்று சொல்லலாம்படி அவனுக்கு சரீரமாகையாலே சேஷமாய் (இட்டவழக்காய்) இருக்கிறபடியை ஆழ்வார் அருளிச்செய்தாரித்தனை போக்கி, ப்ரஹ்மத்துக்குச் சரீரங்க ளென்று நினைத்து உள்ளிப் பூண்டையும், செங்காயத் தையும் உட்கொண்டாரில்லையே?

**23. மூலம்:**

***ஆழ்வார் 'காணவாராய்' (திருவாய் 6-9-4) என்று ப்ரார்த்திக்க 'நாம் ஜக₃த₃ாகாரத்தை₃க் காட்டினோமே, அத்தைக் கண்டு த₄ரிக்கலாகாதோ' என்ன, ராஜா வினுடைய சிறைக் கூடம் முதலான ஐஶ்வர்ய மெல்லாம் ராஜபுத்ரனுக்குத் தன் பிதாவினுடைய ஐஶ்வர்யமென்று ஆதரணீய மாமோபாதி அண்டங்களும் அண்டத்துக் குட்ட தேவாதி பதார்த்தங்களும் ஸ்வர்கநரகங்களும் முதலான போகபூமிகளும் தத்ப்ராப்தி ஹேதுவான புண்யபாபங்களுமான இவற்றுக்கெல்லாம் பிரித்து நிலையில்லை, ப்ரகாரதயா உனக்கே சேஷமென்று ப்ரதிபத்தி பண்ணுகிறோமித்தனை போக்கி, "அழுக்குப் பதித்தவுடம்பாய்" (திருவாய் 6-3-7) என்று ஹேயவஸ்து ஸமுதாயமாய் ஸ்வரூப திரோதாநகரியாய்,***

**விளக்கவுரை:**

ஆழ்வார் 'காணவாராய்' (திருவாய் 6-9-4) என்று வேண்டிக்கொள்ள, நாம் (நீராய் நிலனாய் என்று) உலகமாகிய உடலைக் காட்டினோமே, அத்தைக் கண்டு தரித்திருக்க முடியாதோ என்று பெருமான் சொல்ல,

அரசனுடைய சிறைக்கூடம் முதலிய செல்வமெல்லாம் அவ்வரசன் மகனுக்குத் தன்தந்தையின் செல்வமென்று எப்படி ஆதரிக்கத்தக்கனவோ அப்படி அண்டங்களும் அண்டத்துக்குள்ளிருக்கும் தேவர் முதலியோரும் சுவர்க்கமும் நரகமுமாகிய சுகதுக்கங்களையனுபவிக்கும் இடங்களும் அவ்விடங்களுக்குச் செல்லுவதற்குக் காரணமான புண்ணிய பாவங்களுமான இவற்றுக்கெல்லாம் உன்னைப் பிரிந்து நிற்கும் நிலையில்லை, சரீரமாகையாலே உனக்கே உரியனவென்று நினைக்கிறோமே தவிர 'அழுக்குப் பதித்த உடம்பாய்' (திருவாய். 6-3-7) என்று தோல் மாம்ஸம் ரக்தம் முதலிய நீச வஸ்துக்களின் திரட்சியாய் ஜீவாத்மாவின் பரமாத்மாவுக்குரியதாகையாகிற ஸ்வரூபத்தை மறைக்கும தாய் திரிபுணர்ச்சியை உண்டுபண்ணக்கூடிய ஜகதாகாரம் (உலகமாகிய உன்னுடல்)

**24. மூலம்:**

*விபரீதஜ்ஞாநஜநகமான ஜகதாகாரம் 'பரஞ்சுடரு டம்பு' (திருவாய்.6-3-7) போலே எனக்கநுபாவ்யமோ? 'கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்' (திருவாய்.6-9-1) என்று அஸாதாரண விக்ரஹத்தோடே வரவேணுமென்று 'நீராய் நிலனாய்' (திருவாய்.6-9) என்கிற திருவாய்மொழியிலே ப்ரார்த்தித்தாரிறே. பிராட்டிமார் நித்யமுக்தர் முமுக்ஷுக்கள் படிகளெல்லா முடையவராகையாலே முக்ததஶாநுபவவேளையில் ஸமஸ்த வஸ்துக்களும் பகவதாத்மகங்களென்று அநுஸந்திக்கும் ஆழ்வாரே மாத்ருஸ்தந்யம் முதலான ப்ராக்ருத வஸ்துக்களெல்லாம் ஹேயங்களென்று பரித்யஜித்து 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்' (திருவாய். 6-7-1)*

***என்று தாரக போஷக போக்யங்கள் மூன்றும் அவனேயென்று அநுஸந்தித்துக் கொண்டு, ப்ராக்ருத வஸ்து ஜீவநரான ஸம்ஸாரிகளைக் காண மாட்டாதே.***

**விளக்கவுரை:**

பரஞ்சுடருடம்பு (திருவாய். 6-3-7) போலே எனக்கு அநுபவிக்கத் தக்கதாகுமோ? 'கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்' (திருவாய். 6-9-1) என்று உனக்கே உரிய திவ்யமங்களத் திருமேனியோடே வரவேணுமென்று 'நீராய் நிலனாய்' (திருவாய். 6-9) என்கிற பதிகத்திலே ப்ரார்த்தித்தாரன்றோ? பிராட்டிமார்கள், நித்யஸூரிகள், மோக்ஷம்பெறவிரும்புவோர் ஆகிய எல்லோருடைய தன்மைகளெல்லாவற்றையும் உடையவராகையாலே முக்தியடைந்த நிலையை அனுபவிக்கும் ஸமயத்தில் எல்லாப் பொருள்களும் பகவானுடைய சரீரங்களென்று அருளிச் செய்யும் ஆழ்வாரே தாய்முலைப்பால் முதலிய இவ்வுலகப் பொருள்ளையெல்லாம் தள்ளத் தக்கவையென்று நினைத்துத் தள்ளிவிட்டு உண்ணும் சோறு, பருகும், நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் (திருவாய். 6-7-1) என்று உயிரைத் தரிக்கச் செய்யும் நீரும், உடலுக்கும் புஷ்டியைத் தரும் சோறும், ஸுகாநுபவத்துக்குறுப்பான வெற்றிலை முதலியவையுமாகிற இம்மூன்றும் எம்பெரு மானே என்று அநுஸந்தித்துக் கொண்டு, உலகப் பொருள் களை உண்டு உயிர்வாழும் ஸம்ஸாரிகளைக் காணமாட்டா மல் 'கொடுவுலகம் காட்டேலே' (திருவாய். 4-9-7) என்றும்

**25. மூலம்:**

***'கொடுவுலகம் காட்டேலே' (திருவாய் 4-9-7) என்றும், 'இவையென்ன உலகியற்கை' (திருவாய். 4-9-1)***

***என்றும், 'நாட்டாரோடியல்வொழிந்து' (திருவாய். 10-6-2) என்றும் 'பணி கண்டாய் சாமாறே' (திருவாய் 4-9-1) என்றும் ஶரீரவிமோசந ப்ரகாரத்தை ப்ரார்த்தித் தாரிறே. ஆகையாலே ப்ரஹ்மாத்மகமென்று முமுக்ஷு வுக்கு ப்ராக்ருதஹேயவஸ்துக்கள் உபாதேய மென்று சொல்லக் கூடாது. 'ஆஹாரஶுத்₃தௌ₄ள ஸத்த்வஶுத்₃தி₄: (சாந். 7-26-2) 'ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்' (கீதை.14-17) ஜ்ஞாநாந் மோக்ஷ: ஆகையாலே ஜ்ஞாநவிரோதிகள் த்யாஜ்யங்களிறே. அவர்களுக்கு மயர்வறமதிநலமரு ளினானாகையாலே தாரகாதிகளெல்லாம் அவனேயாகக் கூடிற்று. அதில்லாத முமுக்ஷுக்களெல்லாருக்கும் ஸத்த்வோத்₃ரிக்த வஸ்துக்களே பரிக்ராஹ்யங்களாயி ருக்குமாகையாலே ஜாதி துஷ்டங்கள் த்யாஜ்யங்களா யிருக்கும்.***

**விளக்கவுரை:**

இவையென்ன உலகியற்கை (திருவாய். 4-9-1) என்றும், 'நாட்டா ரோடியல்வொழிந்து' (திருவாய். 10-6-2) என்றும், 'பணிகண்டாய் சாரமாறே (திருவாய்.4-9-1) என்றும் தம்மை இவ்வுடலிலிருந்து விடுவிக்கும் தன்மையை ப்ரார்த்தித்தாரிறே. ஆகையாலே ப்ரஹ்மத்துக்குச் சரீரமென்று நினைத்து, மோக்ஷம்பெற விரும்புமவர்களுக்கு ப்ராக்ருத மான (இவ்வுலகிலுள்ள) தள்ளத்தக்க நீசமான மதுமாம் ஸாதிகள் கொள்ளத்தக்கன என்று கூறுதல் தகாது.

'ஶுத்₃த₄மான ஆஹாரத்தினால் ஸத்துவகுணத்திற்கு ஶுத்₃தி₄ (ரஜஸ்ஸும் தமஸ்ஸும் சிறிதும் கலசாததூய்மை) 'உண்டாகிறது'. என்று சொல்லுகையாலே ஜ்ஞாநமுண்டா வதற்கு விரோதிகளான ஆஹாரங்கள் நீக்கத்தக்கவையிறே.

ஆழ்வார்களுக்கு எம்பெருமான் மயர்வற மதிநலமருளுகை யாலே தாரக போஷக போக்யங்களெல்லாம் அவனேயாயி ருக்குந்தன்மை பொருந்திற்று. அதில்லாத முமுக்ஷுக்களெல் லோருக்கும் அதிகமான ஸத்துவகுணமுள்ள உணவுப் பொருள்களே கொள்ளத்தக்கவைகளாயிருக்குமாகையாலே சாஸ்திரம் விலக்கிய தாழ்ந்தஜாதியுணவுப்பொருள்கள் நீக்கத்தக்கவைகளாயிருக்கும். ஆச்ரயதுஷ்டங்களான ஆஹாரங்களாவன பிறர்மனைவியை விரும்புதல் ப்ராஹ்மணனைக் கொல்லுதல் முதலியவற்றைச் செய்ததனால்,

26. மூலம்:

ஆச்ரயதுஷ்டங்களாவன, அபிஶஸ்த பதித சண்டாளாபிமாந தூஷிதங்க ளானவை. நிமித்த துஷ்டங்க ளாவன ஶ்ராத்$_3$த$_4$ ஶாந்த்யாதி$_3$ நிமித்தங்களாலே வருமவை யும் கேஶ - உச்சி$_2$ஷ்ட - அபக்ருஷ்ட ஸ்பர்ச து$_3$ஷ்டங் களும். இவை மூன்றும் பரித்யஜிக்கை ஆஹார நியதி. ஸஹவாஸ நியதியாவது - தே$_3$ஹாத்மாபி$_4$மாநாதி$_3$கள் தே$_3$வதாந்தர ப்ரயோஜநாந்தர ஸாத$_4$நாந்தரபரர் ஸ்வதந்த்ரர் முதலான ப்ரதிகூலரைக் கண்டால் ஸர்ப்ப அக்நிகளைக் கண்டாப்போலே அணுகவெருவி, ஜ்ஞாநாநுஷ்டா நங்களை வடிவிலே தொடை கொள்ளலாம்படியிருக்கிற பரமார்த்தரோடே ஸஹவஸிக்கை.

விளக்கவுரை:

பெரியோர்களால் இகழப்பட்ட அபிஶஸ்தனும், ஜாதிதருமங்களை அனுஷ்டியாமல் தாழவிழுந்த பதிதனும் சண்டாளனும் 'இவை என்னுடையவை' என்று அபிமானித்து

கொடுத்த உணவுப் பொருள்கள் ஆகும். நிமித்ததுஷ்டங்களாவன ப்ராத்தத்திலும் பாப சாந்திக்காகச் செய்யப்படுகின்ற சடங்கிலும் கொடுத்த அல்லது உபயோகிக்கப்பட்ட உணவுப் பொருள்களும், மயிர், எச்சில், நாய் முதலிய ஜந்துக்கள் இவற்றின் தொடர்பு கொண்ட உணவுப் பொருள்களும் ஆகும். இங்ஙனம் ஜாதி துஷ்டங் களுமான ஆஹாரங்களைத் தவிருகையே ஆஹாரநியதி.

ஸஹவாஸநியதியாவது உடலே ஆத்மா என்று நினைப்பவர் வேறுதேவதைகளைப் பூசிப்பவர், எம்பெரு மானையே பூசித்தாலும் அவனிடமிருந்து ஐய்வர்ய கைவல்யங்களை விரும்புமவர், மோக்ஷத்தையே விரும்பி னாலும் அதற்கு உபாயமாகக் கருமயோக ஜ்ஞாந யோகாதிகளை அனுஷ்டிக்குமவர், யாருக்கும் அடிமை யாயிருத்தலை இசையாமல் தங்களைச் சுதந்திரமுள்ளவர் களாகக் கருதுமவர் ஆகிய இவர்களைக் கண்டால் பாம்பையும் நெருப்பையும் கண்டாப்போல் அணுக அஞ்சி, ஜ்ஞானமும் அதற்குத் தகுந்த அநுஷ்டாநமும் தங்கள் வடிவிலே தெரிந்து கொள்ளலாம்படியிருக்கிற பரமார்த்தர் களோடே (இவ்வுலகத்தில் இருப்பைப் பொறாமையாலும் பரமபதத்திற்குச் சென்று எம்பெருமானைக் கிட்ட முடியாமை யாலும் மிகவும் வருந்தும் பெரியவர்களோடே) கூடிவாழுகை யாகும்.

**27. மூலம்**

*அநுவர்த்தந நியதியாவது, - அர்த்தார்ஜநாதி களுக்காக ராஜத்$_3$வாரங்களிலே மண்டி ஸம்ஸாரிகளை அநுவர்த்தித்துக் கொண்டு திரியாதே த்ருஷ்டம் கர்மாதீ$_3$ந மாகையாலே அதுக்குக் கரையாதே ஸதா$_3$சார்யாநுவர்த்தந பரனாயிருக்கை. ஆக இப்படி ஜ்ஞாநாநுஷ்ட$_2$ாந*

**ஸம்பந்நனையாயிற்று, ஸத$_3$ாசார்யனென்று சொல்லத் தக்கது. ஜ்ஞாநஹீநன் அந்தனோபாதி; அநுஷ்ட$_2$ாந ஹீநன் பங்குவோபாதி. இரண்டு முண்டானாலிறே தானும் தன்னைப் பற்றினவனும் கரை சேருவது.** *1.* ***'உப$_4$ாப்$_4$யாமேவ பக்ஷாப்$_4$யாம் ஆகாஶேபக்ஷிணாம் க$_3$தி: | ததை$_2$வ ஜ்ஞாநகர்மப்$_4$யாம் ப்ராப்யதே ப$_4$க$_3$வாந் ஹரி:'*** **என்று சொல்லப்பட்டதிறே.**

**விளக்கவுரை**

(அநுவர்த்தந) தொண்டாற்றுதலில் நியமமாவது, - பொருளீட்டுவதற்காகப் பல்கால் அரசவைக்குச் சென்று, அங்குள்ள அமைச்சர், அதிகாரிகளுக்குத் தொண்டு செய்து பல்லைக் காட்டாமல், இம்மைப் பயன் நாம் முற்பிறவியில் செய்த கருமத்தின்படிதான் நடக்கும் என நம்பிக்கைக் கொண்டு அதற்குக் கலங்காமல் ஆசாரியன் இட்ட வழக்காயிருந்து அவ்வாசாரியனுக்குத் தொண்டு பூண்டிருக்கை. ஆக, இப்படி ஞான ஒழுக்கமுள்ளவனையே நல்லாசார்யன் என்று சொல்லத்தக்கது. ஞானமில்லாதவன் கண்ணில்லாக் குருடனைப்போலே; அனுட்டாநம் என்னும் ஒழுக்கமில்லாதவன் முடவனைப்போலே; இரண்டும் உண்டானாலன்றோ? தானும் தன்னைப் பற்றிய சீடனுங் கரைசேர்வது. 1. பறவைகள் தம் இரண்டு சிறகுகளால் ஆகாயத்தில் எவ்வாறு பறந்து செல்லுதல் உளதோ? அவ்வாறே ஞானம் (கருமம்) நற்செயல் என்னும் இவ்விரண்டாலும் சீவனால் புருடோத்தமனான இறைவன் அடையப்படுகிறான் எனச் சான்றுகள் கூறுகின்றதல்லவா?

## 28. மூலம்

*2. 'த்யஜ த$_4$ர்மமத$_4$ர்மஞ்ச' (பாரதம். சாந்தி. மோக்ஷ.*

*-337:40) 3. 'உபாயாபாய நிர்முக்தோ மத்₄யமாம் ஸ்தி₂தி மாஸ்தி₂த:' 4.'உபாயாபாயஸம்யோகே₃ நிஷ்ட₂யா ஹீய தேநயா' (லக்ஷ்மீ. தந்.17:92)* என்று ப்ரபந்நனான *முமுக்ஷுவுக்கு விதி₃நிஷேத₄ங்கள் இரண்டும் த்யாஜ்யங் களாயிருக்க ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கி, 5. "யயா த₄ர்மம் அத₄ர்மஞ் ச கார்யஞ்சா கார்யமேவச| அயத₂ாவத் ப்ரஜாநாதி பு₃த்₃தி₄ஸ்ஸா பார்த்த₂ ராஜஸீ || (கீதை 18:31)* என்றும், *6. "அத₄ர்மம் த₄ர்மமிதியா மந்யதே தமஸாவ்ருதா| ஸர்வார்த்த₂ாந் விபரீதாம்ஶ்ச பு₃த்₃தி₄ஸ்ஸா பார்த்த₂ தாமஸீ || (கீதை 18.32)* என்றுஞ் சொல்லுகிறபடியே,

**விளக்கவுரை**

2. ''தருமத்தையும் அதருமத்தையும் விடுவாய்'' என்று பாரதத்தில் சொல்லப்பட்டதும், 3. 'உபாயமான தருமங்களிலிருந்தும் அபாயமான அதர்மங்களிலிருந்தும் விடுபட்டவனாய் நடுவான நிலையில் நன்றாக நின்றவன்' எனவும், 4. '(வேறு) உபாயங்கள் மற்றும் அபாயங்கள் தொடர்பு சரணாகதனுக்கு ஏற்பட்டால் அவனுடைய சரணாகத நிட்டை நழுவும்' என்று சரணாகதனான மோக்ஷத்தை விரும்புமவனுக்குச் சாத்திரங்களில் 'செய்' என்று விதிக்கப்பட்டவையும், 'செய்யாதே' எனத் தள்ளப்பட்டனவையும் ஆகிய இரண்டும் விடவேண்டியன வாயிருக்க, ராஜஸ தாமஸ குணங்களில் கலங்கி 5. 'அருச்சுன! எந்த அறிவினால், இவ்வுலகச் செல்வம் முதலானவற்றையும் மோட்சத்தையும் அடைய ஸாதனமா யிருக்கின்ற இருவிதமான தருமங்களையும், அதருமத் தையும், செய்யத்தகுந்தவற்றையும், செய்யத்தகாதவற் றையும் உள்ளவாறு இல்லாமல் மாறு பட (ஒருவன்) அறிகின்றானோ? அந்த அறிவு ராஜஸ குணம் என்று

சொல்லப்படுகிறது'. 6. ''அருச்சுன! எந்த அறிவானது தாமஸ குணத்தால் சூழப்பட்டதோ? அது, அதருமத்தைத் தருமமென்றும் எல்லாப்பொருள்களையும் வேறாய் நேர்மாறாக அறிகின்றதோ? அந்த அறிவு தாமஸகுணம் என்று சொல்லப்படுகிறது'' என்றும் கூறுகிறபடி உள்ளதை உள்ளவாறு அறியமாட்டாமல் மாறுபட்ட ஒழுக்கத்தை யுடைனாய், அதனையே;

**29. மூலம்**

*உள்ளபடி நிரூபிக்கமாட்டாதே விபரீதாநுஷ்ட$_2$ாந பரனாய், அதுவே பிறருக்குமுபதேஶித்து, 7. 'ஶ்ருதி ஸ்ம்ருதிர்மமை வாஜ்ஞா யஸ்தா முல்லங்க்$_4$யவர்த்ததே, ஆஜ்ஞாச்சே$_2$தீ$_3$ மம த்$_3$ரோஹீ மத்$_3$ப$_4$க்தோபி ந வைஷ்ணவ:' (விஷ்ணு தர்மம் 76.31) என்றும், 8. 'ப்ரியாய மம விஷ்ணோஶ்ச தே$_3$வதே$_3$வஸ்ய ஶார்ங்கி$_3$ண:, மநீஷீ வைதீ$_3$காசாரம் மநஸாபி ந லங்க$_4$யேத்' (பகவத் சாஸ்த்ரே) என்றும், 9. 'யத$_2$ா ஹி வல்லபே$_4$ா ராஜ்ஞோ நதீ$_3$ம் ராஜ்ஞா ப்ரவர்த்திதாம் - லோகோபயோகி$_3$நீம் ரம்யாம் ப$_3$ஹு ஸஸ்ய விவர்த்தி$_2$நீம், லங்க$_4$யந் ஶூலமாரோஹேத$_3$ந பேக்ஷோபி த$_3$ாம் ப்ரதி, ஏவம்விலங்க$_4$யந் மர்த்யோ மர்யத$_3$ாம் வேத$_3$நிர்மி தாம், ப்ரியோபி ந ப்ரியோஸௌமே மத$_3$ாஜ்ஞாவ்யதிவர்த்தநாத்' (ஸ்ரீபாஞ்சராத்ரம்) என்கிற படியே,*

**விளக்கவுரை**

பிறர்க்கும் உபதேசித்து, 7. ''வேதமும் தருமசாத்திரங் களும் எனது ஆணையே; அவற்றை மீறுபவன் எனது ஆணையை மீறுபவன் எனக்கு த்ரோகி என்றும்; அவன் என் பக்தனாயினும் வைணவன் அல்லன்'' எனவும்,

8. ''எனக்கும் தேவதேவனான விஷ்ணுவின் மகிழ்ச்சியின் பொருட்டு அறிவாளியானவன் வேதத்தில் சொல்லப்பட்ட ஒழுக்கங்களை மனத்தாலும் கடக்கக்கூடாது'' என்று இலக்குமிப் பிராட்டியும் அருளிச்செய்தாள் என்றும், 9. 'ஓர் அரசனுக்கு மிகவும் வேண்டப்பட்டவனாய், அவ்வரசன் கொடுக்கும் பொருளைக் கொண்டு வாழ்க்கை நடத்துபவனான ஒருவன், உலக உபயோகத்திற்காக அந்த அரசனால் தன் நாட்டில் ஓடிப்பாயும் நதியை, தனக்கிவற்றால் பயனில்லை என்றதுவே காரணமாக வெட்டிவிடுவானாகில், அவனை அந்த அரசன் எவ்வாறு உடனே கழுவில் ஏற்றுவானோ? அவ்வாறே, எந்த மனிதன் வேதத்தால் கூறப்பட்ட நீதிகளையும் நல்லொழுக்கங்களையும் கெடுப்பானோ? அவன் என்னிடத்தில் அன்புடையனாயிருப்பினும் என் ஆணையைக் கடத்தலினால் என்னால் வெறுக்கத்தக்கவனே ஆவான்''

**30. மூலம்**

*பகவதா ஜ்ஞாரூபங்களான வைதிக மர்யாதைகளை யதிக்ரமித்து தத்விருத்தங்களான துஷ்ப்ரவ்ருத்திகளாலே பகவதநபிமதனாய், தானும் நசித்துத் தன்னையடைந்த சிஷ்யனையுங் கொன்று, தன்னைக் கண்ட பிறரில் தன்னையநுவர்த்தித்துச் சிலரும் அநாதரித்துச் சிலரும் நசிக்கும்படி அபதேப்ரவ்ருத்தனாய்த் தன்னை ஆசார்யனாக அபிமாநித்து க்யாதி$_3$ லாப பூ$_4$ஜாநுவர்த்தநங்களை அபேக்ஷித்து விபரீதப்ரவ்ருத்தரான சிஷ்யரைக் கூட்டிக்கொண்டு அவர்களுடைய து$_3$ரபிமாந து$_3$ஷித த்ரவ்யத்தைப் பரிக்ரஹித்து, அத்தாலே தே$_3$ஹயாத்ரை நடப்பித்துக் கொண்டு போருமவனன்றிக்கே, நாத யாமுந*

*யதிவரகூரநாத கோவிந்த₃ பட்டாரக லோககுரு வரவரமுநி ப்ரப்ருதிகளுடைய;*

**விளக்கவுரை**

என்று இறைவனால் சொல்லப்பட்ட சான்றுகளின் படி, பகவானுடைய ஆணைவடிவங்களான வேத மரியாதை களை மீறி அதற்கு முரணான கெட்ட நடத்தைகளாலே பகவானுக்கும் வெறுக்கத் தக்கவனாய், தானுங்கெட்டுத் தன்னையடைந்த சீடனையுங்கெடுத்து, தன்னுடைய கெட்ட நடத்தைக் கண்டு தன் ஒழுக்கத்தைப் பின்பற்றிச் சிலரும், தன் கெட்ட ஒழுக்கத்தைக் கண்டு சிலர் அலட்சியப் படுத்தி எள்ளி நகையாடியதால் அவர்களும் இறைவனின் சீற்றத்துக்காளாகி அழியும்படியும், வழியல்லா வழியில் செயல்பட்டுத் தன்னையே ஆசாரியனாக மதித்துக் கொண்டு, புகழ்பொருள் பூசனை முதலியவற்றை விரும்பி வேத சாத்திரங்களுக்கு முரணாக நடக்கும் சில சீடர்களைச் சேர்த்துக் கொண்டு, அவர்களுடைய 'என்னது' என்னும் செருக் கடைந்ததும் சான்றோரால் இகழப்பட்டதுமான பொருளைப் பெற்று, அவற்றால் சீவனம் நடத்திக்கொண்டு போகின்ற வனாயின்றிக்கே, நாதமுனிகள், ஆளவந்தார், இராமானுசர், கூரத்தாழ்வான், எம்பார், பட்டர் நம்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர், மணவாள மாமுனிகள் முதலான;

**30. மூலம்**

*வசந அநுஷ்ட₂ானங்களைப் பரிசீலித்து மயர்வற மதி நலமருளப் பெற்ற ஆழ்வார்களுடைய திவ்யப் பிரபந்தங்களிலும் ததர்த்த விஶதீகரணங்களான ஸ்ரீவசன பூஷணாதி அகில ரஹஸ்யங்களிலும் ஸம்ஸாரி சேதநோ ஜ்ஜீவநார்த்தமாக விதிக்கப்பட்ட மர்யாதை₃களை அதிக்ர*

***மணம் பண்ணாதே வேத$_3$ஶாஸ்த்ர விருத்தங்களான து$_3$ரநுஷ்டாநங்களை நன்றாகப் பரித்யஜித்து,***

***ஆந்ருசம்ஸ்யத்தாலே சிஷ்ய புத்ரோஜ்ஜீவநார்த்தமாகவும், லோகஸங்க்ரஹார்த்தமாகவும் சிஷ்டராலே பரிக்ருஹீதமான விஹித கர்மங்களில் உபாயத்வ பு$_3$த்$_3$தியை மஹாபாதகாதிகளைப்போலே ஸவாஸநமாக விட்டு யதோசிதமாக ப்ரவர்த்தித்துக்கொண்டு, தன்னை ஆசார்ய பரதந்த்ரனாகவும் சிஷ்யனை ஸப்ரஹ்மசாரியாகவும், உபதேச ப$_2$லம்;***

**விளக்கவுரை**

பூர்வாசார்யர்களுடைய உபதேச அனுட்டானங்களைத் தேர்வு செய்து, இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களது திவ்யப்பிரபந்தங்களிலும், அதனுடைய பொருள்களை விரிவாகக் கூறக்கூடிய ஸ்ரீவசன பூஷணம் முதலான அனைத்து இரகசியங்களிலும் இவ்வுலக மக்களை உய்விப்பதற்கு விரோதமான கெட்ட ஒழுக்கங்களை நன்றாக விட்டொழித்துக் கருணையாலே சீடர்களையும் தன் பிள்ளைகளையும் உய்வடையச்செய்வதற்காகவும்,

உலகத்தாருடைய நன்மைக்காகவும் சிட்டர்களாலே ஏற்றுக் கொள்ளப்பட்ட வேதத்தில் விதிக்கப்பட்ட நற்கருமங்களில் இவை உபாயம்' என்னும் நினைவை, பெரும் பாவச்செயல்களை அஞ்சிவிடுவது போல் நன்றாக முழுமையும் விட்டுவிட்டு, பெரியோர் யாதொன்றைச் (பிரமாணமாகச்) சான்றாக ஏற்றுக் கொண்டு அதனை ஒழுக்கத்தில் கொண்டு நடக்கின்றனரோ அதன்படியே நடந்து கொண்டு, தன்னை ஆசாரியனுக்கு அடிமைப் பொருளாகவும், தன் சீடனைத் தன்னுடன் ஒருங்கு கற்ற ஒரு

சாலை மாணாக்கனாக எண்ணியும், அவனுக்கு உபதேசிப்பதால் பெரும்பயன்,

**31. மூலம்**

***மங்களாசாஸந அர்ஹதையாகவும் பு$_3$த்$_3$தி பண்ணி, தன்னாலே திருத்தப்பட்ட ஸச் சிஷ்யன் தனக்குள்ளது எல்லாம் ஆசார்யனுக்கு ஶேஷமென்று ஸமர்ப்பித்து நிர்ப்ப$_4$ரனா யிருக்க, அத்தை யெல்லாம் தான்நிரீக்ஷித்து, அவனுக்குத் திரியவும் கொடுத்து, உம்முடைய ஆத்ம ஆத்மீயங்க ளெல்லாம் ஆசார்ய அதீ$_3$நமான பின்பு யதோசிதமாக ப$_4$க$_3$வத்$_3$ ப$_4$ாக$_3$வத$_3$ விஷயங்களிலும், உம்முடைய தே$_3$ஹ யாத்ரையிலும் வினியோகங் கொள்ளும் என்று நியமிக்க,***

***அவருடைய நியோகத்தாலே தகும்படி ப$_4$க$_3$வத்$_3$ ப$_3$ாக$_3$வத$_3$ விஷயங்களிலும் ஸ்வதே$_3$ஹயாத்ரையிலும் அந்வயித் துக்கொண்டு, திரியவும் தன்னை ப்ரார்த்தித்து ''எனதாவியார்யானார் தந்தநீ கொண்டாக்கினையே'' (திருவாய்மொழி 2-3-4)***

**விளக்கவுரை**

'எம்பெருமானுக்கு என்வருகிறதோ எனப் பல்லாண்டு பாடிக் காப்பிடுவதற்கு' ஏற்ற தகுதியை உண்டாகுதற்கே என எண்ணியும்,

தன்னாலே திருத்தப்பட்ட நற்சீடன் தனக்குள்ள உடைமைப் பொருள்கள் எல்லாம் ஆசாரியனுக்கே உரியது, என்று கொடுத்து விட்டுச் சுமையற்றவனாயிருக்க, அவற்றை

யெல்லாம் தான் பார்த்து மீண்டும் அவனுக்கே கொடுத்து, ஆசாரியனானவன் சீடனை விளித்து, நீரும் உமது உடைமைப் பொருள்கள் எல்லாவற்றையும் ஆசாரியனுக்குச் சொந்தமான பின்பு, அப்பொருள்களை ஏற்றவாறு பகவானுக்கும் அவனது அடியார்க்கும் பயன்படுத்தியும் உம்முடைய ஜீவனத்திற்காகவும் பயன்படுத்துவீராக என்று ஏவவும்,

அவருடைய ஏவலை ஏற்று அப்பொருள்களைத் தக்கவாறு இறைவனுக்கும் அவனடியார்க்கும் தன் உடல் வாழுகைக்கும் பயன்படுத்தியும், மீண்டும் ஆசாரியனைப் பிரார்த்தித்து, ''எனதாவி யார்யானார் தந்தநீ கொண்டாக் கினையே'' என்னுடைய உயிர் என்பது யாது, யான் என்பதும் ஆர்?

**32. மூலம்**

**என்று நிர்மமனாய் கிஞ்சித்கரித்த த்$_3$ரவ்யம் அங்கீ$_3$கரியாத போது விட்டுக் கொடானென்று தாம் அத்தை ப$_4$க$_3$வத்$_3$ ப$_4$ாக$_3$வத$_3$ாசார்ய விஷயங்களில் கிஞ்சித்காரம் பண்ணிக் கொண்டு, *10.* "ருதாம்ருதாப்$_4$யாம் ஜீவேத ப்ரபந்நோ யாவத$_3$ாயுஷம்'', என்கிறபடியே *11.* "ருதமுஞ்ச$_2$ஸிலம் ஜ்ஞேயம் அம்ருதம் ஸ்யாத$_3$ யாசிதம்'' (?) என்று உஞ்ச ஸில வ்ருத்திகளாலும், அயாசிதமாக ஸத்வநிஷ்ட$_2$ரான பரிஸுத்தர் கிஞ்சித்கரித்த த்$_3$ரவ்யத் தாலும் நடப்பித்துக் கொண்டு, சிஷ்யன் பக்கல் க்ருபையும் ஸ்வஆசார்யன் பக்கல் பாரதந்த்ரயமும், ஸ்வதேஹ யாத்ரையில் ஜிஹாஸையும் உடையனாய், அஹங்காரார்த்த காமோபஹதனன்றிக்கே லோகபரிக்ரஹ முடையனாய்,**

**விளக்கவுரை**

எல்லாவற்றையும் தந்த நீயே என்னைக் கொண்டாய் என்று 'எனது' என்னும் மமகாரமில்லாது சீடனிற்கு, ஆசார்யனும், அவன் கொடுத்தவற்றை ஏற்றுக்கொள்ளா விட்டால் விடமாட்டான் என்று தாம் அவற்றை பகவத் பாகவத ஆசார்ய விஷயங்களில் உபயோகப்படுத்தி கைங்கர்யம் செய்து கொண்டு, 10. ''ப்ரபந்நனானவன் தன் ஆயுள் உள்ளவரையில் வயலில் தானாகவே சிந்திய தானியத்தைக் கொண்டும், நல்லோரிடம் பெறப்பட்ட தானியத்தைக் கொண்டும் உயிர்வாழக் கடவன்'' 11. '''ருதம்' என்பதை, வயலில் விழுந்து பொறுக்கப்பட்ட தானியம் என்று அறிய வேண்டும்; 'அம்ருதம்' என்பதை, இவன் கேளாமலே (நல்லோர்களாகிய) பிறர்கொடுக்கும் தானியம் என்றறிய வேண்டும்'' என்கிறபடி, நன்னடத்தையுள்ளவராய் எல்லாவற்றாலும் தூய்மையுடையவர்களில் கொடுக்கப்பட்ட பொருள்களைக் கொண்டு வாழ்க்கை நடத்துபவனாய், சீடனிடத்தில் அருளையும் தன்னுடைய ஆசார்யனிடத்து அவரது உடைமையாயிருந்து கொண்டு, தன்னுடைய தேஹத்தை வளர்ப்பதில் வெறுப்பை யுடையவனாய்' 'எனது' என்னும் பொருள் இவற்றில் ஆசையில்லாதவனாய் உலகத்தார் (சான்றோர்) ஏற்றுக் கொள்ளத்தக்க ஆசாரங்களையுடையவனாய்க் கொண்டு, பல பிறவிகளில் செய்த வினைத் தொடர்பால் 'தேகமே ஆந்மா' என்னும் மயக்கமும் கலக்கமும் தன்சீடனுக்கு வந்தாலும்,

**33. மூலம்**

*ப்ரக்ருதி வாஸனையாலே சிஷ்யனுக்கு ஒரு ஸ்காலித்யம் (தவறு) வந்தாலும் வருந்தியவனை ஸ்வரூபாநுரூபமாகத் திருத்திக் கொண்டு பிரியாதே*

**ஸ்வரூபத்தை நோக்கிக் கொண்டு போருமவன் ஆசார்யன். அதுதான் கடகத்வ உபாயத்வ பேதேந த்விவிதம்; கடகத்வமாவது, திருத்திப் பணிகொள்ளுகைக்கு யோக்யரானவரை, 12. ''ஸம்வத்ஸரம் ததர்த்தம் வா மாஸத்ரயமதாபிவா'' (ஶாண்டில்ய ஸம்ஹிதை. 1-116) என்று ஹ்ருதயத்தைப் பரீக்ஷித்து அவர்கள் ப்ரக்ருதி வாஸநாருசிகள் தலைமடிந்து பரமார்த்தரானபடியைக் கண்டு, அநந்ய ப்ரயோஜநராய் மங்களாசாஸன பரராவரென்று, தோற்றினபின்பு அவனை பகவானோடே சேர்த்து அவன் ஶரணவரணம் பண்ணுவித்து ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி சிக்ஷித்துக் கொண்டு போருகை.**

**விளக்கவுரை**

அவற்றை வருந்தியும் ஆன்மாவின் இயல்புக் கேற்றவாறு அவனைத் திருத்தித் தன்இயல்பை நோக்கிக்கொண்டு வாழ்பவனே ஆசார்யன் ஆவான். அந்த ஆசார்யனுடைய செயல்தான், சேர்ப்பித்தல், உபாயமா யிருத்தல் என இரண்டு வகைப்படும்; சேர்ப்பித்தலாவது, திருத்திப் பணிகொள்ளுதற்குத் தக்கவரை, 12. ''ஒரு ஆண்டோ, அரை ஆண்டோ, மூன்று திங்களோ எனப் பலவழிகளால் சீடனைத் தேர்வு செய்து'' என்கிறபடியே, அவர்கள் மனத்தைத் தேர்வு செய்து அவர்களது உடற்தொடர்பால் வரும் தீய விஷயங்களில் சுவை முதலானவைகள் முழுதும் அழியப்பெற்று, இவ்வுலகில் வாழ்வதற்கு அஞ்சி வருத்தமுடையவராக இருப்பது கண்டு அவர்கள், வேறுபயன்கருதாமல் இறைவனுக்குப் பல்லாண்டு பாடுபவர்களாய் ஆகக் கடவர் என்று தேறிய பின்னர், அவர்களை நாராயணனுடைய திருவடிகளில் சரணமடையச்

செய்து ஆன்ம இயல்புக்குப் பொருந்த நடக்கும்படி திருத்திப் பணிகொள்கையாம்.

### 34. மூலம்

*உபாயத்வமாவது, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி விசேஷங்களைச் சொன்னால் அறியத்தக்க ஜ்ஞாந வைஶத்ய மும் அநுஷ்டிக்கத் தக்க ஶக்தியில்லாத ப$_3$ாலமூக ஜட$_3$ாந்த$_4$ பங்கு$_3$ ப$_3$தி$_4$ராதிகள், ப$_4$க$_3$வந்நிர்ஹேதுக கடாக்ஷ ப்ரஸரணமுண்டாய் ஸாம்ஸாரிக கர்ம ப்ரவ்ருத்தியில் விரக்தியும், ஜந்ம ஜரா மரணாதி$_3$ சோகங்களில் பீ$_4$தியும் ஜநித்து ஆர்த்தரான இவரைக் கைக்கொண்டு, த$_3$யாபரவச னாய் ஜ்ஞாந அநுஷ்ட$_2$ாந உபதேச யோக்யதை யில்லாமையாலே, அவர்களுக்காகத் தானே ஶரண வரணம் பண்ணி ஔஷத ஸேவையோக்யதையில்லாத ஸ்தநந் தய ப்ரஜைக்கு வியாதியுண்டானால் தான் ஔஷத ஸேவைபண்ணி;*

### விளக்கவுரை

உபாயமாயிருத்தலாவது, ஆந்மாவுக்கு இயைந்த ப$_4$க$_3$வத் ப$_4$ாக$_3$வத விஷயங்களில் அடிமை செய்தல் முதலானவற்றைச் சொன்னால், அவற்றை அறியத்தக்க ஞானமில்லாமையும் ஒழுகத்தக்க ஆற்றலுமில்லாத ஊமையர், குருடர், முடவர், செவிடர் முதலானார்க்கு பகவானுடைய காரணமற்ற அருட்பார்வை அவர்கள்மீது உண்டாக, மற்றவர்களைப் போல் உண்ணல் உறங்கல் போன்ற செயல்களில் வெறுப்பும், பிறப்பு மூப்பு இறப்பு முதலியவற்றால் ஏற்படும் துன்பங்களில் அச்சமும் உண்டாகி வருந்தும் அவர்களைக் கைக்கொண்டு ஆசாரிய னானவன்

கருணை மிக்கவனாய் ஞான அனுஷ்டானமும் உபதேசிப் பதற்கேற்ற அறிவு முதலான தகுதியின்மையாலே, அவர்களுக்காகத் தானே இறைவனிடத்தில் சரணாகதி பண்ணி அல்லது பரஸமர்ப்பணம் பண்ணி, மருந்து உட்கொள்ள தகுதியற்ற சின்னஞ்சிறு முலையுண் குழவிக்கு, நோயுண்டானால் அதற்காகத் தானே

35. மூலம்

*தன் ஸ்தந்ய பானத்தாலே ரோகத்தை நிவ்ருத்திப் பிக்கும் மாதாவைப்போலே, இவர்களைத் தான் அபிமாநித்து தன்னுடைய தீர்த்த ப்ரஸாத ஸேவா மாஹாத்ம்யத்தாலே இவர்கள் ஸம்ஸாராதுத்தீர்ணராம்படி பண்ணுகை. ஊமையாயிருப்பான் ஒருவன் ஆர்த்தனாம் படியைக் கண்டு எம்பெருமானார் த₃யாபரராய், தம்முடைய திருவடிகளைக் காட்டி கரஸம்ஜ்ஞையாலே இவை ஹ்ருதயத்திலே இட்டுக்கொள்ளுமென்று அவன் தலையிலே வைக்க, அத்தைக் கூரத்தாழ்வான் கண்டு, அய்யோ நாம் கூரகுலத்திலே பிறந்து ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணிக் கெட்டோம்; நாம் ஒரு ஊமையாய் பிறந்தி ருந்தால் பரகதஸ்வீகாரம் லபிக்குமிறே என்று பரிதபித்தார்.*

விளக்கவுரை

மருந்துண்டு தனது முலைப்பாலின் ஆற்றலாலே நோய் போக்கும் தாயைப் போலே, ஆசாரியனான தான், இவர்களைக் காப்பதாகப் பற்றுக் கொண்டு, தன்னுடைய தீர்த்தம் மற்றும் தான் உண்டு மிகுந்த அன்னம் முதலான அருட்பார்வையின் மகிமையாலே ஸம்ஸாரமாகிய பிறவியி லிருந்து உய்வு (மோட்சம்) அடையும்படி செய்தலாம்.

ஊமையாயிருக்கின்ற ஒருவன், (வீடுபேற்றில் அவாவும், மாறிமாறிப் பிறப்பதில்) துன்பத்துடன் இருப்பதைக் கண்டு, ஸ்வாமி இராமானுசர் கருணைமிக்கவராய், தம்முடைய திருவடிகளைக் காட்டி, (அவன் ஊமையாகை யாலே) கையின் சைகையால் 'இத்திருவடிகளை (தன் திருவடிகளை) உன் இதயத்திலிருத்திக் கொள்ளும்' என்று அவன் தலையிலே வைக்க, அதனைக் கூரத்தாழ்வான் கண்டு, ஐயோ! 'நாம் கூரகுலத்திலே பிறந்து சாஸ்திரப் பயிற்சிப் பண்ணிக் கெட்டோம்; நாம் இவனைப்போலே ஒரு ஊமையாய்ப் பிறந்திருந்தால், நம் முயற்சியால் இறை வனைப் பற்றுவதன்றியே இறைவனே நம்மைப் பற்றும் பற்றுக் கிடைத்திருக்குமல்லவா என்று ஆற்றாமை கொண்டார்.

**36. மூலம்**

*இவர்கள் ஜ்ஞாநாநுஷ்ட$_{2}$ாநங்களுக்கு அஶக் தரானாலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு ஆஶ்ரய பூ$_{4}$தரான சேதநராகையாலே ப்ராதிகூல்ய நிவ்ருத்தி உண்டாக வேணும். ப்ராதிகூல்யங்களாவன, அஹங்கார மமகாரம், பரஹிம்ஸை, பரநிந்தை, பரஸ்தோத்ரம், பரத$_{3}$ாரபரிக் ரஹம், பரத்$_{3}$ரவ்யாபஹாரம், முதலானவையும், ஸத்வ ஹாநிகரங்களும், ரஜஸ் தமோத்$_{3}$ரேககரங்களுமான அபக்ஷ்யபக்ஷண அபேயபாநங்களும், தே$_{3}$வதாந்தர ஸாத$_{4}$நாந்தர விஷயாந்தர ப்ராவண்யங்களும், ப$_{4}$க$_{3}$வத்$_{3}$ ப$_{4}$ாக$_{3}$வத$_{3}$ாபசாரங்களும் முதலானவை. இவற்றினுடைய நிவ்ருத்தியில்லாதபோது ஸத$_{3}$ாசார்யாபிமாநமும் ரக்ஷகமாக மாட்டாது. ஒரு செய்நிரம்ப நீர் நின்றால் தத$_{3}$ாஸத்தியாலே அசல்செய் நீரில்லாவிட்டால்;*

**விளக்கவுரை**

இவர்கள் (முன்சொன்ன ஞானமில்லாதவர்கள்) ஞான ஒழுக்கத்தைச் செய்தலுக்கு ஆற்றலில்லாதவரானாலும், செயல்புரிதல், தவிர்த்தல் முதலியவற்றுக்கு இடமாய் அறிவைக் குணமாகஉடைய ஆந்மாவாகையால் தீய செயல் புரிதலைத் தவிர்த்தல் உண்டாகவேண்டும். அச்செயல் களாவன: 'யான் எனது' என்னும் செருக்கு, பிறர்க்கு இன்னாசெய்தல், மன்னா மனிசரைப் புகழ்தல், பிறரை இழிவு செய்தல், பிறர்மனைவியை விரும்புதல், பிறர் பொருளை விரும்புதல் முதலியவை. மேலும் தூய்மைப் பொருளுக்கு எதிரானவையும், இராசதம், தாமதம் என்னும் தாழ்ந்த குணங்களைக் கிளர்ந்தெழச்செய்யும் உண்ணத் தகாதவை யும் குடிக்கத் தகாதவைகளும், பிறதெய்வங் களிடத்தில் பற்றும், பிற சாதனங்களைச் செய்ய விருப்பமும், ஐம்புலன் களால் நுகரப்படும் பொருள்களிடத்து ஈடுபாடும், பகவானிடத்தும், பாகவதரிடத்தும் செய்யும் பாவங்கள் முதலானவையாம்.

இவற்றினுடைய ஈடுபாட்டைத் தவிராதபோது நல்லாசாரியருடைய அங்கீகாரமும் காப்பாற்றாது. ஒரு நன்செய் நிலத்தில் (கழனியில்) நீர் நிரம்பியிருந்தால் பக்கம் நின்ற நிலத்தில் நீரில்லாவிடினும்,

**37. மூலம்**

***பொசிந்து ப$_2$லபர்யந்தம் ஆம் இத்தனையொழிய செங்காயம் முதலானகளைகள் விஞ்சி வேர்ப்புழுப் பற்றி உறாவிப்போமிடத்தில் அசல் ஜல ஸம்ருத்தி ரக்ஷிக்க மாட்டாதே. ஆனால், ''13'அச்சே$_2$ப்யநச்சே$_2$பி ஶரீரி வர்க்கே$_3$ ஶ்ரேயஸ்கரீ ஸத்$_3$கு$_3$ருபாத$_3$ஸேவா, ஸமித்பஶுச்***

*சே$_2$த$_2$க ஶஸ்த்ரயுக்$_3$மே ரஸேந ஹைமீகரணம் ஸமாநம்' என்று ரஸ குளிகையானது ஸமித்பஶுச் சேதக விபாகமற லோஹ ஶஸ்த்ரங்களைப் பொன்னாக்குமாபோலே புண்ய பாப புருஷ விபாகமற ஸத$_3$ாசார்ய ஸம்ப$_4$ந்தம் உத்தாரகம் என்று சொல்லா நின்றதிறே என்ன,*

**விளக்கவுரை**

அதன் அண்மையிலிருப்பதே காரணமாகப் பொசிந்து பயிர்விளைந்து பயனுள்ளதாக ஆகும். அதே சமயம், நீர் நிரம்பியிருக்கும் நிலத்திற்குப் பக்கத்து நிலத்தில் செங்காயம் முதலான களைகள் முளைத்து விஞ்சி வேர்ப்புழுப்பற்றி நீர் ஊற்றைத் தடுத்து உறாவிப் போமிடத்து அந்தப் பக்கத்து நிலத்து நீரும் பயிர் செழிக்கப் பயன் தராதல்லவா? ஆனால், ''13. ஸமித்தை வெட்டுவதற்குப் பயன்படும் சிறிய ஆயுதம், விலங்கு முதலானவற்றையும் வெட்டுவதற்குப் பயன்படும் பெரிய ஆயுதம் ஆகிய இரண்டையுமே ரஸகுளிகை பொன்னாக்குவது போல், நல்ல மனிதர்கள் தீயமனிதர்கள் ஆகிய இருவகைப் பட்டவர்கள் விஷயத்திலும் ஆசாரியனுடைய பாத ஸேவை நன்மையை விளைவிக்கும்'' என்கிறபடியே, ரஸ குளிகையானது ஸமித்தை வெட்டும் ஆயுதம் விலங்கை வெட்டும் ஆயுதம் என்ற வித்தியாச மில்லாமல் அவ்விரண்டு உலோகத்தாலான ஆயுதங்களைப் பொன்னாக்குவது போல், இவன் புண்ணியத்தைச் செய்தவன்; அவன் பாவத்தைச் செய்தவன் என்ற வேற்றுமையில்லாமல் நல்லாசாரியன் தொடர்பு மிகவும் மேன்மையை விளைவிக்கும் என்று சான்றுகள் கூறுகின்றனவே என்னில்?

**38. மூலம்**

*த்ருஷ்டாந்தத்தில் ஸமித்பஶுச் சேதக ஶஸ்த்ரங்கள்*

*அசேதநங்கள் ஆகையாலே, சேதகத்வம் தத்கர்த்ரு சேதந அதீநமாய் ரஸ ஶக்தியாலே பொன்னாய் விட்டது. அப்படியே இவனும் ஸ்வாசார்யாதீந ஸத்தாதிகனாய், தான் ஒன்றுஞ் செய்யாத அசித்வத் பரதந்த்ரனானால் அவனுக்கு ஜ்ஞாந அநுஷ்டாநங்கள் இல்லையென்கிற குறையற்று ஸதா3சார்ய ஸம்பந்தத்தாலே முக்தனாய்விடும்; ப்ரதிகூல ப்ரவ்ருத்திகளுண்டானால் விநாசமே பலிக்கும்.*

*சிஷ்ய ஆசார்ய லக்ஷணத்திற்கு ஸீமா பூ4மியான கூரத்தாழ்வான் ஸம்ப4ந்தமுடையனாய் வைத்து பா3க3வதா3பசாரத் தாலே வீரஸுந்தரன் என்கிற ராஜா நசித்துப் போனானிறே. ஆகையாலே நிஷித்தாநுஷ்ட2ாந பரனுக்கு ஸதா3சார்ய ஸம்ப4ந்த3ம் உண்டென்று ஈடேற விரகில்லை.*

**விளக்கவுரை**

கண்களால் நேரே காணும் ஸமித்தையும் விலங்கையும் வெட்டும் உலோகமான ஆயுதங்கள் அறிவற்றவை ஆகை யாலே, வெட்டுந் தன்மை வினைமுதலான மனிதனுக்கு வசப்பட்டதே அன்றி, தானே ஒன்றை வெட்டுந் தன்மை பெற்றதன்று. அதனால் இரும்பிலான அந்த ஆயுதம் இரஸகுளிகையின் ஆற்றலால் பொன்னாய் விட்டது. அவ்வாறே சீடனான இவன், தன் ஆசாரியனுக்கு வசப்பட்டு ஸத்தைப் பெற்றவனாய் இரும்பு முதலானவற்றைப் போல் தானொன்றும் செய்யாதே அறிவற்ற ஒருவன், தான் ஒரு சடப்பொருளைப்போல் ஆசாரியன் இட்ட வழக்காயிருந்தால் தனக்கு ஜ்ஞான அனுட்டானங்கள் இல்லையென்ற குறையில்லாது நல்லாசாரியனது தொடர்பால் முக்தனாய் வீடுபேற்றை

அடைவான்; ஆகில், தனக்கு ஒவ்வாத தீய ஒழுக்கத்தில் ஈடுபாடு உண்டானால் அழிவையே தரும்.

சீடன், ஆசாரியன் என்னும் இலக்கணத்திற்கு எல்லை நிலமான கூரத்தாழ்வான் சீடனாய் அவரது தொடர்பை யுடையவனாயிருந்தும், ப$_4$ாக$_3$வத$_3$ரான பிள்ளைப்பிள்ளை யாழ்வானுக்கு தீங்குவிளைத்ததால், வீரசுந்தரபிரமராயன் என்னும் சிற்றரசன் அழிந்து போனான் அல்லவா? ஆகையால், தீய ஒழுக்கத்தை மேற்கொண்டவனுக்கு ஆசாரியனின் தொடர்பு என்னும் சம்பந்தம் தனக்கு உண்டென்று ஈடேற வழியில்லை.

**39. மூலம்**

***"அச்சே$_2$ப்யநச்சே$_2$பி" என்று ஶுத்தனானாலும் அஶுத்தனானாலும் முக்தனாம் என்று சொல்லா நின்றதே? என்னில், அது பூர்வ வ்ருத்த விஷயம். 14. 'பாபிஷ்ட$_2$: க்ஷத்ரப$_3$ந்து$_4$ஶ்ச புண்ட$_3$ரீகஶ்ச புண்யக்ருத் - ஆசார்ய வத்தயா முக்தௌ தஸ்மாத$_3$ாசார்யவாந் ப$_4$வேத்' (ப்ரமா.புரா.94-38) என்கிறபடி, ஸமாஶ்ரயணத்துக்கு பூர்வத்தில் பாபிஷ்ட$_2$னானாலும், புண்யக்ருத்தானாலும் ஸத$_3$ாசார்யனை ஆஶ்ரயித்து தத் பரதந்த்ரனானால் பூர்வக்ருத புண்ய அபுண்யங்கள் நசித்து க்ஷத்ரப$_3$ந்து$_4$ புண்டரீகன் என்கிற பாப புண்ய புருஷர் ஸதாசார்ய ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே முக்தரானாப் போலே முக்தராவர் என்று சொல்லப் பட்டதித்தனை.***

**விளக்கவுரை**

ஆகில், சாஸ்திரம் தூய்மையுடையவனானாலும் தூய்மை அற்றவனானாலும் ஆசார்யனின் தொடர்பு என்னும் சம்பந்தம் தனக்கு உண்டென்று ஈடேற வழியில்லை. ஆகில்,

சாஸ்திரம் தூய்மையுடையவனானாலும் தூய்மை அற்ற வனானாலும் ஆசார்யனின் தொடர்புடையவனால் மோட்ச மடைவான் எனக்கூறிற்றே எனில், அது ஆசார்ய சம்பந்தம் பெறுவதற்கு முற்பட்ட விஷயம். 14. 'பாவம் நிறைந்துள்ள க்ஷத்ர பந்துவும், (புண்ணியம்) நல்வினை புரிந்த புண்டரீகனும் (ஆகிய இருவரும் வேற்றுமையின்றி) முக்தியடைந்தனர்; ஆகையால் அறிவாளி யான மனிதன் ஆசாரியனை அடைதல் வேண்டும்' என்னும்படி பகவானை அடைவதற்கு முன்னர் பாவம் புரிந்தவனானாலும், புண்ணியம் புரிந்தவனானாலும் ஆசாரியனை அடைந்து வணங்கி அவரிட்ட அடிமையாயிருப்பானேயானால், முன் செய்த நல்வினை தீவினைகள் அழிந்து, பாவத்தையும் புண்ணியத்தையும் செய்தவர்களான கத்திரபந்து புண்டரீகன் என்பவர்கள் முக்தரானாப்போலே இவனும் முக்தனாவான் என்று சொல்லப்பட்டதித்தனை.

**40. மூலம்**

*15. "து$_3$ராசாரோபி ஸர்வாஶீ க்ருதக்$_4$நோ நாஸ்திக: புரா | ஸமாஶ்ரயேத$_3$ாதி$_3$தே$_3$வம் ஶ்ரத்$_3$த$_4$யா ஶரணம் யதி$_3$|| நிர்தோ$_3$ஷம் வித்$_3$தி$_4$ தம் ஜந்தும் ப்ரப$_4$ாவாத் பரமாத்மந:||" (ஸாத்வத ஸம்.16-23) என்று நிஸ்ஸம்ஶயமாக புரா வென்று சொல்லப்பட்டதிறே.*

*"பயிலுந்திருவுடையார் யவரேலும்" (திருவாய் 3-7-1) என்கிறவிடத்திலும் இது பொருளாமித்தனை. ஆஶ்ரயணாந்தரத்திலும் பு$_3$த்$_3$தி$_4$ பூர்வகமாக நிஷித்தா நுஷ்ட$_2$ாநம் பண்ணினானாகில், ஸமாஶ்ரயணமே யில்லையாம். ஆகையாலே ஸம்ஸார ப$_4$த்தனாய், தே$_3$ஹாத்மாபிமாநியாய், தாரபுத்ரதநாதி$_3$ஸக்தனாய்,*

**விஷயப்ரவணனாய், ராகத்வேஷ யுக்தனாய் ப்ரவர்த்தித்துக்கொண்டு நமக்கு ஸத$_3$ாசார்ய ஸம்ப$_3$ந்த$_4$ம் உண்டென்றும், ப$_2$க$_3$வத்$_3$ ஸம்ப$_3$ந்த$_4$முண்டென்றும் நினைத்து;**

**விளக்கவுரை**

15. 'தொன்மைக் காலமாகவே ஒருவன் தீய ஒழுக்கமுள்ளவனாகவும், எதையும் உண்பவனாகவும், செய்ந்நன்றி கொன்றவனாகவும், நாத்திகனாகவும் இருந்தபோதிலும், ஆதிதேவ னாகிய பகவான் நாரணனை உறுதியுடன் சரணமடைவானாகில், அம்மனிதனை அந்த இறைவன் மகிமையினால் குற்ற மற்றவனாக அறிவாயாக என்று ஐயமில்லாமல் அத்தன்மை கொண்டவனையும் குற்றமற்றவனாகச் சொல்லப்பட்டதல்லவா.

"பயிலும் திருவுடையார் யவரேலும்" என்ற திருவாய்மொழியிலும் இதுவே பொருளாக ஆழ்வார் அருளிச் செய்திருப்பதுங் காணலாம். ஆசாரியனை அடைந்த பின்னரும் ஒருவன் தன் நெஞ்சறிய தீய ஒழுக்கத்தை மேற்கொள்வானாகில், அவனுக்கு ஆசாரிய சம்பந்தம் பொய்யாமித்தனை. ஆகையால், ஸம்ஸாரத் தைப் பூண்கட்டிக் கொள்பவனாய், தேகத்தையே ஆத்மாவாக நினைப்பவனாய், மனைவி மக்கள் போன்றவற்றில் ஆசையுடையவனாய், ஐம்புலன் விஷயங்களில் ஈடுபாடு கொண்டவனாய், ஒன்றை விரும்புதல் மற்றொன்றை வெறுத்தல் ஆகியன செய்து கொண்டு, 'நமக்கு' ஆசாரிய சம்பந்தமுண்டு என்று நினைத்துத் இருக்கச் செய்தேயும்,

**41. மூலம்**

**து$_3$ரபிமாநியாயிருக்க விரகில்லை. ஆகையாலே**

*யிறே, ப்ரபந்நனுக்கு ஸம்ஸாரபீ$_3$ஜம் நசிக்க வேணுமென்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்தது.*

*16. "அநாத்மந்யாத்மபு$_3$த்$_3$தி$_4$ர்யா அஸ்வே ஸ்வ மிதியா மதி: (வி.புரா.6-7-11) என்கிற பு$_3$த்$_3$தி$_4$களேயிறே ஸம்ஸார பீ$_3$ஜம்; இவையிரண்டுமேயிறே ஸர்வாநர்த்த 16.(அ) "அவித்$_3$யாதருஸம்பூ$_4$திபீ$_3$ஜம்ஏதத்த்$_3$வித$_4$ா ஸ்தி$_2$தம்" (வி.புரா.6-7-11) என்று, இவையிரண்டுமுள்ளளவும் எப்படிப்பட்ட ஜ்ஞாநாநிகளுக்கும் ஸம்ஸார ஸம்ப$_3$ந்த$_4$ம் நசித்து பகவத் ப்ராப்திவருமென்று நினைக்க வழியில்லை.*

**விளக்கவுரை**

தீயவற்றில் பற்றுள்ளங்கொண்டவனாயிருக்க வழியில்லை. ஆகையாலல்லவா சரணாகதி அடைந்தவனுக்கு இவ்வுலகப் பற்று என்னும் வித்து அழியவேண்டும். எனத் திருக்கோட்டியூர் நம்பிகள் அருளிச்செய்தார்.

16. "ஆத்மா அல்லாத உடலை ஆத்மா என்னும் நினைவும், தானல்லாத பொருளைத் தனது என்னும் நினைவும், பிறவியாம் மரத்தின் வளர்ச்சிக்கு இருவகையாயிருக்கும் விதைகளாகும்" என்று, மாறுபட எண்ணும் நினைவுகளே பிறவிக்கு வித்து. இவ்வாறு 'யான் எனது' என்னும் நினைவுகள் இரண்டுமே எல்லாவற்றுக்குங் காரணம். 16.(அ). 'அறிவின்மையாகிற மரத்தின் வளர்ச்சிக்கு (யான், எனது) இருவகையாயிருக்கும் விதைகளாகும்' எனக் கூறுகிறபடியே, நான் என்றும் எனது என்றும் கூறுகிற இவையிரண்டும் உள்ளவரை, எப்படிப்பட்ட ஞானத்தையுடையவர்க்கும் பிறவியாகிற தொடர்பு அறுந்து பகவானை

அடைதல் என்பது நினைத்துப் பார்க்கவும் வழியில்லை என்றவாறு.

**42. மூலம்:**

*இவ்வர்த்தத்தைத் திருவுள்ளம் பற்றியிறே ஆழ்வார், 'நீர் நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து இறைசேர்மின்'' (திருவாய்மொழி 1-2-3) என்று பகவதாஶ்ரயணம் பண்ணினாலும் இவ்விரண்டு ஸம்ஸார பீஜம் உண்டானால் கார்யகரமாகாது என்று இவற்றை, ருசிவாஸனைகளோடே நசிப்பித்துக் கொண்டு ததநந்தரத்தில் பகவதாஶ்ரயணம் பண்ணுங்கோள் என்று ஸம்ஶய விபர்யமற அருளிச்செய்தது.*

*இப்படியான அஹங்கார மமகாரங்களும், இவை ஹேதுவாக வருகிற அர்த்த காமபாரவஶ்ய ப$_{4}$ாக$_{3}$வ த$_{3}$பசாராதி$_{4}$ கள் ஒன்றுமின்றிக்கே இருக்கச் செய்தேயும் இவை வருவதற்கு யோக்யமான சரீரத்தோடிருந்ததே ஹேதுவாகக் கொண்டு பீ$_{4}$தபீ$_{4}$தராய், 'யானே என்றனதே யென்றிருந்தேன்' (திருவாய் மொழி 2-10-9) என்றும், 'பல நீ காட்டிப் படுப்பாயோ' (திருவாய் 6-9-9) என்றும், 'இன்னம் கெடுப்பாயோ' (திருவாய்மொழி 6-9-8) என்றும், 'விண்ணுளார் பெருமாற் கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன் இவை மண்ணுள் என்னைப் பெற்றால் என்செய்யா' (திருவாய்மொழி 7-6-1) என்றும்,*

**விளக்கவுரை**

அவை வருவதற்கு தகுதியான உடலோடு இருப்பதே காரணமாகக் கொண்டு அஞ்சிய வராய், 'யானே என்றனதே என்று இருந்தேன்', 'பல நீ காட்டிப் படுப்பாயோ', 'இன்னம் கெடுப்பாயோ', 'விண்ணுளார் பெருமாற்கு அடிமைசெய்

வாரையும் செறும்ஐம்புலன் இவை, மண்ணுள் என்னைப் பெற்றால் என்செய்யா', 'குலமுதல் அடுந்தீவினைக் கொடுவன் குழியினில் வீழ்க்கும் ஐவரை வலமுதல் கெடுக்கும் வலமேதந் தருள்கண்டாய், அருளாய் உய்யுமாறு எனக்கே' எனவும் நம்மாழ்வாரும், 18. 'வேத வரம்பை மீறினவனும், தாழ்ந்த பொருளிடத்து மிகவும் விருப்பமுடை யவனும்' என்றும், 19. 'மனிதர்களிலே (பசுவை) விலங்கைப் போன்றவனும், பெரிய பாவத்திற் கெல்லாம் உறைவிட மாயிருந்த போதிலும்' என்றும், 20. கீழுலகத்தில் அழுந்திய பூமியை வராக வடிவெடுத்து மேலே தூக்கி நிறுத்தியவனே! (ராஜஸ, தாமஸ என்ற குணங்களால் மறைக்கப்பட்ட அடியேன்)

21. 'உண்மையானவற்றை விரும்புவன் போலிருந்து வஞ்சிக்கும் செயலை செய்தேன் ஆகிலும், கருணையாலே நீயே என் மனத்தைத் திருத்தவேண்டும்' என்று மேன்மை பொருந்திய ஆசார்யரான ஆளவந்தாரும் தமது பிரபந்தத்தில் கூறியருளினார். 22.'ஐம்புலன் நுகரும் போகங்களில் சுவை கூடிக்கொண்டே போகிறது, அவற்றைப் போக்கவும்', 23. '(இராமானுச! அடியேன் தோற்றத்தில்) மனித சரீரமுடைய வனாயிருந்தாலும் நடத்தையில் பசு என்னும் விலங்கை யொத்தவன்' என்றும், 24. 'இராமானுச! நான் கெட்ட நடத்தையால் தேவரீர் மனத்தைப் புண்படுத்திக் கொண்டே யிருக்கிறேன்' என்றும், 25. 'இராமானுச! புலன் இன்பங்களை அனுபவிக்கவேண்டும் என்னும் அடியேனுடைய ஆசையை, நீரே நுமது அருளால் போக்கியருள வேண்டும்' என்று, எனது ஆசார்யரான மணவாள மாமுனிகளும் மேற்கூறப்பட்ட அனைத்தையும் விரோதிகளாக நினைத்துத் துன்பப்பட்டு அவற்றில் நின்றும் மீளுதலை எதிராசரான இராமானு சரிடத்தில் பிரார்த்தித்தார் அல்லவா?

இவற்றால், பகவானது (ஸம்பந்தமும்) தொடர்பும், ஆசார்ய அபிமாநமும், விரோதிகளான தீய நடவடிக்கைகள் சூழ்ந்த விடத்துப் பயன்தராது எனத் தோன்றுகிறது. இவ்வாறான பின்பு சீடன் ஆசார்யன் ஆகிய இருவரும் தந்தை தனயன் என உறவுடையராய்,

**43. மூலம்:**

*'குலமுதல் அடுந்தீவினைக்கொடு வன்குழியினில் வீழ்க்கும் ஐவரை வரமுதல் கெடுக்கும் வல மேதந்தருள் கண்டாய்' (திருவாய் மொழி 7-1-9) என்றும், 'அருளாய் உய்யுமாறு எனக்கே' (திருவாய்மொழி 7-1-8) என்று நம்மாழ் வாரும், 18. 'அமர்யாத₃: க்ஷுத்₃ர:' (ஸ்தோத்ர ரத்னம் 62), 19. 'ந்ருபஶு: ஶுப₄ஸ்பாஸ் பத₃மபி' (ஸ்தோத்ர ரத்னம் 58), 20. 'அநிச்ச₂ந்நப்யேவம் க்ருபயா, த்வமேவ ஏவம் பூ₄தம் த₄ரணித₄ர! மே ஶிக்ஷய மந:' (ஸ்தோத்ர ரத்னம் 59) என்று பரமாசார்யரும், 21. 'ஶப்₃த₃ாதி₃ பே₄க₃ருசிரந் வஹமேத₄ தேஹா' (யதிராஜ விம்ஶதி 6), 22. 'வ்ருத் தயா பஶுர் நரவபு:' (யதிராஜவிம்ஶதி 7), 23. 'து₃:க்க₂ாவ ஹோ(அ)ஹம் அநிஶம்தவ' (யதிராஜவிம்ஶதி 8) 24. 'ஶப்₃த₃ாதி₃ பே₄க₃ விஷயாரு சிரஸ்மதீ₃யா நஷ்டா ப₄வத் விஹ ப₄வத்₃த₃யயா யதீந்த்₃ர' (யதிராஜ விம்ஶதி 16) என்று;*

*அஸ்மத் ஆசார்யரும் ப்ராதிகூல்யங்களை நினைத்து, து₃க்கப்பட்டு தந்நிவ்ருத்தியை ப்ரார்த்தித்தாரிறே.*

*இத்தால், பகவத் ஸம்பந்தமும் ஆசார்யாபிமாநமும், ப்ராதிகூல்ய ஸ்பர்ஶமுள்ளவிடத்தில் கார்யகரமாகாது என்று தோற்றுகிறது. இப்படியான பின்பு ஶிஷ்ய ஆசார்யர்கள் இருவரும் உடன்கேடராகையாலே, ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டு, ஶிஷ்யன் பக்கல் அபதே₂ப்ரவ்ருத்திப் பிறந்தால் ஆசார்யன் நிக்ரஹித்து*

பரீக்ஷித்தும், ப்ரக்ருதி விஶிஷ்டனாகையாலே ப்ராமாதி$_3$க மாக ஆசார்யன் பக்கல் வந்தால் 'கு$_3$ரும் ரஹஸிபே$_3$ாத$_4$ யேத்' (?) என்கிறபடியே,

ஏகாந்தத்திலே திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஹிதவசநத்தை விண்ணப்பஞ்செய்து, 'இவர்க்கிந்த து$_3$ர்பு$_3$த்$_3$தி$_4$ நீங்கி நிர்மலராம்படி' 'அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்' என்கிறபடியே 'விஶேஷ கடாக்ஷம் பண்ண வேணும்' என்று 'ஹிதத்தை மாறாடி நடத்தக்கடவன்' என்று சொல்லுகிறபடியே, எம்பெருமானை அர்த்தித்தும் ஜாகரூகனாய் வர்த்திக்கவேணும்.

இப்படிப்பட்ட அதி$_4$காரியான ஸத$_3$ாசார்ய ஸம்ப$_3$ந்த$_4$ முடைய ஸச்சி$_2$ஷ்யலக்ஷணலக்ஷிதனான முமுக்ஷுவுக்கு 'தானே வைகுந்தந்தரும்' (உபதேசரத்தினமாலை *61*) என்கிறபடியே, அவன், ஸ்வப்ராப்தியைக் கொடுப்பது. சேதநரான வாசியைப் பற்ற ஆசார்ய முகோல்லா ஸத்துக்காக ஜ்ஞாநவ்யவஸாய ப்ரேமஸமாசாரங்களும்; அவற்றில் அஜ்ஞருக்கும் அஶக்தருக் கும் ப்ராதிகூல்ய நிவ்ருத்தியும் ஆசார்யாபிமாந நிஷ்டருக்கும் அபேக்ஷிதம்.

திர்யக் ஸ்தாவர ஜந்மாக்களுக்கானால் ப்ராதி கூல்ய கந்தமில்லாமையாலே கேவல தத$_3$பிமாநமே உத்தராகம்.

முன்பொரு காலத்திலே நம்பிள்ளை, பெருமாள் கோயில் நின்றும் கோயிலுக்கு எழுந்தருளாநிற்க, ஒருநாள் நெடுந்தூரம் நடந்து பருஷோதக்ர நிதாக தப்தராய் வருமளவில், ஒருவட வ்ருக்ஷம் பணைத்துத் தழைத்து முதலிகளுக்கும் தமக்கும் ஶ்ரமஹரமாம்படி நிழல் செய்திருக்கையாலே அதின் கீழே எல்லாரும் இருந்து இளைப்பாறி அங்கே பெருமாளுக்கு அமுது செய்யப் பண்ணி தாமும் அமுதுசெய்து அன்று இரா அங்கே

சாய்ந்தருளி மற்றைநாள் பயணம் போகிறவிடத்தில், நம்பிள்ளை முதலிகளைப்பார்த்து, 'இது நமக்கெல்லாருக்கும் க்ஷுத்பிபா ஸாதி ஸகல தாபநிவாரகமானபடி கண்டிகோளே; இதுக்கு நாம் என்ன செய்தோம்? என்று, 26.'க₃ச்ச₂ லோகாந் அநுத்தமாந்' (ஸ்ரீராமாயணம் ஆரண்ய காண்டம் 8:30) என்று விசேஷ கடாக்ஷம் பண்ணி இரண்டு திருக்கையாலும் தழுவிப் போகிற அளவிலே ஸமீபக்ராமஸ்தன் ஒரு ப்ராஹ்மணன் கண்டு பரிஹஸித்துப் போனான்; பின்னையும் கோயிலுக்கு எழுந்தருளினார்.

அவ்விரவு, 'சூழ்விசும்பணிமுகில்' படியே, பெரிய மஹோத்ஸவகோஷம் பிறக்க, பரிஹஸித்த ப்ராஹ்மணனும் அவ்வூரில் எல்லோருங்காண வந்து நிற்க ஆகாசத்திலே திவ்ய தேஜஸ் வெளிப்பட அத்தையெல்லாருங்கண்டு விஸ்மயப்பட்டுக் கொண்டிருக்கிற அளவிலே, அவ்வ்ருக்ஷம் பிளந்து இரண்டு கூறாய் பெரிய ஆரவாரத்தோடே தி₃வ்யதேஜஸ் புறப்பட்டு ஆகாசத்தின் மேலே போய் ஆதித்ய தேஜஸ்ஸிலே கலந்து போன படியைக் காணவந்தவர் விப்₄ராந்தசித்தராய் இது என் என்று விசாரிக்க அந்த ப்ராஹ்மணன், பிள்ளை கடாக்ஷித்தபடியைச் சொல்ல எல்லாருங்கேட்டு விஸ்மிதராய்ப் போனார்கள். மற்றைநாள் இவ்வார்த்தையைப் பிள்ளை கேட்டு, எண்ணைக்காப்பு ஸ்ரீசூர்ண பரிபாலநம் பண்ணி, திருவத்யய நமும் நடப்பித்துப்போனார் என்று ஜீயர் அருளிச்செய்வர்.

**விளக்கவுரை:**

ஒருவருக்கு ஏற்படும் நிகழ்வு மற்றவருக்கும் ஏற்படுமாகையாலே ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டு

சீடன் வழிகெட நடந்தால் அல்லது தீய ஒழுக்கம் உண்டானால் ஆசாரியன் நல்மொழியால் தண்டித்துத் திருத்தவேண்டும்; பஞ்ச பூதங்களான சரீரத்தோடு கூடியுள்ளதால் நினைவில்லாமல் ஆசாரியனி டத்தும் சில குற்றங்கள் இருப்பது தெரிந்தால், 'குருவுக்குச் சீடனானவன் மறைவிடத்தில் போதிக்கவேண்டும்' என்றபடி சீடனானவன் ஒருவரும் காணாதபோது ஆசாரியன் திருவடியைப் பிடித்துக்கொண்டு நல்வார்த்தையை விண்ணப்பஞ் செய்து, இவர்க்கு இந்தக் கெட்ட எண்ணம் நீங்கிக் குற்றமற்ற வராகும்படி 'அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்' என்கிறபடியே; மேலான அருள் நோக்கைச் செய்தருள வேண்டும், என்றும் 'நன்மையை மாறாடி நடத்தக் கடவன்' என்று ஸ்ரீவசனபூஷணத்தில் கூறுகிறபடியே, இறைவனைப் பிரார்த்தித்துச் சீடன் விழிப்புடன் வாழவேண்டும்.

இத்தன்மை வாய்ந்த நல்ல சீட இலக்கணத்துக் கிலக்கானவனான மோக்ஷத்தில் விருப்பமுடையவனுக்கு, 'தானே வைகுந்தம் தரும்' என்கிறபடியே; இறைவன் தன்னுடையதான பரமபதத்தைக் கொடுப்பான். ஆந்மா அறிவுடையவன் என்னும் வித்தியாசத்தைப் பற்ற, ஆசாரியனுடைய முகமலர்த்திக்காக ஜ்ஞாநத்தில் உறுதிப் பாடும் பக்தி முதலானவைகளும் இருக்க வேண்டும். அவற்றில், ஒன்றைச் சொன்னால் அறியத்தக்க ஞானமும் அதை அநுட்டிக்கத்தக்க ஆற்றலும் இல்லாதவர்க்கு வீடுபேற்றுக்கு விரோதமான ஒழுக்கங்களைத் தவிர்த்தலும்; இவையே ஆசாரிய அபிமாந நிட்டருக்கும் அவசியம் வேண்டுவது. விலங்கு தாவரம் ஆகிய பிறவிகளுக்கு நல்லது தீயது என்ற பகுத்தறிவின்மையால் அவைகளுக்கு இந்த நியதியில்லை; வெறும் இறையபிமானமோ ஆசாரிய அபிமானமோ அவைகள் உய்வடையக் காரணமாகும்.

முன்பொரு காலத்தில் நம்பிள்ளை என்பவர், காஞ்சியில் உள்ள பெருமாள் கோயிலிலிருந்து திருவரங்கத்துக்கு எழுந்தருளுகிறபோது, ஒருநாள் நெடுந்தொலைவிலிருந்து வந்ததால் உண்டான களைப்பாலும் பசிச்சோர்வாலும் மிகவும் தவித்தவர்களாய் வருமளவில்,

ஒரு பெரிய ஆலமரம் பணைத்துத் தழைத்துச் சீடர்களுக்கு ஏற்பட்ட சோர்வைப் போக்கி நிழல் செய்வதாலே அதன்கீழ் எல்லோரும் இளைப்பாறி, அங்கு பெருமானுக்கு அமுதுசெய்தூட்டி, தாமும் சீடர்களும் அமுது செய்து அன்றிரவு அங்கேயே உறங்கி, மற்றைநாள் பயணம் போகிறவிடத்தில், நம்பிள்ளைத் தம் சீடர்களைப் பார்த்து, இந்த மரம் நம் எல்லோருடைய பசி தாகம் முதலிய எல்லாவற்றையும் போக்கி யதை கண்டீர்களே! இதற்கு நாம் என் செய்தோம்? 26. 'ஏ சடாயுவே! நீ நல்ல உலகத்திற்குச் செல்வாயாக' என்னுமாபோலே விசேடமான அருட்பார்வையை அதன்கண் செய்து இரண்டு திருக்கைகளாலும் தழுவிப்போகிற அளவில் அண்மைக் கிராமத்தில் உள்ள ஓர் அந்தணன் அதனைக் கண்டு எள்ளல் செய்துபோனான். பின்னர் நம்பிள்ளை தொடக்கமானவர் அரங்கத்துக்கு எழுந்தருளினர்.

அன்றிரவு 'சூழ்விசும் பணிமுகில்' (திருவாய்மொழி 10-10-1) என்னும் திருவாய்மொழியில் கூறப்பட்டபடியே, பெரிய விழாக்கோலம் பூண்டதுபோல் அங்கே பேரொலி ஆரவாரம் முழங்க, அப்போது எள்ளி நகையாடிய அந்தணனும் அவ்வூரில் எல்லோருங் கண்டு வியப்படைந்த சமயத்திலே, அந்த ஆலமரம் பிளந்து இரண்டு கூறாய், பெரிய ஆரவாரத்தோடே திவ்ய ஒளி புறப்பட்டு வானத்தின் மேலே போய் சூரியனது ஒளியில் கலந்து போன படியைக்

காண வந்தவர் மதிமயக்கங் கொண்டவராய் இஃது என்? என்று வினவவும், அவ்வந்தணன் நம்பிள்ளை அம்மரத் துக்குத் தம் அருள்பாலித்தபடியைக் கூற, எல்லோருங்கேட்டு ஆச்சரியப்பட்டுப் போனார்கள். மற்றை நாள் ஸ்வாமி நம்பிள்ளை இச்செய்தியைக் கேட்டு எண்ணெய்க்காப்பு முதலானவற்றை எடுத்துச்சென்று திருசூர்ண பரிபாலனம் செய்து திருஅத்யயனமும் (திருநாராயண பலியும்) நடப்பித்துப்போனார் என்று ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச்செய்வர்.

**44. மூலம்:**

*இந்த நிரதிஶய புருஷார்த்தம் ஸத$_3$நுஷ்ட$_2$ாந ஸம்பந்நனான புருஷனாலே அர்த்திக்கப்பட்டு வருவ தொன்றாயிருக்க ஸ்தா வரத்துக்கு இப்பேறு லபி$_4$க்கக் கூடுமோ? என்று சங்கிக்க வேண்டா. ஸர்வேஶ்வர னாவான், தி$_3$வ்ய ஶக்தியுக்தனாய் நிரங்குஶ ஸ்வதந்த்ர னாய் பரமதயாளுவானவ னொருவனாகை யாலே அவன் அபிமாநத்தாலே இவ்வாத்மாவை உஜ்ஜீவிப் பிக்க வேணுமென்று நினைத்தானாகில் எதுவாகிலுங் கூடுமிறே. கர்மஜ்ஞாந பக்திகளென்றும், ப்ரபத்தி யென்றும், ஆசார்யாபிமாநமென்றும் ஸர்வமும் அதி$_3$ ப்ரஸங்கம் வாராதபடி ஒரு வ்யாஜத்தை ஸங்கல்பித்துப் பரிக்ரஹிக்க நினைத்தவளவிலே அங்கீ$_3$கரிக்குமவனாகை யாலே, 'உன் மனத்தால் என்நினைந் திருத்தாய்' (பெரிய திருமொழி 2-7-1) என்கிறபடியே அவன் நினைவே உத்தாரகம்.*

**விளக்கவுரை**

இந்த ஒப்பிலாத மேலான (மோட்ச) பயனை, நல்ல அனுட்டானங்கள் உடைய ஒருமனிதனாலே (இறைவனிடம்)

பிரார்த்திக்கப்பட்டு வருவதொன்றாயிருக்க, தாவரப் பிறவியான அந்த ஆலமரத்திற்கும் இப்பேறு கிடைக்கக் கூடுமோ? என ஐயுறுதல் வேண்டா. பேரிறைவன் என்பவன் திவ்யமான ஆற்றலையுடையவனாய், தடுப்பாரில்லாத் தலைவனாய், மேலான கருணைப் பெருங்கடலாயிருப்பான் ஒருவனாகையாலே, அவன் விருப்பத்தாலே இவ்வாந்மாவை உய்விக்க வேண்டுமென்று நினைத்தானாகில், யாதுங்கூடு மல்லவா? கர்ம ஜ்ஞாந பக்திகளென்றும், பிரபத்தி என்றும் ஆசார்ய அபிமானம் என்ற உபாயங்கள் ஐந்திலும் மிகைவாராமல் ஒரு போலிக்காரணத்தைக் கற்பித்துக் கொண்டு அவ்விறைவன் ஒருவனைக் கைக்கொள்ள நினைத்த அளவில் அங்கீகரிக்குமவனாகையால், 'உன் மனத்தால் என் நினைந்திருந்தாய் இடவெந்தை பிரானே' எனத் திருமங்கை ஆழ்வாருங் கூறுகிறபடியே, எம்பெருமான் நினைவே வீடுபேறளிக்கும்.

**45. மூலம்:**

***27. 'நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா கேவலம் ஸ்வ இச்சையைவ அஹம் ப்ரேக்ஷ கஞ்சித் கதாசந' (பாஞ்சராத்ரம் : லக்ஷ்மி தந்த்ரம்) என்று ப்ரதமகடாக்ஷம் நிர் ஹேதுகமாகப் பண்ணின பின்பு, அத்வேஷ அபி$_4$முக்ய ஸத்ஸங்கதி$_3$ ஸத$_3$ாசார்ய உபதே$_3$ச ஸந்மந்த்ரார்த்த ஜ்ஞாநதத$_3$நரூப அநுஷ்ட$_2$ாநங்களாலே பரிசுத்தனாக்கி ஸ்வஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகது$_3$:க்கனாம்படி பண்ணி ஸ்வவ்யதிரிக்தங்கள்,***

**விளக்கவுரை**

27. 'யான் (ஒருவர்செய்யும்) பரிந்துரையாலும், வேறு சாதனங்களாலும் ஒருவனுக்குப் பேரருளைச் செய்வேன்

அல்லேன்; என் விருப்பத்தாலேயே ஒருவனை ஒருகால் பேரருள் செய்கிறேன்' என இறைவன் கூறியபடியே, காரணம் பற்றாத இன்னருளை ஒருவன் பிறக்கும்போதே பண்ணி, பின்னர் இறைவனான தன்னிடம் பகையற்ற தன்மை, வணங்குந்தன்மை, பாகவதரோடு சேர்ந்து தன்னுடைய சரிதங்களைக் கேட்டல், அவர்களின் உதவியால் ஆசார்யனை அடைந்து ஐந்து சடங்குகளை முன்னிட்டு மந்திரார்த்த ஜ்ஞானம் பெற்று, அதற்கேற்ற அனுட்டானங்களாலே நன்றாகத் தூய்மையாக்கி, தன்னோடு கூடியிருந்தால் இன்பமும் பிரிந்திருந்தால் துன்பமும் உடையவனாம்படி பண்ணி, தன் தொடர்பற்ற பொருள்களைக் கண்டபோது,

**46. மூலம்**

*28. 'பே$_4$ாக$_3$ா: புரந்த$_3$ராதீ$_3$நாம் தே ஸர்வே நிரயோபமா:' (ப்ரம்மாண்ட புராணம்) என்கிறபடியே நிரய ப்ராயமாயி ருக்கும்படி தோற்றுவித்து க்ஷுத்ர விஷய ப்ரவணன் ஸ்வாபி$_4$மத விஷய அலாப$_4$த்தாலே, 29. 'த்$_3$ருங்மநஸ் ஸங்க$_3$ ஸங்கல்ப ஜாக$_3$ரா: க்ருஶதா ரதி:, ஹ்ரீத்யா கே$_3$ாந்மாத$_3$மூர்ச்ச$_2$ந்தா இத்யநங்க$_3$த$_3$ஶா த$_3$ஶ' (?) என்கிறபடியே, தஶாவஸ்தைகளை அநுபவிக்குமாப் போலே,*

*ப$_4$கவத$_3$த்யந்த ப்ரவணனான இவ்வதிகாரியும், 'காணவாராயென்று கண்ணும் வாயுந்துவர்ந்து' (திருவாய்மொழி 8-5-2) என்றும், 'எண்ணே கொண்ட சிந்தையதாய் நின்றி யம்பும்' (திருவாய்மொழி 9-4-2) என்றும், 'அடியேன் அடிகூடுவ தென்றுகொலோ' (திருவாய்மொழி 5-9-1) என்றும், 'கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்' (திருவாய்மொழி 7-2-1) என்றும் 'நையும் கண்ணீர்மல்க நின்று' (திருவாய்மொழி 4-4-2)*

**என்றும், 'வட்கிலள் இறையும்' *(திருவாய்மொழி 7-2-3)* என்றும்,**

**விளக்கவுரை**

28. 'விஷ்ணுவினுடைய பரமபதத்தை எய்தவிரும்பும் ஜ்ஞாநி களுக்கு இந்திரன் முதலானாருடைய போகங்கள் யாவும் நரகத்தை ஒத்தவை' எனக் கூறினபடி, இறைவனது தொடர்பற்ற எல்லாப்பொருள்களும் நரகத்துக்கு நிகரானவை யாகத் தோற்றுவித்து, தாழ்ந்த பெண் விஷயத்தில் ஈடுபாடு கொண்டவன், தனக்கு விருப்பமான அவளை அடையாமையாலே, 29. 'குத்திட்ட பார்வை, தீவிரமான எண்ணம், சேர்த்தியில் நாட்டம், நினைத்ததை அடைதலில் உறுதியாயிருத்தல், உடல் இளைத்தல், ஏக்கங் கொண்டிருத்தல், நாணத்தைத் துறத்தல், பித்தேறியிருத்தல், மூர்ச்சித்தல் என்பதீறாக மன்மதனால் பீடிக்கப்பட்டவனின் நிலைகள் பத்தாம்' என, அகத்துறை நூல்களில் கூறுகிறபடியே பத்துவகையான நிலைகளை எய்துவது போலே, இறைவனிடம் மிகவும் ஈடுபாடு கொண்ட இவ்வதிகாரியும், 'காணவாராய் என்று கண்ணும் வாயுந் துவர்ந்து, எண்ணே கொண்டே சிந்தையாய் நின்றியம்பும், அடியேன் அடிகூடுவது என்கொலோ, ''கங்குலும் பகலும் கண்துயில் அறியாள், நையும் கண்ணீர் மல்க நின்று, திமிர் கொண்டாலொத்து நிற்கும், வட்கிலள் இறையும் மணிவண்ணா என்னும், ஏறிய பித்தினோடு, இட்டகால் இட்டகைளாயிருக்கும், நின்னலால் இலேன் காண்'' எனவும் திருவாய்மொழியில் சொல்லுகிறபடியே,

**47. மூலம்**

**'ஏறிய பித்தினோடு' *(திருவாய்மொழி 4-4-7)* என்றும், 'இட்ட கால் இட்டகைகளாயிருக்கும்' (திருவாய்**

*மொழி 7-2-4) என்றும், 'நின்னலால் இலேன்காண்' (திருவாய்மொழி 2-3-7) என்றும், சொல்லுகிறபடியே, இப்படிப்பட்ட அவஸ்தைகளை அடையும்படி பண்ணி அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணை கதாநனான தான் அனுபவிக்கைக்கு யோக்யனாம்படி பரமார்த்தனாக்கித் தன்னோடே சேர்த்துக்கொள்ளும். அயோத்யையில் சராசரங்களைக் கூட்டிக்கொள்ளவேணு மென்று நினைத்து அவற்றின் பக்கல் ஒரு ஹேது வின்றிக்கே இருக்க,*

*30. 'அபிவ்ருக்ஷா: பரிம்லாநா: உபதப்தோ த$_3$காநத்$_3$ய: - அகால ப$_2$லிநோ வ்ருக்ஷா:' (ஸ்ரீராமாயணம் அயோத்யா காண்டம் 59:4) என்றும்,*

**விளக்கவுரை**

இத்தன்மையான நிலைமைகளை இவனை எய்தும்படி எவ்விதமான குற்றமும் தீண்டத்தகாதவனும் பல நற் குணங் களையே உடையவனுமான இறைவன், தான் அனுபவிக்கத் தகுதியுடையவனாம்படி, மிக்க ஆர்வமுடையவனாக்கி, அவனைத் தன்னோடு சேர்த்துக்கொள்ளும். இராம அவதாரத்தில், அவதாரத்தை முடித்துக்கொண்டு தன்னடிச் சோதிக்குச் செல்லும்போது சராசரங்களை முற்றவும் தன்னோடு கூட அழைத்துச் செல்ல வேண்டும் என நினைத்து, மோட்சத்துக்கு வேண்டிய நற்செயல் அவைகளிடத்து ஒன்றுமின்றிக்கே இருக்கவும்,

30. 'இராமபிரானை விட்டுப் பிரிந்த துன்பத்தால் வருந்தும் மரங்களும் வாடின; நதிகளும் ஏரிகுளங்களும் நீரில்லாது வறண்டு விட்டன; அவன் காட்டில் நின்றும் நாட்டுக்கு மீண்டபோது கால மில்லாக் காலத்திலும்

மரங்களானவை பயன்தர முற்பட்டன' என்றும், 31. 'இராமன் அரசோச்சுங்காலத்தில் மக்களுக்கு இராமன் இராமன் இராமன் என்பதாகவே எல்லாச் சொற்களும் உண்டாயின' என்று உயர்திணை அஃறிணை என்ற வேறுபாடன்றி இராமன் தன்னோடு சேர்ந்திருக்கும்போது இன்பமும், பிரிந்திருக்கும் போது துன்பமும் எய்தும்படி பண்ணி அவற்றைப் பரமபதத் திற்குக் கூட்டிச் சென்றான் என்று,

**48. மூலம்**

*31. 'ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் (அ)ப$_4$வந்கத$_3$ா:, ராமபூ$_4$தம் ஜக$_3$த$_3$பூ$_4$த்$_3$ராமே ராஜ்யம் ப்ராஶாஸதி' (ஸ்ரீராமாயணம் 131.96) என்றும் சராசரவிபாகமற ஸ்வ ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுக து$_3$:க்கராம்படி பண்ணி கூட்டிக்கொண்டு போனான் என்று, 'புற்பா முதலாப் புல் லெறும் பாதியொன்றின்றியே - நற்பா லயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் - நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே' (திருவாய்மொழி 7-5-1) என்று ஆழ்வார் அருளிச் செய்தாரிறே.*

*இவ்விபூதியில் இப்படிக்கூடுமோ என்று சங்கிக்க வேண்டா. அக$_4$டித க$_4$டநா ஸாமர்த்தியமுடைய ஸர்வ ஶக்தியுக்தன் லீலையிலே விநியோகங் கொள்ளவேணு மென்று நினைத்துக் கர்மாநுகுணமாக நிர்வஹிக்கு மளவில் ஸ்வயத்நத்தாலே கூடாதித்தனை போக்கி, 'விதிவாய்க்கின்று காப்பாரார்' (திருவாய் மொழி 5-1-1) என்கிறபடியே,*

**விளக்கவுரை**

'புற்பா முதலாப் புல்லெறும் பாதி யொன் றின்றியே

- நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் - நற்பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே' என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்தார் அல்லவா.

இந்த உலகத்தில் இவ்வாறு நடக்கக் கூடுமோ என ஐயுற வேண்டா. பொருந்தாதவற்றையும் பொருத்தும் ஆற்றல் உள்ள முழுமுதற்கடவுளான இறைவன், தன் விளையாட்டிற்காக இவை களை உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டுமென நினைத்து அவ்வவற்றின் வினைப் பயனுக்கேற்றவாறு நிர்வாகம் செய்யுமளவில் ஆன்மாவின் முயற்சியால் அவ்வீடுபேற்றை அடையக் கூடாததன்றி, 'விதிவாய்க்கின்று காப்பாரார்' எனத் திருவாய் மொழியில் கூறுகிறபடி,

**49. மூலம்**

*க்ருபை கரையழிந்து பெருகப் புக்கால் 'எம்மா பாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர் மெய்ம்மாலா யொழிந்தேன்' (திருவாய்மொழி 5-1-7) என்று எப்படிப்பட்ட பாபிஷ்டனாலும் க்ருபை பலிக்கும் போது இவ்வாகாரங்களெல்லாம் லபித்துஜ்ஜீவிக்கும்.*

*31. 'சித: பரமசில்லாபே$_4$ ப்ரபத்திரபி நோபதி$_4$:, - விபர்யயே து நைவாஸ்ய ப்ரதிஷேத$_4$ாய பாதகம்' என்கிறபடியே, 'அவன், இவனைப் பெற நினைக்கும்போது' (ஸ்ரீவசன பூஷணம் 114) அநாதி$_3$ காலார் ஜித ப்ராப்தி ப்ரதி$_3$பந்த$_4$க கர்மம் ப்ரதி$_3$ஷேதி$_3$க்கமாட்டாமையாலே தானே மேல்விழுந்து இவனை, ஸாது$_4$கர்மங்களைப் பண்ணு வித்துத் தன்னை ப்ராப்பிக்கும்படி பண்ணும்.*

**விளக்கவுரை**

இறைவனது கருணை வெள்ளம் கரையழிந்து

பெருகப்புகும்போது, 'எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங் கண்டீர் மெய்ம்மாலாய் ஒழிந்தேன்' என, எத்தன்மையான தீவினையுடையவரானாலும், இறைவனது கருணைப் பயன்தரும்போது மேற்சொன்ன நல்ல நிலைகளை எல்லாம் அடைந்து உய்விக்கும். 31. 'சீவனான இவனுக்குப் பரமாத்மாவைப் பெறுகிற விஷயத்தில் பிரபத்தியாகிற ப₄ரஸமர்ப்பணமும் உபாய மன்று; இறைவனான எம்பெருமானுக்கு சீவனைப் பெற நினைக்கும்போது, சீவன் செய்த பாவங்களும் தடையாகாது' என்று பிரமாணங் கூறுகின்றபடியே, 'அவன் இவனைப் பெற நினைக்கும் போது பாதகமும் விலக்கன்று' (ஸ்ரீவசன பூஷணம் 114) என்று ஸ்ரீவசன பூஷணத்திலும் இவ்விஷயம் காட்டப்பட்டது. இவன் (சீவன்) பல காலங்களில் ஈட்டியதும் பகவானை அடைவதற்குத் தடையா யிருந்ததுமான தீவினைகள், இறைவன் முயலும்போது தடை செய்ய மாட்டாமையாலே, இறைவன் தானே மேல் விழுந்து இவனை, நல்வினைகளைச் செய்துவித்துத் தன்னை எய்தும்படி செய்வான்.

**50. மூலம்**

***32. 'ஏஷ: ஏவ ஸாது₄கர்ம காரயதி தம் யமேப்₄யோ லோகேப்₄ய: உ ந்நிநீஷதி' (கௌஷீதகி உபநிஷத்) என்று, ச்ருதியும் சொல்லிற்றிறே. 'என்சொல்லால் யான்சொன்ன இன்கவி என்பித்துத் தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்' - (திருவாய்மொழி 7-9-2) 'தப்புதலின்றித் தனைக் கவிதான் சொல்லியொப்பிலாத் தீவினையேனை யுய்யக் கொண்டு போகிய அப்பனை என்று மறப்பன்' (திருவாய்மொழி 7-9-3) என்றும், இந்தக் கவித்வம் ஆழ்வார் தன் சொல்லாலே சொன்னார் என்னும்படி தானே தன்னைக் கீர்த்தித்துக்கொண்ட ஆஶ்சர்ய பூ₄தன்***

*தப்பில்லாதபடி தன் கவித்வத்தைத் தானே சொல்லி அஸத்ருஶ பாபிஷ்டனான என்னை உஜ்ஜீவிப்பிக்கிற உபகாரனென்று ஆழ்வார் அருளிச்செய்தாரிறே.*

**விளக்கவுரை**

இதனை, 32. 'இந்தத் திருமகளுக்கு நாதனாயிருக்கும் இறைவன் தானே, யாவன் ஒருவனை இந்தக் கொடுமையான உலகத்திலிருந்து உய்விக்க விரும்புகிறானோ? அந்தச் சீவனை நற்செயல்புரியும்படி தூண்டுகிறான் என வேதாந்தமும் கூறிற்றல்லவா?' என்று குறிப்பிட்டுள்ளது.

'என்சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்துத் தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன், தப்புதல் இன்றித் தன்னைக் கவிதான் சொல்லி, ஒப்பில்லாத் தீவினையே னையுய்யக் கொண்டுபோகிய, அப்பனை என்று மறப்பன்' என்று, திருவாய் மொழியாகிற இந்தக் கவியை ஆழ்வார், தன் சொல்லாலே சொன்னார் என்னும்படி, இறைவனான தானே தன்னைப் புகழ்ந்து பாடிக்கொண்டு வியக்கத்தக்கவனான இறைவன், திருவாய் மொழியில் பிழையொன்றும் நேராதபடி அதனைத் தானே சொல்லி எவ்விதத்திலும் தகுதியற்ற பாவியான என்னை உய்வித்த உதவியாளன் இறைவன் என்று, ஆழ்வாரே கூறினார் அல்லவா? இதனால், இறைவன், தான் உய்விக்க நினைத்தவரை, நன்மை தீமைகளை அறிந்து ஒழுகும்படி அவர்களுக்கு அந்தர்யாமியா யிருந்து நியமித்து முக்தனாக்குவான் என்று சொல்லப்பட்டதாயிற்று.

**51. மூலம்**

*இத்தால் தான் உஜ்ஜீவிப்பிக்க நினைத்தவரை ஹேய உபாதேயங் கள் அறிந்து நடக்கும்படி அந்த:*

*ப்ரவிஷ்டனாய் நியமித்து முக்தனாக்கும் என்று சொல்லப் பட்டதாயிற்று.*

*ஆகையாலே, ஸதாசார்ய உபதேஶத்தாலல்லது இவை ஒன்றும் தெரியாமையாலே ஆசார்யாபிமான அந்தர் பூதனாக்கித் தது்நு ரூப ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் உண்டாம்படிபண்ணி உஜ்ஜீவிப்பிக்கும். இப்படிப்பட்ட அதிகாரிகள் இக்காலத்தில் துர்லபமிறே யென்னில், 33. 'வாஸுதேவ ஸர்வமிதி - ஸமஹாத்மா ஸுதுர்லப:' (கீதை 7-19) என்றும், 34. 'கஶ்சிந் மாம் வேத்தி தத்வத:' (கீதை 7-3) என்றும், 'ஒரொருவர் உண்டாகில் அத்தனை' (உபதேசரத்தினமாலை - 55) என்றும் ஸுதுர்லப மாகவே சொல்லப்பட்டதிறே.*

**விளக்கவுரை**

ஆகையாலே, நல்லாசாரியன் செய்கின்ற உபதேசத் தாலல்லது இவை ஒன்றும் தெரியாமையாலே, இவனை ஆசார்ய அபிமானத் திற்குள்ளீடாக்கி அதற்கியைந்த ஜ்ஞாந ஒழுக்கங்கள் உண்டாம் பண்ணி இறைவன் வீடுபேற்றைத் தந்தருளும். இப்படிப்பட்ட அதிகாரிகள் இக்காலத்திலே அரியதாயிற்றே எனின், 33. 'வாசு தேவனான எம்பெருமானே (உண்ணுஞ்சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும்) எல்லாம் என்றிருக்கும் அதிகாரி எனக்கு மிகவும் கிடைத்தற் கரியன்' எனக் கண்ணனே கூறும்படி யாகவும், 34. 'என்னை அடைய முயலும் பல்லாயிரவர்களில் என் இயல்பை உள்ளவாறு அறிபவன் ஒருவனே' எனவும், 'ஓரொருவர் உண்டாகில் அத்தனைகாண்' என்று மணவாளமாமுனி களும் ஆராய்ந்து உரைத்தனர். எனவே, எல்லாவாற்றாலும் தூய்மை பொருந்திய சிறந்த அதிகாரிகள் இவ்வுலகில் கிடைத்தற் கரியவர் எனச் சொல்லப்பட்டதல்லவா. ஆகையாலே,

ஆசாரியனை அடைந்து ஐந்து இலச்சினைப் பெற்று, தூய்மையாகித் திருமண், சிகை, தாமரைமாலை முதலான வற்றை அணிந்து உருவத்தையும் நாமத்தையும் வைத்தும் இரகசியங்களான மூன்று மந்திரங்களில் சொல்லப்பட்ட பொருள்களுக்கு எதிரானதான தேகத்தையே ஆந்மாவாக நினைத்துப் பிறருக்கு அடிமையாயிருத்தல்,

**52. மூலம்**

*ஆகையாலே ஆசார்ய வரணம் பண்ணி பஞ்ச ஸம்ஸ்கார நாமரூப த$_4$ாரணமாத்ர முடையராயிருந்து வைத்தும் மந்த்ர வ்ருத்தங்களான தே$_3$ஹாத்மாபி$_4$மாந அந்ய ஶேஷத்வ ஸ்வஸ்வாத$_3$ந்த்ர்ய அஹங்கார மமகார த்வேஷ காமக்ரோத$_3$ மத மாத்ஸர்யயுக்தராய் ப$_3$த்த ஸம்ஸாரியாய், புத்ர த$_3$ந த$_3$ாந்யாதி$_3$ ஸக்தராய், ஒருவர்க்கொருவர் அர்த்த$_3$ காம நிமித்தமாகவும், அஹங்காரத்தைப் பற்றவும் ஸ்பர்த்தித்துக் கொண்டு அஸேவ்ய ஸேவாநிரதரானவர் இன்னமும் நாலு நாள் லீலைக்கு விஷயபூ$_4$தராவர்.*

*தேஹாவஸாந காலத்துக்கானாலும் 35.'பிதரம் மாதரம் த$_3$ாராந் புத்ராந்' (சரணாகதி கத்யம் - 6) இத்யாதிப்படியே ப்ராதி கூல்யங்களில் விரக்தி ஜநித்து பரமார்த்தரானால் ஆறுநீர்வர வணித்தானால், அதுக் கீடான அடையாளங்கள் உண்டாமாப் போலே முக்த லக்ஷணங்களெல்லாம்,*

**விளக்கவுரை**

தனக்குத் தானே சுவதந்திரனாயிருத்தல், யான் என தென்னும் செருக்குட னிருத்தல், பிறரைப் பகைத்தல், பேராசை, கோபம், செருக்கு, பொறாமை ஆகியவற்றை

யுடையவராகவும் பிறவியில் கட்டுப் பட்டு, பெண், பிள்ளை, பொன், தானியம் முதலியவற்றில் வேட்கை உடையவராய், பொருளாசை காரணமாகவும் செருக் கடைந்தும் ஒருவரை யொருவர் வைதுக்கொண்டு, வணங்கத்தகாதவர்களை வணங்கிக்கொண்டு இருப்பவர்கள் இன்னமும் சில காலம் இறைவனுடைய (பிறப்பு இறப்பென்னும்) விளை யாடலுக்கு விஷயமாவர். சரீரம் முடியுறுங் காலத்தில் 35. 'எம்பெருமானே! தாய், தந்தை, மனைவி, மக்கள், உறவினர் ஆகிய எல்லாவற்றையும் விட்டு தேவரீருடைய உலகமளந்த திருவடியே சரணம் அடைந்தேன்' என்கிறபடி இறைவனைத் தவிர்த்த பிறவற்றில் வைராக்கியம் உண்டாகிமிக்க வருத்தமுடையவனானால், ஆற்றின் நீர் பெருக்கு, அணித் தானால் அதற்கு அடையாளமாக மணல் பொசிந்து காட்டுவது போலே முக்தனுக்கு உண்டான இலக்கணங்கள் எல்லாம்,

**53. மூலம்**

***36. 'ஸத$_3$ா பரகு$_3$ணா விஷ்ட: த்$_3$ரஷ்டவ்யஸ் ஸர்வ தே$_3$ஹிபி$_4$:' (விஷ்ணு தந்திரம்) என்கிறபடியே, எல்லாருக் குங் காணப்பட்டுத் தனக்கும் இது சரம ஶரீரமென்று அறுதியி டலாயிருக்கும். அக்காலத்துக்கும் அதுவே யாத்ரையானால் ஐந்மாந் தரத்தைப் ப்ராபி$_3$க்கும்.***

***37. 'நக$_2$லு ப$_4$ாக$_3$வதா யம விஷயம் க$_3$ச்ச$_2$ந்தி' (வேத வாக்யம்) என்று சொல்லுகையாலே அவிநீதனானாலும் யாம்ய லோக ப்ராப்தியில்லை என்று 'ப்ரமேயரத்நத்திலே' அருளிச்செய்தார். பெரியவாச்சான்பிள்ளையிடம் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் வந்து, 'ஸ்வாமிந் நாம் லீலைக்கு விஷயமோ? க்ருபைக்கு விஷயமோ' என்று கேட்க,***

**விளக்கவுரை**

36. 'எப்போதும் இறைவனுடைய கல்யாண குணக் கடலை அநுபவிக்கச் செய்பவர்களான அடியார்களைச் சரீரம் படைத்த அனைவராலும் காணத்தக்கவர்கள்' என்னும்படி எல்லாருக்குங் காணப்பட்டுத் தனக்கும் இதுவே இறுதியான சரீரம் என்று அறுதியிடக்கடவதாய் இருக்கும். ஆனால் சரீரம் முடியுந்தறுவாயிலும் இவன் ஸம்ப்ரதாயத்திற்கு விரோதமான ஒழுக்கங்களையுடையவனானால் வேறு பிறவியை அடைந்து வருந்துவான்.

37. 'பாகவதர்கள் யமனுடைய நாட்டிற்குச் செல்ல மாட்டார்கள்' **(வேதவாக்கியம்)** எனக் கூறுகையாலே, வைராக்கியமின்றி மாறு பட்டு நடப்பவர்களானாலும் அவர்கள் யமனுலகு செல்வதில்லை எனப் 'பிரமேயரத்நம்' என்ற நூலில் பூர்வாசார்யர்கள் அருளிச் செய்திருக்கிறார்கள்.

**54. மூலம்**

*'உடலைப் பற்றியிருந்தோமாகில் லீலைக்கு விஷயமாகிறோம், உயிரைப் பற்றியிருந்தோமாகில் க்ருபைக்கு விஷயமாகிறோம்' என்று அருளிச்செய்தார். 38.'த்வங்மாம்ஸ ருதி$_4$ரஸ்நாயு மேதே$_4$ா மஜ்ஜாஸ்தி$_2$ ஸம்ஹறதௌ - தே$_3$ஹே சேத் ப்ரீதிமாந் மூடே$_4$ா ப$_4$விதா நரகேபி ஸ:' என்கிறபடியே தே$_3$ஹாபி$_4$மாநியாய்க்கொண்டு தைல க்ருதாதிகளாலே உடம்பைப் பெருக்கி விஷய ப்ரவணராய் தே$_3$ஹாநுப$_3$ந்திகளான பார்யா புத்ராதிகளில் அநுரக்த சித்தராய் ஶாஸ்த்ரவஶ்யர் இன்றிக்கே ஸ்வைரம் ஸஞ்சரித்தாராகில் லீலா விஷயமாய்ப் போவர்கள்.*

***ஆத்ம ஸ்வரூபத்துக்கு அநுரூப₃மாத்ரமாக ஆகாரத்ரய ஸம்பந்நராய், அர்த்த பஞ்சக தத்வஜ்ஞராய்; ஹேயோபாதே₃யங்களறிந்து ஸ்வரூப விரோதி₃களான ப்ராதிகூல்யங்கள் எல்லாம் த்யஜித்து,***

**விளக்கவுரை**

பெரியவாச்சான் பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் சுவாமிகாள்! நாம் இறைவனது விளையாட்டிற்கு **(இறத்தல் பிறத்தலுக்கு)** ஆளாவோமோ? அல்லது அவனது அருளுக்க (வீடுபேற்றுக்கு) ஆளாவோமா? என வினவ, அவர், 'உடலைப் பற்றியிருந்தால் அவனது விளை யாட்டிற்கு ஆளாகிறோம்; உயிரைப் பற்றியிருந் தால் அவன் அருளுக்கு ஆளாகிறோம்' என்றார். இதனால் 38. 'தோல், மாமிசம், உதிரம், நரம்பு, தசை, கொழுப்பு, எலும்பு ஆகிய வற்றின் சேர்த்தியான இவ்வுடலில் இன்பங்காணும் முட்டாள், நரகத்திலும் இன்பங் காணுவான்' என்கிறபடியே, தாழ்வான இவ்வுடலின் மேல் உள்ள விருப்பத்தால் நெய், தயிர், பால் போன்ற வற்றால் உடம்பைப் பெருக்கி ஐம்புலன் நுகர்ச்சியில் ஈடுபாடு உடைய உடல் தொடர் பால் வந்த மனைவி மக்கள் உறவினர் முதலான வர்களிடத்து, பற்றுள்ளங்கொண்டவராய், சாத்திரத்திற்குக் கட்டுப்படாமல் தன் விருப்பப்படி நடந்தார்களாகில் இறைவனின் விளையாட்டுக்குக் கருவியாவார்கள்; பிறவியில் விழுவார்கள் என்றவாறு.

ஆந்மாவின் இயல்பிற்கு ஏற்ற தன்மையுடைய திரு மந்திரத்தில் கூறப்பட்ட மூன்று நிலைகளையுடையனாய்; அஃதா வன, பிரணவத்தில் சொல்லப்பெற்ற பிறர்க்கு உரியனல்லாது இறைவனுக்கே உரியனாய் (அநந்யார் ஹத்வம்),

**55. மூலம்**

*திலதைலவத் து$_3$ர்விவேசமாய் த்யஜிக்க வொண்ணாத தம்தே$_3$ஹத்தைக் கண்டால் ஶத்ருவைக் கண்டாப் போலே பயப்பட்டு, அத்தை வளர்த்துக் கொள்ளாதே நியதாஹாரங் களை ஸத்தாத$_3$ாரகமாத்ரம் ஸ்வீகரித்து ஶாஸ்த்ர வஶ்யராய் நிரஹங்காரத்தாலே ப்ரவர்த்தித் தாராகில் க்ருபா விஷயமாவர் என்று அருளிச்செய்தார் என்கை.*

*ஆகையாலே, ஸத$_3$ாசார்ய வரணம் பண்ணி தது$_3$பதிஷ்ட மாத்ரார்த்த ஜ்ஞாநாநுஷ்ட$_2$ாந ஸம்பந்நரானால் ஆயிற்று முக்தி யோக்யராவது. இவ்வாசார்ய வரணம் பண்ணுகிற அதி$_4$காரிகள் ப்ரதம ப்ரபந்நர் என்றும், சரம ப்ரபந்நர் என்றும் த்விவிதம்.*

**விளக்கவுரை**

நமப்பதத்தில் கூறப்பெற்ற வேறு உபாயங்களைப் பற்றாதவனாய் (அநந்யசரணத்வம்) நாராயண பதத்தில் கூறப்பெற்ற வேறு யாதும் (எவரையும்) விரும்பாதவனாய் (அநந்ய பே$_4$ாக்யத்வம்) என்ற மூன்று தன்மைகளையுடைய வராய், அர்த்த பஞ்சகத்தையும் (ஐம்பொருளையும்) அறிந்தவராய், தாழ்ந்தவற்றையும் உயர்ந்தவற்றையும் கைக் கொள்ளத் தக்கவற்றையும் அறிந்து, தன் இயல்புக்கு விரோதிகளான எதிர்த்தட்டானவற்றை எல்லாம் விட்டு, எள்ளில் எண்ணெய்போல் பிரிப்பதற்கு அருமையையுடைத்தாய், விடவொண்ணாத தம் தேகத்தைக் கண்டால் எதிரியைக் கண்டாற்போல அச்சப்பட்டு, அதனை வளர்த்துக் கொள்ளாமல் முற்கூறப்பெற்ற சாத்விக உணவுகளைச் சரீரம்

விழுந்துவிடாமல் இருத்தலுக்கு மாத்திரம் உட்கொண்டு இறைவனது ஆணையாம் சாத்திரங்களுக்குக் கட்டுப்பட்டு அகங்காரமில்லாமல் செயல்படுவாரானால் இறைவன் அருளுக்குப் பாத்திரராவார் என்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தார் என்பது.

ஆகையால், நல்லாசாரியர் தொடர்பைச் செய்து கொண்டு அவருடைய உபதேசமாத்திரத்தாலே ஜ்ஞாந அநுட்டான செல்வத்தையுடையரானவர் முக்திக்குத் தகுதிபெறுவர். இவ்வாசாரியன் திருவடியை அடைந்தவர் களும், முதல்நிலை அதிகாரிகள் என்றும் கடைநிலை அதிகாரிகள் என்றும் இருவகையராவர்.

**56. மூலம்**

*முதலதி$_4$காரி - ஸ்வாசார்யர் அருளிச்செய்தபடியே ப$_4$க$_3$வத$_3$த்யந்த பரதந்த் ரனாய், ததே$_3$க ப்ரவணனாய், 'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன் மக்களும், மேலாத்தாய் தந்தையும் அவரே இனியாவாரே' (திருவாய் 5-1-8) என்றும், 'வாஸு தே$_3$வ ஸர்வம்' (கீதா 7-19) என்றுஞ் சொல்லுகிறபடியே ஆழ்வார் போலேயிருக்குமவன்.*

*இரண்டாம் அதி$_3$காரி - ஆசாரியன் உபகரித்த ப$_4$க$_3$வத்$_3$ விஷய வைலக்ஷண்யம் நன்றாக நெஞ்சில்பட்டு, இப்படி பரம விலக்ஷணமான வஸ்துவை உபகரித்த மஹோபகாரத்தை நினைத்து இதுக்கு நாம் என் செய்வோம் என்று தலை தடுமாறி, 39. 'மாதா பிதா யுவதயஸ்ஸர்வம்' (ஸ்தோத்ர ரத்னம் 5) என்று அவிதித விஷயாந்தரராய் தத்$_3$ இத$_3$ர அந்ய தே$_3$வதா கந்த து$_3$ரராய் மதுரகவிகள் போலேயிருக்குமவர்கள். இருவருக்கும் பர்வபே$_4$த மொழிய ப்ராதிகூல்ய நிவ்ருத்தி முதலான*

***அதி$_3$கார விஶேஷங்களெல்லாம் அபேக்ஷிதங்களாய் இருக்கும்.***

**விளக்கவுரை**

முதல்நிலை அதிகாரியானவன் தனது ஆசார்யன் உபதேசித்தபடியே பகவானுக்கே அடிமைப்பட்டவனாய் அவனிடத்தில் மிக்க அன்புடையவனாய் (பக்தியுடைய வனாய்) ''சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையும் அவரே இனி யாவாரே'' என்று 39. 'மனைவி செல்வம் நல்லபிள்ளையர் தாய் தந்தையர் எல்லாம் எனக்கு இனி அவரே' என, இறைவனையே எல்லாவுறவுகளாகக் கொண்ட நம்மாழ்வார் போலே இருக்குமவன்; இரண்டாம் நிலை அதிகாரியானவன், ஆசார்யன் உதவியினால் அங்கீகரிக்கப்பட்ட பகவான், அவனது சிறப்பியல்புகள் நன்றாக நெஞ்சில்பட்டு, இவ்வாறான உயர்வற உயர்ந்த சிறப்பான பகவானாகிய மெய்ப்பொருளைத் தந்த பெருநன்றியை நினைத்து, இதற்கு யாம் என் செய்வோம்? என நிலை தடுமாறி, 'எனக்குத் தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலான யாவரும் ஆழ்வாரே' என ஆளவந்தார் ஆசார்ய விஷமாகவே கூறியதுபோலவும்,

**57. மூலம்**

***ஆனால், ப$_4$க$_3$வத$_3$ாஶ்ரயணம் து$_3$ர்லபம், இது ஸுலபம் என்று சொல்லுகிறபடி என்? என்னில், ஒரு அர்த்தஞ்சொன்னால் அறியத்தக்க ஜ்ஞாநமும், அநுஷ்டி$_2$க் கத்தக்க ஶக்தியுமில்லாத பதிராத்யயோக்யருக்கும் கார்யகரமாம் என்று ஶாஸ்த்ர கம்யனன்றிக்கே சக்ஷுர்க் கம்யன் என்றும், இவன் அபதே$_2$ ப்ரவ்ருத்தனானால் ருசியைப் பார்த்து அநுமதி ப்ரதாநம் பண்ணுமவன்***

***அன்றிக்கே மரணாந்தமாக நிர்ப₃ந்தித்துத் திருத்தி அவனுக்கு இஷ்டவிநியோக யோக்யனாக்கும் என்று நினைத்து ஸத₃சார்ய அநுவர்த்தனம் அமோகமென்று,***

**விளக்கவுரை**

நம்மாழ்வாரைத் தவிர மற்றொரு விஷயத்தை அறியாது, அந்த நம்மாழ்வார் வணங்கும் ஆதிப்பிரானையும் வணங்காது, அவனது பார்வையும் படாமல் தூரத்தில் நிற்பவரான மதுரகவியாழ்வாரைப்போலே இருப்பவர்கள். இருவருக்கும் முதல்நிலை, கடைநிலை என்னும் வேற்றுமையே அன்றி, விரோதமானவற்றைத் தவிர்தல் முதலான அதிகாரி ஆவதற்கு உண்டான சிறப்பெல்லாம் வேண்டியவையிருக்கும். ஆனால், பகவானை அடைதல் அரியதாயும், ஆசார்யனை அடைதல் என்பது எளியதாயும் இருக்கும் என்று கூறுவது என்? எனில், மறையின் பொருளான இறைவன் விஷயத்தைப் பற்றிச் சொன்னால், அதனை அறியத் தக்க ஜ்ஞாநமும், ஒழுகத்தக்க ஆற்றலும் இல்லாத ஊமையர் செவிடர் போன்றோர்க்கும் பலிக்கும் என்று; ஆசாரியன், இறைவனைப் போலே சாத்திரத்தால் அறிபவன் அன்றிக்கே கண்களால் நேரே காணத்தக்கவன் என்றும், சீடனானவன் வழி யல்லா வழியில் நடந்தால் இறைவனைப் போலே அவனுக்குத் தாழ்ந்த விஷயத்தில் சுவையிருப்பதைக் கண்டு அநுமதி பண்ணுதல், அன்றியே மரணம் வரையில் சீடனை வலியுறுத்தித் திருத்தி இறைவனுக்கு இட்டபடி பயன் கொள்ள தகுதியுடையவனாக்குவன் ஆசாரியன் என்று எண்ணியே, நல்லா சாரியனை அடைதல் இறைவனைக் காட்டிலும் மிகவும் சிறந்தது என்று கூறப்பட்டது.

## 58. மூலம்

*40.'ஸித்$_3$தி$_4$ர் ப$_4$வதிவாநேதி ஸம்ஶயோச்யுத ஸேவிநாம் - ந ஸம்ஶயோஸ்தி தத்$_3$ப$_4$க்த பரிசர்யாரதாத்மநாம்' (சாண்டில்ய ஸ்ம்ருதி 11.95) என்று சொல்லுகிறதத்தனை. நியமிக்கத் தக்க யோக்யதை உண்டாய் ஸத$_3$ாசார்யனானவன், ஸார தம ஶாஸ்த்ரோக்தரீத்யா நியமித்தால் நியமனப்ரகாரத்தில் நில்லாதே, சோம்பராய் யதேச்சாசாரிகளாய்த் திரிந்தாலும் கார்யகரமாம் என்று சொல்லவொண்ணாதிறே. அப்படிச் சொல்லுமளவில் பாகவதாபசாராதி ப்ராதிகூல்யங்கள் உண்டானாலும் குறைவில்லை என்றும் அர்த்தம் ப்ரஸக்தமாம்; பூர்வா சார்யர்களுடைய வசநாநுஷ்ட$_2$ாநங்களோடு விரோதிக்கும். ப$_4$க$_3$வத்$_3$ விஷயம் து$_3$ர்லபம் என்றது, காணவொண்ணாத வனாய் அர்ச்சாரூபேந காணவந்தாலும், வாய்திறந்தொரு வார்த்தை அருளிச்செய்யாதே,*

### விளக்கவுரை

40. 'அச்சுதனான இறைவனைப் பற்றினார்க்கு மோட்ச பயன் உண்டோ இல்லையோ என்பதில் ஐயமுண்டு; அவனுடைய அடியவர்களின் தொண்டில் ஈடுபட்டவர்களுக்கு மோட்சத்தில் ஐயமில்லை' என, அறநூல்களில் கூறுகிறபடி, சீடனுக்குக் கட்டளையிடத்தக்க தகுதியுண்டாய் நற்குருவானவன், ஸாரமானவற்றில் உயர்ந்ததான சாத்திரங்களில் சொல்லப்பெற்ற முறையில் ஆணையிட்டால் சீடனானவன் அவனது ஆணையின் வழி நில்லாது சோம்பேறியாய் தன்னிட்டப்படி திரிந்தாலும் மோட்சங் கிடைக்குமென்று சொல்லக்கூடாதல்லவா? அவ்வாறு கூறும் அளவில் பாகவதர்க்குச் செய்யும் பாவம் முதலான எதிர்விளைவு உண்டானாலுங் குறையில்லை என்னும்

பொருள் வெளிப்படும்; அப்போது அது பூர்வாசார்யர்களுடைய (முற்பட்ட ஆசார்யர்களுடைய) உபதேச வார்த்தைகளுக்கும் அநுட்டானத்திற்கும் முரண்படுவதாகும்.

'பகவானான இறைவன் காண்பதற்கு அரியன்' என்றது, இந்த ஊனக் கண்களால் காண இயலாதவனாய் அர்ச்சை வடிவத்தில் காணலாம் என்றாலும், அவன் வாய்திறந்தொரு வார்த்தையும் அருளிச்செய்யாது,

**59. மூலம்**

*இவன் து$_3$ர்வாஸனையாலே விஷய ப்ரவணனாய் அபதே$_2$ ப்ரவ்ருத்தனானாலும், இவன் ருசியைப் பார்த்து அநுமதிப்ரதாநம் பண்ணி கர்மாநுகுண ப$_2$லப்ரதா$_3$நம் பண்ணுமவனாகையாலே, ஸர்வேஶ்வரனுக்கு இச்சேதனன் போ$_4$கா$_3$ர்ஹனானாலும், லீலார்ஹனானாலும் இரண்டும் ஸமமாகையாலே, ஶாஸ்த்ரவஶ்யனாய் அதி$_3$காரியானால் போ$_4$க$_3$த்திலே கூட்டிக்கொள்ளும்; ஆஜ்ஞாதிக்ரமணம் பண்ணி அபதே$_2$ப்ரவ்ருத்தனானால் லீலையிலே விநியோக$_3$ங் கொள்ளும்.*

*ஸதா$_3$சார்யனானவன், ஸ்வாஶ்ரிதன் லீலார்ஹனாம்படி விட்டுக்கொடாதே போ$_4$கா$_3$ர்ஹமாக்குவதே பணியாகையாலே, ராஜாவானவன் பிணிபட்டிருக்கிற வேஶ்யையின் மேலே கண் வைத்து இவளை போ$_4$கா$_3$ர்ஹையாம்படி பாங்ககாப் பண்ணித் தரவேணுமென்று பிஷகீஶ்வரனுக்கு நியமித்தால் தி$_3$வ்யௌஷ தத்தையிட்டு பத்திய க்ரமத்திலே நிறுத்தி நன்றாக ஶோதித்து நிர்தோஷையான பின்பு,*

**விளக்கவுரை**

இச்சீவன் கெட்ட எண்ணத்தாலே புலன்கொள் விஷயத்தில் ஈடுபாடுடையவனாய், அவற்றை அடைவதற்கு நெறியல்லா நெறியில் செயல்பட்டாலும், இவனுடைய சுவையைப் பார்த்து அனுமதித்து வினைக்கேற்றவாறு பயனளிப்பானாகையாலே, இறைவ னுக்கு இவன் (போகத்திற்) இன்பத்திற்குரியoவனானாலும் விளையாடற் குரியவனானாலும், இறைவனுக்கு இவ்விரண்டும் ஒன்றேயாகை யால், சாத்திரத்திற்குக் கட்டுப்பட்டானானால் பேரின்பத்தில் இவனைக்கூட்டிக் கொள்ளும்; தன் ஆணை வடிவாம் சாத்திரத்தை மீறி நெறிகெட நடந்தால் படைத்தல், அழித்தல் முதலாய விளையாட்டில் பயன் கொண்டு விடுவான் இறைவன் என்றவாறு.

ஆனால் நல்லாசாரியன், தன்னுடைய அடியனான இச் சீடனை பகவானுடைய விளையாட்டிற்கு விட்டுக் கொடாமல், இவனை இறைவனோடு பேரின்பத்தை அனுபவிக்கச் செய்வதே பணியாகையால், அரசனானவன் தான் விரும்பும் விலைமாது ஒருவள் மேல் கண்வைத்து; அவள் நோயோடு இருக்கும் நிலையறிந்து அவளை இன்பம் நுகர்தற் கேற்றவாறு பாங்காய்ப் பண்ணித் தரவேண்டும் என,

**60. மூலம்**

*அவனுக்கு அர்ஹையாமென்று கொடுக்கும தொழிய, உள்ளேயிருக்கிறவை உண்டாயிருக்கப் புறப்பூச்சு மஞ்சள் குங்குமம் சாந்து அஞ்சநம் முதலானவை பூசி ஸ்ரக்வஸ்த்ர ஆபரணாதி$_3$களாலே அலங்கரித்து பே$_4$ாக$_3$ார்ஹை யானாள் என்று அவன்*

*பக்கலிலே போகவிட்டால், இருவருக்கும் சிரச்சேதபர்யந்தம் வருமாப்போலே,*

*பரதந்த்ரனான ஸ்வாசார்யனும் இச்சேதனன் நிகில ஹேய ப்ரத்யநீயனானவனுக்கு அர்ஹனாக்கும்போது நெடுநாள் அந்யபரனாய் திரிந்த இவனுடைய அவித்யா கர்ம வாஸநா ருசிகளாகிற தோ₃ஷங்கள் உள்ளே கிடக்கச் செய்தேயும்,*

**விளக்கவுரை**

மருத்துவத் தலைவனுக்கு ஆணையிட்டால் அவன், பத்தியத்தோடு கூடிய நல்ல மருந்தைக் கொடுத்து நோய் போமளவும் அவளை நன்றாகச் சோதித்துப் பிணி நீங்கிய பின்னர், அரசன் இன்பம் நுகர ஏற்றவள் என்று அவனிடம் சேர்ப்பதை விடுத்து, உடலினுள் இருக்கும் நோய் அப்படியே இருக்கப் புறத்தே மஞ்சள், குங்குமம், சந்தனம், மை ஆகியவற்றைப் பூசி, பூ ஆடை அணிகலன்களால் அழகு செய்து இன்பம் நுகர்தற்கு ஏற்றவள் இவள் என்று அரசனிடத்தில் போகவிட்டால், அரசன் சினந்து இருவர் தலையையும் கொய் வதற்கு ஆணையிடுவது போல்,

இறைவனிட்ட வழக்காயிருக்கும் இவனுடைய ஆசாரியனும், இவனை, எவ்வித குற்றமுமில்லா இறைவனுக்கு உரியனாக்கும்போது, பிறர்க்கு அடிமையாய் திரிந்த இவனுடைய அறிவின்மை, அதற்கேற்ற செயல், அதற்கடியான பொல்லா நினைவு, அதனால் விளையும் தீயவற்றில் சுவை முதலிய குற்றங்கள் இவனுள் இருக்கச் செய்தேயும்,

61. மூலம்

நாம ரூபங்கள் உண்டாம்படி பண்ணினதே போரும் என்று ஸமர்ப்பித்தால் இருவருக்கும் விநாஶமே பலிக்கும் என்று நன்றாகத் திருத்திக்கொடுக்கும் ஆகையாலே, ஸத$_3$ாசார்ய ஸம்ப$_3$ந்த$_4$ம் ஶீக்ரம் ப$_2$லப்ரத மாம் என்று அபேக்ஷிக்கப்பட்டது. "எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$முடையனாயிருந்து வைத்து, அரங்கமாளிகை என்பானொருவன் விஷயப்ரவண னாய் வர்த்திக்கக் கண்டு, ப$_4$ஹுஶஶ் ஶிக்ஷித்து கீதா அத்யாயங் கள் பதினெட்டும் ஓதுவித்து அதிலர்த்தம் நெஞ்சில்படுத்தி ஊணும் உறக்கமும் அறியாதே வீதராகனாக்கி க்ருபாபரதந்த்ர னாம்படி அருளினாரிறே". ஆகையால் இவன் அவிநீதனானாலும் ரக்ஷிக்க ஶக்த ரென்னுமது ஸத்யம்.

விளக்கவுரை

இவன் சங்கு, சக்கரங்களைத் தரித்து வைணவன் என்ற பெயரும் திருமண் முதலானவற்றை அணிவதால் வந்த வடிவமும் ஆகிய இவையே போதும் என்று இவனை இறைவனிடத்தில் ஒப்புவித்தால், ஆசாரியன் சீடன் ஆகிய இருவர்க்கும் அழிவு ஏற்படும் என அறிந்து ஆசாரியனானவன் சீடனை நன்றாகத் திருத்திக் கொடுக்கும். ஆகையால், நற்குருவின் தொடர்பு விரைவில் பலனளிக்கும் என்று விரும்பப்படுகிறது.

எம்பெருமானார் என்றழைக்கப்படும் இராமானுசரின் தொடர்பைப் பெற்றும் அரங்கமாளிகை என்பான் ஒருவன், இறைவனை மறந்து ஐம்புலன் விஷயத்திலே ஈடுபட்டிருத் தலைக் கண்டு, அவனைப் பலவாறாகத் திருத்தி கீதையின் பதினெட்டு அத்தியாயங்களையும் பொருளோடு ஓதுவித்து

அவற்றை நெஞ்சில் படுத்தி ஊணும் உறக்கமுமில்லாது அவனை வைராக்கியமுடைய வனாக்கி இறைவன் அருளுக்கு ஆட்படும்படி செய்தனர் அல்லவா. ஆதலால், இவன் வழிகெட நடந்தாலும் ஆசாரியனானவர் திருத்திக் காக்கவல்லவர் என்பதுவே உண்மையாம்.

**62. மூலம்**

*இவ்வர்த்தம், 41. 'இடுமே இனிய சுவர்க்கத்தில் இன்னும்' (இராமானுச நூற்றந்தாதி 98) என்கிற பாட்டிலே; இனி, எம்பெருமானாரை ஶரணம் என்று அத்யவஸித்தால் நம்வஶத்திலே நம்மைவிட்டு நான் விஷயவாஸனையாலே து$_3$ர்மார்க்கத்திலே திரிந்து ஸ்வர்க நரகங்களிலே ப்ரவேஶிக்க ஸம்மதிப்பரோ? ஸந்மார்க்கத்திலே ப்ரவர்த்திக்கும்படி திருத்திப் பணிகொள்வார் ஆனபின்பு பகவத் ப்ராப்த்யர்த்தமாக நீ க்ருஶமாக வேண்டா என்று அமுதனார் அருளிச்செய்தாரிறே. இன்னமும், ப$_4$க$_3$வத்$_3$ ப்ரபந்நனுக்குச் சில ப்ராமாதி$_3$கமாக ஐஹிக தே$_3$ாஷமுண்டானாலும், 42. 'அவிஜ்ஞாதா ஹி ப$_4$க்தாநாம் ஆகஸ்ஸு க$_3$மலே க்ஷண:' என்றும் 43. 'தே$_3$ாஷோயத்$_3$யபி தஸ்யஸ்யாத்' (ஸ்ரீராமாயணம் யுத்த காண்டம் 18-3) என்றும், 44. 'ஸாது$_4$ரேவ ஸமந்தவ்ய:' (கீதை 9-30) என்றும், 'செய்தாரேல் நன்று செய்தார்' (பெரியாழ்வார் திருமொழி 4-9-2) என்றும்,*

**விளக்கவுரை**

இதன் பொருளை, 41. 'இடுமே இனிய சுவர்க்கத்தில் இன்னும்' (இராமானுச நூற்றந்தாதி 98) என்கிற பாட்டிலே, இனி எம்பெருமானாரை சரணம் என்று நம்பிக்கையோடிருந்

தால் நம் வசத்திலே நம்மைவிட்டு நான்தாழ்ந்த விஷயத்திலே அல்வழியில் திரிந்து சுவர்க்க நரகங்களிலே புகுவதற்கு இசைவாரோ? நல்வழியில் செயல்படும்படி என்னைத் திருத்திப் பணிகொள்வார் ஆனபின்பு இறைவனை அடைதல் நிமித்தமாக நெஞ்சே நீ வருந்த வேண்டாம் என்று திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்தார் அல்லவா. இன்னமும், இறைவனைப் பற்றிய ப்ரபந்நனுக்கு சில நினைவின்றிக்கே இம்மை வாழ்வில் சில குற்றங்கள் நேர்ந்தாலும் 42. 'தாமரைக் கண்ணனான இறைவன், அடியார்களுடைய குற்றங்களை காணாமலிருப்பவனன்றோ' என்றும், 43. 'என் அடியவனிடம் குற்றம் இருந்தாலும் இருக்கட்டுமே; நல்லோர்களுக்கு அவ்வடியவனை ஏற்றுக் கொள்ளுதல் இகழத்தகாததன்றோ' என்றும், 44. 'தாழ்ந்த ஒழுக்கத்தை உடையவனாக இருந்தாலும் (என்னடியவன்) தலைசிறந்த ஞானிகளோடு நிகராவான்' எனக் கண்ணனும் கூறுகிறபடியே, 'செய்தாரேல் நன்று செய்தார்' என்று என் அடியவர் குற்றம் செய்தாரேல் நன்று செய்தார் எனவும்,

**63. மூலம்**

***ஸர்வஶக்தியுக்தன் நிவாரகரில்லாத நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யத்தோடே கூடின பரமக்ருபாவானாகையாலே, மித்ரபாவமே அமையும் என்று எதிரிட்டவரோடே மன்றாடி தன் பின்னே வைத்துக்கொண்டு ரக்ஷிக்கிலும் ரக்ஷிக்கும்.***

**ஆசார்யன் ப$_4$க$_3$வத்$_3$ பரதந்த்ர ஜந்மன் ஆகையாலே பொன்வாணியன் ராஜாவுக்குப் பணிசெய்கிற இடத்தில், புடப$_3$ாக சுத்தமாம்படி பொன்னையோடே வைத்துப் பணி செய்து ராஜாவுக்குக் கொடுக்குமாப்போலே இவனை, பகவத் போகார்ஹனாம்படி ப்ராக்ருத பே$_4$ாக பராங்முக**

***ணாக்கி, மற்றும் அபேக்ஷிதமான ப்ரபந்நாலங்காரங்களை எல்லாம் உண்டாம்படி பண்ணி, ஆஜ்ஞா பரதந்த்ர னாயிருந்தால் ப$_4$க$_3$வத்$_3$ விஷயத் திலே அந்வயிக்கும்படி விசேஷ கடாக்ஷம் பண்ணி இவன்,***

**விளக்கவுரை**

சான்றுகளில் கூறுகிறபடியே சர்வ வல்லமை பொருந்தியவனும் தடுப்பாரில்லாத தடையற்ற தன் விருப்போடு கூடிய மேலான அருட்கடலான இறைவன் மேலெழ நண்பன் என்று கூறிக்கொண்டு வந்தாலே அமையும் என்று கூறிய அதனை எதிர்த்தவரோடு மன்றாடித் தன் பின்னே வைத்துக் கொண்டு காக்கிலும் காக்கும்.

ஆசாரியன் பகவானுக்கு அடிமைப்பட்ட பிறவியாகை யாலே, பொன் வாணியன் அரசனுக்குப் பணிசெய்கிற இடத்தில் பொன்னை நன்றாகக் காய்ச்சி உருக்கித் தூய்மை படுத்தி அணிகலன் செய்து அரசனுக்குக் கொடுக்குமாப் போலே இச்சீவனைப் பேரின்பம் நுகர் வதற்குத் தகுதியாக்கி, இவ்வுலக இன்பத்தில் வெறுப்படையச் செய்து மற்றும் வேண்டும் ப்ரபந்நாலங்காரங்களை எல்லாம் உண்டாகும்படி செய்து, இறைவனது ஆணைக்கு உட்பட்டவனா யிருந்தால் இறை விஷயத்தில் பொருந்தும்படி விசேடமான அருளைச் செய்தும்,

**64. மூலம்**

***வீரஸுந்தரன் போலே ப்ரதிகூலனானால் க$_4$டத் வம்ஸம் பண்ணி போருமவனாகையோ ஆசார்ய ப்ரபந்நனுக்கே மிகவும் அதி$_3$காரி ஸம்பத்தியுண்டாக வேணும்.***

*தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே பரிஹரிக்குமவனிலுங் காட்டில் ஸதாசார்யனாலே ஸுப்ரிக்ஷிதனான அதி₃காரி பக்கல் ஸர்வேஶ்வரன் மிகவும் உகந்திருக்கும். இவ்வதி₃காரி தன்னோடே பரிமாறுமளவில் நன்றாக த்யாஜ்யோபாதேயங்களறிந்து தனக்கு உகப்பாம்படி பரிமாறுமென்னு மத்தாலே, 45. "மம மத்₃ப₄க்த₃ ப₄க்₃தே₃ஷு ப்ரீதி₄ரப்யதி காப₄வேத்" (பாரதம் ஆச்வ மேதிக பர்வம் 116-23) என்றுதானே அருளிச்செய்தானிறே.*

*ஆகையாலே சரமப்ரபந்நனான அதிகாரியே விலக்ஷண அநுஷ்டான ஸம்ப₃ந்த₄ராய் இருக்கவேணும்.*

**விளக்கவுரை**

இவன் 'வீரசுந்தரன்' போலே விரோதியானால், குடத்தை உடைத்து உறவறுத்து வருவாரைப் போலே, ஆசாரியனும், சிஷ்யன் உறவை அறுத்துவிடும் ஆகையாலே, ஆசார்யனைப் பற்றிய ப்ரபந்நனுக்கு பகவத் பிரபந்நனைக் காட்டிலும் அதிகாரி ஸம்பத்து மிகவும் உண்டாக வேண்டும் என்றவாறு.

இறைவன் தன் விருப்பால் ஒருவனைக் கைக்கொள்ளு மதிற்காட்டில் நல்ல ஆசாரியனால் திருத்தப்பட்ட ஒரு அதிகாரியை கைக்கொள்வதற்கு எல்லோர்க்கும் மேலான இறைவன் மிகவும் உகந்திருக்கும். இவ்வதிகாரி தன்னோடே பரிமாறுமளவில் விடவேண்டியவற்றையும் கொள்ள வேண்டியவற்றையும் நன்றாக அறிந்து தனக்கு உகப்பாம்படி பரிமாறும் என்னும் அதனாலே, 45. 'என் பக்தனிடம் பக்தி உள்ளவர்களிடத்தில் எனக்கு மிக்க அன்பு உண்டு' என்று இறைவன் தானே அருளிச்செய்தானல்லவா?

ஆகையாலே, (சரமபர்வ) கடைநிலை ப்ரபந்நனான (ப்ரபந்நன் - இறைவனைச் சரணடைந்தவன்) அதிகாரியே சிறப் பான அனுட்டானங்களை உடையவனாக இருக்கவேண்டும்.

**65. மூலம்**

***இவ்வதிகாரிக்கு முந்துற முன்னம் ரஹஸ்யத்ரயம் அநுஸந்திக் கைக்கு 'புறம் புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும்' என்று தொடங்கி சொல்லப் பட்ட வைஷ்ணவாதிகாரி லக்ஷணங்களுண்டாகவேணும். அவையாவன, 46.'பிதரம் மாதரம், த$_3$ாராந் புத்ராந் ப$_3$ந்தூ$_4$ந்' (விஹகேந்த்ர ஸம்ஹிதை, படலம் -2) என்றும், 47. 'க்ஷேத்ராணி மித்ராணி த$_4$நாநி' (அத்திகிரி மாஹாத்ம்யம்) என்றுஞ் சொல்லப்பட்ட பித்ரு மாத்ரு தார புத்ர ரத்ந தந தாந்ய க்ரஹ க்ஷேத்ர மித்ர பசு பந்துவர்க் காதிகளெல்லாம் அக்நி கல்ப்பமாய் தோற்றி ருசிவாஸநை களோடே பரித்யஜிக்கையும், இவையெல்லாம் எம்பெரு மான் என்று பற்றுகையும் அப்படி த்யாக ஸ்வீகாரங் களுண்டானால் பின்பு ப$_2$லம்தப்பா தென்று அத்யவஸித் திருக்கையும், ப்ராப்ய லாபத்துக்கு த்வரிக்கையும், இங்கிருக்கிற காலத்திலே;***

**விளக்கவுரை**

இவ்வதிகாரிக்கு மூன்று இரகசியங்களையும் நினைவில் கொள்ளுதற்கு முன்னர் 'புறமுண்டான பற்றுகளை அடைய வாசனையோடே விடுகையும்' (முமுக்ஷுப்படி; நூற்பா 116) என்று தொடங்கி சொல்லப்பட்ட வைஷ்ணவ அதிகார இலக்கணங்கள் உண்டாக வேண்டும். அவையாவன, 46. 'தந்தை, தாய், மனைவி, மக்கள், உறவினர்,

ஆகிய அனைவரையும் முழுவதும் விட்டு' என்றும், 47. 'வயல்கள், நண்பர்கள், செல்வங்கள், மக்கள், மனைவியர், ஆக்கள், இல்லங்கள், உறவினர்கள்' ஆகிய எல்லாம் இறைவனது திருவடியிணைகளை நினைத்தற்கு எரிகின்ற நெருப்பிற்கு நிகராய் பகையாய்த் தோற்றுவதால் அவற்றில் சுவையும் நினைவும் ஆகியவற்றோடு முழுதும் விட்டு, இவையெல்லாம் எம்பெருமானே என்று பற்று கையும், இவ்வாறு விடுதலும் பற்றுதலும் உண்டா னால் பின்னர் பயன் தப்பாது என நம்பிக்கைக் கொண்டிருக்கையும், வீட்டின்பப் பேற்றை அடைதற்குத் துடிப்போடிருத்தலும், இங்குவாழும் நாட்களில் இறைவன், உகந்தருளிய நிலங்களில் ஈடுபாடும், அவனது கல்யாண குணங்களை அனுபவித்தலும்,

**66. மூலம்**

***தி$_3$வ்யதே$_3$சங்களிலே ப்ராவண்யமும், அவனுடைய குணாநுப$_4$வ கைங்கர்யங்களாலே காலக்ஷேபம் பண்ணுகையும், இப்படியிருக்கும், விலக்ஷணர் ஏற்றம் கண்டு உகந்திருக்கையும், மந்த்ரத்ரயத்திலும் நியதனாயிருக்கையும், ஆசார்யனோடே ஸஹவஸித்திருக்கையும்', முதலானைவை என்று, முமுக்ஷுப்படியிலே அருளிச் செய்தாரிறே. இனி ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களுக்கு அதி$_4$காரிகள் ஜீவந்முக்தர்; அவராரென்னில்; 48.'ந ஸப்$_3$த$_3$ஶாஸ்த்ராபி$_4$ரதஸ்யமோக்ஷா நசைவரம் யாவ ஸத$_2$ப்ரியஸ்ய - ந பே$_4$ராஜநாச்ச$_2$ாத$_3$நதத்பரஸ்ய ந லோக சித்தக்$_3$ரஹணோரதஸ்ய - ஏகாந்த ஶீலஸ்ய த்$_3$ருட$_4$ வ்ரதஸ்ய பஞ்சேந்த்$_3$ரியப்ரீதி நிவர்த்தகஸ்ய - அத்$_4$யாத்ம வித்$_3$யாரத மாநஸஸ்ய மோக்ஷ த்$_4$ருவோ நித்ய மஹிம்ஸ கஸ்ய - ஸமத$_3$மநியதாத்மா ஸர்வ பூ$_4$தாநுகம்பீ***

*விஷய ஸுக$_2$விரக்தோஜ் ஞாநத்ருப்த: ப்ரஶாந்த:| அநியத நியத அந்நோ நைவ ஹ்ருஷ்டோ நஹ்ருஷ்ட: ப்ரவஸித இவகே$_3$ஹேவர்த்ததே யஸ்ஸ முக்த:' (வ்ருத்த ஹாரீத ஸ்ம்ருதி 10-14-15) என்கிறபடியே;*

**விளக்கவுரை**

அவனுக்குத் தொண்டு செய்தலும், மேற்சொன்ன நிலைகள் யாவும் பொருந்திய சிறந்த அடியார்களுடைய உயர்வுகண்டு மகிழ்ந்திருக்கையும், திருமந்திரம், த்வயம், சரமச்லோகம் ஆகிய மூன்று மறைநூல்களிலும் கூறப்பெற்ற பொருள்வழி நடத்தலும், ஆசார்யனோடு கூடிவாழ்தலும், முதலானவை என்று முமுக்ஷுப்படியில் பிள்ளை உலகாசிரியர் அருளிச்செய்தாரல்லவா.

இனி, ஆழ்வார்களுடைய அருளிச்செயலுக்கு அதிகாரிகள்; அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் முக்தர்களாவார். அவர்கள் யாவரெனில், 48. 'வியாகரணம் – இலக்கணம்; பகவானான இறைவனிடத்தில் அன்பில்லாது எழுத்து சொற்பொருளைத் தெரிவிக்கும் இலக்கணநூல்களில் மட்டும் அறிவுடையவனுக்கு முக்தியில்லை; அழகிய இல்லம் முதலியவற்றில் ஆசையுடையவனுக்கும் முக்தியில்லை; உணவு, உடை ஆகியவற்றில் ஈடுபாடுவுடையவனுக்கும், உலகினரின் வாழ்வைப் பறிப்பதில் நாட்டமுடையவனுக்கும் முக்தியில்லை. தனிமையை விரும்புகிறவனாய், உறுதியான விரதமுடையவனாய், ஐம்புலன் இன்பத்தைத்

**67. மூலம்**

*ப்ராக்ருத ஶாஸ்த்ர ருசியுடையவனுக்கும், க்ருஹத்திலே ஸக்தனானவனுக்கும், அஶநாச்சாத$_4$நவ*

*நிதாதிகளில் தத்பரனானவனுக்கும் ஸாம்ஸாரிக துஷ் கர்மப்ரவ்ருத்தியில் அபிரதியுடையவனுக்கும், மோக்ஷ யோக்யதையில்லாமையாலே அவற்றைவிட்டு ஸம்ஸாரிக ளோடே கலந்து திரியாதே ஏகாந்த ஶீலனாய் ஈஶ்வரனுஞ் சலிப்பிக்கவொண்ணாதபடி ஶிஷ்டாசாரத்தில் த்$_3$ருட$_4$ சித்தனாய், ஶப்$_3$த$_3$ாதி$_3$ விஷயங்களில் விரக்தனாய் அத்யாத்ம ஶாஸ்த்ர விசாரநிதனாய் பூதத்ரோஹியாகாத பரமத$_3$யாபரனுக்கு மோக்ஷஸித்தி தப்பாதென்று நிஶ்ச யித்துக் கொண்டு, ஸமதமாதி$_3$ ஆத்மகுண பரிபூர்ணனாய்,*

**விளக்கவுரை**

துறந்திருப்பவனுக்கே முக்தியாகிய மோட்சம் கிடைக்கும். பிறரை நலியாது பரம்பொருள் பற்றிக் கூறும் நூல்களிலேயே ஈடுபட்ட அறிவுடையவனுக்கே மோட்சம் எப்போதும் உறுதி;

உட்பொறிகளையும் புறப்பொறிகளையும் அடக்கியமை யாலே தன்னை அடக்கியவன், எல்லா உயிர்களிடத்தும் அருள் உடைய வன், சிற்றின்பங்களில் வெறுப்புடையவன், மெய்யறிவால் மகிழ்வுற்றவன், சாந்தியையுடையவன், காலம் பொருள்களின் நிலை ஆகியவற்றில் வரம்பி லாமையை உணர்ந்து சாத்திரங்களில் விதிக்கப்பட்ட உணவை உண்பவன், உலக இன்பங்களை இன்பமாகக் கருதாதவன், அவ்வின்பம் கிடைக்காமையால் சினங் கொள்ளாதவன். இல்லத்திலிருந்தபோதிலும் துறவிபோல் இருப்பவன் யாவனோ அவனே ஐயமில்லாமல் முக்தி பெறுவான்' எனச் சான்றுகளில் கூறுகிறபடி உணவு, அணி, பெண்போகம் முதலானவற்றில் ஈடுபாடுடையவன் மோக்ஷமடையத் தகுதியற்றவன்; சாதாரண சாத்திரங்களில் கூறப்பட்ட தகாதவைகளை விட்டு சாதாரண மனிதர்களோடு கலந்து

திரியாமல், தனிமையிலிருந்து கொண்டு கனவு நிலையில் இறைவனும் தன்னைக் கலக்க இயலாதபடி சிட்டர்களது ஆசாரத்தில் திடமான - உறுதியான நம்பிக்கையுடைய வனாய், சிற்றின்பத்தை வெறுத்தவனாய்,

**68. மூலம்**

***ஸர்வபூ$_4$த த$_3$யாபரனாய், விஷய ஸுக விரக்தனாய், விஜ்ஞான பரிபூர்ணனாய் அஜ்ஞரான ஸம்ஸாரிகள் தர்ஜந பர்த்ஸநாதி$_3$களாலே தன்னைப் பரிபவித்தாலும் தான் கலங்காதே ப்ரஸாந்தசித்தனாய் பே$_4$ாக்ய வஸ்த்துக்களே யாகவேணும் என்கிற நியதி யன்றிக்கே ஏதானாலும் க்ஷுத் பீடா நிவ்ருத்யர்த்தமாகப் பரிசுத்த வஸ்து ஜீவந நியதியை யுடையனாய், த்ருஷ்ட பல லாப$_4$ அலாப$_4$ங்களில் ஹர்ஷ ஶோகமில்லாதவன் க்ருஹத்தில் வர்த்தித்தாலும் ஜீவந் முக்தர் என்று சொல்லப்படும். இந்த அதிகாரியே அருளிச்செயல் அநுப$_4$வத்துக்கு யோக்யரென்று கு$_3$ருபரம்பரா ப்ரப$_4$ாவத் திலே பின்பழகிய நாயனார் அருளிச் செய்தாரிறே.***

**விளக்கவுரை**

ஆத்ம பரமாத்மாக்களைக் கூறும் ஞான நூல்களில் ஆராய்ச்சியை உடையவனாய், உயிர்களுக்கு வஞ்சகம் செய்யாதமேலான அருளுள்ளங் கொண்டவனுக்கே முக்தி தப்பாது என உறுதிபூண்டு; உட்பொறி புறப்பொறிகளை அடக்கி ஆந்ம குணங்கள் நிரம்பப் பெற்றவனாய், எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டவனாய், புலன் இன்பத்தில் வைராக்கியங் கொண்டவனாய், அறிவு நிரம்பப் பெற்றவனாய், பகுத்தறிவு இல்லாத இவ்வுலகினர் எவரேனும் தன்னை யாது காரணமாகவோ அடித்தலோ ஏசுதலோ

செய்தாலும் அவற்றால் தான் கலங்காதே சாந்தியையுடைய வனாய், சுவைமிகுந்த உணவையே உண்ணல் வேண்டும் என்னும் நியம மில்லாது பசிப்பிணி தீர்தற்கு ஏதானாலும் பரிசுத்த உணவையே உண்ணல் வேண்டும் என்ற நியதியை யுடையனாய், இவ்வுலகப் பயன்களில் இலாப நட்டம் ஏற்படினும் அதன் பொருட்டு மகிழ்தலும் வருந்துதலும் இல்லாதவன் காடு செல்லாது இல்லத்தில் வாழ்ந்தாலும் அவன் போன்றோர் முக்தசீவன். அதாவது முக்தி பெற்ற சீவர்கள் என்றே சொல்லப்படும். இந்த அதிகாரியே ஆழ்வார் அருளிச் செயல் அநுபவத்துக்கு தகுதியானவர் என ஆறாயிரப்படி குருபரம்பரை என்னும் நூலில் பின்பழகிய பெருமாள் ஜீயர் நாயனாரால் அருளிச்செய்யப்பட்டது என்பது.

**69. மூலம்**

*ப்ரபந்நனானவன் மந்த்ரங்களானாலும் ப்ரபந்தங்களானாலும் அர்த்தாநுஸந்த$_4$ாநத்தோடே ஶப்$_3$த$_3$ாநுஸந்த$_4$ாநம் பண்ண வேணுமிறே. 49. 'த்$_3$வயம் அர்த்த$_2$ாநுஸந்த$_4$ாநேந ஸஹ' (சரணாகதி கத்யம் 19) என்றும், 'இப்பத்துடன் வைகல் பாட வல்லார் வானோர்க்காராவமுதே' (திருவாய்மொழி 5-7-11) என்றும், எம்பெருமானாரும், ஆழ்வாரும் அருளிச்செய் தாரிறே. ஜபஹோமாதிகளில் ஶப்$_3$த$_3$ஶக்தியாலே ரக்ஷகமாவது உபாஸகனுக்கிறே. ப்ரபந்நனுக்கு அர்த்த அவபோ$_3$ாதநத்தாலே த்யாஜ்யோபாதேய விவேகம் பிறப்பித்து த்யாஜ்யங்களை*

**விளக்கவுரை**

பிரபந்நனானவன் ஆந்மாவின் இயல்பையும், அவ்வியல்புக் கேற்ற வழியினையும், அவ்வழியால் அடையும் பயனைத் தெரிவிக்கும் மந்திரங்களானாலும் அல்லது அதன்

விரிவான திவ்யப் பிரபந்தங்களானாலும் பொருளோடு கூடியே அதன் இயல் மனனம் செய்ய வேண்டுமல்லவா? 49. 'முதல்வாக்கியம் இரண்டாம் வாக்கியம் என்று அமைந்த த்வயத்தைப் பொருளோடு கூடியே மனனம் செய்ய வேண்டும்' என, சரணாகதி கத்யத்திலும், 'இப்பத்துடன் வைகல் பாடவல்லார் வானோர்க்கு ஆரா அமுதமே' என்று, எம்பெருமானாரும் நம்மாழ்வாரும் அருளிச்செய்தனர் அல்லவா? ஜபம், யாகம் முதலியவற்றில் மந்திரத்தின் சொல்வடிவான முற்றுரு ஓதி அதன் ஆற்றலால் பயன் விளைவது தன் முயற்சியை சாதனமாகக் கொள்பவனுக்கு; இறைவனையே ஸாதனமாகக் கொண்ட பிரபந்நனுக்கு மந்திரங்களில் கூறப்படும் பொருளுணர்த்தியாலே விடத்தக்கனவற்றிலும் கொள்ளத் தக்கனவற்றிலும் ஞானத்தைப் பிறப்பித்து விடவேண்டியதை விடுத்துப் பற்றத் தகுந்தவற்றைக் கைக்கொள்ள வைத்துக் காக்கக் கடவதாயிருக்கும் காப்பாற்றுகையாவது காப்பாளனாம் இறைவனுடைய அருளுக்குக் கொள்கலமாக்குகை.

**70. மூலம்**

***விடுவித்து உபாதேயங்களை ஸ்வீகரிப்பித்து ரக்ஷகமா மித்தனை. ரக்ஷிக்கையாவது, ரக்ஷகனுடைய அனுக்ரஹத் துக்குப் பாத்ர பூ$_4$தனாக்குகை. 50. 'தே$_3$ஹாஸக்த ஆத்மபு$_3$த்$_3$தி$_4$ர் யதி$_3$ப$_4$வதி பத$_3$ம் ஸாது$_4$வித்$_3$யாத் த்ருதீயம், ஸ்வாதந்தர்யாந்தே$_4$ா யதி$_3$ ஸ்யாத் ப்ரத$_2$மம் இதர ஶேஷத்வ தீ$_4$ஶ்சேத் த்$_3$விதீயம், ஆத்மத் ராணோந் முக$_2$ஶ்சேத் நம இதி ச பத$_3$ம் ப$_3$ாந்த$_4$வாப$_4$ாஸலோல: ஶப்$_3$த$_3$ம் நாராயணாக்$_2$யம் விஷயசபலதீ$_4$ஶ் சேத் சதுர்த்தீ$_2$ம் ப்ரபந்ந:' (அஷ்டஶ்லோகீ 4) என்று, ப்ரபந்நனானவனும் ப்ரக்ருதி விஶிஷ்டனா யிருக்கையாலே, ஸ்வரூப விரோதிகள் புகுரும்;***

**விளக்கவுரை**

50. 'மோக்ஷத்தில் வேட்கையுடைய பிரபந்நன், சரீரத் தையே ஆந்மாவாக மயங்கினானாகில், (பிரணவத்தில்) மூன்றாம் பதமான மகாரத்தை நன்கு அறியவேண்டும், தான் சுதந்திரன் என்னும் நினைவாலே அறிவுகெட்டிருந்தானாகில் (பிரணவத்தின்) முதற்பதமான அகாரத்தில் ஏறிக்கழிந்த பின் பொருளான தான் இறைவனுக்கு அடிமைப்பட்டவன் என்பதைக் காட்டும் நான்கன் உருபு தன்னை பிறர்க்கடிமை என எண்ணினானாகில், (அவனுக்கே அடிமை என்றறி விக்கும் பிரணவத்தின்) இரண்டாவது பதமான உகாரத் தையும், தன்னைக் காத்துக்கொள்ள முற்பட்டா னாகில் நம: என்னும் பதத்தையும், ஐம்புலன் விஷயங்களில் ஈடுபட்ட மனத்தையுடையவனாகில், இறைவனுக்குத் தொண்டு செய்தல் என்னும் பேரின்பத்தைக் காட்டும் 'ஆய' என்னும் வெளிப்படையான நான்காம் வேற்றுமை உருபை நன்கு அறியக்கடவன்' என்று, பராசரபட்டர் அருளிச் செய்தபடி, பிரபந் நனானவனும் பஞ்சபூதங்களால் உண்டான சரீரத்தோடு கூடியிருப்பதாலே ஆந்மாவிற்கு விரோதமான செயல்கள் வந்து புகும்;

**71. மூலம்**

*அவ்வோ தசைகளிலே தந்நிவர்த்தகமான மந்த்ரத் திநுடைய பதங்களில் அர்த்தத்தை அநுஸந்தித்து மீட்க வேணும்; மீட்க மாட்டானாகில், யத$_3$ாபூர்வம் அஜ்ஞாநமே ப$_2$லிக்கும்.*

*தே$_3$ஹத்திலாத்மபு$_3$த்$_3$தி$_4$ பிறந்தால் மகாரார்த்தத்தை யநு ஸந்தித்து நாம் ஜ்ஞாநாநந்த லக்ஷணரல்லோமோ*

***தே$_3$ஹேந்த்ரிய மந: ப்ராணபு$_3$த்$_3$தி$_4$ விலக்ஷணரல்லோமோ வென்று அத்தைத் தவிர்த்துக் கொள்ளவேணும். தவிர்த்துக் கொள்ளுகையாவது, தே$_3$ஹாநுப$_4$ந்தி வர்ணாஶ்ரமாபி$_4$மாநம் மேலிட்டுக்கொண்டு 51.'ஆட்$_4$யோ(அ)பி$_4$ஜ நவாநஸ்மி - கோ(அ)ந்யோ(அ)ஸ்தி ஸத்$_3$ருஸோமயா' (கீதை 16-15) என்கிற அஹங்காரமும் இத்தே$_3$ஹத்தை பருஷோக்தி களாலே பரிபவிக்குமவர்களை ஸத்ருக்களாக நினைத்து தே$_3$ஹாத்மாபி$_4$மாநத்தாலே நம்மை அவன் பரிபவிப்பதே யென்று***

**விளக்கவுரை**

அவ்வோகாலங்களில் அவற்றைத் தவிர்ப்பதான மூன்று பதங்களோடு கூடிய திருமந்திரத்தின் பொருளை நினைவில் கொண்டு புலன்வழிச் செல்லும் மனத்தை மீட்கவேண்டும்; மீட்கமாட்டானாகில், முன்னி ருந்த அறிவின்மையே மிகும்.

தேகத்தில் ஆந்மா என்னும் நினைவு பிறந்தால் மகாரப் பொருளை அறிந்து நாம், ஞானத்தையும் ஆனந்தத் தையும் உடையவனல்லோமோ? தேகம், கண் முதலிய பொறிகள், பிராணன், நினைவாற்றலைக் கொடுக்கும் புத்தி இவைகளைக் காட்டிலும் வேறுபட்டவரல்லோமோ? என்று அவற்றைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும்; அவற்றைத் தவிர்த்துக்கொள்ளுகையாவது, உடல் தொடர்பாகவந்த தன் ஜாதி, ஆசிரமங்களில் செருக்கு (அபிமாநம்) மிகுந்து, 51. 'நான் இயல்பாகவே செல்வந்தனாயிருக்கிறேன்; இயல் பாகவே நல்ல சாதியில் பிறந்திருக்கிறேன்; என்னைப்போல் பெருமையுடையவன் யாவன் உளன்?' எனக் கூறும் கோபத்தையும், இந்தவுடலைக் கடுஞ்சொற்களால் பேசுமவர்

களைப் பகைவர்களாக நினைத்துக்கொண்டு, உடலே உயிர் என்னும் மயக்கத்தால்,

**72. மூலம்**

*அவன்மேலே சீறுமஹங்காரமும் நிவர்த்திப்பித்துக் கொண்டு, 52. "நாஹம் விப்ரோந ச நரபதிர் நாபி வைஶ்யோந ஸூத்$_3$ர:" என்று தொடங்கி, 53. 'லக்ஷ்மி ப$_4$ர்துர்நரஹரிதநோர்த$_3$ாஸத$_3$ாஸஸ்ய தாஸ: (?)' என்னுமளவாக ப்$_4$ராஹ்மணாதி வர்ணங்கள் தே$_3$ஹவிகாரங்களாகையாலே தே$_3$ஹாதி$_3$ரிக்தரான நமக்கு இவையொன்றுமில்லை. நாம் வைஷ்ணவதாஸனென்று நினைத்திருக்கையும் இந்த தே$_3$ஹத்தை நிக்ரஹிக்குமவர்களைக் கண்டு பரமப$_4$ந்து$_3$க்களாக பு$_3$த்$_3$தி$_4$பண்ணி,*

*இந்த தே$_3$ஹம் நமக்குப் புறம்பாய் த்யாஜ்யமாய் ஹேய மாய் விபரீதஜ்ஞாந ஜநகமுமாய், காமக்ரோதாதி$_3$ சத்ரு து$_3$ர் வர்க்கமுமாய் ஸ்வபரஸ்வரூபதிரோதாநகரியாய், சிறைக்கூடம் போலே;*

**விளக்கவுரை**

'இப்படி அவன் நம்மை நலியச் செய்வதே' என்று அவன்மேலே சீறும் அகங்காரத்தையும் தவிர்த்துக்கொண்டு, 52. 'நான் அந்தணனும் அல்லேன்; நான் அரசனும் அல்லேன்; நான் வைசியனும் அல்லேன்; நான் சூத்திரனும் அல்லேன், என்று தொடங்கி,

53. '(ஆனால் இவ்வுலகம் வாழவும் அழியவும் ஒரே காரணமாயிருக்கும்) திருவின் நாயகனான நரசிங்கனுடைய அடியவனுக்கும் அடியவனான அடியானா வேன்'

என்னுமளவாக அந்தணர் முதலான சாதிகள் தேகவிகாரங்கள் ஆகையாலே தேகத்திற்கு வேறுபட்ட நமக்கு (ஆந்மாவுக்கு) இவையொன்று மில்லை; நாம் வைணவதாசன் என்று நினைத்திருக்கையும், இத் தேகத்தை வெறுக்குமவர்களைக் கண்டு அவர்கள் நமக்கு மேலான உறவினர் என நினைத்து,

இவ்வுடல் நமக்குப் புறம்பாய், விடத்தக்கதாய், கெட்ட நாற்றத்துக்கிடமாகையாலே மிகவுந் தாழ்ந்ததாய், மயக்க உணர்வைப் பிறப்பிப்பதாய், காமம் வஞ்சம் பகைகளின் கூட்டமாய், தன்னையும் இறைவனுடைய இயல்புகளையும் மறைக்கக் கூடியதாய், சிறைக் கூடம் போலே துன்பத்தையளித்து இறுதியில்

**73. மூலம்**

*அநர்த்த ஹேதுவாயிருப்பதொன்றன்றோ? இத்தை நலியுமதுவும் நம்பணியன்றோ என்று அவர் பக்கல் பொறையுங் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கும்; இவையுண்டானாலாய்த்து மகா ரார்த்த ஜ்ஞாந ஸித்தி, இந்த தே$_3$ஹாபி$_4$மாந நிவ்ருத்தியே ப்ரதமாதிகாரம், இதுண்டாகவே ஸம்ஸார பீ$_4$ஜம் நஶித்து ஸ்வரூபஸித்தியுண்டாம். ஸ்வதந்த்ரனென்கிற பு$_3$த்$_3$தி$_4$ பிறந்தால் காரணத்வ ரக்ஷகத்வ ஶேஷித்வ வாசியான அகாரார்த்தத்தை யநுஸந்தித்து நாம் ப$_4$க$_3$வச் சேஷ பூ$_4$தரல்லோமோ நமக்கு ஸ்வாதந்த்ர்யங் கூடுமோவென்று அந்த பு$_3$த்$_3$தி$_4$ தவிர்த்துக் கொள்ளவேணும்.*

**விளக்கவுரை**

அழிந்து போவதற்குக் காரணமாயிருப்ப தொன் றன்றோ? இவ் வுடலை நலியச் செய்வதும் நம்பணியன்றோ?

என்று இவ்வுடலை நலியச் செய்பவரிடத்துப் பொறையும் கருணையும் சிரிப்பும் உகப்பும் நன்றியறிதலும் உண்டாக வேண்டும்; இவை உண்டானாலாயிற்று மகாரப் பொருளை அறிந்ததற்குப் பயன்.

இந்த தேஹாபிமாநத்தைத் தவிர்த்துக்கொள்ளுதலே முதன்மையதிகாரம். இந்நிலையுண்டாகவே பிறவியாம் விதையானது அழிந்து ஆந்மா உய்வடையும் பேறு உண்டாகும். தான் சுதந்திரன் என்னும் நினைவு பிறந்தால், இறைவன் எல்லார்க்கும் முதற் பொருளாயிருத்தல், காப்பாளனாயிருத்தல், தலைவனாயிருத்தல் ஆகியவற்றைத் தெரிவிக்கும் அகாரத்தின் பொருளை நினைத்து, நாம் பகவானுக்கு அடிமையல்லமோ? நமக்குச் சுதந்திரத்தன்மை கூடுமோ? என்று அந்த எண்ணத்தைத் தவிர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

## 74. மூலம்

அந்ய யேஷத்வ பு$_3$த்$_3$தி$_4$ பிறந்தால் அநந்யார்ஹ வாசி யான உகாரார்த்தத்தை யநுஸந்தித்து நாம் அநந்யார் ஹரல்லோமோ அந்யயேஷத்வங்கூடுமோ? என்று அத்தைத் தவிர்த்துக் கொள்ளவேணும். ஸ்வரக்ஷணத்தில் தனக்கந் வய முண்டென்கிற பு$_3$த்$_3$தி$_4$ பிறந்தால் நமஶ்ஶப் தார்தத்தை யநுஸந் தித்துக்கொண்டு, 54. ‘மம ப$_4$க$_3$வா நேவரக்ஷக: நமம’ என்று அந்தபு$_3$த்$_3$தி$_3$ தவிர்த்துக்கொள்ள வேணும்.

ஆபத்யரக்ஷங்களில் ப$_4$ந்து$_3$த்வ ப்ரதிபத்தி பிறந்தால் அயந பதார்த்தத்தையநுஸந்தித்து ப்ராப்யனான வனே ஸர்வ வித ப$_4$ந்து$_3$வுமென்று அத்தைத் தவிர்த்துக்

கொள்ளவேணும். விஷயங்களில் ஸாபல்யம் பிறந்தால் வ்யக்த சதுர்த்தியை அநுஸந்தித்து நாம் அநந்ய போகரல்லோமோ?

**விளக்கவுரை**

நான் பிறர்க்கடிமை என்னும் நினைவு பிறந்தால், பிறர்க்கு அடிமையாயிருக்கும் தன்மையைத் தவிர்க்கும் உகாரப்பொருளை நினைத்து, நாம் பகவான் நாராயணனுக்கே அடிமைப்பட்டவன் பிறர்க்கு அடிமையாயிருத்தல் கூடுமோ? என்று அதனைத் தவிர்த்துக் கொள்ளவேண்டும். தன்னைத் தான் காப்பதில் உரிமை யுண்டு என்கிற எண்ணம் பிறந்தால், நம: பதத்தின் பொருளை உணர்ந்து, 54. 'என்னை இறைவனான பகவானே காத்தல் வேண்டும்; நான் என்னைக் காக்க உரியவனன்று' என்று கூறுகிறபடி நம்மை நாம் காத்துக்கொள்வோம் என்னும் நினைவைத் தவிர்த்துக் கொள்ளல் வேண்டும்.

ஆபத்துக் காலங்களில் நமது உடல் தொடர்பால் வந்த உறவினர்களே நம்மைக் காப்பாற்றுவார்கள் என்னும் மயக்க வுணர்வு பிறந்தால், (நார + அயநம் = நாராயணம்) அயந பதத்தின் பொருளை நினைவுகூர்ந்து நமக்குப் பயனாயிருக்கும் இறைவனே எல்லாவித உறவுமென்று நினைத்து அதனைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும். சிற்றின்பங்களில் வேட்கைப் பிறந்தால், ஆய என்னும் நான்காம் வேற்றுமைப் பொருளை உணர்ந்து, நாம் இறைவனுக்கே இன்பப்பொருள் அல்லோமோ?

**75. மூலம்**

அவனுக்கிஷ்ட விநியோகார்ஹமாயிருக்க வேணு

*மதொழிய நமக்கு வேறே சில விஷயாநுபவங் கூடுமோ வென்று அத்தை நிவர்த்திப் பித்துக் கொள்ளவேணும். இப்படி மந்த்ரார்த்த ஜ்ஞாநத்தாலே த்யாஜ்யோபா தேயங் களறிந்து தே₃ஹாபி₄மாநாதி₃களை பரித்யஜித்து ஸேஷத்வ பாரதந்த்ர்ய கைங்கர்யங்களை அங்கீகரித்து ப்ரவர்த்தித் தால் ஸ்வருபஸித்தியுண்டாய் பகவதநுக்ரஹ பாத்ரராய் முக்தியோக்யராவர். ததநுரூபாநுஷ்ட₂ாந மில்லாத போது மந்த்ரார்த்த கால க்ஷேபம் நித்யம், சதாபிஷேகம் பண்ணினாலும் நித்ய ஸம்ஸாரி களாய்ப் போவர்களென்று பட்டரருளிச் செய்வர்.*

**விளக்கவுரை**

அவனுக்கு இஷ்ட விநியோகமாய் உரிமைபட்டவ னாயிருக்க வேண்டுமே ஒழிய, நமக்கென்று வேறே சில விஷயாநுபவங் கூடுமோ? என்று அதனைத் தவிர்த்துக் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு திருமந்திரப் பொருளின் ஞானத்தாலே விடவேண்டியவற்றையும் கைக்கொள்ள வேண்டியவற்றையும் நன்றாக அறிந்து, தேகமே ஆந்மா என்னும் (அபிமாநம்) செருக்கு ஆகியவற்றை நன்றாக விடுத்து, ஆந்மாவுக்கு உளதாய இறைவனுக்கு அடிமை, இட்ட வழக்காயிருத்தல், தொண்டு செய்தல் ஆகியவை களை அங்கீகரித்துச் செயல்பட்டால், ஆந்மாவுக்குப் பயனுண்டாகி இறைவனது அருளுக்குப் பாத்திரராய் முக்தி எய்தத் தகுதியுடையராவர். முற்கூறப்பட்டவற்றுக்கு ஏற்ற ஒழுக்க மில்லாதபோது, திருமந்திர அர்த்த காலட்சேபம் நூறுமுறை செய்தாலும் அவர்கள், என்றுமே மாறிமாறிப் பிறக்கும் சம்சாரிகளாய்ப் போவார்களென்று பட்டர் அருளிச்செய்வர்.

**76. மூலம்**

***இனி ப்ரபந்தங்கள் கற்றதுக்கு பலம் அவற்றிலருளிச் செய்தபடியே 'அறியக் கற்று வல்லரானால் வைஷ்ணவத்வஸித்தி' என்கிறபடியே அறியவும், அநுஷ்ட$_2$ாநம் பண்ணவும் ஸக்தரானாலாயிற்று வைஷ்ணவத்வ ஸித்தியுண்டாய் 55. 'தழுவப்பாடியாட வல்லார் வைகுந்த மேறுவரே' (திருவாய் மொழி 4-7.11) என்கிறபடியே, முக்தராவது கேவல பாடமாத்ர மானால், 56. 'த$_3$ர்வீபாகரஸம்யத$_2$ா' (?)என்கிறபடியே நமக்கு நாலாயிரம் வரும் மூவாயிரம் வருமென்று அதுவுமொரு அஹங் காரத்துக்கு ஹேதுவாய் அப்ரயோஜகமாய் விடும். 57. 'பாட$_2$ாதே$_3$வப்ரஸமித தம:' என்று சொல்லா நின்றதேயென்னில்? சப்தார்த்தஜ்ஞாநமில்லாதபோது ஹேயோபாதே$_3$யங்களிவை என்று தெளிந்து வ்யவஹரிக்க யோக்யதையில்லாமையாலே தமோநிவ்ருத்தியாகாதிறே.***

**விளக்கவுரை**

இனி, ஆழ்வாரது திவ்யப்பிரபந்தம் கற்றலுக்குப் பயன்; அவற்றில் அருளிச்செய்தபடியே 'அறியக் கற்றுவல்லாரானால் வைஷ்ணவத்வஸித்தி அதாவது, இசைவடிவாக இருக்கின்ற ஆழ்வாரது ஆயிரம் பாசுரங்களின் இயலையும் அவற்றின் பொருளையும் ஆசாரியன் வாயிலாகக் கற்றுவல்லவரானால் அவர்களுக்கே 'வைஷ்ணவத்வம் ஸித்திக்கும்' என்கிறபடியே, அவற்றை அறியவும் அதன்படியே அநுட்டாநம் பண்ணவும் வல்லவரானால் வைணவத்தின் பயன் உண்டாய், 55. 'தழுவப் பாடியாட வல்லார் வைகுந்தம் ஏறுவர்' என்கிற

படியே, முக்தராவதற்கு வெறும் மனப்பாட மாத்திர மானால், 56. 'அகப்பையானது உணவின் சுவையை அறியாததுபோலே' என்கிறபடியே, நமக்கு நாலாயிரம் மனப்பாடம் வரும் மூவாயிரம் வரும் என்று அதுவும் ஒரு செருக்கடையக் காரணமாய் பயனற்றுவிடும். ஆனால், 57. 'சாத்திர மாகிய பாடத்தைப் படிப்பதாலேயே அறிவின்மையாகிய இருள் நீங்கப் பெறுகிறான்' என்று சொல்லா நின்றதே என்னில், சொல்லின் பொருளை அறிய ஞானமில்லாத போது, தாழ்ந்ததும் உயர்ந்ததும் இன்னவையென்று தெளிந்து அறிதற்குத் தகுதியில்லாமையாலே அஞ்ஞானமாகிய இருள் அழியாதல்லவா?

**77. மூலம்**

ஆனாலுமிப்படி சொல்லுகிறது தத்ப்ரபாவபரம், 58. 'கூறுதல் வல்லாருளரேல் கூடுவர் வைகுந்தமே' (திருவாய்மொழி 2-5-11) என்று இப்பத்துப்பாட்டும் அநுஸந்தித்தவர் முக்தராவரென்று அருளிச்செய்தாரென்று அப்பத்துப்பாட்டும் அநுஸந்தித்து தத் விருத்தமான ப$_4$ாக$_3$வத$_3$ாபசாராதி$_3$ ப்ரவ்ருத்தியில் அந்வயித்தால் முக்தராக மாட்டாரிறே.

ப்ரதிகூல நிவ்ருத்தியுண்டானால் பாடமே போருமென்று சொல்லிலும் சொல்லலாம். ஆகையாலே இப்பத்தும் வல்லாரென்றது தத$_3$ர்த்த$_3$ ஜ்ஞாந தத$_3$நுரூபாநுஷ்ட$_2$ாநபர்யந்தம் விவக்ஷிதம். அருளிச்செய்தபடியை விட்டு அநுஷ்ட$_2$ாநபர்யந்தம் விவக்ஷிதம் என்று சொல்லுகிறதென் என்னில்?

**விளக்கவுரை**

ஆனாலும், 'பாடவல்லார் வைகுந்தம் ஏறுவரே' என்று திருவாய்மொழியைப் பொருளறியாமல் பாடினாலே வைகுந்தம் செல்லுவர் எனச் சொல்லுகிறதே எனில், அது திருவாய்மொழியின் பெருமையிலே நோக்கு என்றறிக. 58. 'கூறுதல் வல்லார் உளரேல் கூடுவர் வைகுந்தமே' என்ற இப்பத்துப் பாட்டையும் சொல்லியவர் மோட்சமடைவார் என்று ஆழ்வார் அருளிச்செய்தார் என்று கூறி, அப்பத்துப் பாட்டையும் அனுசந்தித்து மனப்பாடம் செய்துவிட்டு அதற்கு விரோதமாக இறைவனுக்கும் அவனடியார்க்கும் தீங்கு செய்ய முற்பட்டால் முக்தராகமாட்டாரன்றோ?

விரோதமான செயல்களைச் செய்வதிலிருந்து தவிர்தல் உண்டானால் பாடமாத்திரம் போதுமென்று சொல்லிலும் சொல்லலாம். ஆகையால் ஆழ்வார் 'இப்பத்தும் வல்லார்' என்று கூறினது,

**78. மூலம்**

*ப$_2$லஞ் சொல்லுகிற அளவில் 'காமர்மானேய் நோக்கியர்க்கே' (திருவாய் மொழி 5-8-11) என்றும், 'மதனர் மின்னிடையவர்க்கே' (திருவாய்மொழி 6-1-11) என்றும் அருளிச்செய்தார் என்று அதுவே பொருளாகச் சொல்ல வொண்ணாதிறே. காமுகர்காமிநிகளுக்கு பே$_4$ாக்யராமா போலே இப்பத்தும் அப்பயஸிக்க வல்லவர்கள் நித்ய ஸூரிகளுக்கு பே$_4$ாக்யராவரென்று தாத்பர்யங்கொள்ள வேணுமாகையால் தத$_3$ர்த்த$_3$ ஜ்ஞாந தத$_3$நுஷ்ட$_2$ாந பர்யந்தம் என்றபடி. இப்படியே வேதங்களும் ருஷிகளும்*

**ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தத்$_{3}$தத்$_{3}$ ப்ரஶம்ஸை வருமள வில் அருளிச்செய்வர்கள்.**

***59. 'சக்ரம் பி$_{3}$ப$_{4}$ர்த்தி வபுஷா அபி$_{4}$தப்தம் ப$_{3}$லம் தே$_{3}$வா நாம் அம்ருதஸ்ய விஷ்ணோ:, ஸ ஏதி நாகம் து$_{3}$ரிதா விதூ$_{4}$ய விஶந்தியத்$_{3}$யதயோ வீதராக$_{3}$ா:' (அத$_{2}$ர்வணம்) என்று,***

**விளக்கவுரை**

அப்பத்துப்பாட்டின் பொருளால் விளைந்த ஞானம் அதற்கேற்ற அநுட்டானம் வரையில் வரவேண்டும் என்பது கருத்தாகும். ஆனால், ஆழ்வார் அருளிச்செய்தபடியை விட்டு அனுட்டானம் வரை வரவேண்டும் என்று நீர் சொல்லுகிறது என்? என்னில், ஆழ்வார் திருவாய்மொழியில் பயன் சொல்லுகிற இடத்து, 'காமர் மானேய் நோக்கியர்க்கு' என்றும், 'மதனர் மின்னிடையவர்க்கு' எனவும் அருளிச் செய்தாரென்று இயல் இருந்தபடியே பொருள் கொள்ளக் கூடாதன்றே. காதலர் காதலிகளுக்கு இன்பமுடையவர் போலே, இப்பத்தும் பயிற்ற வல்லவர்கள், நித்திய சூரிகளுக்கு விரும்பத்தக்கவர் என்றே கருத்தாக வேண்டும். ஆகையால் பாசுரத்தின் பொருளறிவும் அதற்கேற்ற அனுட்டானமும் வேண்டும் என்று முன்னர் கூறியபடி இவ்வாறே வேதங் களும், முனிவர்களும், பிற ஆழ்வார்களும், ஆசார்யர்களும் அவ்வவ்விடங்களில் புகழ்ந்து அருளிச்செய்வார்கள். 59. 'ஐம்புலன் விஷயங்களில் பற்றற்றவர்கள் மட்டுமே அடையக்கூடிய பரமபதத்தை தேவர்களுக்கு பயனாயி ருப்பதும் அழிவற்றவனான ஸ்ரீமகாவிஷ்ணுவினுடையது மான சுதர்சன சக்கரத்தைக் (காய்ச்சப்பெற்றுத் தன் சரீரத்தில் ஏற்றுக் கொண்டவன் எளிதாக எய்தப்பெறுகிறான்.) என்று,

**79. மூலம்**

***தப்த சக்ர த₃ாரண மாத்ரத்தாலே வீதராகரான ஸந்யஸ்தர் ப்ராபிக்கிற பரமபதத்தை ப்ராபிப்பரென்று வேதஞ் சொல்லிற்று என்று தே₃வதாந்தர பரருக்கும் பரஹிம்ஸாதி நிஷித்தாநுஷ்டாநபரருக்கும் தத்₃ப்ராப்தி சொல்லப் போகாதிறே. த₃துநுரூபமென்று சொல்லுகிற தொழிய, இதுவே போருமென்று சொல்ல வொண்ணாமை யாலே தத்₃ப்ரபாவ ப்ரசம்ஸா பரவாக்யங்களென்று கொள்ள வேணும்.***

*60. 'யே பாபிந: அபி ஶிஶுபால ஸுயோத₄ந அத்₃யா: வைராநுப₃ந்த₄மதய: பருஷம் வதந்த: , முக்திங்க₃தா: யே' என்று,*

**விளக்கவுரை**

இறைவனது ஆழி சங்கையும் ஓமத்தீயில் காய்ச்சித் தோள்களில் பொருத்திக் கொண்ட மாத்திரத்தில் தவயோகிகளாம் ஐம்பொறிகளை அடக்கியவர்கள் எய்துகின்ற பரமபதத்தை அடைவர் என்று வேதங்கூறிற்று என்று, பிற தேவர்களை வணங்குவார்க்கும் பிறரை நலிதல் பிறர்மனை புகுதல், பொய் சொல்லுதல் புலால் உண்ணுதல், மது அருந்துதல் போன்றவற்றைச் செய்யுந்தாழ்ந்த ஒழுக்கமு டையவர்க்கும் அப்பரமபதங் கிடைக்குமென்று சொல்லப் போகாதன்றோ? இறைவனதான சங்க சக்ரங்களைத் தரித்துக்கொள்ளுதல் ஞானிகளுக்கு ஏற்றதென்று சொல்லுதல் ஒழிய, சங்கு சக்கரங்களைப் பொறித்துக் கொள்ளுதலாகிய இதுவே போதுமென்று சொல்லவொண் ணாமையாலே (பஞ்ச ஸம்ஸ்காரத்தின்) ஐந்து

லட்சணைகளின் சீர்மையைப் புகழ வந்த வாக்கியங்கள் அவை என்று கொள்ளவேண்டும்.

60. 'சிசுபாலன், துரியோதனன் முதலான பாவிகளும், பகையுடைய நெஞ்சினராய் கடுஞ்சொற்கள் பேசுபவர்களுங் கூட முக்தியடைந்தார்கள்' என்று,

**80. மூலம்**

***பாபிஷ்டரான ஶிஶுபாலாதிகளும் ப்ரதிகூலராய் பருஷித்து முக்தரானாரென்று சொல்லினது தத்$_3$ஸ்மரண ப்ரபாவத்தைப் பற்றிச் சொல்லுகிறதேயொழிய, ப$_4$க$_3$வத்$_3$ ரோஹிகளுக்கும் தத்$_3$ ப்ராப்தி சொல்லவொண்ணாதிறே.***

***61. 'திங்கள் சேர்மணிமாட நீடு' (திருவாய்மொழி 5-7-2) என்று, ஆழ்வார் சிரீவரமங்கலத்தில் மாடங்களை ப்ரஶம்ஸிக்கும்போது சிறிது ஓக்கமுடைய மாடங்கள் சந்த்ரமண்டலத்தோடே சேர்ந்திருக்கும் என்றும், 'வெள்ளியேந்த மதிள்சூழ் திருக் கண்ணபுரம்' (திருவாய்மொழி 9-9-2) என்று ஶுக்ர மண்டலத்தோடே சேர்ந்த ப்ரகாரங்களென்று, சொல்லுகிறவை ப்ரத்யக்ஷவிருத்தங்களாகையாலே ப்ரஶம்ஸா பரங்களென்று கொள்ளவேணுமிறே. அத்யௌந்நத்யத்துக்கு ஸ்வாபதேஶத்திலே தாத்பர்யம்.***

**விளக்கவுரை**

பாவிகளான சிசுபாலன் துரியோதனன் முதலியோர் விரோதிகளாக நின்று இறைவனான எம்பெருமானைக் கேட்பார் செவிசுடு கீழ்மைவசைவுகளை வைது முக்தரானார் என்று கூறியது, சிசுபாலனானவன் சாகுங்காலத்தில் இறைவனை இடையறாது நினைத்த சிறப்பைச் சொல்லியதே

தவிர பகவானை நிந்திக்கும் எல்லா மடையர்க்கும் அவனது பரமபதம் கிடைக்கும் என்று சொல்லக்கூடாதன்றோ?

61. 'திங்கள் சேர்மணிமாட நீடு சிரீவரமங்கலநகர்' என்று, நம்மாழ்வார் சிரீவரமங்கலத்திலுள்ள மாடங்களைப் புகழும்போது, உயர்ந்த மாடங்களானவை சந்திரமண்டலத் தோடு சேர்ந்திருக்கும் என்றும், 'வெள்ளியேந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம்' என்று சுக்கிரனது மண்டிலத்தோடு சேர்ந்த உயர்ந்த மதிள்களையுடையது என்றும் சொல்லுகிறவை, அந்த திவ்யதேசத்தை நேரே கண்டால் முரண்படும் ஆகையால், அவை உயர்வு நவிற்சியில் புகழில் நோக் காகக்கொள்ள வேண்டும். இவ்வாறு, ஆழ்வார் உயர்வு நவிற்சியில் சொன்னது உள்ளுறைப் பொருளிலேயாம் எனக் கண்டுகொள்க.

**81. மூலம்**

***62. 'யத$_2$ா தத$_2$ாவாபி ஸக்ருத் க்ருதோஞ்சலி:' (ஸ்தோத்ரரத்னம் 28) என்று அஞ்சலியை ப்ரஶம்ஸிக்கு மளவில், 63.'கேநசித்' (ஸ்தோத்ர ரத்னம் 28) என்றார் என்றும், 64, 'கத$_3$ாபி' (ஸ்தோத்ர ரத்னம் 28) என்றார் என்றும் ஒரு காலத்தில் ஓரஞ்சலியைப் பண்ணி ததாஜ்ஞா திலங்கந பரனாய்த்திரிகிற அபதே$_2$ ப்ரவ்ருத்தனுக்கும் ப$_4$ாக$_3$வத$_3$ா பசாரபரனுக்கும் ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகேஷ்ட ப்ராப்தி சொல்ல வொண்ணாதிறே; சொல்லப் புக்கால், அஞ்சலி மாத்ரம் பண்ணாதார் ஒருவரும் இல்லாமையாலே தேவதாந்தரபரரோடு ப்ரயோஜநாந்தர பரரோடு நிஷித்தா நுஷ்ட$_2$ாநபரரோடு;***

**விளக்கவுரை**

62,63,64 'இறைவ! உன் திருவடியைக் குறித்து எப்போதாவது யாவனொருவன், எவ்வாறாவது ஒருமுறை செய்யப் பட்ட கைகூப்புதலாவது, அப்போதே பாவங்களை மிகுதியில்லாமல் போக்குகிறது; நன்மைகளை விரிவடையச் செய்கிறது' என்று, இறைவனை வணங்குகின்ற அஞ்சலி என்னும் கைக்கூப் புதலைப் புகழும்போது (கேநசித்) யாவனாலேயாவது (கதாபி) ஒருமுறை என்று ஆளவந்தார் கூறியபடி, ஒருகாலத்தில் ஓர் அஞ்சலியைப் பண்ணி அவனுடைய ஆணையை மீறினவனாய்த் திரிகின்ற தீய வழியில் நடப்பவனுக்கும், பாகவதர்களுக்குத் தீங்கு செய்பவனுக் கும் எல்லாத் தீவினைகளில் நின்றும் நீங்கி இஷ்டமான பகவானை எய்துதலாய மோட்சம் கிடைக்கும் எனச் சொல்ல வொண்ணா தன்றோ? அப்படிச் சொல்லப்புகுந்தால், அஞ்சலி பண்ணாதார் ஒருவரும் இவ்வுலகில் இல்லாமையாலே, பிற தேவர்களை வணங்கு பவரோடு இறைவனைத் தவிர்ந்த வேறு பயனை விரும்புபவரோடு தீய ஒழுக்கத்தையுடையவரோடு பாகவதர்க்குப் பாவம் புரிபவரோடு

**82. மூலம்**

***ப$_4$ாக$_3$வத$_3$ாபசார பரரோடு வாசியற ஸகல சேதநரும் முக்தராய்ப் போவார் என்னுமர்த்தம் ப்ரஸக்த மாய் வைஷ்ணவத்வாதி$_3$ யதி$_3$காரங்களெல்லாம் அப்ரயோ ஜநமாய் விடுமென்கை. ஆகையாலே, 65. 'மஹதாமபி கேஷாஞ்சித$_3$திவாத$_3$ா: ப்ரத$_2$க்$_3$வித$_4$ா:, தத்தத$_3$ர்த்த$_2$ ப்ரஶம்ஸாதி$_3$ தத்பரத்வாத$_3$ ப$_3$ாதி$_4$தா:' என்று, இப்படிச் சொன்னவை எல்லாம் ப்ரஶம்ஸா பரவாக்யங்களென்று சொன்னால் அதில் பாதகமில்லை.***

***ப்ரபந்தங்கள் அறிந்தபடி அநுஷ்டாநம் பண்ணுகை யாவது, "பொய்ந்நின்ற ஞாநமும்" (திருவிருத்தம்.1) என்று தொடங்கி தே$_3$ஹாத்மாபி$_4$மாந ரூபமான அஸத்யஜ்ஞாநமும் ஸம்ஸாரிக து$_3$ஷ்கர்ம ப்ரவ்ருத்தி மாலிந்ய ஶரீரம் முதலானவை த்யாஜ்யங்கள் என்றறிந்து, இவை நிவர்த்திப்பிக்க வேணு மென்று ஸர்வேஶ்வரனை அர்த்தித்துக் கொண்டு, 'வீடுமின் முற்றவும் வீடு செய்து உம்முயிர் வீடுடையானிடை வீடு செய்மினே' (திருவாய்மொழி 1-2-1) என்று,***

**விளக்கவுரை**

வேற்றுமையில்லாது எல்லா மக்களும் மோட்ச மடைவர் என்னும் முரண்பட்ட பொருளாகி ஸ்ரீவைஷ்ணவன் ஏகாந்தி பரமைகாந்தி முதலான நிலைகளுக்கேற்ற அதிகாரங்கள் எல்லாம் பயனற்றதாய்ப் போய்விடும். ஆகையாலே, 65. 'சில பெரியோர்களுடைய பலவகைப் பட்ட மிகைச் சொற்கள் அந்தந்தப் பொருள்களைப் புகழ்தல் முதலானவற்றில் நோக்குடையன ஆகையால், தள்ளத் தக்கன அல்ல'. என்று, இவ்வாறு சொன்னவை எல்லாம் புகழிலே நோக்கான வாக்கியங்கள் என்று சொன்னால் அவை குற்றமாகாது.

ஆழ்வார்கள் அருளிச்செய்த அருளிச்செயல்களில் அறிந்த படி அநுஷ்டாநம் பண்ணுவது எவ்வாறு? என்னில், 'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும்' என்று தொடங்கி தேகமே ஆந்மா என்னும் அபிமாந வடிவாய் வரும் பொய்யான ஞானமும், இவ்வுலகத்தில் தீய வினைகளைச் செய்ததனால் வந்த அழுக்குப் பதித்த உடம்பு முதலானவை விடவேண்டியவைகள் என்றறிந்து,

**83. மூலம்**

பித்ரு மாத்ரு த$_3$ார புத்ர க்ரஹ க்ஷேத்ராதி$_3$ ப$_4$க$_3$வத்$_3$ வ்யதிரிக்தங்கள் எல்லாம் பரித்யஜித்தே ஆத்மஸமர்ப்பணம் பண்ணி 'நீர்நுமதென்றிவைவேர் முதல்மாய்த்து' (திருவாய்மொழி 1-2-3) என்று, ஸம்ஸார பீஜமான அஹங்கார மமகாரங்கள் கீழ்வேரோடே மூலச்சேதமாம்படி அறுத்துப் பொகட்டு, 'மனன கமலமறக் கழுவி' (திருவாய்மொழி 1-3-8) என்று, ஸ்வகு$_3$ண பரதே$_3$ாஷங்களை நிரீக்ஷிக்கிற மநோதே$_3$ாஷம் போக்கிக்கொண்டு, 'அருவினையேன் - நீசனேன், பாவியேன்' என்று, ஸ்வதோஷங்களை அநுஸந்தித்துக்கொண்டு, 'எந்நாள் யானுன்னை இனி வந்து கூடுவன்' (திருவாய்மொழி 3-2-1) என்று, ப்ரதிகூலமான தேஹேந்த்ரியாதிகளை நிவர்த்தித்து நானுன்னைக் கூடுவதெப்போதோ என்று ஶோகித்துக்கொண்டு,

**விளக்கவுரை**

இவைகள் இனிவராமல் தவிர்த்துக்கொள்ள வேண்டுமென இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டு, 'வீடுமின் முற்றவும் வீடுசெய்து உம்முயிர் வீடுடையானிடம் வீடு செய்ம்மின்' என, தந்தைதாய் மனைவி மக்கள் இல்லம் நிலம் என்று, இறைவனுக்கு வேறுபட்ட இவை எல்லாவற்றையும் நன்றாக விட்டே இவ்வுயிரை உடைய வனான இறைவனிடத்தில் அடைக்கலங் கொடுத்து, 'நீர் நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து' என்று ஆழ்வார் கூறுகிறபடி, பிறவிக்கு வித்தான யான் எனது என்னும் செருக்கைக் கீழ்வேராடும் மூலபக்கவேரோடும் காயப்படுத்திப் பிடுங்கி அறுத்துப்போட்டு விட்டு, 'மனனகமலமறக் கழுவி'

என்கிறபடி, தன் பெருமையும் பிறரது குற்றத்தைப் பார்க்கின்ற மனக்குற்றங்களைப் போக்கி மாசு இல்லாதவனாகி, 'அரு வினையேன் - நீசனேன் - பாவியேன்' என்று தன்னுடைய குற்றங்களைக் கூறிக்கொண்டு 'எந்நாள் யான் உன்னை இனிவந்து கூடுவன்' என்று விரோதிகளான தேகத்தையும் பொறி புலன்களையும் அவை பிறவற்றில் புகாதபடி தடுத்து, நான் உன்னைக் கூடுவது எக்காலமோ? என்று, இறைவனை நினைத்து அவனைக் கூடாமையால் வருந்திக் கொண்டு;

84. மூலம்

*'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' (திருவாய் மொழி 3-3-1) என்று, ஸர்வவித தாஸ்ய ருசியையுடையராய், 'யாவையும் யாவருந் தானே' (திருவாய்மொழி 3-4-10) என்று, ஸர்வமும் ப$_4$க$_3$வத$_3$ாத்மக மென்று ராகத்வேஷஶூந்யராய், 'நெஞ்சினால் நினைப் பான் யவன் அவனாகும்' (திருவாய் மொழி 3-6-9) என்று, அர்ச்சாவதார கு$_3$ணபூர்த்தியறிந்து அத்யாதர முடையராய், 'பயிலும் திருவுடையார் யவரேலும் அவர் கண்டீர் - எம்மையாளும் பரமரே' (திருவாய்மொழி 3-7-1) என்று, ப$_4$க$_3$வத்$_3$ கு$_3$ணாநுபவபரரான பரமவிலக்ஷண ஜந்மரே ப்ராப்யபூ$_4$தர் என்று அநுஸந்திக்குமவராய், 'பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும் பொய்கள் பேச யான்கிலேன்' (திருவாய்மொழி 3-9-7) என்று, அஸேவ்ய ஸேவையிலே நிவ்ருத்த மநோரதராய்,*

விளக்கவுரை

'வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்' என்று, ஆழ்வார் அருளியபடியே இறைவன் திருவடிகளில்

குற்றமில்லா எல்லா அடிமைகளையும் நாம் செய்யவேண்டும் என எல்லாக் காலங்களிலும் எல்லா இடத்திலும் எல்லா நிலைகளிலும் இறைவனுக்குத் தொண்டு செய்வதில் ஆசையுடையவராய், 'யாவையும் யாவருந்தானே' எனக் கூறுகிறபடி, இவ்வுலகினில் வாழும் உயிர்கள் உயிரற்றனவை கள் யாவும் இறைவனது உடமைப் பொருள்கள் என்று, அவைகளிடத்து வெறுப்பு அற்றவராய், 'நெஞ்சினால் நினைப்பான் யாவன் அவனாகும்' என்று, ஞானம், வலிமை, ஆற்றல், செல்வம், திறல், ஒளிமை முதலிய ஆறு குணங் களும் நிறைந்த அர்ச்சை வடிவமான எம்பெருமானிடத்து மிகவும் அன்புடையவராய், 'பயிலுந் திருவுடையார் யாவரேலும் அவர் கண்டீர் - எம்மை யாளும் பரமர்' என்று, ஆற்றல் மிக்க இறைவனது குணங்களையே அநுபவிக்கு மவரே மேலாம் சிறப்புடைய பிறவியை எய்திய இறை யின்பத்தைத் துய்க்கும் பயனாளர் என்று எண்ணக் கூடியவராய், 'பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும் பொய்கள் பேச யான்கிலேன்' எனத் திருவாய்மொழியில் கூறுகிறபடியே வணங்கத்தகாதவர்களை வணங்குதலில் நின்றும் தவிர்ந்தவராய்;

**85. மூலம்**

*'ஐங்கருவி கண்ட இன்பம் - அளவில்லாச் சிற்றின்பம்' (திருவாய்மொழி 4-9-10) என்று, ஐஶ்வர்ய கைவல்யங் களைத் த்ருணீகரித்தவராய், 'இவையென்ன உலகி யற்கை', (திருவாய் மொழி 4-9-1) 'கொடு உலகங்காட்டேலே' (திருவாய்மொழி 4-9-7) என்று, இந்த லோகவ்யாபாரம் ஸஹிக்கமாட்டாதே இது உருக்காட்டாதொழிய வேண்டும் என்று அத்யந்த ஜிஹாஸையையுடையராய், 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறி விலேன்' (திருவாய்மொழி 5-7-1)*

*என்று, ஆகிஞ்சந்யாதி₃களை அநுஸந்தித்துக்கொண்டு இருக்குமவராய், 'பலநீகாட்டிப் படுப்பாயோ'- (திருவாய் மொழி 6-9-9) 'இன்னங் கெடுப்பாயோ' (திருவாய்மொழி 6-9-8) என்று,*

**விளக்கவுரை**

'ஐங்கருவி கண்ட இன்பம் - ஐம்பொறிகளால் அடையும் இன்பமாகிய செல்வத்தையும், 'அளவில்லாச் சிற்றின்பம்' - அளவுபட்ட இன்பமான கேவல ஆன்ம இன்பங்களையும் துரும்பு என்று எண்ணுபவராய், 'இவையென்ன உலக இயற்கை' என்றும் 'கொடு வுலகங் காட்டேல்' என்றுங் கூறுகிறபடி, பிறந்திறந்து எய்த்தொ ழியும் இவ்வுலக நடத்தைகளைப் பொறுக்க மாட்டாதே, இக்கொடிய உலகத்தைக் கண்காணாதொழிய வேண்டும் என மிகவும் வெறுப்பையுடையவராய், 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறி விலேன்' என, பேற்றுக்குத் தன்னிடத்தில் கைமுதலில் லாமை, வேறு புகலில்லாமை ஆகியவற்றை மனங்கொண் டிருப்பவராய், 'பல நீகாட்டிப் படுப்பாயோ, இன்னங் கெடுப்பாயோ' என, இறைவனே ஐம்புலன்நுகரும் விஷயத்தில் தன்னைத் தள்ளுவதாகப் பழியிடும்படி, இறைவனைத் தவிர்ந்த பிறவிஷயங்களைக் கண்டபோதே துன்பம் அடைபவராய், 'கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்'

**86. மூலம்**

*விஷயாந்தர தர்சனத்தில் மோகிக்குமவராய், 'கங்குலும் பகலும் கண்டு துயில் அறியாள்' (திருவாய் மொழி 7-2-1) என்று, ப₄க₃வத₃லாப க்லேஶத்தாலே*

*நித்ராஹாராதிகளில் நசையற்று, 'அப்பனே காணுமாறருளாய்' (திருவாய்மொழி 8-1-1) என்று, கூப்பிட்டுக் கொண்டு, 'மல்லிகை கமழ்தென்றல் ஈருமாலோ' (திருவாய்மொழி 9-9-1) என்று தத்$_3$ விஶ்லேஷதஶையில் பே$_4$ாக்$_3$ய பதார்த்தங்களெல்லாம் அக்நி கல்பங்களாய், 'ஒன்றும் மாயஞ் செய்யேல் என்னை' (திருவாய்மொழி 10-10-1) 'திருவாணை நின்னாணை கண்டாய்' (திருவாய்மொழி 10-10-2) 'நின்னலால் அறிகின்றி லேன் யான்' ( திருவாய் மொழி 10-10-3) என்று, ஆணையினால் மறுத்து ப்ரார்த்தித்து ப்ரக்ருதி ஸம்ப$_4$ந்த விமோசனத்தைப் பண்ணுவித்துக்கொள்ளும்படியான பரமார்த்தியுடைய ராகை; இதுவாயிற்று ப்ரபந்தங்கற் றார்க்குப் ப$_2$லம்.*

**விளக்கவுரை**

இறைவனை அடையாமையால் வந்த துயரத்தாலே உணவு உறக்கம் முதலானவற்றில் விருப்பமற்று, 'அப்பனே காணுமாறருளாய்' என்று இறைவனைக் கூப்பிட்டுக் கொண்டு, 'மல்லிகை கமழ் தென்றல் ஈருமாலோ' என, இறைவனைப் பிரிந்த (பகவதநுபவங் கிடைக்காத) நிலையில், தனக்கின்பமளிக்கும் பொருள்களெல்லாம் எரிகின்ற தீயைப்போலாகும் தன்மையன வாய், 'ஒன்றும் மாயஞ் செய்யேல் என்னை, 'திருவாணை நின்னாணை கண்டாய், நின்னலால் அறிகின்றிலேன்யான்' என்றுங் கூறுகிறபடி, இறைவனை நோக்கி ஆணையிட்டு மறுத்துப் பிரார்த்தித்து இவ்வுடல் தொடர்பை நீக்குவித்துக் கொள்ளும் படியான மிக்க வருத்தமுடையவராதல்; இதுவாயிற்றுத் திருவாய்மொழி முதலான பிரபந்தங்கள் கற்பவர்க்குப் பயனாகும்.

**87. மூலம்**

***இந்த த$_3$ர்சந ப்ரபந்தங்களில் அர்த்த$_3$ ஜ்ஞாந மில்லாதே ஸம்ஸார ப$_3$த்$_3$த$_4$ரானார்க்கும் இவ்வர்த்த$_3$ங்கள் அறிந்து வைத்தும் விஷயாஸக்தசித்தராய், த$_3$ார புத்ராதி$_3$ களோடே பொருந்தி ப$_3$த்$_3$த$_4$ஸம்ஸாரிகளாய், அஹங்கார அர்த்தகாம பரவஶராகக் கொண்டு ப$_4$ாக$_3$வத$_3$ா பசாராதி களுக்கும் அஞ்சாதே ஒருவருக் கொருவர் ஸ்பர்த் தித்துக்கொண்டு (போட்டியிட்டுக் கொண்டு) ஶாஸ்த்ர வாதங்களாலே பிறரைத் தோற்பித்து, 66. 'கு$_3$ரும் த்வங்க்ருத்ய ஹுங்க் ருத்ய விப்ரம் நிர்ஜித்ய வாத$_3$த: அரண்யே நிர்ஜலே தே$_3$ஶே ப$_4$வதி ப்$_3$ரம்ஹ ராக்ஷஸ:' (?) என்கிறவர்த்த$_3$ம் நெஞ்சில் கொள்ளாதே, ராஜத்வாரங் களிலே கிடந்து அஸேவ்ய ஸேவாநிரதராய், 'கொள்ளும் பயனில்லைக் குப்பை கிளர்ந்தன்ன செல்வத்தை வள்ளல் புகழ்ந்து நும் வாய்மை இழக்கும் புலவீர்காள்!' (திருவாய் மொழி 3-9-5) என்கிறபடியே,***

**விளக்கவுரை**

இந்த ஸ்ரீவைஷ்ணவ தரிசனப் பிரபந்தங்களில் பொருளறிவு இல்லாமையாலே ஸம்ஸாரத்தில் - பிறவியில்; அறிவின்மை மாறுபட்ட அறிவு விபரீத அறிவு முதலானவற்றால் ஏற்படும் பிறவியில் கட்டுப்பட்டு உழன்று கொண்டிருப்பார்க்கும், இந்த தரிசனார்த்தங்களை ஓரளவு அறிந்துவைத்தும் ஐம்புலன் கருதும் விஷயங்களில் ஈடுபட்ட மனத்தையுடையவராய், மனைவி மக்கள் உறவினர் முதலானவற்றோடு பொருந்தி பிணையுண்ட சாமானிய மக்களாய் நான், எனது என்னும் செருக்குடன் பொருளா

சையில் ஆழ்ந்துகொண்டு அதனால் இறைவனுக்கும் அவனடியார்க்கும் மற்றவர்க்கும் பொறுக்ககில்லாத பாவங்கள் செய்வதற்கு அஞ்சாமல் ஒருவரை ஒருவர்வசை மொழியால் வைதுகொண்டு, கோணல் வாதங்களாலே பிறரைத் தோற்பித்து,

66.'உயர்ந்த குருவான அந்தணரை 'நீ' என்று சொல்லியும், ஹூங்காரஞ் செய்து அதட்டியும் வாதஞ்செய்து தோல்வியுறச் செய்தானானால் (அதன் பயனாக) நீர் இல்லாத காட்டில் பெரிய அரக்கனாகப் பிறக்கிறான்' என்னும் பொருளை நெஞ்சில் கொள்ளாதவராய், அரச மாளிகையில் சென்று வணங்காதவர்களை வணங்கி, 'கொள்ளும் பயனில் லைக் குப்பை கிளர்ந்ததன்ன செல்வத்தை வள்ளல் புகழ்ந்து நும் வாய்மை இழக்கும் புலவீர்காள்!' என்று ஆழ்வார் கூறுகிறபடியே,

88. மூலம்

*புருஷ அதமனாய், கதிபயக்ராமேமூனாய், அல் பார்த்த ப்ரதனான க்ஷுத்ர மநுஷ்யனை, அவனுடைய துர்க் குணங்க ளெல்லாம் வெளியிடும்படி 'நீயே ஸர்வோத் க்ருஷ்டன்' என்று ஸ்தோத்ரம் பண்ணிக் கொண்டு தேஹயாத்ராபரராய் திரிகிற ஆஸ்திக நாஸ்திகருக்கும் நெடுவாசியுண்டு. அஜ்ஞநானவனைத் திருத்தலாம் இவனைத் திருத்த வொண்ணாதிறே.*

*67. 'விது$_3$ஷோதிக்ரமே த$_3$ண்ட$_3$பூ$_3$யஸ்த்வம்' (?) என்று, இவனுக்கு அபராத பாஹுள்யமுண்டு (குற்றம் அதிகமுண்டு). ஆகையாலே ஒரு நாளும் ஆஸ்திக நாஸ்திகரோடே ஸஹவஸிக்கக்கூடாது.*

**விளக்கவுரை**

மக்களில் கடையனாய் பூமி முழுதும் ஆளுகை யன்றியே சில இடத்துக்கே அரசனாய் அளவில்லாத செல்வங்களையுடையவனாதல் கெட்ட குணங்களெல்லாம் பிறரறிய வெளியிட்டு நீயே எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவன் என்றும் பெரிய வள்ளலென்றும் அவ்வர சனைத் துதிசெய்து கொண்டிருக்கும் படியானவர்;

அறிவில்லாதாரைச் சான்று நூற்களில் இம்மை மறுமைகளில் ஏற்படும் நன்மை தீமைகளைத் தெளிய முறைப்படி அறிவித்தால் அவற்றைக் கொண்டு அவர்கள் திருந்தலாம்; அவற்றை ஓரளவு அறிந்து வைத்தே தம் சோம்பேறித் தனத்தால் அவ் வறவொழுக்கங்களைக் கைவிட்ட இவர்களைத் திருத்த இயலாதன்றோ? 67. 'ஞானியாயிருப்பவன் விதியை மீறினால் அவனுக்குத் தண்டனை அதிகமாகும்' என்கிறபடியே, இவர்களுக்கு இரட்டிப்புத் தண்டனையாம் குற்றம் மிக அதிகமுண்டு. ஆகையால் சிட்டர்களில் சிறந்தவன், ஆத்திகமும் நாத்திகமுங் கலந்து இருப்பவர்களோடு கூடிவாழ்தல் என்றுமே கூடாது.

**89. மூலம்**

*ஸஹவஸித்தால், "தீயகந்தமுள்ள தொன்றைச் சேர்ந் திருப்ப தொன்றுக்குத் தீயகந்தம் ஏறுந்திறமதுபோல்" (உபதேச ரத்தினமாலை 70) என்கிறபடியே, அவனு டைய து$_3$ர்வாஸனை இவனுக்கு மேலிட்டு ப$_3$த்$_3$த$_4$ ஸம்ஸாரியாய் விடும்.*

*இவ்வர்த்தம் ப$_4$க$_3$வத$_3$பிப்ராய ஸித்தம், 68. "மஹத்ஸேவாம் த்$_3$வாரம் ஆஹுர் விமுத்தே: தமோத்$_3$*

***வாரம் யோஷி தாம் ஸங்கி$_3$ஸங்க$_3$ம் - மஹாந்த: தே ஸமசித்தா: ப்ரஸாந்தா: விமந்யவ: ஸுஹ்ருத$_3$ஸ் ஸாத$_4$வோ யே - யே வா மயீஸேக்ருத ஸௌஹ்ருத$_3$ார்த்த$_2$ா: ஜநேஷு தே$_3$ஹம் ப$_4$ரவார்த்தி கேஷு, க்$_3$ருஹேஷுஜாயா - ஆத்மஜ-ராதி- மத்ஸு ந ப்ரீதியுக்தா யாவத$_3$ர்த்த$_2$ாஸ்ச லோகே" (?) என்று, மஹாத்மாக்களுடைய ஸேவை முக்தி த்$_3$வாரமா யிருக்கும்; த$_3$ாராபுத்ராதி$_3$ ஸக்தரான ஸம்ஸாரிகளுடைய ஸஹவாஸம் அந்த தமோத்வாரமாயிருக்கும். மஹாத் மாக்கள் ஆர்? என்னில்,***

**விளக்கவுரை**

அவ்வாறு கூடிவாழின், "தீயகந்தமுள்ளதொன்றைச் சேர்ந்திருப்பதொன்றுக்குத் தீயகந்தம் ஏறுந்திற மதுபோல்" என்று மணவாளமாமுனிகள் கூறியபடி, அவர்களுடைய கெட்ட ஒழுக்கங்கள் இவனுக்கும் மேலிட்டு பிறப்பில் மருள் சுரந்து வருந்துவான்.

இங்கு சொல்லப்பெற்ற கருத்துக்கள் பகவானான இறைவன் உகந்த கருத்தாகும். 68. "பெரியோர்க்குச் சேவை செய்வதானது முக்தியடைதலுக்கு வழியென்று (சான்றோர்) கூறுகிறார்கள்; மனைவி மக்களோடு கூடியிருப்பது அஞ்ஞான இருளுக்கு வழியாகும் எனவும் கூறுகிறார்கள்; அப்பெரியார் யாவரெனில்? நடுவுநிலையோடு கூடிய மனமுடையவர்கள்; உலகப் பற்றிலிருந்து விடுபட்டவர்கள், சினமற்றவர்கள், அனைவர்க்கும் நண்பராயுள்ளவர்கள்; நல்லோரான அவர்கள்,

இறைவனான என்னிடம் அன்பு பூண்டவர்கள்; உடலைப்பேணிக் காப்பதிலும், வீடுகளிலும், மனைவி

மக்களிடத்தும் அவர்கள் உகப்படைவதில்லை; உலகில் தமக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு மட்டுமே திருப்தி அடைபவர்கள்'' என்கிறபடியே; மகான்களை வணங்குதல் முக்திவாயிலாயிருக்கும்; மனைவி மக்கள் சுற்றத்தார் போன்றோரோடு கூடிவாழ்தலில் வேட்கையுடையரான இவ்வுலகத்தவரான ஸம்ஸாரிகளுடைய வாழ்ச்சி இருளாகிய மருளுக்கு வாயிலாயிருக்கும். அம்மகான்கள் யார்? எனில்,

**90. மூலம்**

*69. ''ஸமஶ் ஶத்ரௌச மித்ரேச தத$_3$ா மாந அவ மாநயோ: - சீதோஷ்ண ஸுக$_2$து$_3$:க்கே$_2$ஷு ஸமஸ்ஸங்க$_3$ விவர்ஜித:'' (கீதா. 12-18) ''துல்ய நிந்த$_3$ா ஸ்துதிர் மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித்'' (கீதா.12-19) என்கிறபடியே, ஶத்ருமித்ரமாந அவமாந சீதோஷ்ண ஸுகது$_3$:க்க லாப அலாப நிந்தாஸ்துதிகளில் ஸமசித்தராய்,*

**விளக்கவுரை**

69. எதிரியிடமும் நண்பனிடமும் ஒத்த மனத்தை யுடையவனாய், அவ்வண்ணமே மதிப்பிலும் அவமதிப் பிலும் ஒத்த மனத்தையுடையவனாய், குளிர், வெப்பம், இன்பம், துன்பம் ஆகியவற்றிலும் ஒத்த மனத்தினனாய், எப்பொருளிலும் பற்றற்றவனாய், (அவ்வாறே தன்னை ஒருவன்) பழித்தகாலையும் புகழ்ந்த காலையும் ஒரு படிப்பட்ட மனத்தினனாய், (அவ்வாறே பிறர் புகழ்ந்தபோதும் இகழ்ந்தபோதும்) பதிலுரைக்காமல் இருப்பவனாய், தற்செயலாகக் கிடைத்த அற்பப் பொருளானாலும் அதில் மகிழ்வுற்றவனாய்'' என்கிறபடியே, பகைவன் நண்பன்; மதிப்பு அவமதிப்பு; குளிர் வெப்பம்; இன்பம் துன்பம்; மிகுதி

குறைவு; இகழ்தல் புகழ்தல் ஆகியவற்றில் சமமான மனமுடையவராய், சாந்தியுடையவராய், வஞ்சத்தை விட்டவராய், எல்லா உயிர்களிடத்தும் நட்புடையவராய், மேலான சான்றோராய்,

**91. மூலம்**

***ப்ரஸாந்தராய், க்ரோதவிவர்ஜிதராய், ஸர்வபூ$_4$த ஸுஹ்ருத்துக்களாய், பரமஸாதுக்களாய், என் பக்கல் அத்யந்த ப்ரீதியுக்தராய், த$_3$ார புத்ர க்ருஹக்ஷேத்ர தநதா ந்யாதிகளில் விரக்தராய் யாத்ருச்சிகலாப ஸந்துஷ்டராய் திரியுமவர்கள். இப்படிப்பட்ட மஹாத்மாக் களுடைய ஸஹவாஸம் முக்தி த்$_3$வாரமென்று ஸர்வேஶ்வரன் தானே அருளிச் செய்தானிறே.***

***"நாத்திகரும் நற்கலையின் நன்னெறிசேர் ஆத்திகரும், ஆத்திக நாத்திகருமாமிவரை - ஓர்த்துநெஞ்சே முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டுநடுச் சொன்னவரை நாளுந் தொடர்" உபதேசரத்தினமாலை 68) என்று, ஶாஸ்த்ர ஜ்ஞாநமின்றிக்கே நிஷித்தாநுஷ்ட$_2$ாந பரரான நாஸ்திகரையும், ஸாரதமஶாஸ்த்ர ப்ரதிபாத்ய ஸந்மார்க்கவர்த்திகளான ஆஸ்திகரையும் ஶாஸ்த்ரார்த்த$_3$ வித்துக்களாய் இருந்து வைத்தும் ஸ்வைர ஸஞ்சாரிகளான ஆஸ்திக நாஸ்திகரையும் நன்றாக ஶோதித்து***

**விளக்கவுரை**

என் கண் மிகவும் அன்புடையவராய், மனைவிமக்கள் இல்லம் நிலம் செல்வம் தானியம் அணிகலன் ஆகியவற்றில் பற்றற்ற வராய், தற்செயலாகக் கிடைத்த பொருள்களில்

மனம் நிறைவுபெற்று வாழ்க்கை நடத்துபவர்கள். இத்தன்மையாம் மகான்களோடு கூடிவாழும் வாழ்க்கை முக்திக்கு வாயிலாகும் என யாவர்க்கும் இறைவனான எம்பெருமான் தானே கீதை முதலானவற்றில் அருளினானன்றோ.

''நாத்திகரும் நற்கலையின் நன்னெறிசேர் ஆத்திகரும், ஆத்திக நாத்திகருமாமிவரை - ஓர்த்து நெஞ்சே! முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டுநடுச் சொன்னவரை நாளுந்தொடர்'' என, சாத்திர ஞானமின்றிக்கே தாழ்ந்த ஒழுக்கத்தை உடையவரான நாத்திகரையும், சாத்திரங்கள் எல்லாவற்றினும் மிகவும் உயர்ந்தவற்றைச் சொல்லக்கூடிய நன்னெறிகளைக் கைகொண்டு ஒழுகுபவர்களான ஆத்திகரையும்; சாத்திரப் பொருளை அறிந்தவர்களாயிருந்தும் அவற்றைப் புறக்கணித்துத் தன்னிட்டப்படி நடப்பவர்களான ஆத்திக நாத்திகரையும் நன்றாகத் தேர்வு செய்து,

92. மூலம்

**பூர்வோத்தரங்களில் சொன்ன மூர்க்கரைவிட்டு, நடுவில் சொன்ன ஆஸ்திகரை அநுவர்த்திக்க வேணு மென்று அஸ்மத் ஆசார்யரான பெரியஜீயர் அருளிச் செய்தாரிறே.**

**ஆகையால், மோக்ஷார்த்தியானவன் ஸாரதம ஶாஸ்த்ரமார்க்க அநுஸாரிகளான பரமவிலக்ஷணரோடே ஸஹவாஸம் பண்ணி ''க்ருதகோசாதகீவத்'' ஆசார்யபதம் ஏறிட்டுக்கொண்டு, தல்லக்ஷணம் ஒன்றுமில்லாதே ''முன்னோர் மொழிந்த முறை தப்பாமற் கேட்டுப் பின்னோர்ந்துதாம் அதனைப் பேசாதே, தன்னெஞ்சில்**

*தோற்றினதே சொல்லி இது சுத்தவுபதேசவரவாற்ற தென்பர்மூர்க்கராவார்" (உபதேச ரத்தினமாலை 71) என்று பூர்வாசார்யர்கள் அருளிச்செய்தக்ரமம் தப்பாதபடி கேட்டு*

**விளக்கவுரை**

முன்னவரையும் பின் சொன்னவரையும் 'மூர்க்கர்' என்று விட்டு நடுவில் சொல்லப்பட்ட 'நற்கலையின் நன்னெறிசேர் ஆத்திகர்' என்பவரையே நீங்கள் பின்பற்ற வேண்டுமென்று எமது ஆசார்யரான ஸ்ரீமணவாளமாமுநிகள் என்னும் பெரியஜீயர் அருளிச் செய்தாரல்லவா!

ஆகையால் மோக்ஷத்தில் ஆசையுடையனானவன், சார தமசாத்திரத்தின் வழியை அநுசரிப்பவர்களான சிறந்த சான்றோர்களோடே கூடி வாழ்ந்து ஆசார்ய பதம் ஏறிட்டுக் கொண்டு அதற்கு வேண்டிய சிறப்பு ஒன்றுமில்லாமல் "முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு பின்னோர்ந்து தாம் அதனைப் பேசாதே, தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி இது சுத்த உபதேச வரவாற்றதென்பர் மூர்க்கர் ஆவார்" என்று பூருவாசார்யர்கள் அருளிச்செய்த முறை தப்பாமல் கேட்டு அதன்பின் அந்த அர்த்தத்திற்கு முன்பின் விரோதம் வாராதபடி நன்றாக ஓர்ந்து முரண்பாடற்ற பொருளைச் சொல்லாதே தன் நெஞ்சில் தோற்றிய பொருளையே சொல்லி இதுதான் சுத்த ஸம்பிரதாய வார்த்தைகள் என்பவர்கள் மூர்க்கர் என்று;

**93. மூலம்**

*அநந்தரம் அவ்வர்த்தத்துக்கு பூர்வோத்தர விரோதம் வாராதபடி நன்றாக விசாரித்து அவிருத்தமான அர்த்தத்தைச் சொல்லாதே தன்னெஞ்சில் தோற்றின*

*அர்த்தத்தையே சொல்லி அது சுத்த ஸம்ப்ரதாய வார்த்தை களென்னுமவர்கள் மூர்க்கரென்று ஜீயர் அருளிச்செய்த படியே, உள்ளபடி நிரூபிக்க மாட்டாதே அறிந்த அம்சம் துச்சகமென்று பரித்யஜித்து ஓரிடத்தில் ஒரு பரம அர்த்தம் சொன்னால் அதுக்கு ஶதஶ: விபரீதார்த்தங்களை ஸங்கல்ப்பித்து ப்ராதிகூல்யங்களான தேஹாத்மாபிமா நாதிகளை பரித்யஜிக்கமாட்டாதே ப₃த்த₃ ஸம்ஸாரிகளாய் ஸத₃ாசார்ய கடாக்ஷமுண்டு நமக்கென்ன- பயமென்று "மோகாந்தரிவ்விட மேகாந்தமிருளென்று பயமற்றிருந்து செய்வர்கள் தாம் பாவத்திறம் (ஆர்த்தி ப்ரபந்தம் 44) என்கிறபடியே,*

**விளக்கவுரை**

மாமுனிகள் அருளிச்செய்தபடியே, உள்ளபடி நிரூபிக்கமாட்டாமல் அறிந்தவை சில நாம் அநுட்டித்ததற்கு அரியவை என்று அதனை முழுவதும் விட்டு ஒரு இடத்தில் ஒரு சிறப்பான பொருளைச் சொன்னால் அதற்கு நூறுவகையாக மாறுபட்ட பொருளைக் கற்பித்து விரோதி களான தேகத்தையே ஆத்மாவாக எண்ணுபவர்களை முழுவதும் விடமாட்டாமல் பிறவியில் கட்டுப்பட்டவர்களாய் நமக்கு ஸதாச்சார்யர் அருள் (கடாக்ஷம்) உண்டு; நமக்கு ஏது அச்சம். "மோகாந்தர் இவ்விடம் ஏகாந்தம் இருளென்று பயமற்றிருந்து செய்வார்கள் தாம் பாவத்திறம்" என ஆர்த்தி பிரபந்தத்தில் கூறுபிபடியே, தம் அறிவு மயங்கப் பெற்றவர்களாய், தாமும் அச்சமற்று தம்மைப் பற்றின சீடனை யும் அச்சங்கெடச்செய்து ஆசார்யனும் சீடனுமாகிய இருவரும் சேர்ந்து திருடர்களாய் மிகவும் வேண்டியவர்களான சான்றோர்களான ஆசார்யனுக்கும், பாகவதர்களுக்கும் சிட்டர்களான மூவர்க்கும் நிந்திக்கத்தக்க தவறான

ஒழுக்கத்தாலே தன் சீடனைக்கொன்று தானும் முடிந்து போகும் மாறுபட்ட பொருளைப் போதிக்கும் இத்தாழ்ந்த ஆசார்யனை நம்பாமல் மேல்சொல்லப்பட்ட ஆசார்ய இலக்கணத்தையுடைய நல்ல;

**94. மூலம்**

***மோஹாந்தராய்த் தாமும் ப$_4$யமற்றுத் தம்மைப் பற்றிய ஶிஷ்யனுக்கும் பயங்கெடுத்து இருவரும் உடன் கள்ளராய் உத்தேஶ்யரான மூவர்க்கும் அநிஷ்டமான நிஷித்தாநுஷ்டாநத்தாலே ஶிஷ்யனைக்கொன்று தானும் முடிந்து போகிற விபரீதார்த்த$_3$ பே$_3$ாதகரை விஶ்வஸியாதே கீழ்ச்சொன்ன ஆசார்ய லக்ஷணலக்ஷிதரான ஸத$_3$ாசார்யனை ஆஶ்ரயித்து நிர்ப்பரனாய் "தமர்களில் தலைவராய் சாதியந்தணர்களேலும்" (திருமாலை - 43) என்கிறபடியே, உத்க்ருஷ்டவர்ண ஸஞ்ஜாதருமாய் ப$_4$ாக$_3$வத$_3$ாக்ரகண்யரென்னும்படி, நாம ரூபங்களை தரித்துக் கொண்டு ஶமதம ஶாந்த்யாதி மஹாப$_4$ாக$_3$வத$_4$ லக்ஷணங்கள் ஒன்றுமின்றிக்கே, நன்றாகக் காலையும் கையையும் கழுவி பரியட்டங்களைப் பாங்காக அலம்பித் திருவரையிலே ஸுஸங்கதமாகச் சாத்திக் கொண்டு;***

**விளக்கவுரை**

ஆசார்யன் திருவடியையடைந்து சுமையற்றவனாய் ''தமர்களில் தலைவராய் சாதியந்தணர்களேலும்'' (திருமாலை 42) எனத்திருமாலையில் கூறப்பட்டபடியே, உயர்ந்த ஜாதியில் பிறந்த வருமாய் பாகவதர்களிலே தாம் தலைவர் என்னும்படி வெறும்வெளி வேஷத்தாலே (திருமண், சங்கு, சக்கரம் பொறித்தல் மட்டும் செய்து

கொண்டு) பாகவதர்களுக்கு வேண்டிய மனவடக்கம், புலனடக்கம் முதலான இலக்கணங்கள் ஒன்றுமின்றிக்கே, நன்றாகக் காலையும் கையையும் கழுவிப் பட்டாடைகளைப் பாங்காகத் துவைத்து, வெண்மையாக நன்றாக அணிந்து கொண்டு பன்னிரண்டு இடங்களில் திருமண்காப்பு அணிந்து தாமரைமாலை, பவித்திரமாலை, துளசிமாலை ஆகியவற்றை அணிந்து பரிசுத்தராய் திவ்யப்பிரபந்தங்கள் முதலானவற்றை ஓதியும் ஓதுவித்தும் (வேசியின்) விலைமகள் அலங்காரம் போலே மக்கள் எல்லோரும் தம்மைக் கண்ட மாத்திரத்தாலே மனமகிழும்படி வெளி வேஷம் தரித்தவர்களாலே அஹங்கார மமகாரங்களை (யான், எனது என்னும் செருக்கை)யுடையவர்களாய் வீடு நிலம் பிள்ளை மனைவி முதலான வற்றில் ஆசையுடையவர்களாய் விருப்பும் வெறுப்புமுற்று;

**95. மூலம்**

*த்வாதஶ ஊர்த்வபுண்டரங்களும் சாத்திக் கொண்டு திருமணிவடங்களும் திருப்பவித்ரங் களும் த$_3$ரித்து பவித்ர பாணிகளாய் அத்யயந அத்யாபநங்களை யுடையவராய் வேஶ்ய அலங்காரங்கள் போலே ஸகலஜந மநோஹர வேஷதாரிகளாய்க் கொண்டு அஹங்கார மமகார க்ருஹக்ஷேத்ர த$_3$ார புத்ராதி$_3$ ஸக்தராய் ராகத்வேஷ யுத்தராய் அர்த்தார்ஜந தத்பரராய், ஒருவர் உடைமையை ஒருவர் பரிக்ரஹித்துக் கொண்டு, அஹங்கார அர்த்த$_3$ காமங்களடியாக ப$_4$ாக$_3$வத$_3$ அபசார பரராய்த் திரிகிற பத்$_3$த$_4$ ஸம்ஸாரிகளைக் கண்டு அணுக பயப்பட்டு,*

*நாமரூபங்கள் உடையவராகையாலே அவமதி பண்ணவும் போகாதே அநுகூல ப்ரதிகூலங்கள் ஒன்று*

*மின்றிக்கே ஶக்த்யாநுகுணமாக கிஞ்சித்கரித்து ஸவிநய ராய் ப்ரணிபதநாதி₃களாலே உகப்பித்து உள்கலந்து பரிமாறப் போகாதே கடக்க நின்று குலாலகீடவத் ப்ரவர்த்தித்து,*

**விளக்கவுரை**

பொருளை சம்பாதிப்பதிலேயே நோக்கமுடைய வராய், ஒருவர் சொத்தை ஒருவர் பறித்துக்கொண்டு செறுக்குப் பொருளாசையடியாக பாகவதர்களுக்கு அபசாரம் பண்ணித் திரிகிற (ஸம்சாரத்தில்) பிறவியில் கட்டுப்பட்ட இத்தன்மை யானவர்களைக் கண்டு அணுக அச்சப்பட்டு,

இவர்கள் பகவானுடைய சின்னங்களை அணிந்திருப் பவராகையாலே அவமானம் செய்யாமல் இவர்களிடத்து நட்பும் பகைமையுங்கொள்ளாமல் ஏற்றவகையில் உதவி செய்து விநயத்துடன் அஞ்சலி, நமஸ்காரம் முதலானவற் றாலே இவர்களை மகிழச் செய்து, உள்கலந்து உறவாடாமல் எட்டி நின்று உபசரித்து அனுப்ப வேண்டும்.

**96. மூலம்**

*அர்த்த பஞ்சக தத்வஜ்ஞராய் ஆகார த்ரயஸம்பந் நரான மஹாப₄ாக₃வத₃ரோடே கூடி, 70. "போத₃யந்த: பரஸ்பரம்" (கீதா.10-9) என்கிறபடியே, ஸ்வரூப வ்ருத்தக்ருத்யங்கள் வாராதபடி ஒருவர்க்கொருவர் போத₃கராய், இங்கிருக்கிற நாலு நாளும் கு₃ணாநுப₄வ கைங்கர்யங்களாலே போதுபோக்கிக் கொண்டு நிரஹங் காரராய் ப₄ாக₃வத₃ாபசார பீருக்களாய்த் திரியுமவர்கள் மோக்ஷாதி₄காரிகளென்று அஸ்மத₃ாசார்யோக்தம்.*

**விளக்கவுரை**

மேற்சொன்னவர்களை அடியோடு விடுத்து, அர்த்தபஞ்சகத்தை (ஐம்பொருளை) உள்ளவாறு அறிந்து, மற்றவர்க்கு அடிமையாயிராது பகவானுக்கே அடிமை யாயிருத்தல் (அநந்யார்ஹத்வம்), மற்றவற்றை உபாயமாகக் கொள்ளாது பகவானையே உபாயமாகக் கொள்ளுதல் (அநந்யோபாயத்வம்), மற்றவற்றை இன்பமாகக் கொள்ளாது பகவானையே இன்பமாகக் கொள்ளுதல் (அநந்ய பே₄ாக்யத்வம்) என்னும் மூன்று நிலைகளையுடையரான மிக்க மேம்பட்ட அடியாரோடே கூடி

''70. என்னிடம் நிலைத்த மனத்தையுடையவர் களாய், என்னிடமே தங்கள் உயிரை வைத்தவர்களாய், என்னுடைய குணங்களை ஒருவர்க்கொருவர் அறிவிப்பவர் களாய், என்னைப் பற்றி எப்போதும் பேசிக் கொண்டு இருப்பவர்களாய் மகிழ்கிறார்கள்; ஆனந்திக்கிறார்கள் எனக் கீதையில் எம்பெருமான் கண்ணன் கூறியவாறு ஒருவர்க் கொருவர் பகவானுடைய குணங்களை போதித்துக்கொண்டு ஆந்ம இயல்புக்கு இழுக்கு வாராதவாறு, இங்கே வாழ்கின்ற சில நாள்வரை இறைவனுடைய குணாநுபவ கைங்கர்யங் களாலே பொழுதைக் கழித்துக் கொண்டு அஹங்காரம் அற்றவராய் பாகவத அபசாரத்திற்கு நடுங்கி அதுநேராமல் எச்சரிக்கையாய் வாழ்பவர்கள் (மோக்ஷத்திற்கு அதிகாரிகள்) வீடுபேறு அடையத்தகுந்தவர்கள் என்று எம்முடைய ஆசார்யரான மணவாளமாமுனிகள் கூறுவர்.

**97. மூலம்**

*ஆனால், ஆழ்வார்கள் ஆசார்யர்கள் இரண்டு மூன்று திருநாமமொழிய அநேகர் ஸம்ஸாரத்தில் புத்ர*

*த₃ாராதி₃களோடே ப்ரவர்த்துப்போந்தாரே அவர்கள் முக்தியோக்யரன்றோ என்னில், ஸ்ரீமந்நாதமுனிகள் தொடக்கமாக அஸ்மத₃ாசார்யரளவும் எல்லாரும் ஸந்யஸ்தரேயென்று நினைக்க வேணும், அதுவென்? என்னில், 71. "நிவ்ருத்த ராக₃ஸ்ய க்₃ருஹம் தபோவநம், ப்ரவஸித இவகே₃ஹ வர்த்ததே யஸ்ஸ முக்த:" (இதிஹாச. ஸம்ஹிதை அத்யாயம் 13) என்றுஞ் சொல்லுகிறபடியே நிவ்ருத்தராகராய்,*

**விளக்கவுரை**

ஆனால், ஆழ்வார்கள் ஆசார்யர்கள் என இருவர் மூவர் தவிர மற்றவர் (பூருவர்கள்) எல்லோரும் இந்த உலகத்தில் மனைவி மக்கள் முதலானவரோடே கூடி வாழ்ந்து போந்தார்களே, அவர்கள் முக்தியடையத் தகுதி பெற்றவர் தாமே? எனின், ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமாக அடியேனுடைய (எறும்பியப்பாவின்) ஆசாரியரளவும் (மாமுனிகள் வரை) எல்லோரும் உள்ளும் புறமும் பற்றற்றவர் கள் என நினைதல் வேண்டும்.

அது என் எனில், 71. அஹங்கார மமகாரம் என்னும் செருக்கை விட்டு அவா அறுத்தவர் யாவரும் தாங்கள் இருந்த இல்லமே தவஞ்செய்யும் வனமாகும்; அவர்கள் (வனத்தில்) காட்டில் வசிக்க வேண்டுவதில்லை; அவர்களே முக்திக்குத் தகுதி படைத்தவர்'' எனக் கூறுகிறபடியே, அவாயறுத்த வராய் யான், எனது என்னும் செறுக்கில்லாதவராய்,

**98. மூலம்**

*அஹங்கார மமகார ஸூந்யராய், ஶமதம ஆத்ம கு₃ண உபேதராய், ஸர்வபூ₄த தயாபரராய், ஶத்ரு மித்ரு ஸமராய், அர்த்த₂காம நிரபேக்ஷராய், உஞ்சவ்ருத்திஸிலாதி*

***ஸாதுஜீவநராய், ஆசார்ய ப்ரீதி நிபந்தனமாகவும் ஆந்ருஶம்ஸ்யத்தாலுமாகவும், ஓரிருவர் ஸந்தாநத்தளவு மாகவும், போக்யதாத₄ர்ம புத்₃தி₄களை விட்டு ஸ்வதார விஷயத்தில், நாளுநாள் வர்த்தித்து விஹித விஷய த்யாக₃ம் பண்ணுவாரும், ஸந்யஸிப்பாருமாய், ஸ்காலித்யங்களில் தம்மை ஶிக்ஷிக்கவல்ல ஜ்ஞாநாதி₃ கையானவளானால், பரஸ்பரம் விஷயவிரக்தராய், ஆழ்வானும் ஆண்டாளும் போலே கு₃ணாநுபவ கைங்கர்ய நிரதராய்ப் போருகிறதொழிய, நித்ய ஸம்ஸாரிகளாய், "அஹம் மமேதி சண்ட₃ாள:" என்கிற படியே கர்மசண்டாளன் என்னும்படி பண்ணுமதாய்,***

**விளக்கவுரை**

சமம் தமம் என்னும் ஆன்ம குணங்கள் நிரம்பப் பெற்றவராய், எல்லா உயிர்களிடத்துங் கருணையுடைய வராய், பகைவர் நண்பர் என்னும் வேறுபாடற்றவராய், பொருள் இன்பங்களில் ஆசையற்றவராய், பொருளீட்டு வதில் முயற்சியற்றவராய், உஞ்சவிருத்தி முதலானவற்றைக் கொண்டு உயிர்வாழ்பவராய், ஆசார்யரின் உகப்பின் பொருட்டும் பிறரிடத்து இரக்கங் காரணமாகவும், ஓரிருவர் சந்ததியளவும் தனக்கு இன்பம் என்னும் எண்ணத்தைவிட்டு, தன் மனையாளிடத்துப் புணர்தல் காரணமாய்த் தொடர்பு கொண்டு சில நாளிருந்து பின்னர், அதையுந்துறந்திருப் பாரும் மனைவியின் சேர்க்கையை முழுவதும் துறப்பாருமாய், தன் மனைவியை புணர்தல் விஷயத்தில் தாம் தவறும் பொழுது தம் மனைவி ஞானியாய்த் தம்மைத் திருத்தும் பொழுது தம்பதிகளாய் ஆழ்வானும் ஆண்டாளும்போலே ஒருவர்க்கொருவர் பரஸ்பரம் அந்தப்புலன் இன்பத்தை வெறுத்து பகவத் குணாநுபவ கைங்கர்யமே நிட்டையாய்,

போதுபோக்குமதொழிய எப்போதும் இவ்வுலக இன்பத்தில் ஆசையுடையவராறிருந்தால்;

**99. மூலம்**

***72, "நாஹம் தேவோ ந மர்த்யோ வா ந திர்யக் ஸ்தாவரோபிவா, ஜ்ஞாநாந்தமயஸ்த்வாத்மா ஶேஷோஹி பரமாத் மந:, ந அஹம் விப்ரோ ந ச நரபதி நாபி வைச்யே ந சூத்$_3$ரோ, நோவாவர்னீ ந சக்$_3$ருஹ பதிர்நோ வநஸ்தே$_2$ா யதிர்வா இந்து ஶ்ரீமத்$_3$பு$_4$வந ப$_4$வநஸ்தி$_2$த்யபாயைக ஹேதோர், லக்ஷ்மீ, ப$_4$ர்த்துர் நரஹரி தநோர் த$_3$ாஸத$_3$ாஸஸ்ய த$_3$ாஸ:" (?) என்று, ததீய ஶேஷத்வைக நிரூபணீயமான ஆத்மஸ்வரூபத்தை அறியாதபடி பண்ணுகிற 73, "வித்$_3$யா மதே$_3$ா த$_4$நமத$_3$: த்ருதீயோ பி$_4$ஜநோமத$_3$:" (பாரதம் உத்யோகபர்வம் 34- 46) என்று அஹங்கார மதி$_3$ராபாந மத்தராய், யாத$_3$வபலம் போலே ஒருவர்க்கொருவர் பாதகராய் பத்துப் பன்னிரண்டு ஸந்தாநம் பிறந்து அதிஹேயாஸ்பதமாய், தேஹ வர்த்தகி யாய் ஸ்வரூப விரோதியாயிருக்கிற த$_3$ாரையையும்;***

**விளக்கவுரை**

72. "நான், எனது என்பவை தாழ்ந்தவை" என்கிறபடி பாவத்தைச் செய்யும் நீசப்பிறவியை அடையும்படி செய்யுமதாய், "நான் தேவனுமல்லன், மனிதனுமல்லன், விலங்கும் பறவைகளுமல்லன், தாவரமுமல்லன் ஞானத்தையும் ஆனந்தத்தையும் இயல்பாகவுடையவனாய் இறைவனுக்கு ஆட்பட்டிருக்கும் ஆன்மாவன்றோ; நான் அந்தணனுமல்லன், அரசனுமல்லன், வைசியனுமல்லன், வேளாளனுமல்லன், பிரம்மச்சாரியுமல்லன், இல்லறத்தோனு மல்லன், வானபிரத்த னுமல்லன், துறவியுமல்லன்; ஆனால்,

அழகிய இவ்வுலக மெல்லாம் உண்டாவதற்கும், வாழ்வதற்கும், அழிவதற்கும் ஒரே காரணனாய் திருவின் நாயகனான நரசிங்கனுடைய அடியவர்க்கும் அவர்க்கடிமை பூண்ட அடியவர்க்கும் அடியவனாவேன்'' என்று, அடியார்க்கு அடிமையாயிருப்பதையே நிரூபித்துக்காட்டக்கூடிய சான்றின்படி ஆன்மாவின் உண்மையான இயல்பினை அறியாதபடி பண்ணுகிறஇ 73. ''கர்வங் கொண்டவர்களுக்கு கல்வியாகிற வித்தையும் கர்வத்துக்குக் காரணமாகிறது; செல்வமும் கர்வத்திற்குக் காரண மாகிறது; நற்குடிப் பிறப்பும் கர்வத்துக்குக் காரணமாகிறது'' என்னும்படி அஹங்காரமாகிற கள்ளைக் குடித்து மயங்கியவர்களாய், துவாரகையில் வாழ்ந்த யாதவர்கள் தங்களழிவுக்குத் தாங்களே காரணமானாற்போலே ஒருவர்க்கொருவர் பகைமையுடையராய், பத்துப் பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்றுக் கொண்டு மிகவும் தாழ்வுக்கிருப்பிடமாய் உடலை வளர்ப்பவர்களாய் இராநின்ற ஆன்மாவின் இயல்புக்கு விரோதியாயிருக்கிற மனைவியையும்,

**100. மூலம்**

*ஸம்ஸாரவர்த்தகராய் ஸ்வரூபத்துக்கு அத்யந்தம் ப்ரதிகூலரான புத்ரர்களையும் அநுவர்த்தித்துக்கொண்டு, அத்யந்த பரதந்த்ரராய் அத்யந்த அநுரக்தசித்தராய், தேஹாவஸாநத்தளவும் விடமாட்டாதே ஸ்வரூப விரோதிகள் என்கிற அநுதாபமுமின்றிக்கே, ஸ்வரூப யாத$_2$ாத்ம்ய தர்ஶிகளான ஶிஷ்யர்கள் கர்ஹிப்பர்களென்கிற லஜ்ஜைகளெல்லாம் விட்டு, தன்னைப் பற்றவேணுமென்றிருக்கிற ஸர்வேஶ்வரனுக்கு அநபி$_4$மத$_3$மான இந்த ஸாம்ஸாரிக துஷ்கர்ம ப்ரவ்ருத்தி என் செய்யா நின்றதோ? என்கிற ப$_4$யத்தையும் விட்டு விஷஶஸ்த்ராக்நி*

***களும் ததீயங்களேயாய், ஸகல சேதந அசேதநங்கள் எல்லாம் ததீயமேயாய் விஶேஷித்து நாட்டிலுள்ள பாகவதர் எல்லாரும் ததீயரேயாயிருக்கிற ஒரு ப்ரபந்நனை பே<sub></sub>ாஷிக்கைக்கும்;***

**விளக்கவுரை**

ஸம் ஸாரத்தை வளர்த்துக் கொண்டு தன்னியல்புக்கு மிகவும் விரோதிகளான மைந்தர்களுக்கு அடிமையாயிருந்து மிகவும் அவர்களுக்கே வசப்பட்டவர்களாய், அவர்களிடத்து மேன்மேலும் ஆசைகளை உடையவராய் சரீரம் விழுமளவும் அவாவை விடமாட்டாதே இவை தன்னியல்புக்கு விரோதமா கும் என்ற அநுதாபமும் இல்லாமல் ஆன்மாவின் இயல்பினை உள்ளவாறு அறிந்த சிட்டர்கள் (மேலோர்) ''தன்னைக் கண்டு வெறுத்து சிரிப்பார்கள்'' என்ற வெட்கத்தையும் விட்டு, தன்னைப் பற்ற வேணுமென்று இருக்கிற ஸர்வேச்வரனுக்கு விருப்பமல்லாதவைகளான, இந்தப் பிறவிக்குக் காரணமான தகாத செய்கைகள் என் செய்ய நின்றதோ? என்னும் அச்சத்தையும் விட்டு, நஞ்சு, ஆயுதம், நெருப்பு முதலானவைகளும் இறைவனுக்கு உடைமைப் பொருளாய், இவை போலவே எல்லா மக்களுக்கும், அஃறிணைப் பொருளும் அவ் இறைவனுக்கு உடைமைப் பொருளாயிருக் கவும் இவற்றிலும் விசேடித்து நாட்டிலுள்ள பாகவதர் எல்லோரும் இறைவனுக்கு உடைமைப் பொருளாயிருக்க,

**101. மூலம்**

***ஶத்தனன்றிக்கே த<sub></sub>ாரா புத்திராதி<sub></sub>களும் ததீயங் களேயென்று விபரீத பு<sub></sub>த்<sub></sub>தியைப்பண்ணி அஹங்கார விஷயப்ராவண்யங்களுக்கும் விளைநிலமான, ''தன் னைக் கண்டார் ஶத்ருவைக் கண்டாற்போலேயும்,***

*ததநுப₃ந்தி₄களைக் கண்டால் ஸர்ப்பாக்நிகளைக் கண்டாற்போலேயும்'' (ஸ்ரீவசநபூஷணம் 244) ப₄யப் பட்டிருக்கை ப்ராப்தமாயிருக்க, அது செய்யாதே தத்ரக்ஷணார்த்தமாக ராஜத்வாரங்களில் பலகாலும் வருவதும் போவதுமாய் அஸேவ்ய ஸேவை பண்ணி பிறருடைமையை அபகரித்து அயோக்யரை யாசிப்பதும் அநதி₄காரி ஶிஷ்யாபிமாந தூ₃ஷித த்ரவ்யத்தைப் பரிக்ரஹிப்பதும் செய்யாநின்று கொண்டு திரிகிறா ரில்லையே. ஆகையால், பூர்வர்களைத் த்ருஷ்டாந்தமாகச் சொல்லி,*

**விளக்கவுரை**

அவர்களில் ஒரு பிரபந்நனையாவது உணவு முதலானவைகளைக் கொடுத்து ஆதரிக்க யோக்கி யதையில்லாமல், நம் மனைவி மக்கள் உறவினரும் இறைவனுடைய அதீநங்களே என்று விபரீத எண்ணத்தைப் பண்ணி, அஹங்காரத்திற்கும் ஐம்புலன் ஈடுபாட்டிற்கும் விளை நிலமான, ''தன்னைக் கண்டால் பகைவரைக் கண்டாற் போலவும், தன்னோடு தொடர்புடையவர்களான உறவினர் களையும் ஸம்சாரிகளையுங்கண்டால் பாம்பையும் நெருப்பையுங் கண்டாற்போலவும் (ஸ்ரீவசனபூஷணம்) அஞ்ச வேண்டுதல் தகுதியாயிருக்க அவ்விதம் செய்யாமல், அந்தமனை மகன் முதலானாரைக் காக்கும் பொருட்டு அரசர் முதலியோரை யாசித்தலுக்காக அரசவைக்குப் பலகாலும் போவதும் வருவதுமாய், வணங்கத் தகாதாரை வணங்குதல் செய்தும் பிறர் பொருளை வஞ்சித்தும், தகுதியில்லா தாரிடத்து இரப்பதும், அதிகாரி அல்லாதாரைச் சீடராக்கி அவர்கள்; 'எனது' என்று பற்று கொண்டு கொடுக்கும் கெட்ட

பொருளை வாங்கி உண்டு உயிர்வாழ்தல் செய்கிறார் களில்லையே.

ஆகையால் பூருவாசார்யர்களை உதாரணங்காட்டி நாமும் ஸம்ஸார வாழ்க்கையை நடத்தினால் குறை என்னை? என்றிருந்தால்,

**102. மூலம்**

***நாமும் ஸம்ஸரித்தால் குறையென்? என்றிருந்தால், 74. "நஶ்யேத₃ந்ய ஶ்சரந்மௌட்₄யாத் யத₂ா ருத்₃ரோப்₄தி₄ ஜம் விஷம்" (?) என்று ருத்₃ரன் காலகூடவிஷம் பக்ஷித்தானென்று ஒரு க்ஷுத்ரன் பக்ஷித்தானாகில் நஶித்துப்போமாபோலே ஸ்வரூப நாஶம் தப்பாது. அதுவென்? த₃ார புத்ராதிகளை மதீயமென்னில் ஸ்வரூபநாஶமித்தனையொழிய ததீ₃ய ப்ரதிபத்தி பிறந்தால் அநுவர்த்திக்கலாகாதோ? என்னில்,***

***"தது₃பகரணம் வைஷ்ணவம் இத₃ம்" (அஷ்ட ஶ்லோகீ -1) என்று எல்லாத்திலும் ததீ₃யத்வபு₃த்₃தி பண்ணவேணு மென்றது, ஒரு வஸ்துவும் தனக்கும் பிறர்க்கும் ஶேஷமாயிருப்பதில்லை, அவனுக்கே ஶேஷி மென்று ஸ்வஶேஷத்வ அந்ய ஶேஷத்வ நிவ்ருத்திக்காகச் சொல்லு மத்தனை ஒழிய,***

**விளக்கவுரை**

"பிறரை நசிப்பிக்கும் விஷத்தை உருத்திரனானவன் பருகினான்" எனக்காலகூட நஞ்சைப் பருகினான் சிவன் என்று ஒருவன், தானும் நஞ்சைப் பருகினானாகில், அம்மனிதன் உடனே அழிவது போலே, ஆந்மாவின் இயல்வுக்குத்தகாத வாழ்க்கை நடத்தினால் அவ்வாந்மா

அழிவது நிச்சயம். அது என்னை? மனைவி மக்களை, "தன்னது" என்றால் ஆன்ம ஸ்வரூபத்துக்கு அழிவே ஒழிய அவர்களும் இறைவனின் உடைமை என்னும் எண்ணம் பிறந்தால் அவர்களுக்காக எதையும் செய்யலாமன்றோ? எனில்;

ஞானத்தைக் காட்டக்கூடியதாகிய மகாரத்தால் சொல்லப்பட்ட சீவாந்மா, அகாரத்தால் சொல்லப்பட்ட விஷ்ணுவாகிய இறைவனுக்கே உடைமை (அடிமை) யாயிருப் பவன் என்று கூறப்பட்டபடி, உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் இறைவனுக்கு உடைமை என்னும் எண்ணங் கொள்ள வேண்டுமென்றது, அப்பொருள்களில் ஒரு பொருளும் தனக்கும் பிறர்க்கும் அடிமையாயிருப்பதன்று; எல்லாம் அவ்விறைவனுக்கே (உடைமை) அடிமை என்று, தனக்கடிமையாயிருப்பதையும் - பிறர்க்கடிமையாயிருப் பதையும்;

### 103. மூலம்

ஸ்வரூப விரோதிகளுக்கு எல்லைநிலமான தன் ஶரீரத்தையும் தது$_3$நுப$_3$ந்தி$_4$களான பார்யா புத்ராதி$_3$களையும் அநுவர்த்திக்க வேணுமென்று ஒரு ரஹஸ்யத்திலேயும் சொல்லிற்றில்லையே. அப்படிச் சொல்லுமன்று "நரகும் சுவர்க்கமுமாய்" (திருவாய் மொழி 6-3-1) என்று அஷ்டாவிம்ஶதி மஹாநரகங்களும் ததீ$_3$யமேயாகையால் அவையும் அநுப$_4$ாவ்யமாய் வருமாகையாலே, அது விபரீத ஜ்ஞான கார்யம்; எல்லாம் அவனது என்று ப்ரதிபத்தி மாத்ரம் அபேக்ஷிதம். எல்லாம் ததீயத்வாகாரேண அநுபவிக்கைக்கு நம்மாழ்வாருக்கு மேற்பட்டாரில்லையிறே. ஆழ்வார் தாம் பிராட்டி புருஷகாரமாக

*மரணவரணம் பண்ணின பின்பு தம்மைச் சேர்த்துக் கொள்ளாத படியைக் கண்டு, தமக்கு ஆத்மாத்மீயங்களில் ஏதேனும் ஒன்றில் நசையுண்டானதாக நினைத்து ஸ்வப்ராப்தியைக் கொடாதிருக்கிறான் என்று நிச்சயித்து,*

**விளக்கவுரை**

தவிப்பதைச் சொல்ல வந்தது அச்சான்று. ஆகையால் ஆன்ம இயல்புக்கு விரோதிகளின் முடிந்த நிலமான தன் உடலையும் அதன் தொடர்பால்வரும் மனைவி மக்கள் முதலானாருக்குக் 'குற்றேவல் செய்க' என இரு இரகசியத்திலுங் கூறிற்றில்லை. அப்படிச் சொன்னால், ''நரகும் சுவர்க்கமுமாய்'' என்று திராவிட வேதம் கூறுகிறபடி, இருபத்தெட்டு பெரிய நரகங்களும் இறைவனதாகையால், அவற்றையும் அநுபவிக்க வேண்டிவரும் ஆகையால், அது மாறுபட்ட அறிவின் செயற்பாடு; ''நரகும் சுவர்க்கமும் வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமும்'' என்றெல்லாம் ஞானிகள் கூறுவது அவையெல்லாம் இறைவனது என்னும் எண்ணம் மாத்திரம் அங்கு கொள்ள வேண்டும். நம்மாழ்வார், தாம் இறைவியான பிராட்டி பரிந்துரைகொண்டு இறை வனிடத்தில் சரணாகதி செய்தும், அவ்விறைவன் தன் திருவடிகளில் தம்மைச் சேர்த்துக் கொள்ளாமையைக் கண்டு,

'நமக்கு, யான், எனது என்ற ஏதேனும் ஒன்றில் ஆசையிருப்பதாக நினைத்து இறைவன் தன்னுடையதாம் வீடுபேற்றைக் கொடாதிருக்கிறான்' என்று அறுதியிட்டு;

**104. மூலம்**

*''இடையில்லை யான் வளர்த்த கிளிகாள் பூவைகாள் குயில்காள் மயில்காள்'' (திருவாய்மொழி*

*8-2-8)* **என்று; தொடங்கி, நான் வளர்த்த கிளி தொடக்கமான பக்ஷிகாள்! நெஞ்சு தொடக்கமான நமக்குள்ளவை எல்லாம் தான் கொண்டு பரமபதம் முதலான ப்ராப்ய ஸ்தலங்களிலே உங்களிடத்தில் ஆஸாபாஶங்களை ருசி வாசனைகளோடே விட்டபின் பொழியக் காணவும் ஒட்டாதிருக்கிறான். ஆகையாலே இன்று தொடங்கி உமக்கும் நமக்கும் பணியில்லை யென்று தம்முடைய ஆத்மாத்மீயங்களில் ஆசை பகவத் ப்ராப்தி ப்ரதிபந்தகமென்று நைராஶ்யத்தை அருளிச் செய்கையாலே, அவையும் ததீயங்களேயென்று மோஹங்கதராயிருக்க விரகில்லை. ''மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாள்'' (திருநெடுந்தாண்டகம் - 14) என்று ஜ்ஞாநாதிகரர் ஆனால் அநுவர்த்திக்கக் குறையில்லையே? என்ன,**

**விளக்கவுரை**

''இடையில்லை யான் வளர்த்த கிளிகாள்! பூவைகாள்! குயில்காள்! மயில்காள்!'' எனத் திருவாய்மொழியில், ''நான் வளர்த்த கிளி தொடக்கமான பறவைகாள்! நெஞ்சு தொடக்க மானவற்றில் நமக்கு வேட்கையுள்ளதென்று இறைவன் கண்டு யான் உங்களிடத்தில் கொண்டிருக்கும் ஆசை, பற்று, ருசி, தகாதவற்றில் மீண்டும் மீண்டும் மூளும் வாசனை ஆகியவைகளை விட்ட பின்னர் ஒழிய அப்பரம பதத்தைக் காணக் கொடாதிருக்கிறான். ஆகையாலே, இன்று தொடங்கி உமக்கும் எமக்கும் பணியில்லை'' எனத் தம்முடைய ஆன்மாவிலும் அதைச் சார்ந்தவற்றிலும் உள்ள பற்றானது, பகவானை அடைதற்குத் தடை என்று ஆழ்வார் தம் ஆசையின்மையை அருளிச் செய்கையாலே, அவைகளையும்

இறைவனது என்று மயங்க வழியில்லை. ''மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாள்'' எனத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்திருப்பதால் மனைவி பிள்ளை முதலானார் ஞானமிகுந்திருந்தால் அவர்களை வணங்குவதால்? எனில்,

## 105. மூலம்

*விஷயப்ரவணையான பெண்டாட்டியும், ஸ்வகார்யபரரான புத்ரர்களும், 'இவன் வீதராகனாய் நின்றான், நாம் ப்ரதி கூலமாக வர்த்தித்தால் விட்டுப்போம்; இவனை வஞ்சிக்க வேணும்' என்று, 75. ''மஹா ஸாஹஸோக்தி க₄நகஞ்சுக வஞ்சி தாந்ய:'' (?) என்கிற குலிங்கஶ குநியைப் போலே, ''தொழுத்தையோம் தொண்டரோம்'' என்று வஞ்சகராய் தாழ்ச்சியாக ஒரு வார்த்தை சொன்னால் அத்தைக் கேட்டு பி₄ரமித்து ஶிஷ்ய*

**விளக்கவுரை**

ஐம்புலன்களில் ஈடுபாடுடைய மனைவியும், தங்கள் சுயநலத்தைப் பேணும் காரியங்களிலே நோக்குடைய பிள்ளை களும், 'இவன் ஐம்புலன் வேட்கையை வெறுத்து வைராக்கிய முடையவனாயிராநின்றான்; நாம் புறவுலகி னரைப்போலே விரோதமாக நடந்துகொண்டால் நம்மை விட்டுத் துறவறம் மேற் கொள்ளும்; அதனால் இவனை வஞ்சிக்க வேண்டும்' என்று,

(75. ''ஸாஹஸம் மாகுரு'' - 'ஆபத்தான செயல்களில் ஈடுபடாதே' என்று பிறர்க்கு அறிவுரை கூறிக்கொண்டே தான் மட்டும் துணிவோடு சிங்கத்தின் வாயிலுள்ள மாமிசத் துண்டைக் கவ்விச் செல்லும் குலிங்க சகுனி பறவையைப்

போல்) பெரும் ஸாஹஸ வார்த்தையைப் போதிப்பதாகிய பெரிய போர்வையைப் போர்த்திக் கொண்டு பிறரை வஞ்சிப்பார்கள் என்கிறபடி, மனைவியோ அல்லது பிள்ளைகளோ இவனை நோக்கி 'நாங்கள் உம்மைத் தொழக் கூடியவர்கள், தொண்டு செய்யும் தொண்டர்கள்' என்று வஞ்சகராய் தாழ்ச்சி தோற்றும்படி ஒரு சொல் சொன்னால், அதை இவன் கேட்டு இது மெய்யே என மயங்கி, 'சீடர்களானாலும் வயிற்றிற் பிறந்த பிள்ளைக ளானாலும் ஞானம் நிரம்பியவர்களானால்,

**106. மூலம்**

*புத்ரர்களாகிலும் ஜ்ஞாநாதி$_4$கர் ததீ$_3$யத்வேந அநுவர்த்தநீய ரென்று அருளிச்செய்தாரே, இவரைக் கூட்டிக் கொள்ள குறை யென்? என்று, அவர்களுக்கு இஷ்டவிநியோக$_4$ அர்ஹனாய், விஷய ப்ரவணனாய், ப$_3$த்$_3$த$_4$ாநுராகத்தாலே திரிந்தால் பூர்வஸித்த ஸம்ஸார ப$_4$ந்தம் மேலிட்டு ப்$_4$ரஷ்டனாய்ப்போம்.*

*ஆகையாலே, ''சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது'' (திருவாய் மொழி 2-10-2) என்கிறபடியே, அப்படிப்பட்ட வஞ்சகரைக் கூட்டிக்கொள்ளப் போகா திறே. அவர்களானாலும் 76. ''ஆஹ்லாத$_3$ ஶீதநேத்ராம்பு$_3$: புளகீக்ருத க$_3$ாத்ரவாந்'' (விஷ்ணு தத்.) ஜ்ஞாநாநுஷ்ட$_2$ா நங்களை வடிவிலே தொடைகொள்ளலாம்படி பரம விரக்தராய் ப$_4$க$_3$வத்$_3$ அத்யந்த ப்ரவணராய்,*

**விளக்கவுரை**

அவர்கள் இறைவனுடைய உடைமைப்பொருள்

ஆதலால், அவர்களை வணங்கவும் ஏவல் செய்யவும் வேண்டுமென ஆழ்வார்கள் அருளிச்செய்துள்ளனரே' அதனால், இவர்களை பாகவதர்கள் என்று கூட்டிக்கொள்ளக் குறையென்ன? என்று அவர்கள் இட்டவழக்காய் மகளிடம் கூடிய இன்பமுதலானவற்றில் ஈடுபாடு கொண்டு ஆசையில் கட்டுண்டு திரிந்தால், ஆசாரியனை அடைவதற்கு முன்னிருந்த ஸம்ஸாரத் தொடர்பு மேலிட்டுத் தாழ்ந்து போவான். ஆகையாலே ''ஆண்களை மயக்குவதில் வல்லமையுடையரான பெண்களின் போலித்தாழ்ச்சியை மதியாமல்'' என்று ஆழ்வார் கூறியபடி, அப்படிப்பட்ட வஞ்சகரைக் கூட்டிக் கொள்ளக் கூடாதல்லவா? அப்பெண்பிள்ளைகளும், 76. ''பகவத் குணாநுபவம் பண்ணும் பாகவதர்களாய், ஆனந்தக் கண்ணீர் பெருகா நிற்பவராய், உடலெங்கும் மயிர்க்கூச்செறியாநிற்பவராயிருப் பார்கள்'' என்கிறபடியே, இப்படிப்பட்டவர்களாய் ஞான ஒழுக்கங்களை அவர்கள் வடிவிலேயே காணும்படி மிக்க வைராக்கியமுடையவராய், இறைவனிடத்தில் மிகுந்த ஈடுபாடுகொண்ட பக்தியுடையவராய், விடவேண்டியவை களை விட்டும் பற்றத் தகுந்தவற்றைப் பற்றும் தன்மை யுடையவராய்,

**107. மூலம்**

***த்யஜ்யோபாதேய த்யாக$_3$ ஸ்வீகாரங்களை யுடையராய், ப$_4$ட்டரைப்போலே ப்ரவர்த்திக்குமவரானால் நாட்டிலுள்ள ஜ்ஞாநாதி$_3$க ரெல்லாரையும் ப்ரதிபத்தி பண்ணுமாபோலே, விஸேஷ ப்ரதிபத்தி பண்ணுமதொழிய ப்ரேமாந்தனாய், விஷயப்ரவணனாய் அவர்களோடே ஸம்ஸரிக்கக் கூடாதிறே.***

*அதுவென்? "வீடுமின் முற்றவும்" (திருவாய்மொழி 1-2-1) என்று தியாகத்தைச் சொல்லி, த்யாக₃ ப்ரகாரத்தை அருளிச் செய்யுமிடத்தில் "நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து" (திருவாய்மொழி 1-2-3) என்று, "அஹமம" என்ற அபி₄ஸந்தி குலைந்து அவனது என்கிற ப்ரதிபத்தி மாத்ரமே போரும். ஸவாஸநமாக விட்டுப்போன பரத₄ஸௌபரி ப்ரப்ருதிகளுக்கும் பின்னை ஸம்ஸாரம் மேலிடுகையாலே த்யாஜ்யம் என்கிற பு₃த்₃தி₄விஶேஷமே த்யாக₃மென்று அருளிச்செய்தாரிறே. அதுபோராதோ? என்னில், அதுக்கர்த்த₃ம் நன்றாகத் தெளிந்தால் அதுவே போரும்.*

**விளக்கவுரை**

ஸ்ரீகூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டரைப் போலே பகவத் விஷயத்தில் ஈடுபாடு உடையவரானால் நாட்டிலுள்ள ஞானிகள் எல்லோரையும் சிறந்தவர்கள் என எண்ணுவதுபோல் அவர்களை விசேஷமாகக் கருதலாம் அவர்களிடம் மால்கொண்டவனாய் போகத்தில் ஈடுபாடு கொண்டு அவர்களோடு கூடிவாழ்தல் கூடாதல்லவா?

அது என்ன? ''வீடுமின் முற்றவும்'' என்று விடவேண்டிய யாவற்றையும் சொல்லி, நம்மாழ்வார், விடவேண்டிய நிலைகளை அருளிச்செய்யுமிடத்தில், ''நீர்நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து'' என்று ''நான், எனது'' என்ற நிலை குலைந்து அவனது என்னும் எண்ணம் மட்டும் போதும். எல்லாப்பற்றையும் விட்டுச் சென்ற ஜடபரதன், ஸௌபரி என்னும் முனிவர் முதலானார்க்கும் பின்னையும் பிறவித்தொடர்பு மேலிடுகையாலே, 'விடுதல் என்கிற புத்திவிசேடமே தியாகம்' என்று அருளிச்

செய்தாரல்லவா? ஆழ்வார். அதுபோதாதோ? என்னின், அதற்குப்பொருள் நன்றாகத் தெரிந்து தெளிவுற்றால் அதுவே போதும்.

**108. மூலம்**

''வீடுமின் முற்றவும்'' என்று சண்டாள வாடிகையை ப்ராஹ்மணர்க் காக்கும்போது, சில கழித்துச்சில கூட்டி கொள்ளவொண்ணாதாப்போலே, எல்லாம் விடச்சொன்னால் வேணுமாகில் மமகார தூ$_3$ஷிதங்களான த$_3$ார புத்ர க்$_3$ருஹ க்ஷேத்ராதி$_3$ களை விடலாம். திலதைலவத் து$_3$ர்விவேஷமான தே$_3$ஹத்தை விடும்படிஎன்? என்ன,

காயிகமாக த்யஜிக்குமது த்யாக$_3$மாக மாட்டாது; தே$_3$ஹத்தில் ஆத்மபு$_3$த்$_3$தி$_4$யும் தததநுபந்தி$_3$களில் மமதா பு$_3$த்$_3$தி$_4$ யுமே நன்றாக த்யஜிக்க வேணும். 77. ''கர்ம இந்த்$_3$ரியாணி ஸம்யம்ய ஆஸ்தே மநஸா ஸ்மரந், இந்த்ரியார்த்த$_2$ாந் விமூட$_4$ா த்மா மித்$_2$யாசார: ஸ உச்யதே'' (கீதா 3-6) என்கிறபடியே;

**விளக்கவுரை**

வீடுமின் முற்றவும் என்று கீழ்மகன் குடியிருப்பை அந்தணர்க்காக்கும்போது, சில கழித்தல், சிலவற்றைக் கூட்டுதல் செய்ய வொண்ணாது அதுபோலே, எல்லா வற்றையும் விடச் சொன்னால் வேண்டுமாகில் 'எனது' என்று சொல்லப்படும் தாழ்ந்தவை களான மனைவி, மகன், இல்லம், நிலம் முதலியவற்றை விட்டு விடலாம். எள்ளுக்குள் எண்ணெய் போன்ற பிரிப்பதற்கு அரியதாம் உடம்பை

விடும்படி எங்ஙனம்? என்ன,

உடலாலே விடக்கூடியது விடுதலாகாது; உடலையே ஆத்மாவாக எண்ணும் எண்ணமும் அதன் தொடர்புடைய வற்றில் 'எனது' என்னும் எண்ணத்தையுமே நன்றாக விடவேண்டும். 77. ''ஞான நிட்டையுடையனான யாவனொருவன் கை கால் முதலான கருமேந்திரியங்களை நன்றாக அடக்கி, ஆத்ம ஞானமற்ற நெஞ்சுடையவனாய்,

**109. மூலம்**

***பாஹ்ய விஷயங்களிலே கர்மேந்திரியங்களைப் போகாதபடி நியமித்துக் கொண்டு (விஷயங்களை) நெஞ்சாலே நினைக்குமவன், மித்யாசாரன் என்று சொல்லப்படுமவனாகையாலே அம் மாத்ரம் போராது, அவஶ்யம் பு$_3$த்$_3$தி$_4$ த்யாகமே வேணும். காயிகமாக எல்லாம் விட்டுப்போன ஸௌபரிபர த$_4$ாதி$_3$களுக்கு மனஸ் ஸங்கமுண்டாய் ப$_4$ந்த$_3$ம் வருகையாலே ப$_3$ஹிர் த்யாக$_3$ம் பரித்யாகமாகாது என்று,***

***78. ''மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப$_3$ந்த$_4$மோக்ஷயோ:'' (விஷ்ணுபுராணம் 6-7-28) என்கிற படியே காயிகமாக த்யஜிக்குமதிலும் பு$_3$த்$_3$தி$_4$த்யாகத் தினுடைய ப்ராதாந்யம் சொல்லுகிறதித்தனையொழிய, த்யாஜ்யங்களென்று அறிந்ததே போரும் என்று ப$_3$த்$_3$த$_4$ ஸம்ஸாரியாய், விஷய ப்ரவணனாய்த் திரியப் போகாதிறே.***

**விளக்கவுரை**

அந்த நெஞ்சாலே ஐம்பொறிகளுக்கு இரையான

காண்டல் (காணுதல்), கேட்டல், நுகர்தல் முதலானவற்றை எண்ணிக்கொண்டிருக்கிறானோ? அவன், பொய்யொழுக்க முடையவனாகக் கூறப்படுகிறான்'' என்றபடி புறவிஷயங் களிலே கர்மேந்திரியங்களைச் செல்ல வொட்டாமல் அடக்கிக்கொண்டு, அப்பொறிகளுக்கு விஷயமானவற்றை மனத்தாலே நினைத்துக் கொண்டிருக்கிற அந்த ஞானயோக நிட்டன், பொய்யொழுக்க முள்ளவன் என்று கூறப்படுபவனா கையாலே, அம்மாத்திரம் போராது; அவற்றின் புத்தித் (மனத்) தியாகமே தியாகமாகும். உடலாலே எல்லாவற்றையும் விட்டுக்காட்டிற்குச் சென்ற ஸௌபரி, ஜடபரதன் ஆகி யோர்க்கு மனப்பற்றுண்டாகிப் பந்தம் வந்தது. ஆகையால், புறப்பற்று விடுதல் தியாக மாகாது. என, 78. ''மனமே மனிதர்களுக்குப் பிறவித் தொடர் புக்கும் அதனின்று விடுதலை அடைதற்கும் காரணமாகிறது'' என்பதால், உடலாலே பற்றறுப்பதைக்காட்டிலும், மனத் தாலே பற்றுவிடுதலே சிறப்பென் பதைச் சொல்லுதற்கே ஒழிய, விடவேண்டியதை அறிவதே போதும் என்று ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டவராய் ஐம்புலன் வேட்கையில் ஈடுபாடு கொண்டவனாய்த் திரிதல் கூடாதல்லவா?

**110. மூலம்**

***த்யாஜ்யங்கள் என்றறிந்ததற்குப் பலம், தத் ப்ரதிபத்தி உண்டாகவேணுமிறே. ப்ரதிபத்தியாவது, ஸ்வரூப நாஶகங் களான அஹங்கார விஷய ப்ராவண்ய ப$_4$ாக$_3$வத$_4$ாபசாராதி$_3$களுக்கு விளைநிலம், தே$_3$ஹ விஶிஷ்டனானதாகையாலே, தன்னைக் கண்டால் இறுக்கின கச்சையும், முறுக்கின மீசையும், சுழன்ற கண்களும், தாழ்த்திக்கட்டின தொப்பாரமும், அழுத்திப் பிடித்த கத்தியும் கையுமாய்க் கொல்லவந்த சத்ருவைக்***

*கண்டாற்போலே ப₄யப்பட்டு நிவர்த்திப்பித்து ரக்ஷிக்கு மவனாகையாலும், தனக்கு ஶக்தி ப்ராப்திகளிரண்ட மில்லாமையாலே, அவனையே கால் கட்டிக்கொண்டு "பணிகண்டாய் சாமாறே" (திருவாய் மொழி 4-9-1) என்றும், "உன்னடிக்கே கூய்ப்பணி கொள்ளே" (திருவாய்மொழி 4-9-2) என்றும், " கூவிக் கொள்ளுங் காலமின்னுங் குறுகாதோ?" (திருவாய்மொழி 6-9-9) என்றும், "அடியேன்அடிகூடுவதென்றுகொலோ" (திருவாய்மொழி 5-9-1)*

**விளக்கவுரை**

விடவேண்டியவைகள் இன்னவை என்றறிந்ததற்குப் பயன், ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடும் எண்ணங் களை அறிய வேண்டுமல்லவா? அந்த எண்ணமாவது, ஆந்மாவை அழிப்பவைகளான 'யான்' என்பதும், ஐங்கருவி இன்பத்தில் ஈடுபாடும், அதன் காரணமாய் வரும் பாகவதாபசாரம் முதலானவற்றிற்கு விளைநிலம் தாழ்ந்த பஞ்சபூத சேர்க்கை யாலுண்டான உடலோடு (கூடியிருக்கின்ற தானாகை யாலே), தன்னைக் கண்டால் இறுக்கிக் கட்டியிருக்கும் கச்சையும், முறுக்கின மீசையும், சுழன்ற கண்களும், தாழ்த்திக் கட்டிய தொப்பாரமும், அமுத்திப் பிடித்தவாளுங்கையுமாய்க் கொல்லவந்த பகைவனைக் கண்டாற்போலே அஞ்சி அந்த அச்சத்தைப் போக்கிக் காப்பவன் எம்பெருமான் ஆகையாலும், தன்னைத்தான் காத்துக்கொள்ள ஆற்றலோ தகுதியோ இவ்விரண்டுமில்லாமையாலே, அவன் திருவடிகளையே கட்டிக் கொண்டு, ''பணிகண்டாய் சாமாறே'' என்றும், ''உன்னடிக்கே கூய்ப்பணி கொள்ளே" என்றும், "கூவிக்கொள்ளும் காலமின்னுங் குறுகாதோ?" என்றும்,

"அடியேன் அடிகூடுவதென்று கொலோ? என்று 79. செய்ய வேண்டி யவை களைச் செய்து முடித்தவர்கள் மரணத்தை,

**111. மூலம்**

*79. "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரிய மிவாதிதி$_2$ம்" (இதிஹா. ஸமுச். : 7-38) என்று சொன்னாற் போலே.*

*இதினுடைய நிவ்ருத்தியை ப்ரார்த்தித்துக்கொண்டு இதின் ம்ருத்யுவை ப்ரதீக்ஷித்திருக்கையும், தே$_3$ஹஸம்ப$_3$ந்தி$_4$களான த$_3$ாரபுத்ரர்களைக் கண்டால், 80. "தே$_3$ஹப$_3$ந்து$_4$ஸமாஜோயம் முமுக்ஷோஸ்ஸம்ஸ்ருதாவிஹ, வைதே$_3$ஹ்யா இவ லங்காயாம் ஏககர்ண்யாதி$_3$ ஸங்க$_3$ம:" என்று இந்த ஸம்ஸா ரத்திலே முமுக்ஷுவுக்கு தே$_3$ஹப$_3$ந்து$_4$ ஸமாஜம் லங்கையில் பிராட்டிக்கு ஏககர்ண்யாதி$_3$ ராக்ஷஸஸ்த்ரீ ஸஹவாஸம்போலே து:க்ககரம் என்கை யாலே துஸ்ஸஹமாய்த் தோற்றி, 81."ராக்ஷஸாநாம் வத$_4$ம் க்ருத்வா ஸூத$_3$யித்வா ச ராவணம், லங்காமுந்மூலிதாம் க்ருத்வா கத$_3$ா த்$_3$ரக்ஷ்யதி மாம் பதி:" (ராமா.யு.கா.) என்று பிராட்டியைப் போலே ப்ரார்த்தித்துக் கொண்டு;*

**விளக்கவுரை**

பிரியனான விருந்தினனைப்போல் எதிர்பார்க்கி றார்கள் என்று சான்றுகள் கூறுவதுபோல்,

இந்த உடலில்நின்றும் விடுபடுவதை இறைவனிடம் இறைஞ்சி வேண்டிக்கொண்டு சாவைநோக்கி எதிர்பார்த் திருக்கையும், உடற் தொடர்புடையவர்களான மனைவி மக்களைக் கண்டால், 80. இந்த ஸம்ஸார உலகினில்

சரீரத்தொடர்பை உடையவர்கள் கூட்டம், இலங்கையில் (சிறையிருந்த) சீதா பிராட்டிக்கு ஒற்றைக் காதுள்ள அரக்கி முதலான பல அரக்கியர் களின் சேர்த்திபோலே துன்பத்தை விளைப்பதால் பொறுக்கவியலா இன்னலைத் தோற்றி,

81. ''அரக்கர்களோடு சேர்ந்த இராவணனைக் கொன்று இலங்கையை மூலவேரோடு சாய்த்து என்னுடைய நாயகரான எம்பெருமான் என்னைக்காப்பாற்ற எப்போது வருவாரோ'' என்ற சீதா பிராட்டியைப்போலே பிரார்த்தித்துக் கொண்டு,

**112. மூலம்**

***கால நிரீக்ஷணம் பண்ணுகையும் இவையெல்லாம் நினைத்திறே, "வேர்முதல் மாய்த்து" (திருவாய். 1-2-3) என்று கீழ்வேரோடே மூலச்சேதமாம்படி பரித்யஜிக்க வேணுமென்று அருளிச்செய்திற்று.***

***அஹங்காரம்; தே$_3$ஹாத்மாபி$_4$மாந ரூபமாயும் ஸ்வ ஸ்வாதந்த்ர்ய ரூபமாயும், த்விவிதம். தே$_3$ஹாத்மாபி$_4$மாநம் பண்ணினால் ப்ரச்சந்ந பௌத்தனாய், ஸம்ஸாரிகளிலும் நிஷ்க்ருஷ்டதமனாய்போம். ஸ்வதந்த்ரமென்று நினைத் தானாகில், ப$_4$க$_3$வத்$_3$ரவ்யமான தன்னை அபஹரித்த வனாய், 82. "கிம் தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாப ஹாரிணா'' (பார. உத். பர். 41-34) என்கிறபடியே ஸீதாபஹரணம் பண்ணின ராவணனைப்போலே நஶிக்கும்.***

**விளக்கவுரை**

காலத்தை எதிர்பார்த்திருக்கையும். இவையெல்லாவற் றையும் நினைத்தல்லவா, ''வேர்முதல் மாய்த்து'' என்று

கீழ்வேரோடு அழியும்படி நன்றாக இருவிதப் பற்றையும் விடவேண்டு மென்றே ஆழ்வார் அருளிச்செய்தார்.

அஹங்காரம் என்பது, தேகமே ஆந்மா என்னும் எண்ணத் தையுடையதாகவும், தனக்குத் தானே தலைவன் என்னும் எண்ணத்தையுடையதாகவும் என்று இரண்டு விதமாகச் சொல்லப்படும். தேகமே ஆந்மா என்னும் எண்ணங்கொண்டால் நாத்திகத்தில் முதன்மைபெற்ற புத்தமதக்கொள்கையை உடையவனாய் தாழ்ந்துவிடுவான். தனக்குத்தானே சுதந்திரமுடையவன் எனத் தன்னை நினைத்தானாகில், பகவானுடைய சொத்தாயிருக்கிற தன்னைத் திருடுபவனாய் 82. ''பகவானுக்குச் சொத்தா யிருக்கிற ஆந்மாவைத் திருடியவனால் எந்தப் பாவந்தான் செய்யப் படவில்லை? (எல்லாப்பாவத்தையும் செய்தவன் என்றவாறு) என்பதால், இறைவன் சொத்தாம் சீதாப்பிராட்டியை வஞ்சித்துக் கொண்டு சென்ற இராவணனைப் போலே அழிந்துவிடுவான்.

**113. மூலம்**

***இப்படிப்பட்ட அஹங்கார மமகாரங்களின் க்ரௌர்யத்தை யறியாதே, த்யாஜ்யமென்றறிகையே போருமென்று தைலக்ருதாதிகளாலே மாம்ஸளமாம்படி ஶரீரத்தைப் பெருக்கப் பண்ணி மைத்தெழுந்த கனத்த பிசல்களும் நெடியதாய் வலிய ஶரீரங்களுமாய் விஷய ப்ரவணராய்த் திரிகிறவர்கள் நித்ய ஸம்ஸாரிகளாய் போவர்கள். ஆனால், இக்காலத்தில் ஜ்ஞாநாதிகரனாலும் விஷய ஆஸக்த சித்(த)ராய் அர்த்தார்ஜந தத்பரராய் ஸம்ஸாரத்திலே பொருந்தி வர்த்தியா நின்றார்களே? அவர்கள் ஜ்ஞாநாதிகரன்றோ? இது விருத்தமாகில்,***

*ஏதுக்காக ப்ரவர்த்தியா நின்றார்கள்? என்னில், அது பகவந்மாயா ப்ரபாவம்.*

**விளக்கவுரை**

இத்தன்மையான 'யான் எனது' செருக்கின் கொடுந் தன்மையை அறியாமல், த்யாஜத்தை - விடுகையறிவதே போரும் என்று எண்ணெய், நெய் முதலானவற்றால் மாமிசம் திரளும்படி உடம்பைத் தடிக்கப்பண்ணி, மைபோன்று கருமையாய் அடர்த் தியான உரோமங்களுடன் கூடியதாய் நெடியதாய் வலிமையான சரீரங்களுமாய், மகளிர் இன்பம் முதலானவற்றில் ஈடுபாடு கொண்டு திரிகிறவர்கள் நிரந்தரமான ஸம்ஸாரிகளாய்ப் போவார்கள். ஆனால், இக்காலத்தில் ஞானமுடையவரானாலும், புலனின்பங்களில் ஆசைகொண்ட மனத்தினராய், பொருள் ஈட்டுவதிலேயே நோக்கங்கொண்டவராய், இவ்வுலகவாழ்க் கையில் வெறுப்பற்று பொருந்தி வாழா நின்றார்களே? அவர்கள் ஞானமுடையவரன்றோ? இதுமுரண்பாடானால், எதற்காக அப்படி வாழ்கிறார்கள்? எனின், அது பகவானுடைய மாயையின் பெருமையாகும்.

**114. மூலம்**

*''துயக்கறு மதியில் நன்ஞானத்துள் அமரரைத் துயக்கும், மயக்குடை மாயைகள் வானிலும் பெரியன வல்லன்'' என்றும், ''உன் மாயங்கள்மேலை வானவரும் அறியார்'' என்றும், ''இன்னமுதெனத்தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க நீவைத்த முன்னமாயம்'' (திருவாய்மொழி 7-1-8) என்றும், ''அகற்றநீ வைத்த மாயவல்ஐம்புலன்கள்'' (திருவாய்மொழி 5-7-8) என்று சொல்லுகிறபடியை, எப்படிப்பட்ட ஜ்ஞாநாதிகரனாலும்,*

***83. "அநந்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸ்தே" (கீதை 9-22) என்றும், 84. "ப4க்த்யா த்வநந்யயாஸக்ய: (கீதை. 11-54) அந்யோக அஸஹமான தன் ஸ்வரூபத்தை யறிந்து வைத்தும், அபரமாத்ம வைராக்யம் இல்லாத வனாய்;***

**விளக்கவுரை**

"துயக்கறு மதியில் நன்ஞானத்துள் அமரரைத் துயக்கும், மயக்குடை மாயைகள் வானிலும் பெரியன வல்லன்" என்றும், "உன் மாயங்கள்மேலை வானவரும் அறியார்" என்றும், "இன்னமுதெனத்தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க நீவைத்த முன்னமாயம்" எனவும், "அகற்றநீ வைத்த மாயவல் ஐம்புலன்கள்" எனத் திருவாய்மொழிகளில் கூறப்பட்ட இறைவனது மாயைகள் அளவிடற்பாலன. எனவே, எப்படிப்பட்ட ஞானமுடையவ ரானாலும், 83. "என்னை நினைப்பது தவிர வேறு பயனைக் கருதாதவர்களாய், என்னை நினைப்பவர்களாய், எந்த மகாத்மாக்கள், என்னை எல்லாமாகக் கொண்டு முழுமையாக ஆராதிக்கிறார்களோ" என்றும், 84. "அர்ச்சுன! நான், ஒரு பயனை எதிர்பாராத பக்தியினாலேயே அறியத் தகுந்தவன் அல்லது அடையத் தகுந்தவன்" என்று கீதையில் எம்பெருமான் கூறுகிறபடியால், பிறர் முயற்சியாகிய துணையைப் பொறுக்கவியலாத இறைவன் தனது இயல்பினை அறிந்திருந்தும், தாழ்ந்ததான இவ்வுலகப் பொருள்களில் வைராக்கிய மில்லாதவனாய்,

**115. மூலம்**

***விஷய ஆஸக்த சித்தனானால், ஸர்வேஶ்வரன் தன்னை அகற்றவேணுமென்று நினைத்து நித்யஸூரி***

***களையும் மோஹிப்பிக்கவல்ல மாயா ஶக்தியாலே துர்விஷயங்களில் அத்யந்த ப்ரவணராம்படி பண்ணு வித்துத் தந்மூலமாக த₃ாரபுத்ராதி₃ ஸக்தராய், தத்ரக்ஷ ணார்த்தமாக அர்த்தார்ஜந தத்பரராய், தந்மூலமாக அஸேவ்ய ஸேவை தன்னில் நிரதராய், ராகத்வேஷ யுக்தராய், தந்மூலமாக பூ₄தத் ரோஹிகளாய்,***

***அன்றைக்கன்று அஜ்ஞாந வர்த்தகமாய் பு₃த்₃தி₄ நாஶம் பிறந்து, 85. "ஸங்க₃ாத் ஸஞ்ஜாயதே காம:" (கீதை: 2-62) என்று தொடங்கி 86. "பு₃த்₃தி₄ நாஶாத் ப்ரணஶ்யதி" (கீதை 2-63) என்கிறபடியே, விநாஶத்தையடைந்து போவார்கள். ஆகையாலே அஸ்க்க₂லித ஜ்ஞாநரான நித்யஸூரிகளையும் மோஹிக்கப் பண்ணுகிற பகவந் மாயா ப்ரபாவமித்தனையொழிய அவர்கள் தோஷமன்று.***

**விளக்கவுரை**

போகத்தில் வேட்கையுடையவனானால், எல்லார்க் கும் தலைவனான எம்பெருமான், தன்னை அகற்றிவிட வேண்டும் என நினைத்து, நித்தியரான அமரரையும் மயக்கவல்ல மாயையின் ஆற்றலாலே கெட்ட விஷயங்களில் மிக்க ஈடுபாட்டை உண்டாக்கி, அவர்களைக் காப்பாற்றும் பொருட்டு, பொருளீட்டு வதில் நாட்டங்கொள்ளச் செய்து, அதன் காரணமாக வணங்கத் தகாதவரையெல்லாம் வணங்கும் திட்டையை உடையவராய், ஆசையும் பகைமை யுள்ளத்தையும் உடையராய், அதன்மூலம் மக்களுக்கு த்ரோகம் செய்பவராய்,

நாள்தோறும் அறிவின்மை வளரும்படியாய் புத்திநாசம் பிறந்து, 85. ''பற்றினால் காமம் உண்டாகிறது'' என்று தொடங்கி, 86. அறிவின் நாசத்தாலே ஸம்சாரமாகிய

இவ்வுலகில் மூழ்கி அழிந்து போகிறான்'' என்கிறபடி, ஒருநாளும் கலக்கமில்லா ஞானியர்களான நித்யஸூரிகளையும் மயங்கப்பண்ணுகின்ற இறைவனது மாயையின் பெருமையேயன்றி அவர்கள் குற்றமன்று.

**116. மூலம்**

இந்த ஸம்ஸாரிகதுஷ்கர்மம் ப்ரக்ருதி தோஷம் அவர்கள் மேலே ஆரோபித்து அவமதி பண்ணினானாகில், இவனுக்கு அதுவும் அநர்த்த ஹேதுவாம். அநுஷ்டாநாஹீநமான ஜ்ஞாநாதிக்யத்தைக் கொண்டு, *87. த$_4$ர்மஜ்ஞ ஸமய: ப்ரமாணம்" (ஆபஸ்தம்.தர்ம.)* என்று ஶிஷ்டாசாரம் ப்ரமாணம் என்றும், *88. "யத்$_3$ய த$_3$ாசரதி ஶ்ரேஷ்ட$_2$ஸ் தத்ததே$_3$வேதரோ ஜநா:" (கீதை 3-21)* என்று ஶிஷ்டாசாரமே ப்ரமாணமாகச் சொல்லப்பட்டதிறே என்று கேட்பார் செவி புதைக்கும்படியான விபரீத அர்த்தங்களைச் சொல்லுகிற ஜ்ஞாநலவதுர்விதக்தரை, தர்மஜ்ஞராகக் கொண்டு மாயாமோஹிதராய், அவராசரிக்கிற ஸாம்ஸாரிக நிஹீநக்ருத்யங்களை ஶிஷ்டாசாரங்களாக பு$_3$த்$_3$தி$_4$ பண்ணி, *89. "ஶதாந்தா: கூபம் ப்ரவிஶந்தி"* என்றார் போலே தான் ஆசரித்தானாகிலும் விநாஶமே பலிக்கும்; ஆகையாலே தத$_3$நுஷ்ட$_2$ாந அவமாநாங்கீ$_3$காரங்களிரண்டும் கூடாது.

**விளக்கவுரை**

மாறி மாறிப் பிறப்பதற்குக் காரணமான இந்தக் கெட்ட செயலைச் செய்யும் தோஷம் அவர்கள்மேலே ஏறிட்டு அவமானம் செய்தானாகில், இவனுக்கு அதுவும் அழிந்து போதலுக் காரணமாம். அநுட்டான மில்லாத ஞானச் சிறப்பைக் கொண்டு, 87. "தர்மம் அறிந்தவர்களின் ஆசாரமே

சிறந்த (முக்கிய) பிரமாணம் ஆகும்; வேதமும் பிரமாணம்'' என்றும், 88. ஞானத்தில் சிறந்தவன் எந்த எந்த கருமங்களை அநுட்டிக்கிறானோ, அந்தந்தக் கருமங்களையே மற்ற சாமானிய மக்களும் செய்கின் றனர்'' என்று சிட்டர்களுடைய ஒழுக்கமே பிரமாணமாகச் சொல்லப்பட்டதல்லவா என்று, கேட்பார் செவிபதைக்கும்படியான முரண்பட்ட பொருளைச் சொல்லும் ஞானமில்லாதாரை, தருமம் அறிந்தவராகக் கொண்டு மாயத்தால் மயக்கப்பட்டவராய், அவர் ஒழுகும் தாழ்ந்த ஒழுக்கங்களைச் சிட்டர்களது ஒழுக்கமாக எண்ணி, 89. ''ஒருவர்க்கொருவரைத் துணையாக நம்பி வழிநடந்த நூறு குருடர்களும் ஒரு கிணற்றிலே விழுந்தனர்'' என்பதுபோலே, அந்த ஞானமில்லாதார் ஒழுகிய ஒழுக்கத்தைத் தான் ஒழுகினாலும் நாசமே உண்டாகும். ஆகையால், அவர்கள் அநுட்டானத்தை அங்கீகரிப்பதும், அவர்களை அநுட்டானமில்லாதவர்கள் என்று அவமானப் படுத்துவதும் ஆகிய இரண்டு செயல்களும் செய்தல் கூடாது.

**117. மூலம்**

*90. ''ஸு꞉வ்யாஹ்ருதாநி மஹதாம் ஸு꞉க்ருதாநி ததஸ்தத꞉ ஸஞ்சிந்வந்தீ₄ர ஆஸீத ஶிலஹாரீஶிலம்யதா₂''* *(லக்ஷ்மீ.தந்தி.)* என்றும், *90. ''யாந்யஸ்மாகம் ஸு꞉சரிதாநி, தாநித்வயோபா ஸ்யாநி''* என்றுஞ் சொல்லுகிறபடியே, *ஸாரதம ஶாஸ்த்ரார்த்த ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நரான மஹாத்மாக்கள் மேலெழுச் சொல்லுகையன்றிக்கே சேதநருடைய ஹிதத்தையே பார்த்து நன்றாக அருளிச் செய்த ஸ்ரீஸூக்திகளிலும் ஸ்வ பர விநாஶம் வாராதபடி குறிக்கொண்டு வர்த்திக்கிற ஸதநுஷ்டாநங்களையுமே பரிசீலித்துக் கொண்டு ஶிலஹாரியானவன் அத்தையே*

***தேடிக் கொள்ளுமாபோலே ப்ரம ப்ரமாதாதிகளாலே சொல்லுகிற வாக்யங்களையும்,***

**விளக்கவுரை**

90. உதிரி நெற்களைக் கொண்டு உயிர்வாழ்பவன் அந்நெற்களை எவ்வாறு சேகரித்து வைத்துக்கொள்வானோ அவ்வாறே, அறிவுள்ள ஒருவன் மகான்களுடைய குற்றமற்ற உபதேச வார்த்தைகளையும் அவர்களுடைய ஒழுக்கங் களையும் அவ்வவ்விடங்களில் சேகரித்து வைத்துக் கொண்டிருக்க வேண்டும்'' என்றும், 91. ''யாவரொரு மேன்மக்கள் நல்ல ஒழுக்கங்களை மேற்கொண்டோழுகு கின்றனரோ அதனையே நன்மக்களும் மேற்கொண்டொழுக வேண்டும்'' என்றுங் கூறுகிறபடியே, மிக்க உயர்ந்த சாத்திரங்களில் கூறப்பட்ட பொருளை அறிந்த ஒழுக்கம் நிறைந்தவர்களான மகாத்மாக்கள் மேலெழச் சொல்லுகை யின்றிக்கே மக்களுடைய நலத்தையே நோக்கி நன்றாக அருளிச்செய்த மொழிகளிலும் தனக்கும் பிறர்க்கும் அழிவு வாராதபடி குறிக்கொண்டு வாழாநின்ற நல்ல அநுட்டானத்தையே ஆராய்ந்து பார்த்து, வயலில் சிந்திய நெல்லைப் பொறுக்கி உயிர் வாழ்பவன், அதனையே சேமிப்பாகத் தேடிக்கொள்ளுதல் போல், இருள் துயக்கு மயக்குகளால் சொல்லப்படும் வாக்கியங்களையும்,

**118. மூலம்**

***திருமேனி ஸ்வபாவத்தாலே செய்கிற வ்யாபாரங் களையும் விட்டு, ஸு^சரிதங்களை ஆசரிக்க வேணு மென்று சொல்லா நின்றதிறே. பாகவதரையும் மாயை மோஹிக்கப் பண்ணுமோ? என்னில், ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வார் அஸ்க்கலித ப்ரஹ்மசாரியாய் கைங்கர்ய நிரதராயிருந்து வைத்தும், தேவதேவி என்பாளொரு***

***வேஶ்யைக்கண்டு மோஹிதராய் பின்தொடர்ந்து ப்ராப்த விஷய கைங்கர்யத்தைப் பொகட்டு அத்யந்த ப்ரவணராய் ஸகல து$_3$:க்கங்களையும் அநுபவித்தாரிறே; பெரிய திருவடி, ஸுமுகன் நிமித்தமாக எம்பெருமானோடே எதிரிட் டானிறே; மாயா ப்ரபாவம் இதுவேயிறே.***

**விளக்கவுரை**

அவர்கள் திருமேனி இயல்பாலே செய்கிற செய்கைகளைவிட்டு, நல்ல சரிதங்களையே ஏற்று ஒழுகிக் காட்ட வேண்டும் என்று சான்றுநூல் சொல்லா நின்றதல்லவா.

ஆனால், பாகவதரையும் மாயையானது மயக்குமோ? என்னின், ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வார் கலக்கமில்லாத ஞான வைராக்கியமுடைய பிரமசாரியாய் பகவத் தொண்டில் நியதராயி ருந்தும் தேவதேவி என்றவிலைக்காட்படும் மங்கையைக் கண்டு மயங்கி அவளைப் பின்தொடர்ந்து தனக்கு வகுத்த பகவத் தொண்டையும் விட்டுவிட்டு அவள்மீது ஈடுபாட்டால் சிறை செல்லுதல் முதலான எல்லாத் துன்பங்களையும் அனுபவித்தாரல் லவா? பெரியதிருவடி என்னும் கருடன், சுமுகன் என்ற பாம்பரசன் காரணமாக எம்பெருமானோடு எதிரிட்டானல்லவா? பகவானின் மாயத்தின் பெருமை ஈதல்லவா.

**119. மூலம்**

***ஸத$_3$ாசார்யன் அபி$_4$மாநத்திலே பாத$_3$ச்சாயை போலே பிரியாதே வர்த்திக்கப்பெறில், அவன் லீலையிலே விநியோகங் கொள்ளுகைக்கு இடமறும்படி பண்ணுவ னென்று ததபிமாநத்தை அபேக்ஷிக்கிறது. ஸ்வாபிமா நத்திலே ஒதுங்கினாரையும் அவன் லீலையிலே விநியோகங் கொள்ளுமோ? என்னில், ஸகல இதர***

***நிஸ்ப்ருஹராய் நிரஹங்காரராய் பரமார்த்தனாலொழிய ப்ராக்ருத வஸ்துக்களிலே ருசியுடையரானாலும் தாம் உத்க்ருஷ்டரென்கிற அபிமானமுடையரானாலும், தேஹத் திலும் தேஹஸம்பந்திகளிலும் பொருந்தியிருந்தாலும் நாலுநாள் லீலையில் விநியோகங்கொள்ளுகைக்குக் குறையில்லை.***

***''தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பகதி செய்யும்'' (திருவாய்மொழி 7-5-11) ''தீர்ந்த வடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ள வல்ல'' (திருவாய்மொழி 3-5-11) என்றும்,***

**விளக்கவுரை**

நல்லாசிரியன் அபிமானத்திலே பாதநிழலைப்போலே பிரியாமல் வாழப்பெற்றால், இறைவன் (லீலையிலே) பிறப்பு இறப்பாகிய விளையாட்டிலே நம்மைப் பயன்படுத்த இடமில்லாதபடி ஆசாரியன் அருள்செய்வான் என்றே, அவ்வாசாரியனின் அபிமானத்தையே விரும்பப்படுகிறது. ஆகில், தனது அபிமானத்தில் ஒதுங்கியுள்ளவர்களையும் இறைவன் லீலையிலே ஏவுவானோ? எனில், எல்லாப் பொருள்களிலும் ஆசையை விட்டவராய், அகங்கார மில்லாதவராய், இவ்வுலகில் வாழ்வதற்கு வருத்தத்தை அடைந்தாதொழிய, இவ்வுலகப் பொருள்களில் சுவையு டையரானாலும், தாம் உயர்ந்தவர் என்னும் நினைவுடை யரானாலும் தேகத்திலும் தேக ஸம்பந்தப்பட்ட மனைவி மக்கள் உறவினர் ஆகியவரோடு பொருந்தியிருந்தாலும் (நாலுநாள் என்றது) நாலு பிறவிகளில் விநியோகங்கொள்ளக் குறையில்லை என்றவாறு.

''தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்ப கதிசெய்யும்'', ''தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல'' என்றும்,

**120. மூலம்**

***அர்த்த பஞ்சகமும் உள்ளபடி தெளிந்து தெளிந்தபடி நின்ற அநந்ய ப்ரயோஜநரான மோக்ஷபூதரை யாயிற்று ஸ்வப்ராப்தி யோக்யராம் படி திருத்தி நித்ய கைங்கர்யங்கள் கொண்டருள்வதென்று ஆழ்வார் அருளிச்செய்தாரிறே.***

***''நாம் ப₄க₃வத் க்ருஹ த்வாரபாலநம் பண்ணு கிறோம்'' என்கிற அஹங்காரமுடைய ஜயவிஜயர் களை முனிஶாப வ்யாஜத்தாலே ராக்ஷஸயோநிகளிலே தள்ளி விட்டானிறே; இந்த்ரத்யும்நன் என்கிறராஜா ஸர்வேஶ்வரன் தன்னையே த்யாநம் பண்ணிக் கொண்டிருந்து தன்னோடொத்த பக்திநிஷ்டனில்லை யென்று நெஞ்சிலே அவனுக்குத் தோற்றிற்று.***

**விளக்கவுரை**

அர்த்தபஞ்சகமும் உள்ளபடி தெரிந்து, தெளிந்தபடி நிற்கும் வேறுபயன் கருதாத தனக்கடிமை பூண்டவரை யாயிற்று தன்னை அடைய தகுதியுடையராம்படி திருத்தி நித்ய கைங்கர்யங் கொண்டருள்வது என்று நம்மாழ்வார் அருளினார் அல்லவா.

நாம் பகவானுடைய கோயில்வாயிலைக் காவல் செய்கிறோம் என்கிற அஹங்காரமுடைய ஜயன் விஜயன் என்னும் கோயில் காவலர்களை முனிவர் சாபம் என்ற பெயராலே அரக்கர் பிறவிகளிலே (இரணியன் - இராவணன்

ஆகியோரை) பிறக்கும்படி தள்ளிவிட்டானல்லவா; இந்திரத்யும்னன் என்கிற பாண்டிய அரசன் எப்போதும் இறைவன் திருமாலையே தியானம் செய்து கொண்டிருந்தமையால் தன்னைக் காட்டிலும் பக்தியில் சிறந்தவன் எவனுமில்லை என்ற செருக்கு அவன் நெஞ்சில் தோன்றிற்று.

121. மூலம்

*அதனால் அக$_3$ஸ்த்ய ஶாப வ்யாஜத்தாலே குஞ்சரயோநியிலே சிலகாலந்தள்ளிவிட்டு, "பொய்கை முதலைச் சிறைப்பட்டு நின்ற கைம்மாவுக்கருள்செய்த" (திருவாய்மொழி 3-5-1) என்று பொய்கையிலே மகரக்ரஸ்தனாய்க் களிப்பாறி, 92. "த்ராஹித்ராஹீதி" (பாத்ம புராணம்) கோஷத்தாலே ஸ்தோத்ரம் பண்ண அரை குலையத்தலைகுலைய வந்து, 93. "ப$_4$க$_3$வதஸ் த்வராயை நம:" (ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் 2-57) ஜ்ஞாநாதி$_3$கர் ஈடுபடும்படி வந்து ரக்ஷித்தானிறே. ஆகையாலே, அஹங்கார விஷயப்ராவண்ய பாகவதாபசாராதிகளில் அந்வயமுண்டானால், ஜ்ஞான ப$_4$க்திகளிருந்தாலும் வ்யர்த்தமாய் லீலைக்கு அர்ஹராவர்கள். அவர்களிலும் ப$_4$க்தியதிஶயமுள்ளவரானால்,*

விளக்கவுரை

அகத்திய சாபத்தாலே கஜேந்திரன் என்னும் யானை பிறவியில் சிலகாலந் தள்ளிவிட்டு "பொய்கை முதலைச் சிறைப்பட்டு நின்ற கைம்மாவுக்கு அருள்செய்த" என்று பொய்கையிலே முதலையால் பீடிக்கப்பட்டு அகங்காரம் கழிந்தபின்னர் 92. "காப்பாற்றுவீர் காப்பாற்றுவீ"ரென்று கூக்குரலிட்டுத் தன்னைத் தோத்திரம் பண்ண, அரையிலி

ருந்த ஆடை நெகிழவும் தலையிலுள்ள முடிகுலையவும் அப்பொய்கைக் கரையிலே வந்து நின்ற 93. ''கஜேந்திரன் என்னும் யானையைக் காப்பாற்ற விரைந்து செல்லும் அந்த பகவானுடைய வேகத்துக்கு என் வணக்கம்'' என்று ஞானியான பட்டர் அருளியபடி வந்து காப்பாற்றினானல்லவா. ஆகையால், அகங்காரம், ஐம்புலன்களில் ஈடுபாடு, பாகவதாபசாரம் முதலானவற்றில் சார்புண்டானால் ஞான பக்திகள் உண்டானாலும் பயனற்று இறைவனது லீலைக்கு ஆட்படுவார்கள்.

**122. மூலம்**

*சில காலம் லீலையிலே களிப்பாறும்படி பண்ணிப் பின்னை அநுக்ரஹிக்கும். ஷாட்குண்ய ஜ்ஞாந வைராக்யங்களானால், 94. "பத்$_3$ம கோடி ஶதேநாபி நக்ஷமாமி" (வரா. புராணம்) என்கிற படியே, யாவத்காலமும் லீலார்ஹனாய் நித்ய ஸம்ஸாரியாய்ப்போம்.*

*ஆகையாலே, நாம் ப$_4$க$_3$வதபி$_4$மாந அந்தர்பூ$_4$தரல்லோமோ? நமக்கு பயமென்? என்று இறுமாந்திறுந்து அஹங்கார விஷயப்ராவண்ய ப$_4$ாக$_3$வத அபசாராதிகளிலே அந்வயிக்கக்கூடாது, பத்த ஸம்ஸாரிகளாயிருக்கவுங் கூடாது. பூர்வகாலத்திலே ஜம்பாதி$_3$ராக்ஷஸர் தனக்கு பக்தராயிருந்தும் பரத்ரோஹிகளானவாறே, அவர்கள் தன்னையகன்று போம்படி மோஹசாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து விபரீத நிஷ்ட$_2$ராம்படி பண்ணிபோகட்டானிறே.*

**விளக்கவுரை**

அப்படிப்பட்ட கஜேந்திரனைப் போன்ற ஞானி

களையும் சிலகாலம் (லீலையிலே) பிறவியில் களிப்பாறும்படி செய்து பின்னர் அங்கீகரிக்கும். வறட்டுப் பிடிவாத ஞான வைராக்கியமுடையவரானால் 94. ''என்னுடைய அடியவர்களை நிந்திப்பவர்கள் நூறுகோடி வருடங்களானாலும் நான் பொறுக்கமாட்டேன்'' என எம்பெருமான் கூறினபடி நெடுங்காலம் லீலைக்கு விஷயமாகி என்றும் ஸம்ஸாரியாய்ப் பிறப்பார்கள்.

ஆகையாலே, நாம் பகவானுடைய அபிமானத்திற்கு உட்பட்ட பாகவதர் அல்லவா? நமக்கு அச்சமென்? என்று கர்வங் கொண்டு அகங்காரம், மகளிர் இன்பம் போன்ற வற்றில் ஈடுபாடு, பாகவதாபசாரம் முதலானவற்றில் தொடர்பு கொள்ளக்கூடாது; (ஸம்ஸாரியாய்) இவ்வுலக வாழ்வில் கட்டுப்பட்டவராயிருக்கவுங் கூடாது. முற்காலத் தில் ஜம்பாதி அரக்கர்கள் தனக்கு பக்தர்களாயிருந்தும், பிறர்க்கு இன்னல் விளைவித்ததனாலேயே அவர்கள், தன்னை அகன்றுபோம்படி மயக்க நூற்களைப் (மோஹன சாஸ்த்ரங்களைப்) படைத்து மாறுபட்ட ஒழுக்கநிட்டராம்படி பண்ணி விட்டானல்லவா? இறைவன்.

**123. மூலம்**

*அப்படியே ஸுக்ருதவிஶேஷத்தாலே; வைஷ்ணவ க்₃ருஹங்களிலே பிறந்துவைத்தும், ஆஸுர ப்ருக்ருதி களாய் பூதத்ரோஹிகளாய் அர்த்த காமநிமித்தமாக பாகவதாசாரபரரானால், விபரீத ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து ஸகல ஶப்தங்களுக்கும் விபரீதார்த்தங்களைத் தோற்று வித்து நிஷித்தாநுஷ்டாந நிரதராம்படி பண்ணி தனக்கசலாம்படி பொகடும். அவன் புறம்போக்கி விடுகைக்கு ஹேதுக்கள் மூன்றிறே. ''மற்றோர் தெய்வம்*

**பேணப்புறத்திட்டு'' (*திருவாய் 4-10-6*) என்றும், ''நெறிகாட்டி நீக்குதியோ'' (*பெரிய திருவந்தாதி - 6*) என்றும், ''அகற்றநீவைத்த மாயவல்ஐம்புலன் களாமவை'' (*திருவாய் 5-7-8*) என்றும் ''பலநீகாட்டிப் படுப்பாயோ'' (*திருவாய் 6-9-9*) என்றும் சொல்லுகிற தேவதாந்தர, ஸாதநாந்தர, விஷயாந்தரங்களிலே ப்ராவண்யம் தன் பக்கல் நின்றும் பிரிந்து போகைக்கு ''வைத்தமாயங்கள்'' என்று ஆழ்வார் அருளிச்செய்தாரிறே.**

**விளக்கவுரை**

அப்படியே, முற்பிறவிகளிற் செய்த புண்ணியங் களாலே வைணவ இல்லங்களில் பிறந்துங்கூட, அதன் சிறப்பை அறியாமல் அசுரமனங்கொண்டவராய், மக்களை ஏமாற்றுபவராய், பொருள் இன்பங்காரணமாக பாகவத அபசாரத்தில் ஈடுபட்டார்களானால், அப்படிப்பட்டவர் களுக்கு இறைவன் விபரீத புத்தியைப் பிறப்பித்து பூருவாசார்யர் நூல்களில் வரும் சொற்களுக்கு முரண்பட்ட பொருளைத் தோற்றுவித்து தாழ்ந்த ஒழுக்கத்தைப் பேணும்படி பண்ணி, தனக்கு அசலாக்கித் தன்பக்கல் வாராதபடி தள்ளிவிடும். இறைவன் இத்தகையவர்களைப் புறம்பே தள்ளி விடுவதற்குக் காரணங்கள் மூன்றுள அவை,

''மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு'', ''நெறிகாட்டி நீக்குதியோ'', ''அகற்றநீ வைத்த மாயவல் ஐம்புலன்களாமை'', ''பலநீகாட்டுப்படுப்பாயோ'' என்றும் சொல்லுகிற பிறதெய்வங்கள், பிற ஸாதநங்கள், இவ்வுலக இன்பத்தில் ஈடுபாடு இவையே, தன்பக்கல் நின்றும் பிரிந்து போவதற்கு ''வைத்த மாயங்கள்'' என்று ஆழ்வார் அருளிச் செய்தாரல்லவா.

**124. மூலம்**

இவை மூன்றும் தனித்தனியே அவன் விடுகைக் குடலாகயிருந்தாலும், ஒன்றுக்கொன்று க்ரூரமாயிருக்கும். இவ்வர்த்தம் அவர் பாசுரங்களிலே தோன்றும், "போற்றி மற்றோர் தெய்வம் பேணப்புறத்திட்டு" என்கையாலே தேவதாந்தர ஸ்பர்ஶம் புறத்து இட்ட மாத்ரமாய், 'நெறிகாட்டி நீக்குதியோ" என்று உபாயாந்தரங்களில் தள்ளிப் போகடுகையாய், "பலநீ காட்டிப்படுவாயோ" என்னும் "இன்னங் கெடுப்பாயோ" என்று விஷயாந்தர ஸ்பர்ஶம் ஸ்வரூபநாஶமாம்படி பண்ணி விடுகை என்று நிஸ்ஸம்ஶயமாக அருளிச்செய்தாரிறே. இப்படி ஸ்வரூப நாஶகமாக விஷயாந்தரமிறே த₃ாரபுத் ராதி₃ஸங்கம்.

**விளக்கவுரை**

மேலே கூறப்பட்ட மூன்று விஷயங்களும் தனித் தனியே இறைவன் நம்மை விட்டு விடுவதற்குக் காரண மாயிருந்தாலும், ஒன்றுக்கொன்று கொடியவை யாயிருக்கும். இவ்வர்த்தங்கள் ஆழ்வார் பாசுரங்களிலே தோற்றும். "போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறந்திட்டு" என்பதால் பிற தெய்வங்களின் தொடர்பு இறைவன் அது செய்தவர்களைப் புறத்தே தள்ளித் தன்னிடமிருந்து நீக்குவதற்குக் காரணமாயிருக்கும். "நெறிகாட்டி நீக்குதியோ" என்று இறைவன் தவிர்த்த வேறு உபாயத்தைப்பற்றின வர்களை ஸித்தோபாயமான தன்னைவிட்டு மற்ற உபாயங்களில் அவர்களைத் தள்ளிவிடுவான், "பல நீகாட்டிப் படுப்பாயோ" என்றும், இன்னங்கொடுப்பாயே" எனப் பெண்கள் இன்பம் தொடர்பான வேறு விஷயங்களின் நாட்டம் ஆன்மாவின் இயல்பை நாசமாக்கும் என்று ஐயம்மற இம் மூன்றையும் அருளிச் செய்தாரல்லவா ஆழ்வார். இப்படி

ஆன்மாவின் உண்மை இயல்பை அழிப்பதான வேறு விஷயங்களே மனைவி மக்களிடத்தில் கொள்ளும்பற்று;

### 125. மூலம்

**லோகத்திலே ஒரு க்ஷுத்ரமநுஷ்யன் அபி$_4$மாநத்திலே ஒதுங்கினவள், மற்றொருவரிடத்திலே ஸராகையானால் சித்ரவதம் பண்ணிப் போராநிற்க, ஸர்வஸ்வாமியாய் ஸகலேதர விலக்ஷணனாய் பரமபே$_4$ாக்$_3$ய பூ$_4$தனாய் ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்து ததபி$_4$மாநத்திலே யொதுங்கி ஆகாரஷட்கத்தாலே பிராட்டியோடு ஒத்த இச்சேதனன், மாயா மோஹிதனாய்க் கொண்டு அவனையும் த$_3$ாரபுத்ராதி$_3$களையும் தன்னுடைய ராகத்துக்கு விஷயமாக்கினால், ராஜபார்யை அஶ்வஶோதகனிடத்தில் கண்வைத்தால் சித்ரவதம் பண்ணுமா போலே, நிக்ரஹித்துப் பொகடுமதொழிய; ஸ்வபோகத்தில் கூட்டிக்கொள்ளானிறே. அவனுக் கிப்படி அப்ராப்த விஷய ஸங்கம் அத்யந்த து$_3$ஸ்ஸக மென்று அறிந்தவராகையாலே,**

### விளக்கவுரை

உலகத்தில் ஒருவனின் அபிமாநத்தில் ஒதுங்கிய ஒரு பெண்மகள் (மனைவி), மற்றொருவரிடத்தில் சோரம் போனால் அவளது புருஷன் அவளைக் கடுமையாகத் தண்டிப்பதைக் கண்கூடாகக் காணாநின்றோம். எல்லோருக்கும் தலைவனாய், பிறரைக் காட்டிலும் மிக்க சிறப்புடையவனாய், மேலான இன்பம் நல்கு பவனாய், ஸர்வ சக்தியான எல்லாத் தலைவர்களுக்கும் தலைவனாய் இருக்கும் இறைவனை பஞ்சஸம்ஸ்காரம் மூலம் அடைந்து,

அவனது அபிமாநத்திலே ஒதுங்கி ஆறு தன்மைகளாலே பெரியபிராட்டியாரோடு ஒத்த இம்மனிதன், மாயையாலே மயங்கி தன்மனைவி மக்களையும், அப்படிப்பட்ட இறைவ னையும் தன்னுடைய ஆசைக்கு (இன்பத்துக்கு) விஷய மாக்கினால், (அதாவது, சிற்றின்பத்தையும் பேரின்பத்தையும் ஒக்க விரும்பினால் என்றபடி) ராஜாவின் மனைவி குதிரைப் பாகனைக் காதலித்தால் - விரும்பினால், அந்த ராஜா அவளை கொடிய தண்டனை அளித்துத் துன்புறுத்துவதுபோல், இறைவனும் (நிக்ரஹம்) தண்டனை அளிப்பானே யொழிய தன்னுடைய அநுபவமான பேரின்பத்தில் கூட்டிக்கொள்ள மாட்டானல்லவா.

**126. மூலம்**

***"வீடுமின் முற்றவும்" (1-2-1) என்றும் "நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்து" (1-2-3) என்றும், "பற்றிலையாய் அவன் முற்றிலடங்கே" (1-2-6) என்றும், "உள்ளமுரை செயல் உள்ள விம் மூன்றையும் உள்ளிக் கெடுத்து இறையுள்ளிலொடுங்கே" (1-2-8) என்று பாஹ்ய விஷய ஸவாஸந த்யாகத்தை விதிக் கிறாரிறே. அவரைப் பின்சென்ற ஆசார்யர்களும், 95. "பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்துந்" (சரணாகதி கத்யம் 6) என்று தொடங்கி ஸகலேதர பரித்யாக$_3$ பூர்வகமான ஸ்வீகாரத்தை அருளிச்செய்தாரிறே. ஆகையாலே நாமரூபங்களாலும், 96. "ஸர்வ த$_4$ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந், லோக விக்ராந்த சரணௌ ஶரணம் தே (அ)வ்ரஜம் விபே$_4$ா" (சரணாகதி கத்யம் 6) என்று; இதில் சொன்ன அர்த்தத்தை அநுஷ்டியாதே மித்யாவசநங்கள் சொல்லுகிற நைச்யோக்திகளாலும் ப்ரயோஜநமில்லை.***

**விளக்கவுரை**

அந்த இறைவனான எம்பெருமானுக்கு இவ்வாறு தகுதியல்லாத மனைவி மக்கள் உறவினர் முதலானாரிடத்துப் பற்று வைப்பது மிகவும் தாழ்ந்தது என அறிந்தவராகையாலே, ''வீடுமின் முற்றவும்'' என்றும், ''நீர்நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து'' என்றும், ''பற்றிலையாய் அவன் முற்றில் அடங்கு'' என்றும், ''உள்ளமுரை செயல் உள்ள இம்மூன்றையும் உள்ளிக் கெடுத்து இறையுள்ளி லொடுங்கே'' என்று ''புறவிஷயப் பற்றை நன்றாக விடுங்கோள்'' என ஆழ்வார் தம் இரண்டாம் திருவாய் மொழியில் விதிக்கிறார் அல்லவா. அவரைப் பின்பற்றிய ஆசாரியர்களும்,

95. ''தந்தை, தாய், மனைவி, மக்கள், உறவினர் அனைவரையும் வாசனையோடு விட்டு, எம்பெருமானே! தேவரீருடைய உலக மளந்த பொன்னடிகளையே சரணமடைந்தேன்'' என்றுதொடங்கி, 96. எல்லா வற்றையும் விடுதல்முன்னாக இறைவனையே உபாயமாகப் பற்றும் பற்றை அருளிச் செய்தாரல்லவா, எம்பெருமானார். பகவான் தொடர்பான பெயரையும், அவன் சின்னந்தரித்த உருவத்தை யுமுடையவர்கள்,

96. ''எல்லா உபாயங்கள், கைவல்யம் உள்ளிட்ட பயன்கள் ஆகிய அனைத்தையும் விட்டு உலகமளந்த பொன்னடியை உபாயமாகப் பற்றிச் சரணமடைந்தேன்'' என்றார் ஜகதாசார்யர். இதில் சொன்ன பொருளை ஆராய்ந்து மேற்கொண்டிடாமல் பொய்யான சொற்களாலே சொல்லுகிற 'அடியேன், குடியேன்' என்று கூறுகின்ற தாழ்ச்சியான சொற்களால் ஒரு பயனுமில்லை.

### 127. மூலம்

*97. "பூ$_4$யிஷ்ட$_2$ாந்தே நம உக்திம் விதே$_3$ம" (யஜுர் வேதம்) என்றும், 98."த்வத$_3$ங்க்$_4$ரி முத்$_3$தி$_3$ஶ்ய கத$_3$ாபி கேநசித்$_3$ யத$_2$ாதத$_2$ா வாபி ஸக்ருத் க்ருதோஞ்சலி:" (ஸ்தோத்ர ரத்னம் 28) என்றும், 99. "அஞ்சலி: பரமா முத்$_3$ரா க்ஷிப்ரம் தே$_3$வ ப்ரஸாதி$_3$நீ" (பரத்வாஜ ஸம்ஹிதை) என்றும், "எழுதுமென்னும் இது மிகை" (திருவாய்மொழி 9-3-9) என்று, அபி$_4$யுக்தரும், அவன்தானும், ஆழ்வார்களும் அஞ்சலிமாத்ரமே போருமென்றும், அதுவும் மிகையென்றும்,*

### விளக்கவுரை

97. (எம்பெருமானே!) நான் உன்னுடையவன் என்று வெறும் வார்த்தையாலே சொன்னாலும் அதைக்கேட்டு மிகவும் மகிழ்கின்றாய்'' என்று யசுர்வேதத்துள்ளும், 98."(இறைவனே!) உனது திருவடியைக் குறித்து, எப்போதாவது எவனாலேயாவது ஒருகால் செய்யப்பட்ட (அஞ்சலி) வணக்கமானது ''அப்போதே பாவங்களை மீதியில்லாமல் போக்குகிறது'' என ஸ்ரீஆளவந்தாரும் கூறியிருப்பதனாலும், 99.''மிக விரைவில் பகவானை உகப்பிக்கும் (அஞ்சலியே) கை - கூப்புதலே மேலான அடையாளமாயிருக்கிறது'' என்றும் ''இறைவனுக்குப் பூசை புரிதற்காக, தீபம், தூபம், நீர், பூ முதலானவற்றை எடுத்துச்செல்லுவோம்'' என்று பூசிக்க வேண்டாம்; இவற்றை எடுத்துச் செல்லுவதே அவனுக்கு மிக்க உகப்பாம் என்று,

### 128. மூலம்

*பரிகணந வேளையிலே ஒன்று இரண்டு என்ற தொடங்கி இருபத்தாறு என்றால், இருபத்தாறாமவன்*

***நானே என்று வருவனென்றும் அத்யந்த ஸுலபமாகச் சொல்லுகிறதென்? என்னில், ஆஶ்ரய ணோந்முக சேதநன், ஸ்வதோ₃ஷத்தையும் ஆகிஞ்சந்யத்தையுங் கண்டு ப₄யப்பட்டு மீளாதபடி ஶரண்ய ப்ரபாவஞ்சொல்லுகிற தித்தனை. ஶரணாகத₃ ரக்ஷணம் சொல்லுகிறவளவில் சொல்லுகிற வார்த்தைகளன்று. ஸ்வஶேஷத்வாந்ய ஶேஷத்வங்கள் நிவர்த்தமாய் ப₄க₃வத்விஷயத்தில் கை வைத்தால் பின்னை க்ரமமாக ''பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமே யாடி மெய்யே பெற்றொ ழிந்தேன்'' (திருவாய் மொழி 5-1-1) என்கிறபடியே கண்டாதுபரியாக நல்வார்த்தைச் சொன்னாலும் அது மெய்யாம்படித் தலைக்கட்ட வல்ல ஸர்வ ஶக்தி யானவன், காருண்யத்தாலே அபேக்ஷிதமான அதி₄ காரங்களெல்லாம் தன்னடையே ஸித்திக்குமென்று அப்படி ஸுலபமாகச் சொலிற்று என்று கொள்ள வேணும்.***

**விளக்கவுரை**

சான்றாண்மையில் சிறந்தவராம் ஆளவந்தாரும், நம்மாழ்வாரும், அவ்விறைவனுக்கும் அஞ்சலி மாத்திரமே போதும் என்றும் அதுவும் மிகையென்றும், கணக் கெண்ணும்போது ஒன்று இரண்டு என்று தொடங்கி இருபத்தாறு என்றால், இருபத்தாறா மவன் 'நானே' என்று வருவானென்றும் மிகவும் எளியவனாகச் சொல்லப் பட்டுள்ளதே? எனின், ஒரு மனிதன் இறைவனிடம் அடைக் கலப் பொருளாக அடைவதற்கு முன்னர் தான் முற்பிறவி யிலும் இப்பிறவியிலேயும் செய்த பாவங்களையும், புண்ணியமில்லாத் தன்மையையும் நினைத்து அஞ்சி

மீளவொண்ணாதபடி இறைவனுடைய பெருமைகளை மேலே கூறப்பட்டது என்றறிக. சரணமடைந்தவனைக் காக்கும் இலக்கணஞ்சொல்லுகிறவளவில் சொல்லுகிற வார்த்தைகள் அவையன்று. தனக்கடிமை பிறர்கடிமை ஆகிய இவைகளை நீக்கிக்கொண்டு பகவத் விஷயத்தில் ஈடுபாடு கொண்டால் பின்னர் முறைப்படி, ''பொய்யே கைம்மை சொல்லி புறமே புறமேயாடி மெய்யே பெற்றொழிந்தேன்'' என்கிறபடி கண்டதிற்கு மேற்பட உபரியான - அதிகமான போலியான நல்வார்த்தைச் சொன்னாலும், அது மெய்யாம்படி செய்யவல்ல மிகுந்த ஆற்றல் படைத்தவனான இறைவன் அருளாலே வேண்டிய அதிகாரங்களெல்லாம் தானே வந்து வாய்க்கும் என்று கொள்ளுதல் வேண்டும்.

**129. மூலம்**

**இப்படிக் கொள்ளாதே அதுவேபொருளென்றால், கர்மஜ்ஞாநாதி$_3$களும் வேண்டா, ப$_4$க்திப்ரபத்திகளும் வேண்டா, ஆசார்ய அபி$_4$மாநமும் வேண்டா, வைஷ்ண வத்வ மும் வேண்டா, தே$_3$வதாந்தராதி$_3$ நிவ்ருத்திகளும் வேண்டா, ஶாஸ்த்ரார்த்தங்களும் வேண்டா, அக்ருத்ய கரணாதி ப$_4$ாக$_3$வத$_3$ாபசார பர்யந்தமான நிஷித்தா நுஷ்ட$_2$ானத்துக்கும் ப$_4$யப்பட வேண்டா, இஷ்டமானபடி ப்ரவர்த்தித்து, ஒருகால் ஒரு அஞ்சலி பண்ணினால் கார்யகரமாம் என்னுமர்த்தம் ப்ரஸக்தமாய், மோக்ஷ ஶாஸ்த்ரத்துக்கு ப்ரயோஜநமில்லையாய் ஆழ்வார் ஆசார்யர்களுடைய மறுவற்ற வசநாநுஷ்ட$_2$ாநங்களும் வ்யர்த்தமாய் விஷயவைலக்ஷண்யத்துக்கும் துச்சத்வம் வரும், வேத$_3$ம் சொன்னால் அர்த்தவாத$_3$மென்னலாம்;**

**விளக்கவுரை**

இவ்வாறு கொள்ளாமல் அப்பாடலிலுள்ள சொற்களே பொருளென்றால், கருமயோகம் ஞானயோகம் பக்தியோகம் ப்ரபத்தி யோகம் ஆசார்யாபிமானம் ஆகிய உபாயங்கள் வேண்டா; வைணவ இலக்கணங்களும் வேண்டா; பிற தேவதைகளை வணங்குதலில்லாத் தன்மையும் வேண்டா; சாத்திரப் பொருள்களும் வேண்டா; செய்யத் தகாதவையான பாகவதாபசாரம் முதலான தாழ்ந்த ஒழுக்கத்துக்கும் அஞ்ச வேண்டா; விருப்பமானபடி செயல்பட்டுக் கொண்டு ஒரே ஒருமுறை அஞ்சலி பண்ணினால் பயனளிக்கும் என்னும் வினா எழுந்து அது முக்தி நூலுக்குப் பயனில்லையாகி ஆழ்வார் ஆசார்யருடைய குற்றமில்லாத உபதேச அனுட்டானங்களும் வீணாகி அளவிட முடியாத பெருமை யையுடைய சிறப்புக்களுக்குக் குற்றம் வரும்.

**130. மூலம்**

*ருஷிகள் சொன்னால் ப்$_3$ரமவிப்ரலம்பாதி$_3$ தோஷங்கள் சொல்லலாம்; ஈஶ்வரன் சொன்னால் தாமஸ ஜநமோஹக வாக்யங்கள் என்னலாம்; மயர்வற மதிநலம் அருளப்பெற்று சேதநருடைய ஹிதத்திலே ப்ரவர்த்திக்கிற யத$_2$ாதர்ஶந ஸாமர்த்யமும் யத$_2$ா த்$_3$ருஷ்டார்த்தவாதித் வங்களுமுடைய ஆழ்வார் "பொய்யில் பாடலாயிரம்" என்று அஸத்யகந்தமில்லாதபடி அருளிச்செய்த ப்ரபந்தத்தில்,*

*"தொழுதெழு என்மனனே" (திருவாய்மொழி 1-1-1) என்று அஞ்சலி மாத்ரமே உஜ்ஜீவந ஹேதுவாமென்றும், "பத்துடை அடியவர்க்கெளியவன்" (திருவாய்மொழி*

*1-3-1)* **என்று, பக்திலேஶமடையார்க்கெளியனென்றும், "புரிவது வும் புகைபூவே" (திருவாய்மொழி 1-6-1) என்று ஏதேனும் ஒரு புகையும் புஷ்பமும் அபி₄முக்யஸூசகமாக ஸமர்ப்பித்தால் அதுவே போருமென்றும், "கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில் எண்ணிலும் வரும்" (திருவாய்மொழி 1-10-2) என்று,**

**விளக்கவுரை**

வேதஞ் சொன்னால் அது புகழ்தலில் நோக்கென்றும் வெறும் ஏட்டுச்சுவடி என்றும் கூறலாம்; முனிவர்கள் சொன்னால் அவை மயக்கத்தாலும் வஞ்சகத்தாலும் கூறியது எனலாம்; இறைவனாம் மாயோன் சொன்னால் அவை கீழ்மக்களாம் தாமச குணமுடையோரை மயக்கும் வாக்கியங்கள் எனலாம்; மயர்வறும்படி நல்ல ஞான பக்திகளைப் பெற்று மக்களுடைய நன்மையை நோக்கிச் செயல்படுகின்ற உள்ளவற்றை உள்ளவாறு காணும் வல்லமையும், தாம் கண்ட மெய்ப் பொருள் தத்துவத்தை உண்மையாகக் கூறும் ஆழ்வார், "பொய்யில் பாடலாயிரம்" என்று, பொய் என்பதே இல்லை என்னுடைய நூலில் என்று தாம் அருளிச்செய்த பிரபந்தத்தில்,

"தொழுதெழு என் மனனே" எனத் திருவாய் மொழியில் கூறுகிறவாறே, அஞ்சலி ஒன்று மாத்திரமே உய்வடைதற்குக் காரணமென்றும், "பத்துடை யடியவர்க் கெளியவன்" என்று பக்தி சிறிதுடையவர்க்கும் மிக எளியென்றும், "புரிவதும் புகை பூவே" என்று யாதானும் ஒரு புகையும் ஒரு பூவையுமே விருப்போடு இறைவனுக்கிட்டால் அதுவே போதும் என்றும்,

**131. மூலம்**

*பரம பக்தி பரிகணங்களுக்கு ஒக்க முகங்கொடுக்கும் என்றும், "கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று, ஓர் எண் தானுமின்றியே வந்தியலுமாறு" (திருவாய்மொழி 1-10-5) என்று அவன் அபே₄க்ஷா நிரபே₄க்ஷமாக அருளும்படி கண்டாயே நெஞ்சமே! என்றும், "சிற்றவேண்டா சிந்திப்பே அமையும்" (திருவாய்மொழி 9-1-7) என்று பரக்கவொரு வ்யாபாரம் பண்ணவேண்டா இச்சாமாத்ரமே போரும் என்றும் இப்புடைகளிலே ஆஶ்ரயணம் ஸுகரமாம்படி சொல்லி, "சரணமாகுந் தனதாள் அடைந்தார்க்கெல்லாம், மரண மானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" (திருவாய்மொழி 9-10-5) என்று தன் திருவடிகளைப் பற்றினார்க்கெல்லாம் அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகேஷ்டப்ராப்திக்குத் தானே உபாயமாய் ஶரீர விமோசநாநந்தரம் பரமபதம் கொடுக்குமென்று அருளிச் செய்தது பொய்யோ? என்னில்,*

**விளக்கவுரை**

"கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில் எண்ணிலும் வரும்" என்று மேலான பக்தியுடையார்க்கும் அஃதல்லாத எண்கணக்குக் போட்டு இருபத்தாறு என்கிறவர்க்கும் ஒக்கமுகம் கொடுப்பான் இறைவனென்றும், "கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று, ஓர் எண் தானுமின்றியே வந்தியலுமாறு" என இறைவன் அந்த எண்ணும் மிகையென்னும்படி ஒரு மனிதனின் விருப்பத்தை எதிர்பாராமலேயே அருள்செய்வதைக் கண்டாயே நெஞ்சமே!

என்றும், ''சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும்'' என்று இறைவன் திறத்தில் பரந்த அரிய செயலை செய்யாதீர்; அவனிடத் தில் அன்பு மாத்திரம் வையுங்கோள் போது என்றும் இப்புடைகளில் பகவானை அடைதல் மிகவும் எளிதென்று கூறி, ''சரணமாகும் தனதாள் அடைந்தார்க் கெல்லாம் மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்'' என்று தன் திருவடிகளைப் பற்றினார்க் கெல்லாம் இறைவன் வினைகளைப் போக்குதல் முன்பாக இட்டமான பேரின்பத்துக்குத் தானே வழியாக நின்று இவ்வுடலை விட்ட பின்னர்ப் பரமபதங் கொடுப்பான் என்றருளிச் செய்த அவை பொய்யோ? எனின்,

132. மூலம்

***இதுக்கு ஸமாதாநம், மதுரகவியாழ்வார் கண்ணி நுண்சிறுத்தாம்பினால் ப்ரபந்தத்தில் அருளிச்செய்தாரிறே. எங்ஙனே? என்னில், "அன்னையாய் அத்தனாய் என்னை யாண்டிடுந் தன்மையான்" (கண்ணிநுண் சிறுத்தாம்பு - 4) என்று இவ்வாழ்வார் முந்துற முன்னம் இச்சேதநர் அஞ்சாதபடி மாத்ருவத்வத்ஸலராய் ஶரண்ய ப்ரபாவஞ் சொல்லி வஶீகரித்து உபலாளநம் பண்ணி அநந்தரம் பூத்த ஸம்ஸாரிகளாய்ப் போகாதபடி பித்ருவத் ஹிதபரராய் ஶரணாகதலக்ஷணஞ் சொல்லி வஶீகரித்து, ஸம்மதிக்கப் பண்ணி என்னையாண்டார் என்று அருளிச் செய்தாரிறே. அதாவது, ப்ரஜையினுடைய க்ரந்தியை சிகித்ஸிப் பிக்கும் போது மாதாவானவள் வாயிலே ஸ்தந்யங் கொடுத்து பிதா வானவன் அருகேயிருந்து இருவருங்கூடிப் போயிற்றுப் போயிற்று என்று உபலாளித்து க்ரமக்ரமமாக ஶஸ்த்ர அக்நி கர்மங்களாலே நிர்த்துஷ்டமாக்கி ரக்ஷிக்குமாபோலே,***

**விளக்கவுரை**

இதற்கு விடை மதுரகவியாழ் வார் கண்ணி நுண் சிறுத்தாம்பில் அருளிச்செய்தார் அல்லவா? அவை எங்ஙனே எனின், ''அன்னையாய் அத்தனாய் என்னை யாண்டிடுந் தன்மையான்'' என்று நம்மாழ்வார் முதல் முன்னம் இம்மக்கள் அஞ்சாதபடி தாயைப் போன்ற அன்புடையவராய் இறைவனின் மகிமைகளையெல்லாஞ் சொல்லி வசப்படுத்தி அம்மக்களைக் கொண்டாடி, பின்னர்ப் பிறவியில் கட்டுப்பட்ட மக்களாய் ஒழிந்து போகாதவாறு தந்தையைப் போன்று நல்லது செய்பவராய் அடைக்கல நெறியின் தன்மைகளைச் சொல்லி வசப்படுத்தி 'ஓம்' என்று ஏற்றுக்கொள்ளச் செய்து என்னையாண்டார் என்று அம் மதுரகவியாழ்வார் கண்ணிநுண் சிறுத்தாம்பில் அருளிச் செய்தாரல்லவா, அதாவது, குழவியினது புண்ணை வாளால் அறுவை செய்யும் போது, தாயானவள் குழவியின் வாயிலே தன் முலைப்பால் கொடுத்துத் தந்தையும் தாயும் அருகேயிருந்து அவ்விருவருங் கூடி நோய்போயிற்று; போயிற்று என்று அக்குழவியைக் கொண்டாடி, சிறிது சிறிதாக வாள் நெருப்பு முதலான செயல்களாலே அப் புண்ணைப் போக்கிக் காப்பதுபோல்,

**133. மூலம்**

***இவ்வாழ்வார் முந்துற முன்னம் ''தொழுதெழு'' என்று தொழுகையே போருமென்று சொல்லி அநந்தரம், ''வீடுமின் முற்றவும்'' என்று தத் வ்யதிரிக்தங்களான பஶுபுத்ர மித்ர களத்ர க்$_3$ருஹ க்ஷேத்ராதி$_3$யான ஸமஸ்தமும் விடுங்கோள் என்ன, அநாதி$_3$யாக வாஸனை பண்ணிப்போந்த விஷயங் களைக் கடுக விடப்போமோ?***

*அவனையாஸ்ரயித்து க்ரமமாக விடுகிறோம் என்ன, அது கூடாது; சண்டாளர் வஸித்துப் போந்த ஸ்தலத்தை ப்ராஹ்மணருக்காக்கும் போது சில வற்றைக் கூட்டிக் கொடுக்கப்போமோ, 100. "அஹம்ம மேதிசண்டாள:" ( ? ) என்று அஹங்கார மமகார தூ$_3$ஷிதங்களானவை யெல்லாம்,*

**விளக்கவுரை**

நம்மாழ்வார் முதலில், ''தொழுதெழு'' எனத் தொழுகையே போதுமென்று சொல்லிப் பின்பு, ''வீடுமின் முற்றவும்'' என்று இறைவனைத் தவிர்த்த ஆக்கள், மக்கள், நண்பர், மனைவி, இல்லம், நிலம் முதலிய எல்லாவற்றிலும் உங்களுக்கிருக்கும் பற்றை விடுங்கோள் என்று கூறவும்,

தொன்மைக் காலந் தொடங்கி உலக விஷயங்களில் தொடர்பு கொண்டிருந்த அவ்விஷயங்களைச் சீக்கிரம் விடவேண்டு மென்றால் விடப்போமோ? இறைவன் திருவடியை அடைந்தபின் படிப்படியாக விடுகிறோம் என்று இம்மக்கள் கூற, அது கூடாது; ஆசார நல்லொழுக்கமில்லாத கீழ்மகன் வாழ்ந்திருந்த இடத்தை - இல் லத்தை வேதமோதிய நல்லொழுக்கமுடைய அந்தணர்க்காக்கும் போது, அவ்விடத்திலிருக்கும் பொருள்களைச் சில கூட்டியும், சில கழித்தும் கொடுக்கலாமோ, 100. ''நான், எனது என்னும் செருக்குத் தாழ்ந்த நிலையை அடைவிக்கும்'' என்றும், நான், எனது என்று

**134. மூலம்**

*101. "ப$_4$வந்தி ஸர்வே ப்ரதிகூலரூபா:" (ஹஸ்திகிரி மஹாத் மியம் 112 - 64) என்று நினைத்து "வீடுசெய்து*

**உம்முயிர் வீடுடை யானிடை வீடு செய்மின்'' என்று அவையெல்லாம் விட்டு ஆத்மஸமர்ப்பணம் பண்ணுங்கோளென்று உபதே$_3$சித்து தில தைலவத் து$_3$ர்விவேசமான தே$_3$ஹத்தையும் தது$_3$நு ப$_3$ந்தி$_4$களாய் விடமாட்டாத பார்யா புத்ராதி$_4$களையும் தது$_3$ஜ்ஜீவந ஹேதுவான க்$_3$ருஹ க்ஷேத்ர த$_4$ந த$_4$ாந்யாதி$_3$களையும் எப்படி விடவேணும் என்ன, "நீர் நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின்'' என்று தே$_3$ஹத்தில் அஹம் புத்தியையும் ஆத்மாவில் ஸ்வாதந்த்ர்ய பு$_3$த்$_3$தி$_4$யையும், தத$_3$நுப$_4$ந்திகளில் மமதா புத்தியையும் கீழ்வேரோடே மூலச் சேதமாம்படி நிவர்த்தித்துக்கொண்டு ஸ்வாமியைச் சேரப்பாருங்கோள் என்று அருளிச்செய்தார்.**

**விளக்கவுரை**

கொள்பவையெல்லாம், 101. நிலம், உறவினர், தானியம், பிள்ளை, மனைவி, பசு, இல்லம் என்ற, ஓ நாதனே! தேவரீர் திருவடித் தாமரைகளில் பக்தியுள்ளவர்களுக்கு இவை யெல்லாம் நெருப்பைப் போன்று சுடக்கூடிய விரும்பத்தகாதவைகளாகின்றன'' என அத்திகிரி மாஹாத்மியத்தில் கூறுகிறபடியே விரோதிகளாகின்றன என்று நினைத்து, ''வீடுசெய்து உம்முயிர் வீடுடை யானிடை வீடு செய்மின்'' என்று அவையெல்லாம் விட்டுவிட்டு உங்கள் உயிரை இறைவனிடம் ஒப்படையுங்கள் என்று உபதேசித்து எள்ளுக்குள் எண்ணெய்போன்று பிரிக்கவியலாத மிகவும் கெட்டவற்றோடு கூடிய தேகத்தையும் அதனுடன் கூடிய உற்றார் உறவினர்களையும் மனைவி, மக்களையும் விடமாட்டாதவர்களாய், உயிர்வாழ்தலுக்குக் காரணமான இல்லம், நிலம், பணம், தானியங்களையும் எவ்வாறு விடவேண்டும் எனில், ''நீர் நுமது என்றிவை வேர்முதல்

மாய்த் திறை சேர்மின்'' என்று உடம்பில் 'நான்' என்ற நினைவும், ஆந்மாவில் தனக்குத்தான் உரிமை என்னும் நினைவும், அதன் தொடர்பானவற்றில் 'எனது' என்னும் நினைவையும், கீழ்வேருடன் களைந்து ஸ்வாமியான இறைவனைச் சாருங்கள் என்றே ஆழ்வார் அருளிச்செய்தார்.

**135. மூலம்**

***இவை வேர்முதல் மாய்த்திருக்கையாவது, இந்த ஶத்ரு து$_3$ர்வர்க்கமான ஶரீரத்தைத் தன்னை ஹிம்ஸிக்கிற ஶத்ருவாக நினைத்து ததி க்ஷீராஜ்யாதி$_4$களாலே வளர்த்துக் கொள்ளாதே ஜாத்யாஶ்ரய நிமித்த தோஷங்களில்லாதபடி, பரிசுத்த த்ரவ்யங்களைப் பெருமாளுக்கமுது செய்யப் பண்ணி ஸத்தா த$_3$ாரண மாத்ரம் ப்ரஸாத ப்ரதிபத்தியோடே லக்வாஶியாய் இந்த்ரியங்களுக்கிடங்கொடாதே இத்தை நிக்ரஹிக்கிற பேரைக்கண்டு பரமாப்தராக நினைத்து இதுக்கு வர்த்தகரானாரை ஶத்ருக்களாக பு$_3$த்$_3$தி$_4$பண்ணு கையுமாயிற்று; இவ்வாத்ம வஸ்து ததேக ஶேஷமாய் ததேக பரதந்த்ரமுமாயிருக்குமென்று பு$_3$த்$_3$தி$_4$ பண்ணுகையு மாயிற்று, அஹங்காரம் த்யாஜமென்று ப்ரதிபத்தி பண்ணுகை.***

**விளக்கவுரை**

இவை வேர்முதல் மாய்க்கையாவது, தீயவைகளின் சேர்க் கையாலானதும் விரோதிகளுக்கு இருப்பிடமானதுமான இவ்வுடலைத் (தன்னை) ஆந்மாவை பசிகாரணமாகத் துன்புறுத்துகின்ற பகையாக நினைத்து தயிர் பால் நெய் முதலியவைகளால் உடல் கொழுப்பேறும்படி வளர்த்துக் கொள்ளாமல், ஜாதியிலேயே தாழ்ந்ததான வெங்காயம், வெள்ளைப்பூண்டு, முருங்கைக்காய், முள்ளங்கி, சுரைக்காய்

முதலானவும்; இடத்தால் - ஸம்சாரிகள் கீழ் மக்கள் முதலானவர்களால் கொடுக்கப்பட்டது; இறப்புத் தீட்டு திவசம் ஆகிய தொடர்புடையவர்களால் அளிக்கப்பட்டது மான உணவு வகைகளை வாங்கி உண்ணாது, தூய்மை யுடையனவான (ஸாத்விகமான) உணவு வகைகளை இறைவனுக்கு அமுது செய்து பசிநிமித்தமாக உணவு உண்ண வேண்டும் என்னும் எண்ணத்தோடே உண்டு, எளிமையான வாழ்க்கை வாழ்ந்து கொண்டு ஐம்புலன்களுக்கு இடமளிக்காமல், இவ்வுடலைத் துன்புறுத்துபவர்களைக் கண்டால் மேலான நண்பர்களாக நினைத்தும், உயிருக்கு நன்மை செய்யாமல் இந்த உடலுக்கு நன்மை செய்பவர்களைப் பகைவர்களாக எண்ண வேண்டும். இந்த ஆந்மா இறைவனுக்கே அடிமைப் பட்டவனாகவும், அவனுக்கே இட்டவழக்காயிருப்பவன் என்று எண்ணுதலே அகங்காரத்தை விட வேண்டிய தன்மை என்று நினைத்தல்;

**136. மூலம்**

*இனி, தத₃நுப₄ந்திகளான த₃ாரபுத்ராதி₃களை லங்கையில் பிராட்டிக்கு ஹிம்ஸகரான ஏக கர்ண்யாதி₄ ராக்ஷஸி களைப்போலே நமக்கு பாதகரென்று நினைத்து, 102. "அஸக்திரநபி₄ஷ்வங்க₄:, புத்ரத₃ாரக்₃ருஹாதீ₃ஷு" (?) என்கிற படியே தத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களில் ஸுகது₃க்கங் களின்றிக்கே இவர்களோடு இருக்குமிருப்பு அக்நிகல்பமாய் பரிதபித்துக் கொண்டிருக்குமென் றாயிற்று மமகார த்யாஜ்யமென்று ப்ரதிபத்தி பண்ணுகை.*

*ஆகையாலே, 103. "ஶரைஸ்துஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரப₃லார்த்த₃ந:, மாம் நயேத்₃யதி₃ காகுஸ்த₂: தத்தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" (ஸ்ரீராமாயணம் ஸுந்தர*

*காண்டம் 30-30) என்று அபேக்ஷித்திருக்கிற பிராட்டியைப் போல;*

**விளக்கவுரை**

இனி, அவ்வுடற் தொடர்புடையவராம் மனைவி மக்கள் முதலானோர், இலங்கையில் சிறையிருந்த பிராட்டிக்கு ஒற்றைக் கண்ணையுடைய அரக்கியரைப் போலே நமக்குத் துன்பத்தைத் தருபவர் என நினைத்து, 102. ''மக்கள் மனைவி இல்லம் ஆகிய வற்றில் பற்றின்மையும், அவற்றில் உழலாமையும் வேண்டும்'' எனக் கூறுகின்றபடியே, அவர்களோடு கூடியிருக்கும்போதும் பிரிந்திருக்கும்போதும் இன்பமும் துன்பமும் என்றிராமல், இவர்களோடு இருக்குமிருப்பு நெருப்பிலிருந்து துடிப்பது போலாகும் என நினைக்கும் அன்றுதான் (மமகாரம்) 'என்னுடை யவை' என்பது விடத்தக்கது என நினைத்தல்.

ஆகையால், 103.''பகைவர்களின் ஆற்றலையழிக்க வல்ல இராமபிரான் இலங்கையை அம்புகளாற் கலக்கி என்னை மீட்டுச் செல்வாராகில், அச்செயல் அவருக்கே தக்கதாகும்'' என்று விருப்பங்கொண்ட பிராட்டியைப் போலே,

**137. மூலம்**

***சிறைக்கூடமானஶரீரத்தையும்,ராவணனைப்போலே ஆத்மாபஹாரியான துர்மோஹத்தையும் ராக்ஷஸிகளைப் போலே பாதகரான த$_3$ாராபுத்ராதி$_4$ ஸங்கத்தையும் விடுவித்து, 'என்னைக் கடாக்ஷிப்பது எந்நாளோ?' என்று அபேக்ஷித்துக் கொண்டிருக்கு மன்றாயிற்று, அஹங்கார மம காரங்களை,***

**விளக்கவுரை**

சிறைச்சாலையாம் இவ்வுடலையும், இராவணனைப் போன்ற ஆந்மாவைத்திருடும் தீயஎண்ணத்தையும், அரக்கிகளைப் போலேதுன்பஞ்செய்கின்ற மனைவிமக்கள் உறவினர்முதலானார் கூட்டத்தையும் விடுவித்து, 'என்மேல் உன் அருட்பார்வையைச் செலுத்துவது என்றைக்கோ' என்று இறைவனிடம் ப்ரார்த்தித்துக் கொண்டிருக்கும் அன்றுதான் 'யான், எனது என்னும் செருக்கை

**138. மூலம்**

*வேர் முதல் மாய்க்கையென்று சொல்லப்பட்டது. இப்படி யானஆர்த்தி பிறவாதே வாங்மாத்ரத்தாலே பலிதமாகாதே, ஸர்ப்ப தஷ்டம்புடவையால் துடைத்தால் போகாதிறே.*

*அதுவென்? நமஸ்ஸாலே அசித்வத்பாரதந்தர் யத்தை விதித்திருக்க அவனை நிர்ப$_3$ந்தி$_4$த்து தாம் ஆர்த்தராய் ப்ரார்த்திக்கக் கூடுமோ?இத்தால் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம்வாராதோ? என்னில், இது, வந்தேறியன் றிக்கே கைங்கர்யப்ரார்த்தனையைப் போலே தத்ப்ரதி ப$_4$ந்த$_4$கமான அவித்யாகர்ம வாஸநா ப்ரக்ருதி ஸம்ப$_4$ந்த$_3$ நிவ்ருத்தி ப்ரார்த்தனை ஸ்வரூபாநு ப$_4$ந்தி$_3$யாயிருக்கும்; வ்யக்த சதுர்த்தியிலே கைங்கர்ய ப்ரார்த்தனை போலே, இந்த நம:பதத்திலேயிறே இந்த விரோதி$_3$நிவ்ருத்தி ப்ரார்த்தனை ப்ரகாஶிப்பது.'*

**விளக்கவுரை**

வேர்முதல் மாய்த்தல் என்று ஆழ்வார் பாசுரத்தில் சொல்லப்பட்டது. இப்படியாம் இறைவனை அடைதலில்

துடிப்புப் பிறவாமல் வாயால் மாத்திரம் சொன்னாலும் பலிக்காமல், பாம்பால் கடிக்கப்பட்ட இடத்தைப் புடவையால் துடைத்தால் விஷம் போகாதாப் போலே அந்தச் செருக்கு போகாதல்லவா?

அஃதென்? நமப்பதத்தில் அறிவற்ற ஜடப் பொருளைப் போன்றதாம் பாரதந்திரியத்தை - அவனிட்ட வழக்காயிருக்கும் தன்மையைவிதித்திருக்க -இறைவனைக் கட்டாயப்படுத்தித் தாம் பரமபதத்தை அடைவதில் துடிப்புடையவராய் அவனைப்பிரார்த்திக்கக்கூடுமோ? இதனால், தன்னைத்தானே காத்துக்கொள்ள உடன் படும் நிலைவாராதா? எனின்,

இவ்வாறு, இறைவனையடைதற்குப் பிரார்த்திக்கும் இந்நிலை, இடையில் வந்ததன்று; அது கைங்கர்யப் பிரார்த்தனையைப் போலே அவனையடைதற்குத் தடையாம் அறிவின்மை, தீய செயல், தீய நினைவு முதலியவற்றை யுண்டாக்கும் உடலின்

**139. மூலம்**

*'கைங்கர்யப்ரார்த்தனை போலேஇப்பதத்தில் ப்ரார்த்தனை என்று முண்டு'', ''இதிலே அவித்யாதி$_3$களும் கழியுண்ணும்'' (முமுக்ஷு. 180) என்று முமுக்ஷுப் படியிலே அருளிச்செய்தாரிறே. எம்பெருமானாரும் கத்யத்ரயத்திலே, நமஸ்ஸப்தார்தத்தை அருளிச் செய்கிற விடத்தில் 104. ''மநோவாக்காயை'' இத்யாதி சூர்ணை யாலே இவ்விரோதி நிவ்ருத்தி ப்ரார்த்தனையை அருளிச் செய்தாரிறே. இனி, ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் வருவது, தன்னைத் தானே ரக்ஷித்துக் கொள்ள வேணுமென்று*

*யஜ்ஞத₄ாநதபோரூபமான கர்மயோகாத்யுபாய ப்ரவ்ருத்தியில் அந்வயித்தாலிறே பரதந்த்ரனுக்குக் கூடாது. கைங்கர்ய ப்ரார்த்தனையும்,*

**விளக்கவுரை**

தொடர்பைப் போக்கிக் கொள்ளுதற்காகப் பிரார்த்திப்பது ஆந்மா இயல்புக்குச் சேர்ந்ததாயிருக்கும். நாராயண பதத்தின் ஈற்றில்வரும் 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபின் பொருளான பிரார்த்தனை போலே, இந்த நமப்பதத்திலல்லவா இந்த விரோதியை நீக்கும் பிரார்த்தனைவிளங்குவது.''கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே இப்பதத்தில் ப்ரார்த்தனை என்றும் உண்டு'' என்றும், ''இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்'' (அவித்யாதி - அறிவின்மை, தீயசெயல், யான்,எனதுஎன்னுஞ்செருக்கு முதலானவை.)என்று முமுக்ஷுப்படியில் பிள்ளை உலகாசார்யர் அருளினாரல்லவா.

எம்பெருமானாரும், கத்யத்ரயத்திலே நமப்பதத்தை அருளிச் செய்கிறவிடத்து, 104.''மநோ வாக்காயை'' (சரணா. கத்யம் 10) ன்னும் இடத்தில்,இவ்விரோதியைப்போக்கும் பிரார்த்தனையை அருளிச்செய்தார். இனி, தன்னைத்தான் காத்துக்கொள்வதில் இயைபு வருவது; ஓர் மனிதன், தன்னைத்தான் காத்துக் கொள்ளவேண்டுமென்றுயாகம், தானம், தவவடிவானகருமயோகம் முதலானநெறியில் முயல்வது, தான் பரமனுடைய இட்டவழக்காம் நிலைக்குப் பொருந்தாது;

**140. மூலம்**

*தத்விரோதி₃ நிவ்ருத்தி ப்ரார்த்தனையும் விட்டால்*

***ஸ்வரூபமே நஸித்துஉபாய உபேயங்களில் அந்வய மின்றிக்கே யொழியுமிறே?***

***ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ருத்தியென்றது, ப$_4$க$_3$வத்$_3$ ப்ரவ்ருத்தி விரோதி$_3$ ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி யென்று அங்கீ$_3$கரியாதே, நமக்கு ரக்ஷணத்திலந் வயமில்லை; விரோத$_3$ங்களென்று நிஷேதங்களை த்யஜிக்கை ஸ்வரக்ஷணமாகாதோ என்று அவற்றைச் செய்யப்புக்கால், ஸ்வரூப உபாய உபேய அதி$_4$காரங்கள் மூன்றும் த்வம்ஸமாய் நிர்மூலங்களாய்ப் போமாகை யாலே, கைங்கர்ய வ்யதிரிக்த ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே யென்றுஅங்கீ$_3$கரிக்கவேணும்.***

**விளக்கவுரை**

ஆனால், இறைவனுக்குத் தொண்டாற்றுதலை அவ்விறைவனிடம்யாசித்தலும், அதற்குத் தடையாம் விரோதியைப் போக்கும் பிரார்த்த னையும் விட்டால், உயிரினியல்பு அழிந்து இறைவனே உபாயமும் பயனும் என்பனவற்றில் தொடர்பில்லாமல் போய்விடுமல்லவா?

தன்னைத்தான் காத்துக்கொள்ளலின் தொடர்பை விடுதல் என்றது, பகவான் நம்மைக் காக்க முயலும்போது, நம்மை நாமே காத்துக்கொள்வோம் என முயலுதல் விரோதமாம். இவ்வாறென்று அங்கீகரியாமல், நாம் நம்மைக் காப்பதில் உரிமையில்லை என்று, விரோதிகளென்று செய்யத் தகாதவற்றை விடுதல் தன்னைத்தான் காத்தலாகாதோ என்று செருக்கினால் அவற்றைச் செய்யப்புக்கால் தத்துவம், உபாயம், பயன் என்ற அதிகாரங்கள் மூன்றும் இல்லையாகி அழிந்துவிடும்

ஆகையால், இறைவனுக்குத் தொண்டாற்றுதலுக்கு வேறுபட்ட செய்லகளை விடுவதையே அங்கீகரிக்க வேண்டும்.

**141. மூலம்**

***ஆனால், ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரக்ருதி ஸம்ப$_4$ந்த$_3$ நிவ்ருத்தி அவனுக்கு அநபிமதமென்று சொல்லுகிறதென்? என்னில், ஆழ்வாரைப் போன்ற பரமார்த்தருண்டானால், ''திருமாலிருஞ் சோலைமலையே, திருப்பாற்கடலே யென்தலையே'' (திருவாய் மொழி 10-7-8) என்கிறபடியே, தம்முடைய ஶரீரைகதேஶத்திலே இரண்டு மூன்று திவ்ய தே$_3$ஶங்களில் பண்ணுமாதரத்தைச் செய்தபடி யாலே ஸர்வேஶ்வரனுக்கு இந்த பரமார்த்தருடைய திருமேனி 105. "க்ஷணே(அ)பிதே யத்$_3$விரஹோ(அ) திது$_3$ஸ்ஸஹ:" (ஸ்தோத்ர ரத்னம் - 56), என்கிறபடியே அத்யந்தா பி$_4$மதமாயிருக்குமென்கைக்காச் சொன்ன தித்தனை யொழிய, ஆர்த்தராகக் கூடாதென்றால்; விஷய வைல க்ஷண்யாநுகுணமான ஆர்த்தியே இல்லையானால் அதி$_3$காரியன்றிக்கே மூடராய்ப்போம்.***

**விளக்கவுரை**

ஆனால், ஸ்ரீவசநபூஷணத்தில் ''இறைவன் வாசஞ் செய்யும் பத்தரது சரீரத்தை விடுவது அவ்விறைவனுக்கு விருப்பமல்லாதது'' என்று கூறப்படுகிறதே எனின், ஸ்வாமி நம்மாழ்வாரைப் போன்ற மேம்பட்ட ஆர்த்தியுண்டானால், ''திருமாலிருஞ்சோலைமலையே, திருப்பாற்கடலேயென்ற லையே'' என்று தம்முடைய சரீரத்தில் ஓரிடத்திலே இரண்டு

மூன்று திவ்யதேசங்களில் பண்ணும் அன்பைச் செய்த படியாலே இறைவனுக்கு இந்த மேலான ஆர்த்தருடைய திருமேனி, 105. "எம்பெருமானே! (நம்மாழ்வார் போன்ற) எந்தப் பெரியோர்களின் பிரிவானது, உனக்கு ஒரு நொடிப் பொழுதேனும் மிகவும் பொறுக்கவியலாமலிருக்கிறதோ" என்று ஸ்ரீஆளவந்தார் அருளியவாறே, அப்படிப்பட்ட மகான்களின் உடலின் சேர்த்தி இறைவனுக்கும் மிகவும் விரும்பத்தக்கதாயிருக்கும் என்று சொன்னதத்தனையொழிய ஆர்த்தராகக் கூடாதென்றால் அதிகாரியாயில்லாமல் அறிவின்மை எய்தும்.

**142. மூலம்**

***அப்படி யவனுக்கபிமதமென்று அருளிச்செய்த ஆழ்வாரே, "மங்கவொட்டுன் மாமாயை" (திருவாய்மொழி 10-7-10) என்று கால்பிடித்து, "திருவாணை நின்னாணை" (திருவாய் 10-10) என்று ஆணையிட்டு ப்ரார்த்தித்து ஶரீர விமோசநம் பண்ணு வித்துக் கொடுபோனாரிறே - இவனுக்கு ஆர்த்தியுண்டானாலிறே அவனுக்கபி$_4$மத மாவது; இல்லையாகில், காமபரவசனானால் ஸம்ஸாரி களிலே இவனொருவனாய்விடுமாகையால் ஆர்த் தனாமவனே அதி$_4$காரி. அவனுக்கு தே$_3$ஹத்திலும் ததநுபந்திகளிலும் ஸர்ப்பவத்பயமுண்டானால் அஹங் கார மமகாரங்கள் நஶிக்கும். இல்லையாகில் அவித்யாதரு ஸம்பூதி பீஜம் முளைத்து , ஶதஶ: பணைத்து அர்த்த$_2$காமா பேக்ஷைகளும் ராக த்வேஷங்களும் ஶோகமோஹங் களும் பாபபுண்யங்களும் ஸுகது$_3$:க்கங்களும் அபி$_4$வ்ருத்தமாய் எப்படிப் பட்ட ஜ்ஞாநவானானாலும் ப$_4$த்தஸம்ஸாரியாய்க் கெட்டுப்போம்.***

**விளக்கவுரை**

அவ்வாறு ஞானிகளின் (பஞ்சபூதங்களாலான) உடல் இறைவனுக்கு மிகவும் விருப்பத்தையளிக்குமென்று அருளிச் செய்த நம்மாழ்வாரே, ''திருவாணை நின்னாணை'' என்னுடைய சரீரத்தின் தொடர்பையறுத்து உன்திருவடியில் என்னைச் சேர்த்துக் கொள்வதற்கு உன்தேவியான திருமகள் மேல் ஆணை; உன்மீதும் ஆணை'' என்று ஆணையிட்டுப் பிரார்த்தித்து, பஞ்ச பூதங்களின் சேர்த்தியாலான அவரது திருமேனியை இறைவன் விடுவித்துப் பரமபதத்திற்குக் கொண்டுசென்றானல்லவா.

இச்சீவன் இறைவனை அடைய துடிப்புண்டா னாலல்லவா அவ்விறைவனுக்கு இவன்மீது விருப்பமதி கரித்துச் செல்வது; இல்லையாகில், புலனின் பங்களில் ஆசைவயப்பட்டவனாய் இவ்வுலகமக்களில் இவனு மொருவனாகிவிடுவன். ஆகையால், இறைவனைக் கடுகவெய்த வேண்டும் என்ற துடிப்புள்ளவனே அதிகாரி.

இத்தன்மையாம் அதிகாரிக்குத்தேகத்திலும் அதன் தொடர்பானவற்றிலும் பாம்பைப் போன்ற அச்சமுண்டாகி, 'யான், எனது' என்னும் செருக்கு அழிந்துவிடும். இல்லையானால் அறிவின்மையாம் மரத்தின் விதை முளைத்து நூறுமடங்காக வளர்ந்து பொருளின்பங்களில் விருப்ப முண்டாகி ஒருவரை விரும்புதல் வெறுத்தல் முதலானவும், வருத்தமும் மயக்கமும், பாவ புண்ணியங் களும், இன்பதுன்பங்களும் வளர்ச்சியுற்று எத்தன்மையுடைய ஞானிகளானாலும் உலக வாழ்வில் பிணைக்கப்பட்டுக் கேட்டையடைவான்.

143. மூலம்

இத்தையெல்லாம் நினைத்து, "நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்து" என்று ஶரணாக₃த லக்ஷணஞ் சொல்லுமிடத்தில் ஆழ்வார் அருளிச்செய்தார்.

இனி "பத்துடை யடியவர்க்கெளியவன்" (திருவாய் மொழி 1-3-1) என்று ஸௌலப்யத்தைச் சொல்லி, "வணக் குடைத் தவநெறி வழிநின்று" (திருவாய்மொழி 1-3-5) என்று கீதாஶாஸ்த்ரோக்தமான பக்திப்ரபத்திகளிலே அந்வயிங்கோள் என்று சொல்லி, "புரிவதுவும் புகைபூவே" (திருவாய்மொழி 1-6-1) என்று ஸ்வாரா தத்வஞ்சொல்லி, "கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்" (திருவாய்மொழி 1-6-8) என்று, பா₃ஹ்ய விஷய ஸங்க₃மற்றுத் தொழுதாராகில் ஸ்வப்ராப்தியைக் கொடுக்குமென்று சொல்லி,

விளக்கவுரை

இதையெல்லாம் நினைத்தே "நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்து" என்று சரணாகதியின் இலக்கணங் கூறுமிடத்தில் திருவாய் மொழியில் ஆழ்வார் அருளினார். இனி, "பத்துடை அடியவர்க்கு எளியவன்" என பக்தியுடை அதிகாரிக்கு இறைவன் எளியனென்றும் என்று, இறைவனது எளிமையைச் சொல்லி, "வணக்குடைத் தவநெறி வழிநின்று" என்று கீதையிற் சொல்லப்பெற்ற பக்தி, பிரபத்தி நெறிகளிலே ஈடுபடுங்கோள் என்று கூறி, "புரிவதுவும் புகை பூவே" 'கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்" என்று புறவிஷயங்களிற் பற்றற்று அவனைத் தொழுவீராகில் தன்னுடைய பரமபதத்தைக் (ஸ்தானத்தை) கொடுப்பான் என்று கூறி,

**144. மூலம்**

**"எண்ணிலும் வரும்" *(திருவாய் மொழி 1-10-3)* என்று சொல்லியும், "நீயும் நானும் இந்நேர் நிற்கில் மேல்மற்றோர் நோயுஞ்சார் கொடான் நெஞ்சமே" *(திருவாய்மொழி 1-10-6)* என்று சொல்லியும், "சிற்றவேண்டா" என்று சொல்லி, "புன்மை யிலாதவர்க்கு வாழ்துணையா" *(திருவாய்மொழி 9-1-8)* என்று சொல்லியும், "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" *(திருவாய்மொழி 9-9-5)* என்று சொல்லி, "மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம் பொய்யனாகும் புறமே தொழுவார்க்கெல்லாம்" *(திருவாய் மொழி 9-10-7)* என்று சொல்லியும் இப்படி ப்ரதமத்திலே ஶரண்யப்ரபாவம் சொன்னபின்பு ஶரணாக₃த ரக்ஷணம் ஶிக்ஷிக்கையாலே அது ருச்யுத்பாதநார்த்தமாகவும், இது தனக்குண்டாகவேண்டும். ஸ்வரூபமென்றுங் கொள்ள வேணும்.**

**விளக்கவுரை**

"எண்ணிலும் வரும்" என்று சொல்லியும், "நீயும் நானும் இந்நேர்நிற்கில் மேல் மற்றோர் நோயுஞ் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன்" என்று மொழிந் தும், "சிற்றவேண்டா சிந்திப்பே யமையும்" என்று சொல்லி, "புன்மையிலாதவர்க்கு வாழ் துணையா" என நவின்றும், "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று கூறி, "மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம் பொய்யனாகும் புறமே தொழுவார்க் கெல்லாம்" எனமொழிந்தும்; இவ்வாறு முதலில் இறைவனுடைய மேன்மைகளைக் கூறிய பின்னர், சரணாகதியின் காக்குந்தன்மை (சிக்ஷிக்கையாலே)

இப்படிப்பட்ட தென்று பன்முறை ஆய்ந்து கூறியிருக்கை யாலே; (அல்லது விதிக்கை யாலே என்றுங்கொள்ளலாம்) அந்தச் சரணாகதி ஆரம்பநி லையில் மக்களுக்குச் சுவையை ஏற்படுத்துதற்காகவும் இதற்குண்டாகக் கூடிய உண்மை இயல்பு என்றுங் கொள்ளுதல் வேண்டும்.

**145. மூலம்**

***ஆனால், சரண்யப்ரப₄ாவம் பொய்யோ? என்னில், அன்று, 106 "அபி சேத் ஸுது₃ராசாரோ ப₄ஜதே மாம் அந்யப₄ாக்" (கீதா. 9-30) என்ற தொடங்கி அருளிச் செய்தபடியே, முன்பு மிகவும் து₃ராசாரனானாலும் அவருகு அநந்யனாய் ப₄ஜித்தானாகில் கடுக விலக்ஷணனா யுஜ்ஜீ விக்கும்; உத்தர காலத்திலும் அவ்வாஸநையே அநுவர்த் தித்தால் அது ஶமித்து அநுப₃வ யோக்யனாமளவும் நாலுநாள் விளம்ப மத்தனை போக்கி பல ஸி₃த்தியிலே கண்ணழிவில்லை.***

**விளக்கவுரை**

ஆனால், எம்பெருமானது மேன்மையாம் பெருமை கூறு மிடங்களெல்லாம் பொய்யோ? எனின், அன்று (106) "மிக்க அதிக மான தீய நடத்தையுடையவனாயினும், வேறொன்றில் ஈடுபாடற்று என்னிடம் யாவனொருவன் (பக்தியைச் ) அன்பைச் செலுத்து கிறானோ அவனே வைணவனாவான்" என்று கீதாசாரியன் அருளி யவாறே, இறைவனை அடைவதற்கு முன்னர்த் தீய ஒழுக்கமுள் ளவனாயினும் இறைவனையடைந்த பின்னர் வேறொன்றில் ஈடுபாடற்ற மனத்தையுடையனாய், (வேறொன் றென்பது - ஐம்புலனில் கொள்ளும் வேட்கை) இறைவனை பூசித் தானாகில் விரைவில் மிகச் சிறப்பெய்தி உய்வடைவான்;

இறைவனை (ஆஸ்ரயித்த) அடைந்த பின் னரும் முன் சொன்ன புலனின்பங்களில் ஈடுபட்டால் அது நீங்கி இறையநுபவத்துக்கு - பர மாத்மாநுபவத்துக்கு, தகுதி யாமளவும் சில நாள் தாமதமாகுமேயன்றிப் பேரின்பமாம் பயன் விளைவதில் ஐயமில்லை.

**146. மூலம்**

*ராஜ புத்ரனானவன் சில பெண் பிள்ளை களைத் தன்னபிமாநத்திலிட்டுக் கொண்டு ப்ராப்தயௌ வநரானால் போகத்திலே கூட்டிக்கொள்ளுமா போலேயும், கர்ஷகனானவன் க்ருஷி பண்ணுகிற அளவில் நெல் வித்தி முளைத்தவாறே அறுத்து பு$_4$ஜிக்க மாட்டானே; வளர்த்துக் களையறுத்துப் பலித்த பின்பு அநுப$_3$வயோக்ய மாம்படி ஸரஸாந்நமாக்கி பு$_4$ஜிக்குமாபோலே, ஸர்வேஸ்வரனும் வைலக்ஷண்யாநுகுணமாகத் திருத்தி விநியோகங் கொள்ளும். ஆகையாலே, இஜ்ஜந்மத்தில் சரமகாலத்திலே யானாலும் இல்லை யாகில், மற்றொரு ஜந்மத்திலானாலும் யோக்யனாம்படி திருத்திச் சேர்த்துக் கொள்ளுமவனாகை யாலே ஸம்ப$_4$ந்த$_3$த்தில் அந்வயமுண்டானால் யாவத் காலமும் ப$_4$த்தஸம்ஸாரியாய் விஷய ப்ராவண்ய முடையனாம்படி விட்டுக் கொடான்.*

**விளக்கவுரை**

இளவரசனானவன், சில பெண்பிள்ளைகளைத் தன் காதல் கிழத்தியாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினை விட்டு, பின்னர் அவர்கள் பருவம் எய்தியதும் போகத்தில் கூட்டிக் கொள்ளுதல் போலும், உழவன் தொழில் செய்கிற காலத்து நெல் விதைகள் முளைத்ததும் அவற்றை

உணவுக்குப் பயன்படுத்த மாட்டான்; அவற்றை நாற்றெடுத்து நட்டு வளர்த்துக் களையெடுத்துக் கதிர் முற்றி விளைந்தபின் உண்ணுதற்கேற்ற நல்லசோறாக்கி உண்ணுதல் போலே,

பரம்பொருளான இறைவனும், சிறப்புற்ற தன்மையடைதற்கு ஏற்றவாறு நல்லவனாகத் திருத்தி உபயோகங் கொள்ளுவன். ஆகையாலே, இந்தப் பிறவியின் இறுதிக் காலத்திலும் நல்ல ஒழுக்கம் இல்லாதவனாகில், அவனைப் பிறிதொரு பிறவி யில் தகுதியுள்ளவனாம்படி திருத்திச் சேர்த்துக்கொள்வான் இறை வன். எனவே, தகப்பன் - தனையன்; ஆண்டான்- அடிமை என்ற ஒன்பது வித உறவின் தொடர்பை அறிந்தவன் எவனேலும் அவ னை இறைவன், எல்லாக் காலத்திலும் பிறவியில் கட்டப்பட்ட வனாய் ஐம்புலன் வேட்கையுடைனாம்படி விட்டுவிட மாட்டான்.

**147. மூலம்**

*107 "ந மே ப₄க்த: ப்ரணஶ்யதி " (கீதா 9.31) என்று சொல்லி வைத்தானிறே. "அடியரை வல்வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடான்" (திருவாய் 1-7-2) என்று ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. நம்பிள்ளை, பின் பழகிய நாயனார் பெருமாள் ஜீயர் மடத்திலே ஒருநாள் எழுந்தருளி யிருக்க ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் ப்ராப்யம் ஸித்திக் கும்போது ஆழ்வாருடைய அவஸ்த்தையுண்டாய்ப் போக வேண்டியிராநின்றது; அந்நபாநாதி₃களோடே கூடியிருக் கும் நாங்கள் என் செய்யக் கடவதென்று விண்ணப்பஞ் செய்யப் பிள்ளையும், "இங்கு அந்த அவஸ்த்தைப் பிறந்த தில்லையே ஆகிலும், ஸ்தூல ஶரீரம் கழிந்துபோமிடத்தில் ஸ்வப்ராப்திக்கு முன்னே இவ்வவஸ்தையைப் பிறப்பித்து*

எம்பெருமான் கார்யம் செய்யுமென்று " அருளிச்செய்தார். ''அதி₄காரி யைப் பெறாமையாலே அவதாரங்களில் அவனிருக்கும்படி என்? என்னில், 'மெய்வெளுத்து நாக்கு வற்றியிருக்கு' மென்று பிள்ளையருளிச்செய்தார். அதாவது, அதிகாரியைப் பெறாமையாலே மெய் வெளுத்துப் பெற்றாலும், ப்ரயோஜ நாந்தரபரராகையாலே மயிர்பட்ட சோறென்று நாக்கு வற்றியிருக்குமென்று பிள்ளையருளிச்செய்தார் என்கை.

ஆகையாலே, அநந்ய ப்ரயோஜநனாயிருக்கும் அதிகாரி எம்பெருமான் தேடிப்பிடிக்கிலும் ஸுது₃ர்₃லபமா யிருக்கும். "அநந்யப்ரயோஜநனை விரஜைக்கு அக்கரை யிலே காணலாம்; இவ்விபூதியில் காணவரிதென்று "ப்ரமேயரத்நத்திலே" அருளிச் செய்கையாலே ஸுது₃ர் லபம் ப்ரபந்நனனாலும் இப்படிப்பட்ட அருமையுண் டானால், ஸுகர உபாய மென்கிறது என்? என்னில்,

**விளக்கவுரை**

107 "என்னுடைய பக்தன் கெட்டுப்போகமாட்டான்" என்றான் அல்லவா இறைவனும் கீதையில், "அடியரை வல் வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடான்" என்று ஆழ் வாரும் அதனை அப்படியே மொழிபெயர்த்துக் கூறினாரல்லவா. நம்பிள்ளை என்றும் பேராசிரியர், தன்னுடைய சீடரான பின் பழ கிய பெருமாள் ஜீயர் மடத்தில் ஒரு நாள் எழுந்தருளியிருக்க அவ ரது திருவடியைச் சேர்ந்த சீடர்களெல்லாரும், "அடைய வேண்டிய பயனாகிய பரமபதம் கிடைக்கும்போது ஆழ்வார்களுடைய பரம பக்தியின் நிலையுண்டாக வேண்டும் எனக் கூறப்படுகிறது; சோறு நீர் வெற்றிலை இவற்றைக் கொண்டு உயிர் வாழும்

இவ்வுலகத்தவர்களைப் போலே இராநின்றோம்; இப்படியிருக்கும் நாங்கள் என்? செய்யக்கடவோம்'' என்று அவரிடம் விண்ணப்பிக்க, அதற்கு நம்பிள்ளையும், ''இங்கு அந்த நிலை உங்களுக்குப் பிறந்தததில்லையாகிலும், பருவுடல் (ஸ்தூல ஶரீரம்) நீங்குங் காலத்தில் (மரண காலத்தில்) எம்பெருமான் தன்னடைய தாம் பரமபதத்தை எய்துதற்கு முன்னர், உங்களுக்கு ஆழ்வாருடைய நிலையைப் பிறப்பித்துத் தன்னிடத்திற்கு அழைத்துக் கொள்வான்'' என்று அருளிச்செய்தார்.

''அதிகாரியைப் பெறாமையாலே அவதாரங்களில் இறை ன் இருக்குமிருப்பு என்? எனின், மெய்வெளுத்து நாக்கு வற்றிருக்கும்'' என்று நம்பிள்ளை அருளிச் செய்தார். அதாவது, அதி காரியைப் பெறாமையாலே மெய்வெளுத்துப் பெற்றாலும் தன்னைத் தவிர்த்து வேறுப்பயனை விரும்பு பவராகையாலே மயிர்பட்ட உணவென்று நாக்கு வற்றியிருக்கும் என நம்பிள்ளை அருளிச் செய்ததற்குக் கருத்தென்க.

ஆகையால், வேறு பயனைக் கருதாது இறைவனையே பயனாகக் கொண்டிருக்கும் தலைசிறந்த அதிகாரியை எம்பெருமானே தேடினாலும் கிடைப்பது (இவ்வுலகில்) அரிதினும் அரியதாகும். ''வேறுபயனைக் கொள்ளாதவனைப் பரமபதத்திலுள்ள விரஜையின் அக்கரையிலே காணலாம்; இவ்வுலகினில் காண்பது அரிதென்று'' ப்ரமேயரத்திநத்திலே யாமுநாசார்யர் அருளிச் செய்கையாலே இத்தகையவன் கிடைப்பது மிகவும் அரிதாகும். பிரபன்னனாலும் இப்படிப்பட்ட அருமையுண்டானால், அவனையடைவது எளிமை என்பது எவ்வாறு பொருந்துமெனில்?

148. மூலம்

உபாயாந்தரங்கள் போலே து$_{3}$ஷ்கர ப்ரவ்ருத்தி ஸாத்யமின்றிக்கே நிவ்ருத்தி ஸாத்யமா கையாலே ஸுக$_{3}$ரமாயிருக்குமிறே. இவனுடைய து$_{3}$ர்வாஸநாப$_{4}$லத்தாலே இது து$_{3}$ஷ்கரமென்று தோன்றுமதொழிய யஜ்ஞ த$_{4}$ாந தபோத்யாந க்ருச்சர சாந்தராயண பலமூலாசநாதி$_{3}$, காயக்லேசங்கள் ஒன்றுமில்லையே, எல்லாவற்றிலும் நிவ்ருத்தியேயிறே இதுக்கபே$_{3}$க்ஷிதம்; இம்மாத்ரமும் இல்லையானால் நித்ய ஸம்ஸாரியாய்ப் போமதுவே பலம். இது ஸுகரமானால், *108 "ஸ மஹாத்மா ஸுது$_{3}$ர்லப$_{4}$:" (கீதை.7-19)* என்றும், "ஒரொருவர் உண்டாகில் அத்தனைகாண் "(உபதேசரத்ன மாலை. *55)* என்று சொல்லுகிறதென்? என்னில், *109"* த்ரிபி$_{4}$ர் கு$_{3}$ணமயைர் ப$_{4}$ாவைரேபி$_{4}$ஸ் ஸர்வமித$_{3}$ம் ஜக$_{3}$த்| மோஹிதம் நாபி$_{4}$ஜாநாதி மாமேப்$_{4}$ய: பரமவ்யயம்||" *(கீதா.7-13)* என்று த்ரிகு$_{3}$ண துரத்யயநாதி$_{3}$ ப$_{4}$க$_{3}$வந் மாயாப்ர$_{3}$பாவத்தாலே நிவ்ருத்திப் பிறவாதிறே; அத்தாலே து$_{3}$ர்லபம் என்றருளிச் செய்தார்.

149. மூலம்

ஆனால், ப்ரக்ருதி வஶ்யனான சேதநனுக்கு இவ் வதிகாரம் பிறக்கும்படி என்? என்னில், இது தன்னாலும் பிறராலும் பிறப்பித்துக் கொள்ள வொண்ணாது, ப$_{4}$க$_{3}$வத்$_{3}$ கடாக்ஷமடியாக லபித்த ஸத$_{3}$ாசார்ய ப்ரஸாதத்தாலே பிறக்கக் குறையில்லை. "மரங்களும் இரங்கும் வகை" (திருவாய் - 6-5-9) என்று ஸத$_{3}$ாசார்ய ஸந்நிதியில் ஸ்தாவரங்கள் கூட ஆத்ம கு$_{3}$ணோ பேதராகச் சொல்லாநின்றதிறே. கேவல ப$_{4}$க$_{3}$வ$_{3}$த் ப்ரஸாத மடியாக கோசல கோகுல சராசரங்கள் தத் கு$_{3}$ணைக தாரக$_{3}$ராய்

*முக்தியோக்யரானாரிறே. ஆனால், கடாக்ஷ மடியாக வருமவற்றுக்கு இவன் மேலே ஸ்வாதந்தர் யத்தையிட்டு, 110 "இத₃ம் குரு இத₃ம் மாகார்ஷீ:" (வேத விதி) என்று ஸாஸ்த்ரங்களும் ருஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர் களும் ஶிக்ஷிக்கிறதென்? என்னில்,*

**விளக்கவுரை**

இறைவன் தவிர்ந்த வேறு உபாயங்கள் போலே கடுமையாக உழைத்துச் சாதிப்பதைப் போன்று இதற்குக் கடுமையான உழைப்புத் தேவையில்லை ஆகையால், எளிமையாயிருக்கும். இவன் நெடுநாள் செய்து போந்த தீயபழக்கத்தாலே, இது (பிரபத்தி) செய்வதற்கு அருமை யுடைத்து என்று தோன்றும தொழிய யாகம், தாநம், தவம், தியாநம், சந்திரனது பௌர்ணமி தினத்திலிருந்து ஒவ்வொரு பிடியாக நாளுக்குநாள் குறைத்து உணவை யுண்டு பதினைந்தாம் நாள் இறுதியில் ஒரு பிடி உணவை மாத்திரங்கொண்டு சரீரத்தை இளைக்கச் செய்யும் விரதம்,

வறண்ட கனி, காய், கிழங்கு இவைகளையே உண்டு உடலை வருத்தும் செயல்கள் ஒன்றுமில்லை இப்பிரபத்திக்கு. இறைவன் தவிர்த்த எல்லாப் பொருளி லும் ஈடுபாடு கொள்ளுதலைத் தவிர்த்தலே இந்நெறிக்கு வேண்டுவது.

எளிமையாயிருக்கும் இதனையும் பிரபன்னன் செய்யவில்லையானால், எப்போதும் பிறவிக்கடலில் மூழ்கிப் போவதே இதற்குப் பயன். இப்பிரபத்தி நெறி எளிமையாயின் பின்னை, 108 "அந்த மகாஞானியான வன் எனக்கும் கிடைப்பது அரிது" என்று இறைவனும், "ஓரொருவர் உண்டாகில் அத்தனை காண் உள்ளமே

எல்லோர்க்கும் அண்டாத தன்றோ அது'' என மாமுநி முதலானார்களும் கூறுவது என்னையோ? எனின், 109 ''இந்தவுலகிலுள்ள சீவர்களனைவரும் முக்குணமய மான பொருள்களாலே மயங்கப்பெற்றவராய், இவற் றிலும் மிக உயர்ந்த ஒருபடிபட்ட என்னை அறிகிறார்களில்லை'' என்று இறைவனே கூறியபடியாலும், கடப் பதற்கரிய முக்குண மயமான மாயையுடைய இறைவனது மகிமையாலே அப்புலன் இன்பத்தில் வெறுப்பு உண்டாகாதல்லவா.

அதனால், இப்பிரபத்திநெறி எளிமையென்றாலும் செய்வது அருமை என்று மணவாளமாமுநிகள் அருளிச் செய்தார்.

ஆனால், அறிவின்மையே இயல்பான இவ்வுடல் வயப்பட்ட மனிதனுக்கு மேற்சொன்ன நற்குணப் பண்புகளமைந்த இவ்வதிகாரியாம் நிலை பிறக்கும்படி என்ன? எனின், பிரபன்னனுக்கேற்ற அதிகாரமாம் இது, தன்னாலும் பிறராலும் பிறப்பித்துக் கொள்ள இயலாது; பகவானின் பேரருட்பார்வையால் கிடைக்கப்பெற்ற நற்குருவின் அருளாலே பிறக்கக் குறையில்லை. ''மரங் களும் இரங்கும் வகை'' என்று நல்லாசிரியன் வாழு மிடத்தில் தாவரப்பிறவியான மரங்களுங் கூட நற் குணங்களைப் பெற்றிருக்கும் என அறநூல்கள் இயம்பா நின்றன அல்லவா. ஒரு காரணமும் பற்றாத எம்பெருமான் அருள்நோக்கினாலேயே அயோத்தியிலும் ஆய்ப்பாடியில் வாழும் உயிருள்ளன உயிரில்லாதன ஆகிய எல்லாம் அவ்விறைவனது கல்யாண குணங்களையே தாம் அநுபவித்து நின்று முக்திக்கேற்ற தகுதியைப் பெற்றன அல்லவா.

ஆனால், பகவத் கடாக்ஷமடியாக வரும் அவற் றுக்கு இம்மனிதனில் மேல் சுதந்திரத்தையிட்டு (110) ''இதைச் செய்; அதைச் செய்யாதே'' என்று சாத்திரங்களும் முனிவர் களும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் கற்பித்துக் கட்டளை யிடுவதென்? எனின்,

**150. மூலம்**

***ஸர்வேஶ்வரன் சில ஆத்மாக்களை உஜ்ஜீவிப் பிக்கும் போது ஆத்ம குணங்கள் உண்டாகப் பண்ணி கைக்கொள்ள வேண்டுகையாலே, தான் கண்காண வந்து வாய்திறந்து அருளிச் செய்யாமையாலும், தான் உஜ்ஜீவிப்பிக்க நினைத்தவர் த்யாஜோபாதேயங்கள் அறிகைக்காகக் கொடியைக் கொள் கொம்பிலே ஏற்றுகைக்குச் சுள்ளிக்கால் நாட்டுவாரைப் போலே, ஸாமாந்ய ஶாஸ்த்ரமும், தன்னைக் கடுகப் பெறுகைக்கு விஶேஷ ஶாஸ்த்ரமும் உண்டாக்கி 111 ''ஜக$_3$து$_3$த்$_3$ ப$_4$வ ஸ்தி$_2$தி ப்ரணாஶ ஸம்ஸார விமோசநாதி$_3$கள்'' (?) அவனுக்கு லீலையாகையாலே ஒரு குழமணனைப் பண்ணி காக்கைப் பொன்னையிட்டு ப$_3$ாலர் லீலாரஸங் கொண்டாடுமாப்போலே, சதுர்முக$_2$னையுண்டாக்கி அவனுக்கும் ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களும் ஸ்வேந ரூபேண நின்று ஸ்திதியும் பண்ணுமாப்போலே, ஸம்ஸார விமோசநத்துக்கும், பராங்குச பரகால நாத$_3$யாமுந யதிவராதிகளையுண் டாக்கி அவர்களாலே விஶேஷ ஶாஸ்த்ரத்தை ப்ரவத்திப்பித்து,***

**விளக்கவுரை**

யாவர்க்கும் பெரியோனான இறைவன், சில

ஆந்மாக்களை உய்வடையச் செய்கின்றபோது அவர் களுக்குப் புலனடக்கம், சாந்தி முதலாம் ஆத்ம குணங் கள் உண்டாகச் செய்து அவர்களைக் கைக்கொள்ள வேண்டுதல் சாத்திரங்களின் மரபாகையால், இறைவன் இவர்களின் கண்கள் காணும்படி எதிரே வந்து வாய் திறந்து ஒரு வார்த்தையருளிச் செய்யாமையாலும், தான் உய்வடைய வேண்டுமென்று நினைத்தவர்களாய் இவ்வாந்மாக்கள், விட வேண்டியது பற்றியும் கைக் கொள்ள வேண்டியது பற்றியும் அறிவதற்காக ஒரு கொடியைக் கொள்கொம்பில் ஏற்றுவதற்குச் சுள்ளிக் கால் நடுவாரைப் போலே சாமாநிய சாத்திரங்களையும், தன்னை விரைவில் அடைவதற்காக விசேட - உயர்வான சாத்திரங்களையுமுண்டாக்கி,

111 ''உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் முதலானவையும் ஸம்சாரக் கடலாம் பிறவியைப் போக்குதல் முதலானவை'' இறைவனுக்கு விளையாட் டாகையாலே ஒரு மண் பிரதிமையைப் பண்ணி அதற்குக் காக்கைப் பொன் வேய்ந்து சிறார்கள் விளையாட்டில் இன்பம் அனுபவிப்பதுபோல், நான் முகனைப் படைத்து அவனுக்கும் உருத்திரனுக்கும் அந்தர்யாமியாய் - அவர்களுக்குள்ளே புகுந்திருந்து படைத்தலும் அழித்தலும் செய்துகொண்டு, தானான தன்மையில் - (விஷ்ணு வாயிருந்து) காத்தல் தொழிலையும் செய்தல் போல, இந்த ஸம்சாரத்தை - ஸ்ரீமந்நாதமுனிகள், இராமாநுசர், ஸ்ரீமண வாளமாமுனிகளை அவதரிக்கச் செய்து அவர்களாலே சிறந்த சாத்திரங்களை வெளியிட்டு,

**151. மூலம்**

*தன்னைச் சேர்த்துக்கொள்ள நினைத்து இவர்கள்*

*தன்மூலமாக உஜ்ஜீவிக்கும்படி பண்ணுவித்த கட்டளை யாலே க்ருபா பரதந்த்ரரான முக்தியோக்யர் ப்ரமாண பரதந் த்ரராய் ஶாஸ்த்ரங்களும் ஶிஷ்டர்களும் சொல்லிவைத்த அர்த்தங்களென்று விஶ்வஸிக்கும்படி அந்தராத்மாவாய் ப்ரேரிக்க ததநுகுணமாக ப்ரவர்த்தித்துக்கொண்டு இருக் கைக்காக ஶிஷித்தாரித்தனை. வாஸநாதூஷிதருக்கு 112 "உபதே$_3$ஶோநிராத்த$_2$க:" (?) என்று அப்ரயோஜகம். அவ னுக்கு இவன் உஜ்ஜீவிக்க வேணும் என்கிற க்ருபை நித்ய மாய்ச் செல்லா நின்றாலும், சேதநருடைய பூர்வக்ருத புண்யா புண்யங்கள் தீர அநுபவித்து வாஸனை கொண் டு ப்ரவர்த்திக்க வேண்டுமளவிலேயன்றி கடாக்ஷம் ப்ரஸ ரணமாகாமையாலே தனக்கேற இடம்பெறுமளவும் அவஸ ரம் பார்த்துப் பெற்றவளவிலே விளம்பமாக முக்தியோக்ய ரானார், ஸாமாந்ய ஶாஸ்த்ர நிஷ்டராய் ஸாதநாந்தரபரரா ய்த் திரியும்படி கடாக்ஷித்து, கடுக தன் திருவடிகளிலே சேர் த்துக்கொள்ள வேணுமென்று விஶேஷ ஶாஸ்த்ரநிஷ்ட ராம்படி விஶேஷ கடாக்ஷம் பண்ணி பரமார்த்தராய்,*

**விளக்கவுரை**

இறைவன் இவர்களைத் தன்னிடத்தில் சேர்த்துக் கொள்ள நினைந்து ஆழ்வார் ஆசாரியர்கள் அருளிய நூலின் வழியாக உய்வடையும்படி செய்வித்த கட்டளையாலே இறைவனின் கருணைவசப்பட்டவராய் மோக்ஷமடையத் தகுதியுடையவர்கள், சான்றுநூல்களைப் பின்செல்பவர்களா ய், சாத்திரங்களும் சிட்டர்களும் சொல்லிப்போன அர்த்த ங்கள் கருத்துக்கள் என்று நம்பிக்கை கொள்ளும்படி இறைவன் அவர்கள் திரு வுள்ளத்தில் மறைந்திருந்து அவர்க ளைத் தூண்ட அதற்கேற்றவாறு உலகத்தில் பரவும்படியா கக் கற்பித்தார்கள்,

152. மூலம்

ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தாம் ஆசரித்து
அருளிச் செய்து போந்த அர்த்தவிஷயங்களை நன்றாகத்
தெளிந்து ப்ரதிகூல்யங்களடைய பரித்யஜித்து குணாநுபவ
கைங்கர்ய நிஷ்$_2$டராய் அநந்யப்ரயோஜநராய் உஜ்ஜீவிப்ப
ர்கள். கீழ்ச்சொன்ன ஸாதநாந்தர நிஷ்ட$_2$ன், *113* "ஜந்மாந்
தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந ஸமாதி$_4$பி$_4$:, நராணாம்
க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே ப$_4$க்தி ப்ரஜாயதே" (லக்$_4$வத்ரி
ஸ்ம்ருதி-*1*) என்கிறபடியே, அநேக ஜந்மங்களிலே தபோ
ஜ்ஞாநாதி$_3$களாலே க்ஷீணபாபரானார்க்கொழிய ஆத்ம
ஸாக்ஷாத் காரமும் அநவரதப$_4$ாவனையும் அத்யர்த்த ப்ரிய
த்வமும் அநந்ய ப்ரயோஜநமுமாம்படி வஸ்துஸாக்ஷாத்கா
ரம் பெறாமையாலே சிரகாலமுபாஸித்துக் கொண்டு போந்
தவுபாஸகனுக்கும் அங்கபூ$_4$த ப்ரபத்தி நிஷ்டையுண்டா
கையாலே அநாதி$_3$காலார்ஜித பாப பாஹுள்யத்தாலே வி
ஷய து$_3$ர்வா ஸநாதூ$_3$ஷிதமான அந்த: கரணத்துக்கு நைர்
மல்யஸித்தி பிறவாதொழிந்தால் து$_3$:க்கப்பட்டு 'என்னு
டைய மநோதோஷம் என்னாலே போக்கவரிது' நீயே உபா
யமாக வேணுமென்று அபே$_4$க்ஷித்து க்ரமத்திலே ஸித்தோ
பாய நிஷ்ட$_2$னாம்.

153. மூலம்

அக்காலத்துக்கும் து$_3$ர்வாஸநை மேலிட்டு ப்ரயோ
ஜநாந்தர பரனாய் ஐஹிக போகங்களிலே நெஞ்சு சென்று
தாரபுத்ராதி ஸக்தனாய் துர்விஷயத்தை அநு$_3$பவித்துக்
கொண்டிருந்தால், ஸித்தோபாயம் அந்யோகாஸஹமாகை
யாலே இவனுக்குவரும் உபாய அபாய ஸம்யோகத்தாலே
அந்த நிஷ்டை நெகிழ்ந்து திரியவுந் தெளிந்து, *114*"உபாய

*அபாய ஸம்யோகே₃ நிஷ்ட₂ யாஹ்யதேநயா, அபாய ஸம் ப்லவேஸத்₃ய: ப்ராயஶ்சித்தம் ஸமாசரேத்" (லக்ஷ்மீ தந்.) என்கிறபடியே புந:ப்ரபதந ப்ராயஶ்சித்தம் பண்ணிக்கொண்டு பு₄க₃வத₃பசாராதி₃கள் வந்தால் அநேக காலம் உருமாய்ந்து திரியவும் ஸாநுத₃பனாய், இப்படி அநேக காலம் பரிப்ரமணம் பண்ணி ஸித்தோபாயம் பலிக்குமானால் அப்போது, திருக்கண்ணமங்கையாண்டானைப் போலே ஸ்வவ்யாபாரங்கள் அடைய விட்டு பரமார்த்தனாய், பிள்ளை திருநறையூர் அரையரைப் போலே ஸ்வதே₃கத்தை யுபேக்ஷித்து க்ரமக்ரமாக முக்தனாய்ப்போம்.*

*முன் சொன்ன விஶேஷ கடாக்ஷபாத்ரனுக்கு பரமார்த்தியை ஜநிப்பித்து உபக்ரமங் காலந்தொடங்கி 'பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பும்' (திருவி.1) என்று இவையெல்லாத்திலும் விரக்தனாய், 'கூவிக் கொள்ளுங் காலமின்னுங் குறுகாதோ' (திருவாய். 6-6-9) என்று காலத்தை நிரீக்ஷித்துக் கொண்டிருக்கையாலே இவ்வநர்த்தங்கள் ஒன்றும் புகுர வழியின்றிக்கே ஶரீரவிமோசாநந்தரத்திலே முக்தனாய்ப் போம். ஆனால், ஸர்வஶக்தியான ஸித்தோபாயம் ஸ்வீகரிக்கச் செய்தேயும் விளம்ப ப்ரஸங்கமுண்டோ?*

விளக்கவுரை

அவ்வாழ்வார்களும் ஆசாரியர்களும். தீயவற்றின் தொடர்புடையவர்களுக்கு, 112 ''சாத்திர உபதேசங்கள் வீண்'' என்றலாலே அவர்களுக்கு அது பயனற்றது. அவனுக்கு-இறைவனுக்கு, இவனை- இம்மனிதனை உய்வடையச் செய்யவேண்டும் என்ற கருணை யுள்ளம் எப்போது மிருந்தாலும், மக்களுடைய முற்பிறவிகளிற் செய்யப்பட்ட

புண்ணிய பாவங்கள் தீர அநுபவித்து மீண்டும் முன் பிறந்த பழக்கத்தாலே பிறவியெடுத்துச் செயல்படும் வேளையில் இறைவனது அருட்பார்வை அவர்களிடத்துச் செல்லாமையாலே, தனக்கேற்ற வாய்ப்புக் கிட்டுமளவும் காலம் பார்த்துப் பெற்றவளவிலே காலந்தாழ்த்தி முக்தியை அடைவோம் என்றிருப்பவர்கள், பொதுவான சாத்திரத்தைப் பின் பற்றுபவராய், வேறு உபாயத்தைப் பற்றித் திரியும் படி இறைவன் தன்னருளால் நோக்கி, இப்படிப்பட்டவர்க ளையும் உடனே தன் திருவடிகளில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று சிறந்த சாத்திரத்தைப் பின்பற்றும்படி பின் விசேஷமான - சிறப்பான அருளைப்பண்ணி, இறை வனை இன்னும் அடையவில்லையே என்னும் வருத்தமு டையராய்;

ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தாங்கள் ஒழுகிக் காட்டித்தாம் அருளிச் செய்துபோந்த பொருளின் சிறப்புக் களை நன்றாக ஓர்ந்து தெளிந்து, விரோதமானவற்றை முற் றவும் விட்டு இறைவனின் கல்யாண குணங்களை அநுப வித்து அவர்க்கே தொண்டு செய்யும் நிட்டையுடை யவராய், வேறு பயனை விரும்பாதவராய் உய்வடைவர்க ள். கீழ்ச் சொல்லப்பட்ட வேறு உபாயத்தைக் கைக்கொ ண்ட நிட்டையையுடையவன், 113''ஆயிரக்கணக்கான பிற ப்புக்களில் கரும ஞான பக்தியோகங்கள் அநுட்டித்துப் பாவ ங்கள் நீங்கப்பெற்ற மக்களுக்குக் கண்ணனாம் இறைவனி டத்துப் பக்தியானது பிறக்கின்றது'' என்னும்படி, பல பிற விகளில் தவத்தையும் கர்மஞான பக்தியோகங்களாலே பாவம் அழியப் பெற்றவர்களுக்கொழிய, ஆந்மாவை நேரே காணும் நிலையும் எப்போதும் இறைவனிடம் ஈடுபட்ட மனமும் இறைவனிடம் அன்பாயிருக்கும் நிலையும் வேறு

பயனில் விருப்பமில்லாத தன்மையுமாம்படி இப்பொருள் களின் உண்மையை நேரே காணாமையாலே,

பல காலம் இறைவனை ஆராதித்துக் கொண்டிருக் கும் உபாசகனுக்கும் அங்கத்தோடு சேர்த்துச் செய்ய வேண் டும் பிரபத்தியுண்டாகையாலே, நெடுங்காலமாகப் பலபி றவிகளில் ஈட்டப்பெற்ற மிகுந்திருக்கும் பாவத்தாலே கெட் டதும் தீயதுமான ஐம்புலன் வேட்கை முதலான விஷயங் களாற் சூழப்பட்ட மனத்துக்குக் குற்றமில்லாத் தன்மை பிறவாவிட்டால், மிக்க துன்பத்தை எய்தி இறைவனைப் பார் த்து, 'என்னுடைய மனமாசு என்னாலே போக்கவது அரிது, அதன் நீயே போக்குவாய்' என்று பிரார்த்தித்துக் காலத்தில் முறையாக இறைவனே உபாயமாவான் என்னும் சித்தோ பாய நிட்டையை அடைவான்.

இறைவனையடைய வேண்டிய இறுதியாம் அக்கா லத்திலும் முற்பிறவியில் நேர்ந்த அநுபவத்தால், இப்பிற வியிலுந் தொடர்ந்து வரும் தீய பழக்கத்தால் தீய விஷய ங்களில் செல்லும் எண்ணம் மேலிட்டு வேறு பயன் விரும்புவனாய் இப்பிறவியில் நுகருமாயிருக்கும் தன்மைக்கு, (இது) பிற சாதன முதலானவைகளைப் பொறு க்கமாட்டா. அந்தப் பிரபத்தி நிட்டை நழுவி மீண்டும் தெளிந்து 114''வேறு உபாயமாகிய அபாயத்தின் தொட ர்பு பிரபந்நனுக் கேற்பட்டால் அவனுடைய சரணாகதி நிட்டை நழுவும்; அந்த அபாயத்தொடர்பு ஏற்பட்டால் உடனே கழுவாய் (பிராயச்சித்தம்) செய்ய வேண்டும்'' என்றபடி வேறு உபாயங்களின் தொடர்பு ஏற்பட்டால், அந் தச் சரணாகதி மந்திரத்தையே மீண்டும் பிராயச்சித்தமாகப் பண்ணிக்கொண்டு பாகவத அபசாரம், தன்னைத் தானே மதித்துக்கொள்ளும் செருக்கு, பிறர் உயர்த்தி கண்டு

பொறாமை முதலானவை இப்பிரபன்னனுக்கு உண்டானால் பலகாலம் தன் இயல்பு கெட்டு மீண்டும் பச்சாதாபம் பிறந்து இவ்வாறு பல்கால் பிரம்மவித்தை என்னும் சரணாகதி நிட்டையை ஆராய்ந்து தேறி ஸித்தோபாயம் பலிக்குமானால், அன்று திருக்கண்ணமங்கையாண்டானைப் போலத் தன்னுடைய தொழில்களை முழுமையாக விட்டு மேலான ஆர்த்தியையுடையனாய்ப் பிள்ளை திருநறையூர் அரையரைப்போல் தன்னுடைய உடலை வெறுத்துப் படிப்படியாக முக்தனாவான்.

முன்னர்க் கூறப்பட்ட இறைவனது விசேட அருள் நோக்கைப் பெற்றவனுக்கு மேலான துடிப்பைத் தன்திறத் தில் உண்டாக்கி ஆரம்ப காலந்தொடங்கியே, 'பொய் நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்கு உடம்பும்' எனத் திருவிருத்தத்தில் ஆழ்வார் கூறியபடியே இறைவன் தவிர்த்த எல்லாவற்றிலும் ஆசையற்றவனாய், 'கூவிக் கொள்ளுங் காலம் இன்னுங்குறுகாதோ' என்று எம்பெருமான் நம்மைப் பரமபதத்திற்கு அழைத்துச் செல்ல எப்போது வருவானோ என்று, காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாலே முன் சொல்லப்பட்ட தீயவிஷயங்கள் ஒன்றும் புக வழியில் செல்லாமையாலே சரீரம் விழுங்காலத்தில் மோக்ஷத்தையடைவான்.

**154. மூலம்**

*என்னில், ஸ்வீகாரத்துக்கு இவன் அதிகாரியானால் பின்னை கார்யகாலத்திலே இதர நிரபே$_4$க்ஷமாகக் கடுக கார்யஞ் செய்யுமித்தனை ஒழிய, உபாய அதிகாரத்தில் குறைப்பட்டிருந்தால் அதிகாரியாமளவும் கார்யகரமாகாதிறே. இந்த உபாயஸ்வீகாரம் ஸர்வபல ஸாதாரண*

*மாகையாலே ப்ரயோஜநாந்தரபரரான ஐஶ்வர்ய கைவல்யாதிகளுக்கு முண்டா யிருக்க அவர்களுடைய துர்வாஸநையாலே ஸ்வாத்மாநுபவ துச்சபோகாநு பவங்களிலே பர்யவஸித்துப் போந்ததிறே.*

*ஆகையாலே, இவன் ருசி ஸாம்ஸாரிக துஷ்கர்ம ப்ரவர்த்திகளில் நின்றும் மீண்டு அநந்யப்ரயோஜந னானால் சீக்ர பலப்ரதமாம். அநந்ய ப்ரயோஜநனாகை யாவது, புத்ரத₃ராதி₃ ஸங்கம் முதலாக ப்ரஹ்மாத்யை ஶ்வர்யம் நடுவாக ஸ்வாத்மாநுபவம் ஈறாக இவை யெல்லாம் விட்டு அவனே ப்ரயோஜநமாகப் பற்று மவனிறே.*

**விளக்கவுரை**

ஆனால், எல்லாவகையாற்றலும் நிறைந்த ஸித்தோ பாயத்தைக் கைக்கொண்டிருக்கச் செய்தேயும் மோக்ஷ மடைய காலந்தாழ்த்துதல் உண்டோ? எனின், சித்தோ பாயத்தை இவன் ஏற்றுக் கொண்டு அதன்படி ஒழுகும் அதிகாரியானால் பின்னர்க் காரியம் தலைப்படுங்காலத்தில் இறைவன் வேறு எதையும் தனக்குத் துணையாகக் கொள் ளாத வன்மையுடன் விரைவில் மோக்ஷத்தையளிக்கும்; அவ்வா றில்லாது உபாயத்தை மேற்கொள்ளும் அதிகாரத்தில் குறைப்பட்டிருந்தால் அதிகாரியாமளவும் இறைவன் காரியம் செய்யமாட்டான் (மோக்ஷப்பயனையளிக்க மாட்டான்). இந்த உபாயத்தைக் கைக்கொள்ளுவது எல்லாப்பயன்களையு மடைவதற்குப் பொதுவானதாகையாலே வேறுபயன்களை விரும்புபவர்களான செல்வம் விரும்புபவர்களும், ஆந்மாவை அநுபவிக்க விருப்பமுள் ளவர்களும் இந்தச் சித்தோபாயத் தையே பற்றியிருக்கும் போது அவர்களுடைய கெட்ட

பழக்கத்தினாலே தன் னாந்மாவை அநுபவிக்கவும் மிகவுந் தாழ்ந்ததான செல்வத்தை அநுபவிக்க ஆசை கொண்டி ழிந்ததாலே அவர்கள் மோக்ஷபயனை இழந்தார்கள்.

**155. மூலம்**

*ஆகையாலே புத்ர த$_3$ாராதி$_3$ ஸங்க$_3$மும் க்ஷுத்ர விஷய அநுபவமும், ப்ரயோஜநாநந்தரமாகை யாலே ஸித்தோபாய ஸ்வீகாரம் பண்ணினான் என்று ப்ரயோஜ நாந்தரபரனுக்கு ப்ராப்தியோக்யதை யில்லையிறே. இவ்வர்த்தம் 115. "பே$_3$ாக$_4$ா இமே விதி$_3$ சிவாதிபதஞ் சகிஞ்ச ஸ்வாத்மாநு பூதிரிதி யா கில முக்திருக்தா| ஸர்வம் ததுரஷஜல ஜோஷம் அஹம் ஜுஷேய ஹஸ்த்யத்ரி நாத$_3$தவ த$_3$ாஸ்ய மஹாரஸஜ்ஞ:||" (வரதராஜஸ்தவம் -81),*

**விளக்கவுரை**

ஆகையால், இவனது சுவையானது ஸம்சாரமாகிய தீய செயல்களில் நின்று மீண்டு வேறு பயனை விரும்பாத வனாய் இறைவனையே பயனாகக் கொள்ளும் மோக்ஷ பயன்கிட்டும். வேறு பயனை விரும்பாமையாகிறது, பிள்ளைகள் மனைவி ஆகியவற்றின் சேர்க்கையில் ஈடுபடும் பயன் தொடங்கி நான்முகன் பதவி இடையாக ஆத்மாநுபவம் முடிவாகவிருக்கும் இவைகள் எல்லாவற்றை யும் விட்டு, இறைவனையே மேலான பயனாகக் கொள்பவன். ஆகையாலே, பிள்ளை, மனைவி, செல்வம் முதலானவற்றில் பற்றும் தாழ்ந்த விஷயத்தில் அநுபவமும் வேறுபயனை விரும்புதலாகையால்ஸித்தோபாயத்தைக் கைக்கொண்டவன் என்று இவனைக் கூறுதல் ஆகாது; இப்படிப்பட்டவன் மோக்ஷதத்திற்குத் தகுதியாக மாட்டான். 115. ''அத்திகிரி

தேவராசனே! உனது அடிமையின் சுவையறிந்த அடியேன், இவ்வுலகில் பெறும் இன்பங்கள், மறுமையில் பெறும் பிரமன் உருத்திரன் முதலானாரது பதவிகள் அதற்கும் மேற்பட்ட ஆந்மாநுபவம் ஆகிய அனைத்தும் உப்பு நீரைப்போல் சுவையற்றதாக நினைக்கக் கடவன்'' என்று கூரத் தாழ்வானால் கூறப்பட்டதல்லவா''.

**156. மூலம்**

***116. ''த்ருணீக்ருதவிரிஞ்சாதி$_3$ நிரங்குஶ விபூ$_4$தய: ராமாநுஜபாத$_3$ாம்பே$_4$ாஜஸமாச்ரயணஶாலிந:'' (உத்தர. தின-22) என்று சொல்லப்படாநின்றதிறே. இப்படி யுண்டாக வேண்டியிருக்க, பரமஹேயமான க்ஷுத்ர விஷயங்களிலே ப்ரவணராய் த$_3$ாரா புத்ராதி$_3$களைவிட மாட்டாதவர்கள், கைபுகுராமையாலே நமக்கு வேண்டா வென்கிறவித்தனையொழிய, லபித்தால் இஹலோகாந்தர விலக்ஷண பே$_3$ாக$_3$ங்களை த்யஜிப்பார்களா? ஆகையாலே விஷயப்ரவணனுக்கு உபாய உபேயாதி$_4$காரங்களிரண்டி லும் அந்வயமில்லை. உபாய தி$_4$காரி ஸ்வரூப ஸாரார்த்த ஸதுஷ்டயத்திலே அம்மங்கியம்மாள் விபரீதார்த்தங்கள் புகுராதபடி நன்றாக வருளிச் செய்தாரிறே. எங்ஙனே? என்னில், ''உபாய ஜ்ஞாந மென்றும் உபாய யாதாத்ம்ய ஜ்ஞாநமென்றும் த்விவிதம். அதில் உபாயஜ்ஞாநம்; ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாந மென்றும், ஸம்ப$_3$ந்த$_4$ யாதாத்ம்ய ஜ்ஞாநமென்றும், ஸம்ப$_3$ந்த$_4$ ஸ்வரூப ஜ்ஞாநமென்றும், ஸம்ப$_3$ந்த$_4$ ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்நாமென்றும் நாலுபடியாக விருக்கும்.***

**விளக்கவுரை**

116. ''அளவுக்குட்படாத செல்வமாம் எம்பெருமானா

ருடைய திருவடித் தாமரையை அடைந்தவர்கள், பிரமன், சிவன் முதலானார் பதவிகளையெல்லாம் ஒரு துரும்புக்கு ஒப்பாக மதிப்பார்கள்'' எனவும் உத்தர தினசரியில் கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

இவ்வாறு, இவ்வுலக இன்பங்களில் வெறுப்புடைய வனாயிருக்க வேண்டியிருக்க, மிகவும் நீசமான தாழ்ந்த விஷயங்களில் ஈடுபாடு கொண்டு மனைவி, மக்கள், உறவினர், செல்வம் ஆகியவற்றை விடமாட்டாதார், தங்களுக் குக் கிடைக்காமையாலே இவை நமக்கு வேண்டாம் என்கிறார் களேயொழிய இவ்வுலகத்திலிருக்கும் சிறப்பான போகங் களைப் பெற்றால் விடுவார்களா? விடமாட்டார்கள். ஆகையால், ஐம்புலன் முதலானவற்றில் ஈடுபாடுடை யவனுக்கு உபாயம் - (இறைவனையடையும்) வழி, உபேயம் - (இறைவனையடைந்து பெறும்) பயன், ஆகிய இரண்டிலும் சேர்த்தியில்லை.

இறைவனையே உபாயமாகப் பற்றியிருக்கும் அதிகாரியினுடைய உண்மைநிலையை அம்மங்கியம்மாள் 'ஸாரார்த்த ஸதுஷ்டயம்' என்னும் நூலிலே, மாறுபட்ட கருத்துக்களைக் களைந்து நன்றாக அருளினாரல்லவா. அவை எங்ஙனே எனில், உபாய ஞானம் என்றும், உபாயத்தின் உண்மை ஞானமென்றும் இரண்டு நிலை; அவற்றில் உபாய ஞானம், சீவனுக்கும் பரமனுக்கும் உள்ள அடிமை ஆண்டான் என்னும் உறவின் தொடர்பாம் ஞானமென்றும், அந்த உறவின் உண்மை ஞான மென்றும் அவ்வுறவின் இயல்பாம் ஞானமென்றும், அவ்வுறவின் இயல்பாம் உண்மை ஞானமென்றும் நான்கு வகையாக இருக்கும்.

**157. மூலம்**

இதில் ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாநமாவது, -அவனுடைய ஶேஷித்வத்தையும் தன்னுடைய ஶேஷத்வத்தையும் தெளிந்து இஷ்ட விநியோகார்ஹனாயிருக்கை. ஸம்ப$_3$ந்த$_4$ யாதாத்ம்ய ஜ்ஞாநமாவது, -ஶேஷமானதா$_3$ர புத்ர க்ருஹ க்ஷேத்ராதி$_3$களைப்போலே ப்ருதக் ஸித்தமாயிருக்கை யன்றிக்கே அவனுக்குந் தனக்கு முண்டான ஶரீராத்ம பா$_4$வத்தை தெளியவறிகை. ஸம்ப$_3$ந்த$_4$ ஸ்வரூப ஜ்ஞாநமாவது, -ஶரீரி ஶரீரங்கள் போலே பிந்நத்ரவ் யங்களாய் வருந்தசையில் பேதமுண்டென்று தோற்றும் படி இருக்கையன்றிக்கே, அவன் த$_4$ர்மியாகவும் தான் த$_4$ர்மமாகவும் தெளிந்திருக்கை; ஸம்ப$_3$ந்த$_4$ ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநமாவது - த$_4$ர்மி த$_4$ர்மங்களுடைய ஐக்யத்தைத் தெளியவறிகை. அதாவது, விஶிஷ்ட வேஷத்திலே அவனேயாய் தானில்லை யென்னலாம் படியிருக்கை; இவை நாலும் உபாயஜ்ஞாநம்.

**விளக்கவுரை**

இவற்றில் அடிமை ஆண்டான் என்ற உறவின் ஞான மாவது, -இறைவனது தலைமைத் தன்மையும் சீவனின் அடிமைத் தன்மையையும் தெளிய அறிந்து இறைவனின் விருப்பப்படி விநியோகங்கொள்ள தகுதி படைத்தவனா யிருக்கை; அவ்வுறவுகளின் உண்மையான ஞானமாவது, ------அடிமைப் பொருளாம் மனைவி, மக்கள், இல்லம், நிலம், செல்வம் முதலியவற்றைப் போலே விட்டுப் பிரிந்திருக்கை போல் அல்லாமல், இறைவனுக்கும் தனக்குமுள்ள உயிர் உடல் என்னும் தொடர்பைத் தெளிய அறிதல்; உறவின் இயல்பறி ஞானமாவது, -உயிரும்உடலும் தனித்தனிப் பொருள்களாயிருப்பது போல் தோற்றமளித்

தலன்றிக்கே, இறைவன் முதற்பொருளாயும் சீவன் சினைப் பொருளாயும் இருப்பவன் எனத் தெளிந்திருத்தல். (தர்மி-முதற்பொருள், தர்மம்-அடை அல்லது சினைப் பொருள்) உறவின் தொடர்பாம் இயல்பறி உண்மை ஞானமாவது,-தர்மி-இறைவன், தர்மம்-சீவன்.

**158. மூலம்**

*உபாய யாதாத்ம்ய ஜ்ஞாநமாவது, தந்நிஷ்டை. அதாவது, ஶேஷத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், ஜ்ஞாத்ருவத்தில் கர்த்ருத்வநிவ்ருத்தியும், கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், பே$_{4}$ாக்$_{3}$த்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும் அறிகை. இவற்றில், ஶேஷத்வத்தில் கர்த்ருத்வமாவது, -ராஜாஸக்தியை இட்டு ஜக$_{3}$த்தை பிடிக்கும் மந்திரிகளைப்போலே ப$_{4}$க$_{3}$வத$_{3}$ாஸக்தியை யிட்டு ஸத$_{3}$ாசாரத்தை நெகிழுகை. அதாவது, நாம் ப$_{4}$க$_{3}$வச்ஶேஷபூத ரல்லோமா? நமக்கு பயமென்? என்று ஶப்தாதி$_{3}$ விஷயப்ரவணராய் ப$_{4}$யமற்றிருக்கையும், ப$_{4}$க$_{3}$வத் ப$_{4}$ாக$_{3}$வத$_{3}$ கைங்கர்யத்தில் ஆசை விளையா தொழிகையும்.*

*தந்நிவ்ருத்தியாவது, ப்ரமாதிகமாகவும் வருகிற விஷயஸ்பர்ஶத்திலும் ப$_{4}$யப்பட்டிருக்கையும் ப்ராமாதிக மான கைங்கர்ய விச்லேஷத்திலார்த்தி விளைகையும். ஜ்ஞாத்ருவத் தில் கர்த்ருத்வமாவது, நாம் ஜ்ஞாநவானாகை யாலன்றோ?நம்மை அவன் பரிக்ரஹித்தானென்று தன் ஜ்ஞாத்ருவத்தை யிட்டு இறுமாய்கை. தந்நிவ்ருத்தியாவது,*

**விளக்கவுரை**

இவர்களுடைய ஒன்றாம் தன்மையைத் தெளிவாக அறிதல்; அதாவது, கூடியிருக்கும் நிலையில் இறைவன்

மாத்திரமிருந்து சீவன் இல்லையென்னும்படி கூடி நிற்றல். (உதாரணம்: சூரியன்-இறைவன், சீவன்-அதன் ஒளி) இவை நான்கும் உபாய ஞானம். உபாயத்தின் உண்மையான ஞானமாவது, உபாயத்தின் தன்மையறிந்து ஒழுகுதல். அதாவது, அடிமையில்தான் என்னும் எண்ணத்தைத் தவிர்த்தலும், செயல்படுவதில் நானே செயல்படுகிறேன் என்னும் எண்ணத்தைத் தவிர்த்தலும், இன்பத்தில் தானே இன்பமநுபவிப்பவன் என்னும் எண்ணத்தைத் தவிர்த்தலும் ஆகியவற்றைச் சீவனானவன் நன்றாக அறிதல் வேண்டும். இவைகளில், அடிமைத்தனத்தில் தான் என்னும் நினைவாவது, 'தாம் அரசனுடைய ஆள்' என்னும் செருக்காலே உலகவர்களைத் துன்புறுத்தும் அமைச்சரைப் போலே, பகவானுக்கு நாம் அடியவன் என்னும் செருக்காலே நல்லாசாரத்தை நெகிழ்விக்கை.

**159. மூலம்**

***தே$_{3}$ஹாத்மாபி$_{4}$மாநிகளிலும் கடையாய், அசித்ரூப னாய் முதலழித்துக்கொண்டு போருகிற என்னை, இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலே அஜ்ஞா நத்தைப் போக்கி ஜ்ஞாநத்தைத் தந்தானென்றிருக்கை. கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது, நாம் நிஷித்தங்களை விட்டு விஹிதங்களைப் பற்றினவாறே யன்றோ நம்மையவன் அங்கீ$_{3}$கரித்தான் என்று தன் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையிட்டு இறுமாய்கை. தந்நிவ்ருத்தியாவது, நம் வ்யாபாரங்களொன்று மில்லை, மரப்பாவையை ஆட்டுவிப்பாரைப் போலே, நம்மை நிஷித்தங்களில் நின்றும் விடுவித்து விஹிதங்களைப் பற்றுவித் தானென்று இருக்கை.***

**பே₃ாக்₃த்ருவத்தில் கர்த்ருத்வமாவது, நாம் அவனுக் கடிமை செய்கிறோம் என்றிருக்கை. தந்நிவ்ருத்தியாவது, தன் கையாலே தன் மயிரை வகுத்தால் தன்கை தனக்கு வகுத்தோ மென்றிராதாப்போலே அவயவ பூதனான ஆத்மா அவயவியான எம்பெருமானுக்கு எடுத்துக் கைநீட்டுகிறான் என்றிருக்கை, என்றருளிச் செய்தார்.**

**விளக்கவுரை**

அதாவது, நாம் பகவானுக் கடிமையல்லமோ? நமக்கு அச்சமென்? என்று ஐம்புலன்களில் ஆசையுடையவராய் அச்சமில்லாதிருத்தலும் பகவானுக்கு அவனடியார்க்கும் தொண்டு செய்வதில் விருப்பமில்லா திருத்தலும்.

அதிலிருந்து தன்னை விலக்கிக் கொள்ளுதலாவது, தான் ஐம்புலன் விஷயங்களில் ஈடுபாடின்றிக்கேயிருந்தாலும் தன்னை யறியாமல் நேருகிற அவ்விஷயங்களைக் கண்டால் அஞ்சியிருத்தலும், தன்னையறியாமல் நேரும் பகவத் பாகவத தொண்டுகளில் துடிப்பு விளைகையும் மகாரத்தால் சொல்லப்பட்ட ஞானத்தில்தான் என்ற எண்ணங் கொள்ளு தலாவது, நாம் ஞானமுடையவனாகையால் அன்றோ நம்மை இறைவன் கைக்கொண்டான் எனத்தான் ஞானவான் என்பதையிட்டுச் செருக்குடனிருத்தல். அதனை விடுகை யாவது, உடலையே ஆந்மா என மயங்குகின்றவர்களைக் காட்டிலும் கடைப்பட்ட வனாய், அறிவற்ற சடப் பொருளைப் போன்றவனாய், ஆந்மாவின் முதலாகிய இயல்பினை என்னுடைய தீயசெயலால் அழித்துக் கொண்டு இவ்வுலகில் திரிந்த என்னை இறைவன், இரும்பைப் பொன்னாக்குகின்ற வரைப் போலே என் அறிவின்மையைப் போக்கி ஞானத்தைக் கொடுத்தான் என்றிருத்தல்.

செய்கின்ற செயல்களைத் தானே செய்கிறோம் என்றிருத்தலாவது நாம், தீயவற்றை விட்டுச் சாத்திரங்களில் கூறப்பட்ட நல்லவற்றைப் பற்றியதாலன்றோ நம்மை அவன் ஏற்றுக் கொண்டான் என்று சீவாந்மா தான் செயற்படுதல் செயற்றவிர் தலையிட்டுச் செருக்குடனிருத்தல் அதனைத் தவிர்த்தலாவது, என் செயற்பாடுகள் ஒன்றுமில; மரத்தாலான பதுமையை ஆட்டுவிப்பாரைப் போன்று இறைவனே என்னைத் தீயவற்றில் நின்றும் - விலக்கி - நல்லவற்றைப் - பற்றுவித்தான் - என்றிருத்தலாம்.

பேரின்ப நுகர்தலில் தான் செய்படுதலாவது, நாம் இறைவனுக்கடிமை செய்யாநின்றோம் என்றிருத்தல். அதனைத் தவிர்த்தலாவது, தன்கைகளாலே தம் தலைமயிரை நீவினால், தனது கைகள் நாமே தலைமயிரை நீவினோம் என்றிராதாப்போலே, இறைவனுக்கு உறுப்பாயிருக்கும் ஆந்மா அவ்வுறுப்பு உடையவனான இறைவனுக்கு அடிமை செய்கிறான் என்றிருத்தலாம் என அம்மங்கியம்மாள் அருளிச் செய்ததற்குக் கருத்தாம் எனவறிக.

**160. மூலம்**

***இத்தால், ஶேஷபூதனாய் விஷய ப்ரவணனாகாதே யிருக்க வேணும். தான் ஜ்ஞாதாவாய் நஶிற்றிலன், நான் ஜ்ஞாநஹீநன், அவன் தந்த ஜ்ஞாந மென்றிருக்க வேணும். தான் நிஷித்தநுஷ்ட$_2$ாந த்யாகபூர்வமாக ஸத$_3$நுஷ்ட$_2$ாந பரனாயிருந்தும் நாம் மரப்பாவை போலே பரதந்த்ரன். இந்த த்யாக ஸ்வீகாரங்களிரண்டும் அவனாலே வந்ததென்றிருக்க வேணும். தான் ஸர்வவித கைங்கர் யங்களும் பண்ணிக் கொண்டிருந்தாலும், அவற்றை அவனே செய்துவித்துக் கொண்டான் என்றிருக்க வேணும்***

***என்று அருளிச் செய்தாராயிற்று. இதுவாயிற்று உபாயாதி$_4$காரி லக்ஷணம். தத்வஸ்திதி யிதுவாயிருக்க ஶரீராத்மப$_4$ாவமும் அவயவாவயவி ரூபைக்யமறிந்தவர் நிஷித்தாநுஷ்ட$_2$ாநம் பண்ணினாலும் அவனதேயா யிருக்கக் குறையில்லை யென்று மௌட்யத்தாலே சொல்லுவர்கள்.***

**விளக்கவுரை**

இதனால், இறைவனுக்கு அடிமை செய்பவன் பெண்ணின்பம் போன்ற விஷயங்களில் பற்றற்றிருக்க வேண்டும். எம்பெருமானே முழுமதியுடை யவன்; அவன் எப்பொழுதுமிருப்பவன்; அழிவில்லாதவன்; சீவனாகிய நானோ ஞானமில்லாதவன்; எனக்குள்ள ஞானம் அவன் தந்தது என இருக்க வேண்டும். சீவன், தான் முன்னம் தீதுசெய்தலை விட்டு நல்லோர் மேற்கொள்ளும் ஒழுக்கத் தைக் கடைப்பிடிப்பனாயிருந்தாலும், நாம் மரப்பாவையைப் போலே இறைவனுக்கு உடைமையானவன், தீயவற்றை விடுதலும் நல்லவற்றை மேற்கொள்ளுதலுமாகிய இவ்விரண்டும் இறைவனாலே அந்த எண்ணம் நமக்கு வந்தது எனவிருத்தல் வேண்டும்; தான் எல்லாத் தொண்டு களையும் இறைவனுக்குச் செய்தாலும், அவற்றை அவனே செய்துவித்துக் கொண்டான் என்றிருத்தல் வேண்டும் என்று அம்மாள் அருளிச்செய்ததாம். இந்தக் கருத்தினையுட் கொண்டு நடத்தலே உபாய அதிகாரியினது இலக்கணம் என்பது. உண்மை நிலையிதுவாயிருக்க உயிர்கள் யாவும் இறைவனுக்கு உடல் என்றும் அவ்வுயிர்கள் அவனுக்கு உறுப்புக்கள் என்னும் ஒற்றுமையை அறிந்தவர்கள் தீய ஒழுக்கத்தை மேற்கொண்டாலும் எல்லாம் இறைவனதே

யாயிருக்க குறைவில்லை என்று தம்மூடத்தனத்தால் இறைவன் மேற்பழியிட்டுச் சொல்வார்கள்.

**161. மூலம்**

அப்படிச் சொல்லப்போகாது; சரீராத்மபாவஞ் சொன்னது தல்லக்ஷணங்களான ஆதே$_4$யத்வ விதே$_4$யத்வ சேஷத்வங்கள், தனக்கு ஸ்வரூபமென்றிருக்கைக்காவும், அவயவ அவயவி ரூபைக்யஞ் சொன்னது, தான் செய்யுங் கைங்கர்யத்தில் *(116.அ.)* "அஹம் கர்த்தா மம அயம் போ$_4$க$_3$": *(?)* என்கிற அஹங்கார மமகாரங்கள் வாராதபடி கர்த்ருத்வ போக்ருத்வ ரஹித பாரதந்தர்ய அநுஸந்தாந பரனாயிருக்க வேணுமென்றும் சொன்னதித்தனை யொழிய, தான் துர்வாஸனையாலே விஷயப்ரவணனாய்ச் செய்யும் அவையும் அவனேயென்னில், விநாசஹேது வாமிறே. நஹுஷ ந்ருக யயாதி ப்ரப்ருதிகள் அநேக காலம் பஹு யஜ்ஞதாநதபஸ்ஸுக்களைப் பண்ணி, நாம் செய்கிறோமென்னும் அஹங்காரத்தாலே முஹூர்த்த மாத்ரத்திலே அவையெல்லாம் வ்யர்த்தமாய் அத: பதித்தாராகையாலும், சித்ரகேது என்கிற ராஜா, அநேக காலம் ராஜ்யம் பண்ணி பின்பு விரக்தனாய் ப$_4$க$_3$வது$_3$ பாஸநம் பண்ணி உபாஸந ப$_4$லத்தாலே திவ்ய விமாநத் தோடே ஊர்த்வலோகங்களெல்லாம் ஸஞ்சரித்துக் கொண்டு, ஒருநாள்,

**விளக்கவுரை:**

அவ்வாறு சொல்லவொண்ணாது; இறைவனுக்கு எல்லாஉயிரும் உடலெனச் சொன்னது, ஆன்மா இறைவனால் தாங்கப்படுபொருளாயும் அவனுக்கு அடங்கியதாயும் அவனுக்கு அடிமைப் பொருளாயுமிருத்தல் சீவனுக்கு இவை

இயற்கை என்றிருப்பதற்காகவும், இறைவனுக்குச் சீவன் உறுப்பாகவும் அவன் தலைமைப் பொருளாகவுமிருக்கும் உருவ ஒற்றுமையைச் சொன்னது, தான் செய்யுந் தொண்டில் (116.அ.) நான் செயல்படுவதால் (கர்த்தாவாகையால்) இந்த இன்பம் எனக்கே என்கிற நான் எனது என்னும் செருக்குகள் வாராதாறு, நாமே செயல்படுகிறோம் போகம் நுகர்கிறோம் ஆகியன இல்லாது பகவானுக்கே நாம் வயப்பட்டவன் என்னும் நினைவுடையனாக இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டதேயன்றி தீயப் பழக்கத்தாலே செய்யக்கூடிய தீய தொழிலும் இறைவன் எண்ணப்படிதான் நடை பெறுகிறது என்றால் அதுதான் அழிவதற்கே காரணமாகு மல்லவா. நகுஷன், நிருகன், யயாதி போன்ற மன்னர்கள் பலகாலம் யாகம், தானம், தவம் ஆகியவற்றைச் செய்து, அவற்றை நாம் செய்கிறோம் என்னுஞ் செருக்காலே சில மணித்துளியில் அவையெல்லாம் வீணாகி அழிந்து போனார்கள். சித்திரகேது என்ற அரசன் நெடுங்காலம் அரசாட்சி செய்து பின்னர் அரச வாழ்க்கையில் பற்றற்று, பகவானை ஆராதித்து அவ்வாராதனையின் ஆற்றலாலே சிறந்த ஒளிரும் விமானத்தோடு மேலுகமெல்லாம் சுற்றிவருங்காலை ஓர் நாள்,

**162. மூலம்**

*கைலாஸ மார்க்கத்தாலே வரும்போது அங்கே பார்வதி ஸமேதனாய் ப்ரத₂மகண பரிவ்ருதனாயிருக்கிற ருத்ரனைக் கண்டு, தான் விரக்தனான அஹங்காரத்தாலே, நிர்லஜ்ஜனாய் பத்நீஸஹிதனாயிருக்கிறானென்று பரிஹஸிக்க, கௌரீ சாபத்தாலே அந்த உபாஸநமெல்லாம் நிர்மூலமாய் ராக்ஷஸ யோநியிலே பிறக்கையாலும், தான் செய்கிற ஸத்கர்மங்கள், "நாம் செய்கிறோம் என்றிருந்தால்*

*அவை நசித்துப்போகிற மாத்ரமன்றிக்கே மேலிட்டு அநர்த்தம் வருகையாலே ப்ரபந்நனானவன், தனக்கு உண்டான ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்க ளெல்லாம் அவன் தலையிலேயிட்டு, கர்மநிபந்தநமாக வருகிற நிஷித்தப்ரவ்ருத்திகளெல்லாம் "யானே யென்னை யறியகிலாதே யானே யென்றனதே யென்றிருந்தேன்" (திருவாய். 2-9-5) என்று அநுஸந்தித்தானாகில் ஸ்வரூபம் உஜ்ஜீவிக்கும். (116.ஆ.). "யோயோஜல்பஸ் ஸதுஜப:" "யத்$_3$த்$_4$யாநம் தந்திரீக்ஷணம்" (விஹகேந்.ஸம்.) என்று இவன் பண்ணுகிறவையெல்லாம் அவனுக்கேயாயிருக்கு மென்று சொல்லி நின்றதே யென்ன?*

**விளக்கவுரை**

கைலைக்குச் செல்லும் வழியில் செல்லுகின்றபோது, ஆங்கு மலைமகளோடு பிரதம கணங்களுடன் சூழப்பெற்ற உருத்திரனைப் பார்த்து, தான் பற்றற்றிருக்கின்ற செருக்காலே, இந்த உருத்திரன் வெட்கமில்லாது மனைவியோடு திரிகிறான் என்று நகைக்க, அது கண்டு வெகுண்ட கௌரியானவள் அவ்வரசனுக்குச் சாபமிட அதனால், அவன் செய்த ஆராதந சக்தியெல்லாம் அழிந்துபோய் அரக்க சாதியில் பிறந்தமை யாலும் சீவனான தான் செய்கிற நல்வினைகளை, நாம் செய்கிறோம் என்ற செருக்கோடிருந்தால் அவைகள் அழிந்து போகிறதும் அல்லாமல் மேன்மேலும் தீமையே வருமாகையால், பிரபந்நனானவன் தனக்குண்டான ஞானத்தில் உறுதிப்பாடு பக்தி முதலானவை யெல்லாம் "யானே யென்னையறியகிலாதே யானே யென்றனதே என்றி ருந்தேன்" என்று திருவாய்மொழியில் கூறப்பட்டவற்றை நினைவு கூர்ந்தானாகில் இவனது உயிர்நிலை பெற்று வாழும். (116.ஆ.) "ஆனால் நாராயணன் ஒருவனிடத்

திலேயே பக்தி கொண்டவன் சொல்லும் எந்தஎந்த சொற்களுண்டோ அவையெல்லாம் செபமாகும்; அவனுடைய பார்வையெல்லாம் விஷ்ணு தியானமாகும் என்று இவன் செய்யும் இறைவனையே சார்ந்ததாகும்'' என்று சான்று நூல்கள் பகரா நின்றனவே? எனின்,

163. மூலம்

முதலிலே (117) ''நாராயணைக$_3$நிஷ்ட$_2$ஸ்ய'' (?) என்று ஏகபதத்தாலே அதிகாரியை நிர்த்தேசித்தாரிறே. தத்வ்யதிரிக்த ஸமஸ்தமும் பரித்யஜித்து அவனே எல்லாமாக அநுபவிக்கும் ஆழ்வார்போல் வாரிறே நாராயணைக$_3$ நிஷ்டராவது; அந்த அதிகாரிகள் நிஷித்த ப்ரவ்ருத்தியில் அந்வயிக்குமவரல்லரே. இனி ''அழுவன் தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன் தழுவல் வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்'' (திருவாய். 5-8-5) என்று அவர் படுகிற அலமாப்பெல்லாம் அவனைக் குறித்ததாகையாலே, அவையெல்லாம் அவனுக்கதி சயகரங்களாய் இஷ்ட கைங்கர்யங்களோபாதி, அவன் முகமலர்த்திக்கு ஹேதுவாயி ருக்குமென்று சொல்லப்பட்ட தித்தனையொழிய (118) ''ஸப்தாதி$_3$ பே$_4$ாக$_3$ நிரதச் சரணாக$_3$தாக்ய'': (யதிரா.விம்.8) என்று துர்விஷய ப்ரவணருமாய் சரணாகதருமாய் து$_3$:க்கப்ரதரான நம் போல்வார் செய்கிற பரஹிம்ஸா பரதாரகமநாதிகள் அவனுக்கு கைங்கர்யமாய் விடுமென்றால், சித்ரவதார் ஹரா வாரிறே. ஆனால், அஜாமிளாதிகள் துர்மார்க்க வர்த்திகளாய் புத்ர ப்ராந்தியாலே நாமோச் சாரணம் பண்ண, அதை வ்யாஜமாக்கி அநுக்ரஹித் தானிறே? யென்னில், அவனை யமபடர் கைக்கொண்டு போகாதபடி

*நிக்ரஹித்து விடுவிக்க அவன் தெளிந்து விஸ்மயப்பட்டு, பகவத் ப்ரபாவமறிந்து அபரமாத்ம விரக்தனாய் பரமாத்ம ஸக்த சித்தனாய் முக்தனானானென்று சொல்லப் பட்டதிறே.*

**விளக்கவுரை**

விஹகேந்திர ஸம்ஹிதையில், (117) ''நாராயணன் ஒருவனிடத்திலேயே பக்தியுடையவன்'' என்னும் அந்த ச்லோகத்தின் முதலடியில் வரும் 'ஏக' என்னும் பதத்திலே அதிகாரி எத்தன்மையானவன் என்பதைச் சுட்டுகிறதல்லவா. இறைவன் தவிர்ந்த எல்லாப் பொருள்களிலும் பற்றைவிட்டு அவ்விறைவனையே எல்லாமாக அநுபவிக்கும் ஆழ்வார் போல்வாரே நாராயணன் ஒருவனையே பற்றுக் கோடாகப் பற்றியிருப்பவர்கள்; அத்தன்மை வாய்ந்த அதிகாரிகள், தீய செயல்களில் ஈடுபட முயல மாட்டார்கள். இனி, ''அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடியலற்றுவன் தழுவல் வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்'' என்று கூறி ஆழ்வார் படுகிற ஆற்றாமையெல்லாம் இறைவனைக் குறித்ததாகையாலே, அவர் படுபவையெல்லாம் இறைவனுக்கு வியப்பையுண்டாக்கக் கூடியதாய் அவனுகந்த தொண்டைப்போலே அவன் முகம் மலர்தற்குக் காரண மாயிருக்குமென்றே சொல்லப்பட்டது. (118) ஐம்புலன் வேட்கையில் மிக்க ஆசையுடையனாய், தேவரீர் திருவடிகளில் சரணமடைந்தவன் என்னும் பேர் மாத்திர முடையவனாயிரா நின்றேன் என்று கூறும்படி, கெட்ட விஷயத்தில் ஈடுபாடு உடையவராகவும், பகவானைச் சரண மடைந்த வருமாய், துன்பத்தில் உழலும் நம்மைப் போன்றவர்கள் செய்யக் கூடியவைகளாகிய துன்புறுத்துதல், பிறர் மனைவியரைப் புணர்தல், பொய் சொல்லுதல்

ஆகியவையெல்லாம் இறைவனுக்குத் தொண்டாகிவிடும் என்றால், அவர்கள் கொடிய தண்டனையை அநுபவிப்பார்கள். ஆனால், அஜாமிளன் என்னும் அந்தணன் முதலியோர் கெட்ட வழி நடந்து தனக்கும் கீழ்க்குலத்துப் பெண்ணிற்குப் பிறந்த பிள்ளையைப் பிள்ளைப் பாசத்தாலே அவனை நாராயணன் என்று பெயர் சொல்லி அழைத்த மாத்திரத்தில் அதையே காரணமாக்கி அவனைக் காத்தான் அல்லவா? இறைவன் எனின், அவ்வந்தணனை நமனுடைய ஆட்கள் இழுத்துக் கொண்டு போகாதவாறு அவர்கள் தண்டித்து அவனை விடுவிக்க, அவன் தெளிந்து ஆச்சர்யப்பட்டு, பகவானது பெருமையை அறிந்து, பெண் மண், பொருள் ஆகியவற்றில் வெறுப்புடையவனாய் பரமாத்மாவிடம் பக்தியுடையவனாய், முக்தனானான் என்று கூறப்பட்டிருப்பதை நீவிர் அறியீரோ.

**164. மூலம்**

***நீரிப்படியருளிச் செய்கிறது என்? ஆழ்வார் தொடங்கி யெல்லாரும் அவனுடைய ஸௌலப்யமே சொல்லாநிற்க, பகவத் விஷயம் துர்லபமாகச் சொல்லப் போமோ? என்ன, அவனுக்கு ஸௌலப்யாதி குணங்க ளில்லையென்று நான் சொன்னேனோ? அவனுடைய ஸ்வரூபம் "(119)ரிபூணாம் அபிவத்ஸல:" (ஸ்ரீரா.யுத். 50-56) என்று அவன் ஸுலபனாயிருந்தாலும், இவன் தன் ஸ்வரூபத்துக்கு அநுகுணமாக வர்த்திக்க வேணுமிறே. அவன் பிராட்டி பக்கல் அபசாரம் பண்ணின காகத்தை ரக்ஷித்தானென்று, இவனும் அப்படி மாத்ரு த்ரோஹம் பண்ணவேணுமோ? " (120) "ப்ரபந்நச் சாதகோயத்$_3$வத் ப்ரபத் தவ்ய: கபோ$_3$தவத்" (ஸ்ரீபாஞ்சராத்ரம்) என்று இவன் தன் ஸ்வரூபமழியாமல் நின்றால் அவனுக்குகப்பாக***

மித்தனையொழிய, ஒரு கால் ஒருவனை நிரங்குச ஸ்வாதந்த்ர்யத்தாலே ரக்ஷித்தானென்று எல்லாருக்கும் அதுவே யாத்ரையானால் அநர்த்தஹேதுவாமிறே. "(121) "நபி$_3$பே$_4$தி குதச்சநேதி - ஏதக்ம்ஹவா வநதபதி - கிமஹக்ம் ஸாது$_4$ நாகரவம் - கிமஹம்பாபமகர வமிதி" (தை.உ.ப.) என்று பு$_3$த்$_3$தி$_4$ பூர்வ உத்தராகத்துக்கும் அஞ்சவேண்டா வென்று சொல்லிற்றிறே யென்ன? இதுக்கர்த்தம், (122) "ஆநந்த$_3$ம் ப்$_3$ரஹ்மணோவித்$_3$வாந்" "தாத்$_3$ருஶ ஆநந்த$_3$ கு$_3$ணக ப்$_3$ரஹ்மோபாஸநேந ஸர்வ க்லேஶப$_4$ய அத்யந்த நிவ்ருத்தி: ப$_4$வதீத்யர்த்த$_2$": என்று ஆநந்தவல்லியில் சொல்லப்பட்ட நிரதிசயானந்தகுண விசிஷ்ட பரப்ரஹ்மோ பாஸநத்தாலே உபாஸகனுக்கு ஸர்வ க்லேச பயாத்யந்த நிவ்ருத்தி சொல்லுகிறதொழிய ப்ரபந்நனானவன் புத்தி பூர்வமாக நிஷித்தாநுஷ்டாநம் பண்ணிக் கொண்டு பயப்படானென்று சொல்லிற்றில்லையே.

**விளக்கவுரை**

நீர் இவ்வாறு அருளிச் செய்வது என்கொண்டு? ஆழ்வார்கள் தொடங்கி மற்றுமுள்ள சான்றோர்களும் இறைவனின் எளிமைத் தன்மையே பல இடங்களிலும் கூறா நிற்க, அவ்விறைவன் கிடைத்தற்கரியவன் எனச் சொல்ல லாமோ? எனின், அவனுக்கு எளிமை, இரக்கம், முதலாய குணங்களில்லை என்று நான் கூறினேனோ? அவனுடைய இயல்பான குணம், (119) ''பகைவர்களுக்கும் கிட்ட எளியவன்'' என்றே இராமாயணம் முதலாயவற்றில் கூறப்பட்டு உள்ளன. எனவே அவன் எளிமை யாயிருந்தாலும், சீவன் தன் இயல்புக்கு ஏற்றவாறு நடந்து கொள்ள வேண்டுமல்லவா.

அவ்விறைவன், சீதையின்பால் பெரிய குற்றமிழைத்த காக்கையையும் காத்தான் என்று இச்சீவனும் தன் தாயான வளுக்குக் குற்றமிழைக்க வேண்டுமோ? (120) சரணாகதி செய்தவன், சாதகப் பறவை மழைத்துளியை எதிர்பார்த் திருப்பது போல், இறைவனுடைய அருளையே எதிர்பார்த்திருப்பன்; சரணாகதியை ஏற்றுக் கொள்வானோ எனின், கபோத உபாக்யானத்தில் கூறப்பெற்ற புறாவினைப் போல் ப்ரபந்நனைத் தன் உயிரைக் கொடுத்தும் பாதுகாக்கக்கடவன் என்று கூறியவாறே, சீவன் தன் உயிரின் இயல்பு கெடாமலிருந்தால் இறைவனுக்கு உகப்பாகு மித்தனையன்றி, அவ் இறைவன் ஒருவனை ஏதோ ஒரு காரணத்திற்காக ஒரு காலத்தில், எவரும் கேட்பாரற்ற தன் ஸ்வதந்திர குணத்தால் பாதுகாத்தானென்று என்று நினைத்துத் தீயவழி நடந்தால்; நம்மையும் அவ்வாறே காப்பான் இறைவன் என்று எண்ணினால் அது அழிவதற்கே காரணமாகும்.

ஆனால் (121) ''பரம்பொருளை உள்ளவாறு அறிந்து அதனிடத்துத் தன்னை ஒப்படைத்தவன் எதனிடமும் அஞ்சுவதில்லை; இதற்கு முன்னர் எத்தன்மையான தீவினைகள் புரிந்திருந்தாலும் அவைகளுக்குத் தான் அஞ்ச வேண்டுவதில்லை'' என்று இறைவனிடத்தில் சரணடைந்த பின்னரும் நினைவறிந்தே பாவம் புரிந்தவன் அதைக்கண்டு அஞ்ச வேண்டாம் என்று நூல்களில் கூறப்பட்டிருக்கிறதே எனின், (122) ''அந்தப் பரமாத்மாவின் ஆனந்தத்தை அறிந்தவன் (எதனிடமும் அஞ்சமாட்டான்)'' (123) ''அத்தன்மையாம் ஆநந்த குணத்தோடு கூடிய பரம்பொருளை ஒருவன் தன் உபாசனை (பூசிப்பதின்) மகிமையாலே எல்லாத் துன்பங்களும் கழிந்து அப்பரம்பொருளை அடைகிறான்'' என்று ஆநந்தவல்லி

என்னும் மறைப்பகுதியில் கூறப்பட்ட அளவிறந்த ஆநந்த குணத்துடன் கூடிய பரம்பொருளை உபாசிப்பதனாலேயே உபாசகனுக்கு எல்லாத் துன்பமும் அச்சமும் விலகுகின்றன எனக் கூறுகின்றதொழிய, பிரபந்நனானவன் தெரிந்தே தீயவற்றைச் செய்வதனால் அஞ்ச மாட்டான் என்று ஓரிடத்திலும் கூறவில்லையே.

## 165. மூலம்

உபாஸகன், (124) "சாந்தோத$_3$ாந்த உபரஸ்திதி க்ஷுஸ் ஸமாஹிதோ பூ$_4$த்வாத்மந்யே ஆத்மாநம் பச்யேத்" (ச$_2$ாந்தே$_3$ாக்$_3$யம்) என்று உபக்ரமமே தொடங்கி ஜிதேந்த்ரியனாய் உபாஸித்துக் கொண்டிருக்கும் அதிகாரி உத்தர காலத்தில் பாபத்தைப் பண்ணானிறே. ஆனால் ஜிதேந்த்ரியத்வம் உபாஸகனுக்கொழிய ப்ரபந்நனுக்கு வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லையே? என்ன, ஸித்த ஸாதந பரிக்ரஹத்துக்கு நிரபேக்ஷமானாலும், உபேயாதிகாரத்துக்கு அத்யந்தாபேக்ஷிதமாயிருக்கும். "வலமுதல் கெடுக்கும் வரமே தந்தருள் கண்டாய்" (திருவாய். 7-1-9) என்றருளிச் செய்தாரிறே. ஆனால் (125) "அபிபாவேஷ்வப்$_4$ரதா: மத்பக்தா: பாண்டுநந்தநமுச்யந்தே பாதகைஸ் ஸர்வை: பத்$_3$ம பத்ரமிவாம்பஸா" (மஹாபாரதம்) (126) "யே ந்ருபம்ஸாது$_3$ராத்மாந: பாபாசாரரதா: தத$_2$ா, தேபி யாந்தி பரம் த$_4$ாம நரா நாராயணாஶ்ரயா:" (?) என்று, என்னை ஆச்ரயித்தவன் மஹாபாபிஷ்டனானாலும் முக்தனாமென்று அவன்தானே அருளிச் செய்யா நிற்க நீர் அஞ்சும்படி பண்ணுகிறதென்? என்ன, மஹா பாபிஷ்டனானாலும் தன்னை யாச்ரயித்தால், "(127) "க்ஷிப்ரம் ப$_4$வதி தர்மாத்மா சச்வச்ச$_2$ாந்திம் நிகச் சதி" (கீதா. 9-31) என்று, தன்னுடைய ப்ரஸாதத்தாலே சீக்ரமாகவே

***தர்மாத்மாவாய் ப்ரசாந்தஸித்தனாய் முக்தனாம் என்று சொல்லுகிறதொழிய, யாவச் சரீரபாதம் அதுவேயாய் முக்தனாம் என்று சொல்லுகிறதன்றே.***

**விளக்கவுரை**

உபாஸகன் (124) ''ஐம்பொறிகளை அடக்கினவனாயும் இவையிரண்டையும் அடக்கியதால் உண்டாகும் செருக்கில்லாதவனாயும் அவ்வைம்பொறிகளை ஆந்மாவிற்கு விஷயமாக்கினவனாயும் வேறு செயலற்றவனாயும் ஆகி, ஆன்மாவிலுள்ள பரமான்மாவைக் காண வேண்டும்'' என்று ஆரம்பமே தொடங்கி ஐம்பொறிகளை அடக்கியவனாய் இறைவனை ஆராதித்துக் கொண்டிருக்கும் அதிகாரியானவன் பிற்பட்ட காலத்தில் தீமைகளைச் செய்யானல்லவா. ஆயின், புலனடக்கம் உபாஸகனுக்கொழிய பிரபந்நனுக்கு இருக்க வேண்டிய கட்டாயமில்லை அல்லவா? எனின், இறைவனையே உபாயமாகப் பற்றியிருப்பவனுக்குத் தேவையில்லை என்றாலும், இறைவனையே பயனாகக் கொண்டவனுக்கு மிகவும் அப்புலனடக்கம் தேவையாயிருக்கும். ''வலமுதல் கெடுக்கும் வரமே தந்தருள் கண்டாய்'' என்று ஆழ்வார் அருளிச் செய்தாரல்லவா. ஆனால், (125) ''பாண்டுவின் சிறுவனே! என்னுடைய பக்தர்கள் பாவங்களில் ஈடுபட நேர்ந்தாலும், தாமரை இலையில் நீர் ஒட்டாதது போலே எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்'' என்றும், (126) ''மனிதரிற் கடையானவரும் தீய நெஞ்சையுடையவரும் அவ்வண்ணமே தீய ஒழுக்கத்தில் ஈடுபட்டவர்களுமாய் யாவர் உளரோ, அவர்கள் நரநாராயணர்களைப் பற்றினவர்களாயிருந் தார்களாகில் அத்தன்மையானவர்களும் பரமபதத்தை அடைகின்றனர்'' என்று கூறுகிறபடியே,

என்னைச் சரணடைந்தவன் மிக்க பாவியாயினும் மோட்சமடைவான் என்று, எம்பெருமானே கூறியிருக்கும் போது, நீங்கள் அஞ்சும்படி கூறுவது என்? என்ன, பெரிய பாவங்களைச் செய்தவனாயினும் தன்னைப் பற்றிய மாத்திரத்தால், (127) ''விரைவில் பக்தியில் ஈடுபட்ட நெஞ்சையுடையவனாய், தீயவற்றில் ஈடுபாடற்ற தன்மையை நன்கு அடைகிறான்'' என்று, தன்னுடைய அருளாலே விரைவிலே பக்தியையுடையவனாய் மனம் அடங்கப் பெற்றவனாய் மோட்சமடைவான் என்று இறைவனால் சொல்லப்பட்டதே அன்றி மரணமடையும் வரையிலும் தீய ஒழுக்கத்தை மேற்கொண்டாலும் மோக்ஷமடைவான் என்று யாண்டுங் கூறவில்லை என்பதனை அறியவும்.

**166. மூலம்**

***இது பொருளென்று உமக்குத் தோற்றில், அபதே ப்ரவ்ருத்தியில் ருசியுண்டானால், என்னைக் கேட்க வேண்டா, உமக்கு வைஷ்ணவத்வமும் வேண்டா, ஆசார்யாபிமாநமும் வேண்டா, ஆழ்வாராசார்யர்களுடைய வசநாநுஷ்டானங்கள் வேண்டா, இத்தர்சநத்தில் உட்புகுந்து இதினுடைய வைலக்ஷண்யங் கெடும்படி விபரீதார்த்தங்கள் பங்கியாதே, கடக்க நின்று அஜாமிள கண்டாகர்ணாதிகளை ரக்ஷித்தவன் நம்மை ரக்ஷியானோ? என்றும், ப்ரஹ்மஹத்யாதிகளும் தாஸீகமநாதிகளும் பண்ணிக் கொண்டு ந்ருசம்ஸராய், துராத்மாக்களாய் பாப ஆசாரதரராய், யதேச்சையாக ப்ரவர்த்தித்துக் கொண்டு ஸுகமேயிருந்தால், அக்காலத்துக்கு அவன் திருவுள்ளமானபடி விநியோகங் கொள்ளுகிறான். தன் ஸ்வாதந்தர் யத்தாலே முக்தனாம்படி பண்ணவேணு மென்று நினைத்***

*தானாகில் அதுவுஞ் செய்யவல்லவன்; (128) "க்ஷிபாமி-நக்ஷமாமி" என்று நிக்₃ரஹிக்கவும் வல்லவன்.*

**விளக்கவுரை**

நான் கூறிக் கொண்டுவரும் ஸதாசாரத்தை இது பொருளன்று என உமக்குத் தோற்றிற்றாகில் தவறான வழியில் நடக்க உமக்கு சுவையுண்டானால் எம்மைக் கேட்க வேண்டாம்; உமக்கு வைணவ லட்சணங்களும் வேண்டாம்; ஆசார்யனுடைய அருளும் வேண்டாம்; ஆழ்வார்கள் ஆசார்யர்கள் உபதேசமும் ஒழுக்கமும் வேண்டாம், நீர் இந்த பரம வைதிக சமயத்தில் உள்ளே புகுந்து அதன் சிறப்பு கெடும்படி மாறுபட்டக் கருத்துக்களை ஐயங்கொண்டு கூறாதே சேய்மை கண் நின்று அஜாமிளன், கண்டாகர்ணன், ததிபாண்டன் ஆகியோரைக் காத்தவன், நம்மைக் காத்தருளானோ? என்றும், உயிர்க்கொலை செய்தல், மாமிசம் உண்ணல், கள்குடித்தல், ஆகியவையும், தனக்குத் தொண்டு செய்யும் பெண்களைப் புணர்தல், பிறன் பொருள்களைக் கவர்வோமெனல், பாகவதரை நிந்தித்துப் பேசுதல் முதலானவை செய்து கொண்டு மக்களில் கடையராய்த் தீயமனங்கொண்டவர்களாய் பாவம் புரிதலையே ஒழுக்கமாகக் கொண்டவராய் உம்திட்டப்படி செயல்பட்டுக் கொண்டு சுகமாய் வாழ்ந்தால், அந்தக் காலத்தில் இறைவன் தன் தடையற்ற சுவதந்திரத்தினால் அதனையும் செய்ய வல்லவன்; அல்லது (128) "பொறுக்கமாட்டேன் சீறி அசுரப் பிறவியில் பிறக்கும் படி செய்வேன்" என்று உங்களைத் தண்டிக்கவும் செய்வான்.

**167. மூலம்**

*அவன் நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தால் முக்தனாம்படி*

**பண்ணும்போது, தே₃வதாந்தரபரரென்றும் விஷயாந்தர ப்ரவண ரென்றும் ப்ரஹ்மஹத்யாதி பாப சீலரென்றும் ப₄ாக₃வத₃ அபசாரபரரென்றும் நினையாதே ஸ்வப் ராப்தியைக் கொடுக்கும் ஸ்வபாவனான பின்பு நமக்கு தேவதாந்தர ஸ்பர்சங்கூடாது, ஸாத₃நாந்தர கந்தங்கூடாது, ப₄ாக₃வத₃ா பசாரங் கூடாது, ப்ராக்ருத ஸஹவாஸம் பண்ண வொண்ணாது என்று, சில நியமங்கள் சொல்லிக் கொண்டு தேஹபரிமாணவாதியான வேதபாஹ்யன் ஹிம்ஸா விதுரத்வ, திகம்பரத்வ, பாணி பாத்ர பே₄ாஜந கேஶோல் லுஞ்சநாதி நியமங்கள் சொல்லிக் கொண்டு வர்த்திக்கிறாப்போலே, நீரும் சில நியமங்கள் சொல்லிக் கொண்டு திரியாதே எல்லாம் விட்டு உமக்குத் தோற்றினபடி சுகமேயிருங்கோள்.**

***கோஸல கோகுல சராசரங்களுக்கும் விதுரமாலாகார ததிபாண்டாதிகளுக்கும், பஞ்சஸம்ஸ்காரங்களும் ஆசார்ய அபிமாநமும் உண்டாக்கி க்ருபை பண்ணுகிறா னல்லனே, அப்படியே அவன், ஸுலபநாயிருந்தாலும் பூர்வாசார்யர்கள் அவன் கொடுக்கிற முக்தியை அபேக்ஷியாதே அவன் உகப்பிலேவூன்றி, ஸ்வரூபம் உஜ்வல மாம்படியாக, "எம்மா வீட்டுத் திறமுஞ் செப்பம்" (திருவாய். 2-9-1) "சிறப்பில் வீடுசுவர்க்க நரகம், இறப்பில் எய்துக எய்தற்க". (திருவாய். 2-9-5) "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" (திருவாய். 2-9-4)***

**விளக்கவுரை**

ஆனால், எம்பெருமான் தன் தடையற்ற சுதந்திரத்தால் சிலரை முக்தனாம்படி செய்யும்போது, வேறுதெய்வங்களை வணங்குகிறவரென்றும், ஐம்புலனின்

பத்தில் ஈடுபட்டவரென்று, உயிர்க்கொலை முதலானவற்றை செய்த தீயோரென்றும், பாகவதர்களை இழித்துரைத்த வரென்றும் நினையாதே தன்னுடைய பரமபதத்தைக் கொடுக்கும் இயல்புடையவன் என்ற பின்பு, நமக்குப் பிற தெய்வத்தொடர்பு கூடாது, வேறு உபாயங்களின் நாற்றமுங் கூடாது, பாகவத குற்றங் கூடாது, தேகமே ஆந்மா என்றிருப்பவரோடு சேர்தல் கூடாது என்று சில வரம்பை வைத்துக் கொண்டு, வேதமதத்திற்குப் புறம்பானவர் களான சமணர் முதலானர், உயிர்களுக்கு இன்னாசெய்தல் கூடாது, அரையில் - உடம்பில் ஆடையணிதல் கூடாது,

இலையிலோ பாத்திரத்திலோ உணவை உண்ணாது ஒரு கைக் கவளம் பெரியவுருண்டைச் செய்த சோற்றை அப்படியே விழி பிதுங்க விழுங்குதல், தலையை க்ஷவரஞ்செய்யாமல் தலையிலிருக்கும் ஒவ்வொரு மயிரையும் பிடுங்கி எறிதல் போன்ற கடுமையான விரதங்களைச் சொல்லிக் கொண்டு மக்களை மயங்கச்செய்து வாழ்கிறாப்போலே நீங்களும் சில நியதிகளைக் கூறிக்கொண்டு திரியாமல் எல்லாவற்றையும் விட்டு உங்களுக்குத் தோன்றியவாறே செய்து கொண்டு சுகமாயிருக்கோள் (என்றார் எறும்பியப்பா) ஆனால், ஏற்கெனவே முக்தி பெற்ற அயோத்தி யிலும் ஆய்ப்பாடியிலும் வாழ்ந்த உயிரற்ற உயிருள்ளவைகளுக் கும், விதுரன், மாலாகாரன், ததிபாண்டன் போன்றோர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்கள், ஆசாரியாபிமாநம் ஆகியவற்றை உண்டாக்கி அவர்களுக்கு மோட்சங் கொடுக்கவில்லையே; அவையில்லா மலேயே மோட்சங் கொடுத்தானல்லவா. அதுபோலே நமக்கும் அவன் மோட்சங்கொடுக்கும் எனின்? அப்படியே அவன் எளிமையானவனாயிருந்து மோக்ஷத்தைக்

கொடுத்தாலும் நம்பூருவார்யர் கள் அவன் கொடுக்கிற மோக்ஷத்தை விரும்பாமல், அவனுகப்பிலே ஊன்றி ஆந்மாவின் இயல்பு ஒளிவிடும்படியாக, ''எம்மா வீட்டுத் திறமும் செப்பம்'' என்றும், ''சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம், இறப்பில் எய்துக எய்தற்க'' என்றும், ''தனக்கே யாக எனைக் கொள்ளும் ஈதே'' என்று எனக்காக என்று மோக்ஷத்தைக் கொடுக்க வேண்டாம்; யான் உனக்காகப் பயன்படுவதானால் அந்த மோக்ஷசத்தையே எனக்கு அளிக்க வேண்டுமென்று,

**168. மூலம்**

என்றும், ''*வைகுண்ட ஸம்ஸார விரக்தஸித்த:*'' என்கிற படியே எல்லாத்திலும் விரக்தராய் ததேகாநுப வரராய் ஸம்யக் ஜ்ஞாநாநுஷ்டநபரராய் *(129) ''ப்ரியோஹி ஜ்ஞாநிநோ(அ)த் யர்த்த: அஹம் ஸ ச மமப்ரிய:'' (கீதா.7-17)* என்றும், *(130) ''க்ஷிணே(அ)பிதே யத்விரஹோர (அ)திதுஸ்ஸஹ:'' (ஸ்தோத்ர. ரத்னம் 56)* என்றுஞ் சொல்லுகிறபடியே அவனுக்கத்யந்த ப்ரியதமராய்ப் போனார்கள். இவர்கள் நடந்தவழி உங்களுக்கிஷ்ட மானால், இவர்கள் அருளிச் செய்த வழியிலே நடந்து க்ருதார்த்தராங்கோள். நாம் பஞ்சமோபாய நிஷ்டர் வழியிலே நடக்கிறோ மென்று பேரையிட்டுக் கொண்டு பூர்வா சார்யர்களுடைய உக்திய நுஷ்டாநங்களில் நிஷித்த ப்ரவ்ருத்திகள் புகுராமையாலே அவற்றை விட்டு ஸர்வசக்தியான ஸர்வேச்வரனுடைய அதிமாநுஷ சேஷ்டி தங்களும் தத்ப்ரப₄ாவ ப்ரசம்ஸாபரவாக்யங்களும் சொல் லிக் கொண்டு அவற்றுக்குஞ் சில விபரீதார்த்தங்களை ஸங்கல்பித்து, அதுக்குக் கருத்தென்? இதுக்கு தாத்பர்ய மென்? இதுக்காச்ரயமென்? என்று ப்ரதிகூல்யங் களி லொன்றும் த்யஜிக்க மாட்டாதே.

**விளக்கவுரை**

திருவாய்மொழியில் ஆழ்வார் அருளியபடியே, ''வைகுந்தத்தை அடைவன் இவ்வுலகில் ஆசையற்ற மனத்தையுடையனாய்'' என்கிறபடி எல்லாப் பொருளிலும் வெறுப்படைந்த மனத்தையுடையவர்களாய், இறைவனையே அநுபவிப்பவர்களாய் உண்மையான ஞான அநுட்டாநம் உடையவர்களாய் (129) ''நான் என்னிடம் ஈடுபாடுடைய ஞானிக்கு மிகவும் இனியவன்; அவனும் எனக்கு இனியவன்'' என்று எம்பெருமானே கீதையில் கூறியவாறும் (130) ''எந்த ஞானிகளுடைய பிரிவானது உனக்கு ஒரு கணப்பொழுதும் மிகவும் பொறுக்க இயலாமலிருக்கிறதோ'' என்று ஆளவந்தாரும் கூறியவாறே, ஞானிகள் இறைவனுக்கு மிகவும் இனியராய் வைகுந்தம் போனார்கள். இவர்கள் நடந்தவழி உங்களுக்கு விருப்பமானால், இவர்கள் அருளிச்செய்த வழியிலே நடந்து நீங்கள் செய்ய வேண்டியதைச் செய்யுங்கள். ''நாம் ஆசாரியனே உபாயம் என்ற ஐந்தாம் உபாயத்தைப் பற்றியவர்கள் வழியில் நடக்கிறோம்'' என்ற பெயர் மாத்திரம் பெற்றுக் கொண்டு,

**169. மூலம்**

***புத்திபேதத்தாலே எல்லாம் பொருந்துமென்று நிஷித்த ப்ரவ்ருத்திகளில் கண்வைத்துத் திரியாதே ஏதேனுமொரு வழியிலே நடக்க வேணுமென்ன, திரியவும் தண்டம் ஸமர்ப்பித்து, அடியேன் அஜ்ஞநாகை யாகையாலும் தேவரீர் மாத்ருவத் வத்ஸலராகையாலும் திருவுள்ளத்தில் சீறியருளாதே நெஞ்சில் தோற்றினவை யெல்லாம் விண்ணப்பஞ் செய்கிறேன் க்ருபையாலே அவற்றுக் கெல்லாம் ஸமாதாநம் பண்ணவேணு மென்று***

*திருவடிகளைப் பிடிக்க அவரும் சிரித்துக் கேளுங்கோள் என்ன (131) "தோ$_3$ஷ பு$_3$த்$_3$த்$_4$யாப$_4$யாத்$_3$தே$_4$தோ: நிஷித்$_3$தா$_4$ந் ந நிவர்த்ததே, கு$_3$ணபு$_3$த்$_3$த்$_4$யா து விஹிதம் ந கரோதி யதா$_2$ர்ப$_4$க:" (?) என்று ஜ்ஞாநாதிகள் விதிநிஷேதவஶ்யனன்றிக்கே அர்பகனைப்போலே (சிறுவனைப்போலே) திரிகிறா னென்று சொல்லப்பட்டதிறே என்ன, ஜ்ஞானம் பிறந்து புண்யபாப ஶத்ரு மித்ரமாந அவமாந ஸுக துஃக்கஸ்துதி நிந்தைகளை விவேகிக்க மாட்டாதே உபயவ்யாபாரங்களும் அதிக்ரமித்து அத்விதீய ப்ரஹ்மாநுபவ ஆநந்த மகரந்த அநுபவத்தாலே ப்ரமத்த சித்தராய் தம்முடம்பை மறந்து,*

**விளக்கவுரை**

''முரண்பட்ட அறிவினால் எல்லாம் பொருந்தும் என்று தீயவொழுக்கத்தைப் பின்பற்றித் திரியாமல் ஏதேனும் ஒரு வழியிலே நடக்க வேண்டுமென்று எறும்பியப்பா என்னும் தேவராஜர் கூற, அவரது சீடரான ஸேநாபதி யாழ்வான் மீண்டும் அவரை அடிபணிந்து, அடியேன் சிறிய ஞானத்தனாகையாலும், தேவரீர் தாயையொத்த கருணை யுடையவராகையாலும் திருவுள்ளத்தில் சீறியருளாமல் அடியேன் மனத்தில் தோற்றினவை எல்லாம் விண்ணப்பஞ் செய்கிறேன், கருணையாலேயே அவற்றுக் கெல்லாம் ஸமாதாநம் செய்து அடியேனுக்குத் தெளிவை உண்டாக்க வேண்டும் என்று அவர் திருவடிகளைப் பிடிக்க, எறும்பியப்பாவும் குறுநகைப் புரிந்து கேளுங்கள் கூறுகிறேன் என்று சொல்லவும், (131) ''சிறுவனைப் போலே கெட்ட அறிவினாலே சாத்திரங்களால் விலக்கப்பட்டவற்றைச் செய்கிறோமே என்னும் அச்சத்தாலே தீயவற்றையும் விடுவதில்லை; நல்ல அறிவால் இவனுக்கு நன்மை ஏற்படும்

என்ற நோக்குடன் சாத்திரத்தில் விதிக்கப்பட்ட விஷயங்களையும் இவன் செய்வதில்லை'' என்று கூறுகிறபடி, ''ஞானம் நிரம்பப்பெற்றவன் சாத்திரங்களில் விடப்பட வேண்டியவை, செய்யப்பட வேண்டியவை ஆகியவற்றுக்குக் கட்டுப்பட்டவனன்றிக்கே சிறுவனைப் போலே திரிகிறான்'' என்று சொல்லப்பட்டதல்லவா என்று ஸேநாதிபதியாழ்வான் கூறவும் அதற்கு அவர், ஞானம் பிறந்து நல்வினை, தீவினை, பகைவன், நண்பன், மதிப்பு, அவமதிப்பு, இன்பம், துன்பம், புகழ்ச்சி, பழிப்பு ஆகியவற்றை ஆராயாமல் மேற்சொன்ன இரட்டைகளைக் கடந்து (சமநோக்குடன்) ஒப்பற்ற மணமிக்க இறையநுபவமாகிய ஆநந்த வெள்ளத்திலே மூழ்கிப் பைத்தியம் பிடித்தவரைப் போலே தம் உடம்பை மறந்து,

**170. மூலம்**

*மநோ புத்திகளிரண்டும் பகவததீநமாய் புத்தி பூர்வக ப்ரவ்ருத்திகளொன்றுமின்றிக்கே பாலோந்மத்த பிஶாச விஷ்டரைப் போலே திரிகிறானென்று சொல்லுகிற தொழிய, தாரா புத்ராதி ஸக்தனாய் தத்ரக்ஷணார்த்தமாக ராஜத்வாரங்களிலே கிடந்து அர்த்தார்ஜந தத்பரராய், அஹங்கார அர்த்த காம பாரவஶ்யத்தாலே விதிநிஷேத வஶ்யனன்றிக்கே திரிகிறானென்று சொல்லிற்றிலி லையே. அர்ப$_4$க த்ருஷ்டாந்தத்தாலே அபு$_3$த்$_3$தி$_4$பூர்வ ப்ரவ்ருத்தியென்று தோற்றா நின்றதிறே. மநோ பு$_3$த்$_3$தி$_4$களிரண்டும் (132) "மய்யேவ மந ஆத$_4$த்ஸ்வ மயி பு$_3$த்$_3$தி$_4$ம் நிவேஶய" (கீதா.12.8) என்று, தன் பக்கலிலே சேர்த்து பக்தி பரவஶனானவன் தன்னுடம்பை மறந்து என்ன துஷ்க்ருத்யங்கள் பண்ணினாலும் குறையில்லையென்று ஸர்வேஶ்வரன் தானே (133) "யஸ்ய ந அஹங்க்ருதோ*

*ப₄ராவோ பு₃த்₃தி₄ர் யஸ்ய ந லிப்யதே, ஹத்வா(அ)பி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிப₃த்₄யதே" (கீதா. 18.17)* என்றருளிச் செய்தானிறே.

**விளக்கவுரை**

மனம், அறிவு ஆகியவிரண்டும் பகவானுக்கு வயப்பட்டதாய், நினைவறிந்து, செயற்படுதலன்றியும் இறைவனிடத்து மிகுந்தஈடுபாட்டால் தம்மை மறந்து, சிறார்கள் பித்தர் பேய்பிடித்து ஆடுவாரைப் போலே திரிகிறார்கள் என்று சொல்லுகிறது தவிர, மனைவி, மக்கள் உறவினரிடத்துப் பற்றுள்ளங்கொண்டு அவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு அரசன் வாயிற்புறங்களிலே துவண்டு பொருளீட்டுபவராய் அகங்காரம் பொருள் புலனின்பம் ஆகியவற்றில் வயப்பட்டுச் சாத்திரங்களைப் புறக்கணித்துத் திரிகிறார்கள் என்று சொல்லிற் றில்லையே! 'சிறுப்பிள்ளைத்தனத்தையுடையவன் என்னும் உவமையாலே, தன் நினைவிழந்து செயற்படுபவன் எனத் தோற்றுகிறதல்லவா. மனத்தையும் அறிவையும் ஆகிய இரண்டும் (132) "என்னிடமே மனத்தைச் செலுத்து; என்னிடமே அறிவாம் உறுதியைக் கொள்; என்னையே ஆதாரமாகக் கொண்டு வாழப்பெறுவாய் இதில் ஐயமில்லை" என்று இறைவன் கூறியவாறே, அவையிரண்டையும் தன்னிடத்தில் சேர்த்து, பக்தியில் ஆழங்காற்பட்டவன் தன்னுடம்பை மறந்து எந்த விதமான கெட்ட செயலையும் செய்யலாமென்று அந்த இறைவன் தானே (133) "யாவனுடைய நினைவு, 'நானே செய்கிறேன்' என்னும் எண்ணமில்லாமல் உளதோ; எவனுடைய அறிவானது இச்செய்கையின் பயன் என்னுடையது இந்தக் கருமம் என்னுடையது என்னும் நினைவுகள் அற்றிருக்

கிறதோ அவன், இவ்வுலகிலுள்ள அனைத்துயிர்களையுங் கொன்றதின் பயனாக இந்த ஸாம்ஸார உலகில் கட்டுப்படமாட்டான்'' எனக் கீதாசாரியனும் அருளிச் செய்தானல்லவா.

**171. மூலம்**

**ஆனாலிது உண்டாயிடுக, ''ஸ்வதந்த்ரனை யுபாயமாகப் பற்றின போதிறே ப₄யப்ரஸங்கந் தானுள்ளது''; ஆசார்யாபிமாநத்திலே யொதுங்கினால் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைக் கண்டு பயப்பட வேண்டாவென்று சொன்னாரே? என்ன, இதுக்குத்தரஞ் சொன்னோம். ஆசார்யாபிமாந நிஷ்டனுக்கு பயமில்லை யென்றது, இவன் அபதே ப்ருவ்ருத்தனாகாதபடி ஹேயோபாதேயங்கள் தெளிவித்து ததநுரூபமாக ப்ரவ்ருத்திகளும் பண்ணுவித்துக் கண்ணிலே வெண்ணெ யிட்டு நோக்கி அவன் லீலையிலே விநியோகங் கொள்ளுகைக்கு அவகாஸமற பரிசுத்தனாக்கி அவனைச் சேர்த்து விடுமென்னுமத்தாலே, இதுவே பொருளாகக் கொள்ளாதே அவிநீதனானாலும் குறையில்லையென்றால் யென்றால் சரமப்ரபந்ந ஸ்வரூபம் ஸிக்ஷிக்குமிடத்தில், ஆசார்ய முகோல்லாஸத்துக்காக ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் உண்டாக வேணும்; இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம் த்யாஜ்யம் என்றருளிச் செய்கைக்கு நிமித்தமில்லையிறே.**

**விளக்கவுரை**

ஆனால் கீழ்ச்சொன்னபடியே ஆகட்டும், தடையற்ற ஸ்வதந்திரத்தையுடைய இறைவனை உபாயமாகப் பற்றியபோதே அஞ்சவேண்டும்படியாகவிருக்கும்; ஆசாரிய அபிமாநத்தில் ஒதுங்கினால் தான் செயற்படுதலையும்

தவிர்தலையுங் கண்டு அஞ்சவேண்டியதில்லை எனப் பிள்ளை உலகாசிரியர் தம் வசநபூடண நூலிற் கூறினாரே என்று ஸேநாபதியாழ்வான் சொல்ல, அதற்கு எறும்பியப்பா, இதற்கு விடையளிக்கின்றோம் என்றார். அதாவது, ஆசாரியாபிமாநத்தை உடையவனுக்கு அஞ்சவேண்டா என்றது, சீடன் தீயவழி செல்லாதபடி தாழ்ந்தவை இவை என்றும், கைக்கொள்ளுபவை இவையென்றும் நன்றாகக் கூறித் தெளியச் செய்து அவற்றுக்கேற்றவாறு ஒழுகச் செய்து இவ்வாறு கண்ணில் எண்ணெயிட்டு நோக்கி இச்சீடன் இறைவன் (லீலைக்கு விஷயமாக்கி) பிறவிக்கடலில் விழச் செய்வதற்கு இடமில்லாதவாறு, நன்றாகத் தூய்மையுடைய வனாக்கி அவனை இறைவனிடம் ஆசாரியன் சேர்ப்பிக்கும். ஆகையால் நான் கூறிய வற்றைப் பொருளாகக் கொள்ளாது அவன் கெட்டவொழுக்கத்தை உடையவனானாலும் குறையில்லை என்றால்? கடைநிலையாம் சரமபிரபந்நனைத் தண்டிக்குமிடத்தில், ஆசார்யனது உகப்புக்காக வாது இவனுக்கு ஞானம் ஒழுக்கங்கள் உண்டாக வேண்டும்; இத்தன்மையுடைய அதிகாரிக்குத் தீயவொழுக்கம் விடத்தக்கது என்று கூறுதற்கு வேறு காரணம் தேவையில்லை அல்லவா?

**172. மூலம்**

*இவ்வபிமாநம் இன்னமும் ப்ராதிகூல்யமில்லாத திரியக் ஸ்தாவரங்களுக்கு கார்யகரமித்தனை போக்கி, சேதநனுக்கு ஜ்ஞாநாநுஷ்டானங்களொழிந்தாலும் அஹங் கார மமகார விஷய ப்ராவண்ய பரஹிம்ஸா பரஸ்தோத்ர பரத$_3$ார பரிக்ரஹ அபக்ஷ்ய பக்ஷண அபேயபாந தே$_3$வதாந்தர ஸாத$_3$நாந்தர ப்ரயோஜநாந்தர ப$_4$க$_3$வத$_3$சார ப$_4$ாக$_3$வத$_3$ாபசாராதி விரோதி$_3$ நிவ்ருத்தியுண்டான*

*லாலல்லது கார்யகரமாகாது. ஸ்வதந்த்ரனைப் பற்றி பயப்ரஸங்கம் வாராதபடி ஆழ்வாரை ஆஶ்ரயித்து அவர் திருவடிகளையே உபாயமாகப் பற்றின மதுரகவிகள், நமக்கு ஆழ்வார் ஸம்பந்தம் உண்டென்று நிஷித்தா நுஷ்டாநம் பண்ணிக் கொண்டு நமக்கு பயமென்? என்று திரிந்தாரென்று இல்லையே. "செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான்" (கண்ணிநுண்சிறுத்தாம்பு-10) என்று, தம்மை ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நராம்படி அவர் திருத்தின படியையும், "அன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்று" (கண்ணி. 5) என்று, தாமும் தத் விஷயப்ரவணராய் தத் இதரஸமஸ்தமும் பரித்யஜித்துச் சதுரரானபடியையும் அருளிச் செய்தாரிறே.*

**விளக்கவுரை:**

இந்த ஆசாரிய அபிமாநந்தான் இன்னமும், விரோத மான நடத்தையுள்ளன என்று கூறுவதற்கே தகுதியற்றவை யான, விலங்கு மரஞ்செடி கொடிகளுக்குக் காரியமாகு மேயன்றி மனிதனுக்கு ஞானவொழுக்கங்களை யொழிந் தாலும் அகங்காரமமகாரப் பற்றுக்கள், ஐம்பொறிகளின் இன்பத்தில் ஈடுபாடு, பிறரைத் துன்புறுத்தல், பிறரைத் துதித்தல், பிறர்மனை நயத்தல், உண்ணத் தகாதவற்றை உண்டல், குடித்தலாகாதவற்றைக் குடித்தல், பிற தெய்வங்களைத் தொழல், பிற உபாயத்தை ஏற்றல், பிற பயனை விரும்பல், இறைவனுக்குக் குற்றமிழைத்தல், அவனடியார்க்கும் குற்றமிழைத்தல் போன்ற குற்றத்திலிருந்து நீங்கினாலல்லது ஆசாரிய அபிமாநமும் பயன் தராது. எனவே முதல்நிலையாம் இறைவனைப் பற்றினால் அவன் நம்மை விட்டு விடுவானோ? என்னும் அச்சம் வாராதபடி ஆசாரி யரில் தலைவராம் நம்மாழ்வாரைப் பற்றி அவரது திருவடி

களையே மோக்ஷத்திற்கு உபாயமாகப் பற்றிய மதுரகவி யாழ்வார், 'நமக்கு ஆழ்வார் சம்பந்தம் உண்டு' என்று தீய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து ஒழுகிக் கொண்டு நமக்கு அச்சமென் என்று சொல்லித் திரிந்தாரில்லையே. 'செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்' என்று, தம்மை ஞான அநுட்டாநம் நிறைந்தவர் என்னும்படி ஆழ்வார் திருத்தின படியையும், 'அன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்றே' எனத் தாமும் ஆசாரியரிடத்தில் ஈடுபட்டவராய், அந்த ஈடுபாட் டுக்குப் பகையான எல்லா விஷயத்தையும் முழுமையாக விட்டுத் தாம் சிறப்பெய்தியவர் என்பதை மதுரகவியாழ்வாரும் அருளிச் செய்தாரல்லவா.

**173. மூலம்**

***134.** 'ஸம்ஸார வர்த வேக₃ ப்ரஸமந ஶுப₄த்ருக் தே₃ஶிக ப்ரேக்ஷிதோ (அ)ஹம், ஸந்த்யக்தோ (அ)ந்யை: உபாயை: அநுசித சரிதேக்ஷு அத்ய ஶாந்தா அபி₄ஸந்தி: நிஶ்ஶங்க: தத்வ த்₃ருஷ்டயா நிரவதி₄க த₃யம் ப்ராப்ய ஸம்ரக்ஷகம் த்வாம், ந்யஸ் ய த்வத் பாத₃பத்₃மே வரத! நிஜப₄ரம் நிர்ப₄யோ(அ)ஸ்மி' (ந்யாஸவிம்ஶதி)* என்று தாமும் ஸம்ஸாரிகளால், இவனையும் ஸம்ஸாரியாம்படி பண்ணி ப₄யங்கெடுத்து ஓட்டை ஓடத்தோடு ஒழுகலோ டமாய், முழுகிப்போம் அவர் போலன்றிக்கே நிஸ்ஸங்க ராய்த் தான் கரையேறவும், இவன் நிஸ்ஸங்கனாக்கிக் கரையேற்றவும் வல்ல ஸத₃ாசார்யனாலே விஶேஷ கடாக்ஷம் பண்ணப் பெற்று, ***135.** 'உபாயாபாய நிர்முக்தோ மத்₄யமாம் ஸ்தி₂திமாஸ்தி₂த:' (பாரதம்.)* என்கிறபடியே த₄ர்மா த₄ர்மங்களிரண்டும் பரித்யஜித்து, ஸர்வேஶ்வ ரனையே உபாயமாகப் பற்றி ந்யஸ்தபரனான பின்பிறே நிர்பயத்வ முள்ளது. ஆகையாலே, தான் பத்தஸம்ஸாரி

*யாய், ப்ரயோஜநாந்தபரனாய், நிஷித்தாநுஷ்டாந ரதனாயிருந்து ஆசார்ய கடாக்ஷமுண்டென்று நிர்ப,யனா யிருக்க, விரகில்லை. ஆனால், வேர்த்தபோது குளித்துப் பசித்த போது ப்ரஸாதப்பட்டு பட்டர் திருவடிகளே சரணமென்றிருக்கு மதே போரு மென்றதற்குக் கருத்தென்? என்ன?*

**விளக்கவுரை:**

134. 'வரதராசப் பெருமானே! தீய ஒழுக்கங் களில் படிந்திருக்கும் மனத்தை மீட்ககில்லாத யான், ஸம்ஸாரமாகிய பிறவிச் சுழற்சியின் வேகத்தை அடக்குவதில் நல்லெண்ணங் கொண்ட ஆசாரியனால் குளிர நோக்கப் பெற்றவனாய், மற்ற உபாயங்களிலிருந்து நீங்கி ஐயமில்லாதவனாய், தத்துவத்தை உணர்ந்து எல்லையற்ற கருணையுடைய உன்னை, பாதுகாவலனாக அடைந்து, என்னுடைய பொறுப்பை நின் திருவடித் தாமரையில் வைத்துச் சுமையற்றவனாகவும், அச்சமற்றவனாகவும் இருக்கிறேன்' என்று தாமும் சம்ஸாரி களாய் தம்மையடைந்த சீடனையும் சம்ஸாரியாகும்படி செய்து அவன் அச்சத்தையுங் கெடுத்து, ஓட்டை ஓடத்தோடு ஒழுகலோடமாய் முழுகிப் போவார் போலன்றிக்கே, இவ்வுலகப் பற்றை நீக்கியவராய்த் தான் பிறவியாகிய கடலின் கரையேறவும், அவ்வாறே தன்னை அடைந்த இச் சீவனையும் பற்றற்றவனாக்கிக் கரையேற்றவும் வல்ல நல்லா சிரியனாலே சிறந்த அருள்நோக்கம் செய்யப் பெற்று, 135. ''உபாயமான தருமங்களிலிருந்தும் அபாயமான அதர்மங் களிலிருந்தும் விடுபட்டவனாய் நடுவான நிலையில் நன்றாக நின்றவன்'' என்றுங் கூறுகிறபடி, தர்மங்களையும் அதர்மங்க ளையும் விடுத்து இறைவனையே உபாயமாகப் பற்றி அவனிடத்துத் தன்னை ஒப்படைத்த பின்னரன்றோ அச்சங்

கெட்டிருப்பது. ஆகையாலே மனைவி முதலானாரிடத்துக் கட்டுப்பட்டவனாய், வேறு பயனைக் கருதுபவனாய், தீய ஒழுக்கத்திலே நிலை நின்றானானால் தனக்கு ஆசாரியன் அருளுண்டு என அஞ்சத்தகாதவனாயிருக்க வழியில்லை. ஆனால், ஆசாரியரில் சிறந்தவராம் அநந்தாழ்வான் நஞ்சீயரைப் பார்த்து, 'நீர் வேர்த்தபோது குளித்துப் பசித்தபோது உணவுண்டு பட்டர் திருவடிகளே தஞ்சம் என்றிருத்தலே தகும்' என்று அருளிச் செய்ததற்குக் கருத்தென்? எனில்,

174. மூலம்:

ஸ்வரக்ஷண ப்ரவ்ருத்திகளில் அந்வயிக்க வேண்டாமென்று சொல்லுகிறதொழிய ப$_4$க$_3$வத் ப$_4$ாக$_3$வத$_3$ கைங்கர்யங்களும் வேண்டா, ப்ராதிகூல்ய நிவ்ருத்தியும் வேண்டா ஶிஶ்நோதர பராயணராய்த் திரியுங்கோள் என்று, ஹிதமருளிச் செய்தாரென்னக் கூடாதிறே. இப்படிச் சொன்னால், இருவர் ஸ்வரூபமும் உருமாய்ந்து போமிறே. எம்பெருமானார் ஒரு நாள் அபயப்ரதாநம் அருளிச் செய்த அளவில், பிள்ளையுறங்கா வில்லிதாஸர் ஸம்ஸாரத்தை நினைத்து பயப்பட்டபோது 'நீர் அஞ்ச வேண்டா, நான் பெற்றேனாகில் நீரும் பெறக் குறையில்லை' யென்று அருளிச் செய்தாரென்ன, பிள்ளையுறங்காவில்லிதாஸர் அஞ்சுகிறதும், சுத்தாத்ம யாமுந குருத்ம கூரநாதாதிகள் *136.'அமர்யாத$_3$: க்ஷுத்$_3$ர:' (ஸ்தோ. ரத். 62) 'ந்ருபஶுர ஶுப$_4$ஸ்யாஸ் பத$_3$ மபி' (ஸ்தோ. ரத். 58)* என்றும், *137.'ததோநிக்ருஷ்டே மயி ஸந்நிக்ருஷ்டே காந் நிஷ்க்ருதிம் ரங்க$_3$பதே கரோஷி' (ஸ்ரீரங்கநாத.ஸ்தோ.7)* என்றும், *138.'பாபாநாம் ப்ரத$_2$மோ(அ)ஸ்ம்யஹம்' (க்ஷமாஷோடசி.ஸ்தோ.2)* என்றும், *139.'வ்ருத்யா பஶுர்*

*நரவபுஸ் த்வஹமித்₃ருஶோபி' (யதிரா.விம்.7) என்றும், 140.'நித்யம் த்வஹம் பரிப₄வாமி கு₃ருஞ்ச மந்தரம்' (யதிராஜ விம்ஶதி).*

**விரிவுரை:**

தன்னைத் தானே காக்கும் முயற்சியில் (மோட்ச விஷயத்தில் முயற்சித்தல் மட்டும்) ஈடுபட வேண்டா மென்று கூறியதன்றி, இறைவனுக்கும் அவனடி யார்க்குஞ் செய்யுந் தொண்டுகளும் வேண்டாம்; விரோதமான செய்கைகளிலிருந்தும் மீளவேண்டாம்; பெண் போகத்தை யும் வயிறு வளர்ப்பதையுமே நீங்கள் தொழிலாகக் கொள்ளுங்கள் என்று அநந்தாழ்வான் நல்வார்த்தைக் கூறினார் எனச் சொல்லக் கூடாதல்லவா! இவ்வாறு கூறினால் ஆசாரியன் சீடன் ஆகிய இருவரியல்பும் கெடுமல்லவா? எம்பெருமானார் ஓர் நாள் இராமா யணத்திலுள்ள விபீடணச் சரணாகதியை அருளிச் செய்யும்போது, அதனைக் கேட்ட பிள்ளையுறங்கா வில்லிதாஸர் இப்பிறவியின் கொடுமையை நினைத்து அதனிலிருந்து மீளுதற்கேற்ற இறைவனின் அபயமளித் தலை நோக்கிக் கூர்ந்து பார்த்து, அதற்கேற்ற தகுதி தமக்கில்லை யென்று அஞ்சி காலட்சேபத்தினின்றும் நீங்கிப் போக, அப்போது உடையவர், 'நீர் அஞ்சவேண்டாம், வீடுபேறு யான் பெற்றேனாகில் நீரும் பெறுதற் குறையில்லை' என்று அருளினார். பிள்ளையுறங்காவில்லி தாஸர் அஞ்சுகிறதும், பரிசுத்த ஆந்மாக்களான ஆளவந்தார், கூரத்தாழ்வான், முதலியாண்டான், எம்பார் முதலானோர், 136.137. "வேத வரம்பைக் கடந்தவனும், தீயவிஷயங்களின் ஈடுபாட்டினால் மிகவும் தாழ்ந்தவனும், மனிதரிற் கடைப்பட்ட விலங்கைப் போன்றவனும், தாழ்வுக்கெல்லாம்

இருப்பிடமானவனுமாகிய யான்'' என்று ஸ்ரீஆளவந்தாரும் கூரத்தாழ்வானும் கூறுகின்றபடியும், 138.''பாவங்கள் புரிவதில் முதன்மை பெற்றவன் யான்'' என்றும், 139. ''(எம்பெருமானாரே!) மனித சரீரமுடையேனாயிருந்தாலும் யான் (பசுவை) விலங்கையொத்தவன்'' என்றும், 140. ''(எம்பெருமானாரே) யான் நாள்தோறும் ஆசார்யரையும், அவருபதேசித்த மந்திரத்தையும், மந்திரத்துக்குள்ளீடான தெய்வத்தையும் அவமதிக்கிறேன்''.

**175. மூலம்:**

***என்றும், அநுஸந்திக்கிற தமக்குக் காணப்படுகிற ஸம்ஸாரிகள் தோஷமெல்லாம் தம் மேலேறிட்டுக் கொண்டு சொல்லுகிறதொழிய குருமந்த்ர தேவதா பரிபவங்களும் பண்ணிக் கொண்டு திரிந்தார்களென் றில்லையே! அப்படி நைச்யாநுஸந்தாநம் பண்ணு கிறாரித்தனை. பொன்னாச்சியாரும், தாமும் (பிள்ளை யுறங்காவில்லிதாஸரும்), ஆழ்வான் ஆண்டாளும் போலே விரக்தராய் ஸம்ஸார கந்த துரராய் ஸ்ரீவைஷ்ணவர் கள் எல்லாருக்கும் ஹிதமருளிச் செய்யும் படியிருக்கிற அதிகாரிகளாகையாலே நிரஹங்காரத்தை தோற்றும்படி அருளிச் செய்தார். காராஞ்சிஸோம யாஜியார் பத்த ஸம்ஸாரியாய்த் தம்மை அர்ச்சா ரூபேண ஸேவிக்க வாராதிருக்க வேணுமென்று நினைத்து பரிக்ஷித்துத் தன் திருவடிகளிலே சேர்த்துக் கொண்டாரிறே எம்பெருமானார். எம்பார் பரமவிரக்தராய் ஸம்ஸாரத்தில் அருசி பிறந்திருக்க தம் மேல் ஆணையிட்டு நியமித்தாலும் விரக்தரான பின்பு, 141. 'நிராஶ்ரமீ ந ஸந்திஷ்டேத்' (?) என்கிறபடியே, ஒன்றைப் பற்றியிருக்க வேணுமென்று அத்தை விடுவித்து துரியாச்ரமத்திலே நிறுத்தி ஹ்ருஷ்டரானாரிறே.***

**விரிவுரை:**

எனவும், மேற்சொன்ன பூருவாசாரியர்களால் கூறப்பட்ட வையெல்லாம் தங்கள் கண்களாற் கண்ட ஸம்சாரிகளின் தோஷங்களை யெல்லாம் தங்கள் மேலே ஏறிட்டுக் கொண்டு சொல்லப்பட்டவையன்றி, குருவாலே உபதேசிக்கப்பட்ட மந்திரத்தையும், அம்மந்திரத்துளீடான தெய்வத்தையும் அவமதித்துக்கொண்டு திரிகின்றன ரல்லவோ?

அப்படித்தங்களைத் தாங்களே தாழ்த்திக் கொள்கிறார் களத்தனை. பிள்ளையுறங்காவில்லியார் தேவிகளாம் பொன்னாச்சியாரும், கூரத்தாழ்வானும், அவர் தேவிகளான ஆண்டாளும் போலே இவ்வுலக வைராக்கியமுடையராய், ஸம்சாரத்தின் வாசனைக்கு அப்பாற்பட்டவராய், ஸ்ரீவைஷ்ணவர் கள் எல்லார்க்கும் நல்வார்த்தைக் கூறும்படியான தகுதி பெற்ற அதிகாரிகளாகையாலே, உடையவர் சீடர்களுக்கு, 'இவ்வுலகில் ஆசாரியர் பலரிருக்கலாம். ஆனால் இச்சகத் துக்கே முதன்மை பெற்ற ஆசாரியர் எம்பெருமானாரே யாவர்' என்று தம் முகக் குறிப்பாலும் செய்கையாலும் குறிப்புக் காட்டித் தமக்குச் செருக்கின்மையில்லை என்று அருளிச் செய்தார். காராஞ்சி சோமயாஜியார் பிறவியில் கட்டப் பட்டவராய்ப் பின்னர்ப் பிறப்பெடுத்து தம் அர்ச்சா திருமேனியை ஸேவிக்க வரவேண்டாம் என நினைத்து, அவரது அகங்காரத்தைப் போக்கித் தம் திருவடியில் சேர்த்துக் கொண்டாரிறே எம்பெருமானார். எம்பார் என்பார் மிக்க வைராக்கிய முடையவராய், இவ்வுலகத்தில் மனைவியோடு வாழ விருப்பமில்லாமலிருக்கச் செய்தே, உடையவர் தம் மேல் ஆணையிட்டு, 'நீ மனைவியுடன் கூடி வாழ்வாய்' எனக் கட்டளையிட்டுக் கூறினாலும், மனைவியுடன் கூடி

வாழ்வதற்குத் தமக்கு வைராக்கியம் பிறந்த பின்னர், (141) 'மனி தனுக்கு விதிக்கப்பட்ட நான்காச்சிரமங்களில் ஒன்றிலும் நில்லா மலிருத்தல் கூடா' என்கிறபடி ஏதேனும் ஒரு ஆச்சிரமத்தை ஏற்று வாழ வேண்டும் என அறநூல்கள் கூறுவதால் இல்லறத்தை விடுத்து துறவறத்தில் அந்த எம்பாரை நிறுத்தி எம்பெருமானார் மகிழ்ந்தாரல்லவா.

176. மூலம்:

*முதலியாண்டானை, தாம் ஆச்ரமத்தை அங்கீகரித்த பின்பு, நமக்கிப்போது திரிதண்டங் கை புகந்ததென்று ஸந்துஷ்ட ரானாரிரே எம்பெருமானார். சிலர் ஸம்ஸாரிகள் போலே க்ருஹஸ்தராயிருந்தாலும் பரம விரக்ராயுஜ்ஜீவித்துப் போனார்கள். இப்போதானாலும் அஹங்கார மமகார ஶூந்யராய், ராகத்வேஷ ஶோக மோஹ விநிர் முக்தராய், அர்த்த, காம நிஸ்ப்ருஹராய், ஶத்ரு மித்ர, ப்ரியாப்ரிய நிந்தாஸ்துதிகளில் ஸமசித்தராய் வர்த்தித்தால் ஒரு குறையுமில்லை யென்றருளிச் செய்ய, இதுவுமுண் டாயிடுக, (142) 'பாபாநாம்வா ஶுபாநாம்வா' (ராமா-யுத். காண். 44) என்கிற பிராட்டி புருஷகார முண்டே? யென்ன, அவள் புருஷகாரம் ஸமாச்ரயணோந்முக சேதநகதங்களான அபராதங்களைக் கண்டு, 'க்ஷிபாமி' (கீதா. 16.19) என்கிற தன் ஸ்வாதந்தர்யத்தாலே ஸர்வேச்வரன் சீறுமளவில் ஶாஸ்த்ரம் ஜீவிக்க வேணுமென்று ஆஶ்ரயனோந் முகனானவனை தண்டிக்கப்போமோ? இவனை தண்டிக்கில் க்ருபாதிகள் ஜீவிக்கும்படி என்? என்று அநுவர்த்தநத்தாலும் உபதேசத்தாலும் அழகாலும் க்ருபாதி குணங்களைத் தலையெடுக்கப் பண்ணி ரக்ஷிப்பிக்கும தொழிய,*

**விளக்கவுரை**

எம்பெருமானார் துறவறத்தை யேற்ற பின்னர் முதலி யாண்டானைக் குறித்து 'நமக்கிப்போது முக்கோலாயிருக் கிறார் இவர்' என்று மகிழ்ச்சியடைந்தார். சிலர் ஸம்ஸாரிகளைப் போலே இல்லறத்திலிருந்தாலும் இவ்வுலக வாழ்க்கையை வெறுத்து உய்ந்து போனார்கள். இறுதிக் காலத்திலாவது யான், எனது என்ற செருக்கில்லாதவராய் விருப்பு பகைமையற்றவராய், சோகமோகங்களை விட்டவ ராய், பொருள் இன்பங்களில் வெறுப்புடையவராய், பகைவன் நண்பன் விருப்பு வெறுப்பு பழிப்பிலும் புகழ்ச்சி யிலும் சமநிலையிலிந்து வாழ்ந்து கொண்டிருந்தால் ஒரு குறையுமில்லையென்று அருளிச் செய்ய, மேற்சொன்ன நிலையுமுண்டாயிடுக,

(142) 'பாபம் புரிந்தவர்களாகவும் இருக்கட்டும் அல்லது புண்ணியம் புரிந்தவர்களாவும் இருக்கட்டும்' என்று பிராட்டி இராமாயணத்தில் கூறியவாறே, அவளுடைய சிபாரிசுயுண்டே? யென்ன அவள் சிபாரிசு செய்வது, எம்பெருமானைத் தஞ்சமென்று திருவடியைப் பற்றும் போது சீவனால் முற்பிறவிகளில் செய்யப்பட்ட குற்றங்களைக் கண்டு, இறைவன் 'பொறுக்க மாட்டேன், தண்டித்தே தீருவேன்' என்று தனது சுவதந்திரத்தாலே சீறுகிற சமயத்தில் சாத்திரங்கள் பழுது படாமைக்காக நீர் உம்மையடைந்த சீவனைத் தண்டிக்கலாமோ? அவ்வாறு நீர் இவனைத் தண்டிக்கில் உமது அருள், பொறை இவைகள் உயிர் வாழ்வது எவ்வாறு? என்று பிராட்டி இறைவனைக் கேள்வி கொண்டு அவனைச் சமாதானப்படுத்த தன் அடிமைத் தொழிலாலும், உபதேசத்தாலும், தனது அழகாலும் இறைவனது அருள் பொறையுடைமை முதலான குணங்களை தலையெடுக்கப்

பண்ணி காத்தருள்வாள் என்பதன்றி, இவன் தீய வழி நடந்தாலும் பெரிய பிராட்டியார் சிபாரிசு செய்து பாதுகாப்பாள் என்று பொருளல்ல என்பதை உணர்க.

**177. மூலம்:**

***அவள் புருஷகாரமடியாக இவனுடைய அநாதி காலார்ஜித பாபங்களெல்லாம் பொறுத்து, இவனிடத்தில் அத்யாதரம் பண்ணி (143) 'கிம்கார்யம் ஸீதாயாமம?' (ராமா. யுத். காண். 41.4) என்கிறபடியே, பிராட்டியிலும் அபிமததமனாக புத்தி பண்ணியிருக்க, இவன் திரியவும் பூர்வ வாஸநையாலே ராஜபார்யையானவள் நிக்ருஷ்ட புருஷன் பக்கல் அநுரக்தையாமாப் போலே, ததிதர விஷயப்ரவணனாய், தத் அஸஹ்யங்களான அஹங்கார மமகார பாகவதாப சாராதிகளிலே அந்வயித்தால், அவனுக்கும் அஸஹ்ய மாய்விட நிக்ரஹத்துக்கே பாத்ரமாய்ப் போமாகையாலே, தல்லப்த ஸத்தாதிகனாய் தச்சேஷபூதனாய் ததாஜ்ஞா பரதந்த்ரனாய் அஸ்வதந்த்ர னான ஆசார்யனாலும்; தச்சேஷ பூதையாய், ததேக பரதந்த்ரையாய், தச்சந்தா நுவர்த்தியான பிராட்டியாலும் உத்தர காலத்திலே ப்ரஷ்டனாய், அஹங்கார மமகார வச்யனாய், பத்த ஸம்ஸாரி யானவனை ரக்ஷிக்கப் போகாதறே. (144) 'பு$_4$ங்தே பே$_4$ாக$_3$ாந விதி$_3$த ந்ருபஸ ஸேவகஸ்யார்ப$_4$காதி$_3$:' (ந்யாஸதிலகம்) என்று ராஜாவினு டைய அநுவர்த்தநத்தையறியாத ராஜ ஸேவகார்ப கனுக்கும் ஸகல போகாநுபவ ஸித்தியுண்டானாப் போலே,***

**விளக்கவுரை**

பிராட்டியார் சிபாரிசின் காரணமாக இறைவன் இச்

சீவனுடைய நெடுங்காலம் ஈட்டப் பெற்ற பாபங்களை யெல்லாம் பொறுத்து, இவனிடத்தில் மிகவும் அன்பு செய்து (143) 'சுக்கிரீவரே! உமக்கு ஒரு தாழ்வுவரில் சீதையைப் பெற்று எனக்குப் பயனென்?' என்று எம்பெருமான் கூறியபடி பிராட்டியைக் காட்டிலும் இறைவன் இவனை விரும்பத் தக்கவனாக எண்ணியிருக்க, இவன் மீண்டும் முற்பிறவி யின் தீவினையின் பழக்கத்தாலே; அரசனின் மனைவியானவள், தன் கணவனைக் காட்டிலும் ஒரு தாழ்ந்த மனிதனைக் காதலிப்பது போல, இறைவனைத் தவிர்த்த தாழ்ந்த விஷயங்களில் ஈடுபாடு கொண்டவனாய், பொறுக்கக் கூடாதவைகளாம் அகங்காரம் மமகாரம் பகவதபசாரம் பாகவதாபசாரங்களில் ஈடுபட்டால், இறைவனுக்கும் பொறுக்க முடியாததாகிவிடும்படி அவனது தண்டனைக்கு ஆளாகிப் போவான்.

ஆகையாலே இறைவனாலே அடையப் பெற்ற சாத்விக குணமுடைய நல்லோனாய் அவனுக்கு அடிமைப் பூண்டவனாய், அவனது ஆணைக்குக் கட்டுப் பட்டவனாய், சுவதந்திரமேயில்லாத ஆசாரியனாலும்; இறைவனுக்கு அடிமைப் பூண்டவளாய், அவனுக்கே உடைமை யானவளாய் அவ்விறைவனின் நினைவைப் பின் பற்றுபவளான பெரிய பிராட்டியாலும் சரணாகதி பண்ணிய பின்னரும் தாழ்ந்த விஷயத்திலீடுபாடு கொண்டவனாய், அகங்காரமம காரத்துக்கு வசப்பட்டவனாய் ஸம்சாரத்தில் கட்டுப்பட்டவ னாயிருப்பவனைக் காக்கவியலாதல்லவா- (144) 'அரசனுக்குத் தொண்டு செய்யாமலேயே அரச போகத்தை அநுபவிக்கும் அரச சேவகனின் சிறுவன் முதலானார்' என்கிறபடி அரசனுடைய அடிமைத்தன்மையை அறியாத அவ்வரச சேவகனுடைய பிள்ளை முதலானார் அரசனது எல்லா இன்பத்தையும் அநுபவிப்பது போலே,

**178. மூலம்:**

*ஶிஷ்யனுக்கு அதிகாரமில்லையேயாகிலும், பல ஸித்தியில் கண்ணழிவில்லையென்று சொல்லாநின்றதே? என்னில், ப்ராதிகூல்யங்களில்லையானால் அப்படியே குறையில்லை. இவனிடத்தில் மந்த்ரார்த்த விருத்தங்களாய் ஸ்வரூப நாசகங்களான அஹங்கார மமகார விஷய ப்ராவண்ய பாகவதாபசாராதிகள் உண்டானால் பலஸித்தி சொல்ல வொண்ணாதிறே. ராஜஸேவகார்பகன், ராஜ ஸேவாநு வர்த்தநம் அறியாதொழிந்தாலும், ராஜ அநபிமத க்ருத்யங்களில் அந்வயமில்லாதபடி வர்த்திக்க வேணுமிறே. அப்படி நில்லாதே ததநிஷ்ட வ்யாபாரங் களிலே அந்வயித்தானாகில், அவனுக்கும் அவன் பிதாவுக்குங் கூட விநாஶம்வருமிறே.*

*அதுவென்? பிராட்டி காகத்தையும், ஆழ்வான் நாலூரானையும் ரக்ஷிப்பிக்குமதில்லையோ என்ன, ஒருகால் அபராதம் பண்ணிப் போக்கற்றுச் செயல்மாண்டு திருவடிகள் முன்னே விழுகையாலே, (145)'த்ராஹித்ரா ஹீதி ப$_4$ர்த்தாரமுவாச த$_3$யயாவிபு$_4$ம்' (பாத்ம புராணம்) என்று ப்ரார்த்தித்து ரக்ஷிப்பித்தாளத்தனை யொழிய, அடுத் தடுத்து அதுவே யாத்ரையானால் ரக்ஷிப்பிக்கப் போகாதிறே. நாலூரான் உபத்ரவம் வருமென்றறியாதே தர்ஶந நிரவாஹத்துக்காக:*

**விளக்கவுரை:**

சீடனுக்கு நேர்கோடு நேரே இறைவனிடத்தில் செய்யும் உபாயாநுஷ்டாநத்தில் அதிகாரமில்லை யென்றாலும் ஆசாரியனால் மோட்சமாகிய பயன் கிடைக்கத் தடையில்லை என்று சான்று சொல்லா நின்றதே? எனின்,

வைணவ ஒழுக்கத்திற்கு விரோதமான செயல்களில் ஈடுபடவில்லை யானால் அப்படியே அம்மோக்ஷ பயன் கிடைக்கத் தடையில்லை. இச்சீடனிடத்தில் திருமந்திரத்தில் சொல்லப் பட்ட பொருள்களுக்கு விரோதங்களாய், ஆந்மாவிற்கு அழிவை ஏற்படுத்துகின்ற யான், எனது என்னும் செருக்குகள், பொருள் இன்பங்களில் (வேட்கை) விருப்பம், பாகவதரிடத்துச் செய்யுங் குற்றங்கள் பிறர்பொருளில் விருப்பம் கொள்ளுதல், பிறர் மனைவியை விரும்புதல் முதலியவை உண்டானால், மோட்ச பயன் கிடைக்குமென்று கூற முடியாதல்லவா. அரசனுக்குப் பணிபுரியும் சேவகனு டைய பிள்ளை, அரசனுக்குத் தொண்டு செய்யாவிட்டாலும் (தொண்டை அறியாவிட்டாலும்) அரசனுக்கு விருப்ப மில்லாத செயலில் இயைபு இல்லாதபடி நடக்க வேண்டு மல்லவா? அவ்வாறு இல்லாமல் அரசன் விரும்பாத செயலில் ஈடுபட்டானாகில், அந்தப் பிள்ளைக்கும் அவன் தந்தையான (அரச) சேவகனுக்குங் கூட ஆபத்து வரும் என்று உணர வேண்டும்.

அது என்? சீதாபிராட்டி காகத்தையும், கூரத்தாழ்வான் நாலூ ரானையும் காத்ததில்லையோ? என்று கூற, காகமானது ஒரே ஒருமுறை பிராட்டி விஷயமாகத் தவறிழித்துப் பின்வேறு புகலிடமற்றுத் தன் செயல் மாண்டு இறைவன் திருவடிகள் முன்னே வந்து விழுகையாலே (145) 'இந்த காகத்தைக் காப்பாற்றுங்கள் காப்பாற்றுங்கள் என்று தன் அருளாலே தனது கணவனான இராமபிரானைப் பார்த்துக் கூறினாள்' என்கிறபடியே, இராமனிடம் பிரார்த்தித்துக் காகத்தைக் காப்பாற்றினாள் என்று அக்குற்றந்தன்னையே அடுத்தடுத்துச் செய்தால் காக்கமாட்டாள் அல்லவா? நாலூரான் தன்னாசாரியனான கூரத்தாழ்வானுக்கு இடையூறு

விளையும் என்றறியாதே ஸ்ரீவைஷ்ணவ தர்சநத்தை நிலை நாட்டும் பொருட்டே சோழனிடம் அவரைக் காட்டிக் கொடுத்தானன்றி வேறில்லை; தன்னைஅறியாமல் ஒரு வார்த்தைச் சொல்லிப் போந்த பின்னர்

**179. மூலம்:**

***அவஸாத் ஒருவார்த்தைச் சொல்லிப்பின்பு அநுதபித்துப் போருகையாலே, ஆழ்வான் அபராதமாக நினையாதே பொறுத்திருக்கச் செய்தேயும், ஆழ்வான் பக்கல் வ்யாமோஹத்தாலே பெருமாள் சீறினால், நான் பெற்றலோகம் நாலூரான் பெறவேண்டும் என்று ப்ரார்த்தித்தாரித்தனையொழிய, புத்தி பூர்வக அபராதம் பண்ணின வீரஸுந்தரனுக்குப் பட்டர் ப்ரஸாதித்தாரென்றில்லையே.***

***ஆனால், இதுவுமுண்டாயிடுக அவனுக்கு என்னுடையவன் அன்றோயென்று க்ஷமா வாத்ஸல்யாதிகளுண்டே, அவையுங்கார்யகரமாகாதோ? என்ன, அவனுக்குந் தனக்குமுண்டான ஸம்பந்தத்தையறிந்து தத்விச்லேஷத்தில் ஸஹிக்க மாட்டாதே, ஆர்த்தனானவனுக்கிறே ஸம்பந்தமுள்ளது. தான் நின்ற நிலையை அநுஸந்தித்து, 'இந்நின்ற நீர்மையினியாமுறாமை' (திருவிருத்தம்-1) என்றும், "இன்றொடு நாளையென்றே - இத்தனை காலம் போய்க்கிறி பட்டேன்" (பெரியாழ்வார் திருமொழி-5-3-8) என்றும், (146) "ஏஹி பச்ய சரீராணி" (ராமா. ஆர. கா. 6-16) என்றும், "இன்னங்கெடுப்பாயோ" (திருவாய் 6-9-8) என்றும், "நாட்டு மானிடத்தோடெனக்கரிது" (பெரியாழ்வார் திருமொழி. 5-1-5) என்றும், "நாட்டாரோடு இயல் வொழிந்து" (திருவாய் 10-6-2) என்றும், "ஓ ஓ உலகினதியல்வே" (திருவாசிரியம்-6)***

**விளக்கவுரை:**

ஐயோ! இப்படிச் செய்தேனே என்று மனம் வருந்தியதை ஆழ்வான் கண்டு அதனைக் குற்றமாக நினையாமல் பொறுத்திருக்கவும், இறைவன் ஆழ்வான் பால் அன்பு மிகுதியால் அந்த நாலூரான் மேற் சீறியிருந்ததால் ஆழ்வான், ('நான் பெற்ற வீட்டு லகத்தை நாலூரானும் பெற வேண்டுமேயென்று' பிரார்த்தித் தாரித் தனையன்றி, நினைவறிந்து தெரிந்தே பிள்ளைப்பிள்ளை யாழ்வான் திறத்துக் குற்றமிழைத்த வீர சுந்தரபிரம்மராயனை பட்டர் மன்னித்தருள வில்லையேயல்லவா.

ஆனால், இஃதிருக்கட்டும் அவ் இறைவனுக்கு, ஒரு சீவனை என்னுடையவன் அன்றோ என்று அபிமானிக்கும் பொறுமை, எளிமை, சீலம் ஆகிய குணங்களுண்டே? அவையும் செயலாற்ற மாட்டாதோ? என்று கூற, அவனுக்கும் சீவனான தனக்குமுள்ள உறவின்தொடர் பையறிந்து, அவ் இறைவன் விட்டுப் பிரிதலைப் பொறுக்க மாட்டாதே துன்பமடைபவனுக்கல்லவா உண்மையான சம்பந்தமுள்ளது. சீவனானவன் தான் நின்றநிலையை எண்ணி 'இந்நின்றநீர்மையினியாமுறாமை' என்றும் 'இன்றொடு நாளையென்றே இத்தனைக் காலமும் போய்க்கிறிபட்டேன்' என்றும்,(146) 'விரகம் தின்ற உடலைப்பார்' என்றும், 'இன்னங் கெடுப்பாயோ' என்றும், 'நாட்டு மானிடத்தோ டெனக்கரிது' என்றும், 'நாட்டாரோடு இயல் ஒழிந்து' என்றும், 'ஓ ஓ உலகினது இயல்வே' என்றும்

**180. மூலம்:**

*'வெருவி இந்நிலத்தில் பொருந்தாமை தோற் றிற்று வந்த சேதனனுக்காயிற்று பகவத் ஸம்பந்தம் உண்டாகச்*

சொல்லலாவது' என்று மாணிக்க மாலையிலேயே அருளிச் செய்தாரிறே பெரியவாச்சான்பிள்ளை.

இப்படியிராதவன்று நாராயணத்வப்ரயுக்த ஸம்பந்தம் எல்லாத்துக்குமுண்டான தொன்றாய் விஶேஷித்துச் சொல்லாவதொன்றில்லாமையாலே அவிஶேஷமாய்ப் போமிறே. இத்தால் இவனே லோக விலக்ஷணனானால் விஶேஷ கடாக்ஷ பாத்ரனாய் போக யோக் யனாம்படி முக்தனாம். ப்ரயோஜ நாந்தரபரனுமாய் ஸதாசார்ய ஸம்பந்தமுண்டானால், ப்ராதிகூல்ய நிவ்ருத்தியளவும் ஸ்காலித்யங்களுடைய யோகிகளுக்குப்போலே, இரண்டு மூன்று ஜந்மங்களுண்டாக்கி சரம ஶரீரத்திலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் எல்லாவற்றிலும் விரக்தியை ஜநிப்பித்து, பரமார்த்தனாம்படி பண்ணி முக்தனாக்கும். கேவல ஸம்ஸாரிகளைப் போலே சிலகாலம் விட்டுக் கொடான் என்று அஸ்மதாசார்யோக்தம். *(147)* *“விம்ஶத்யக்$_3$நீந்த்$_3$ர ஸூர்யாணாம் ஸப்தபி$_4$ஶ்ஶங்கரஸ்யது- த்ரபி$_4$: ப்ரஜாபதேர்ப$_4$க்த: ஜந்மபி$_4$ர் வைஷ்ணவோ ப$_4$வேத்- விஷ்ணு ப$_4$க்தி பரஸ்தத்$_3$வத் ஸப்தஜந்மஸுமாநவ: ஏகாந்தீ ப$_4$க$_3$வத்$_3$த்$_3$யாஜு பூ$_4$த்வா முக்தோ ப$_4$விஷ்யதி” (பாகவதம்)*

**விளக்கவுரை**

என்றும் 'வெருவி இந்நிலவுலகில் பொருந்தாமை தோற்றிற்று வந்த மனிதனுக்காயிற்று பகவானுடைய ஸம்பந்தம் உள்ளபடி உண்டாகச் சொல்லலாவது' என்று மாணிக்கமாலையில் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்தாரிறே. இப்படி ஆர்த்தனாயில்லாதபோது நாராயணனின் குடல் தொடர்பாம் ஸம்பந்தம் இவ்வுலகிலுள்ள ஸம்சாரிகளுக்குமிருப்பதாகையால் விசேடித்துச் சரணாகத

னுக்கு மட்டுந்தான் அது உளது என்று சொல்ல முடியாதாகை யாலே, அதையிட்டு சிறப்பாகச் சொல்லப் போகாதல்லவா? இப்படிச் சொல்லாவிடில், சரணாகதன் ஆர்த்தி யுடையாக வேண்டுமென்ற சிறப்பில், ''......இதனால் சரணாகதனான இவன்'', இவ்வுலக மக்களைக் காட்டிலும் வேறுபட்டுத் தகாத வைகளைச் செய்யாமலிருந்தால், இறைவனுடைய சிறப்பான அருள் நோக்கிற்கு உரியனாய் பேரின்பத்திற்குத் தகுதிபெற்று முக்தனாவான். இவனே, பிற பயன்களை விரும்புவனா யிருந்து நல்லாசிரியன் தொடர்புண்டானால், விரோத மானவற்றைச் செய்வதிலிருந்து மீளும் வரை ஆசாரத்தில் தவறிய யோகிகளுக்குப் போலே, இரண்டு அல்லது மூன்று பிறவி பிறக்கும்படி செய்து கடைசி சரீரத்தில், உடல், உடல் தொடர்பான மனைவி மக்கள் முதலான எல்லாவற்றிலும் வெறுப்பை யுண்டாக்கி மிகவும் ஆர்த்தியுள்ள வனாம்படி பண்ணி இவனை முக்தனாக்கும்.

ஸம்சாரிகளைப் போலே இவனை, நெடுங்காலம் பிறவிகளில் உழலுமாறு விட்டு வைக்கமாட்டான் இறைவன் என்று அடியேனுடைய ஆசாரியரான மணவாள மாமுநிகள் அருளிச் செய்வார். (147) 'இருபது பிறவிகளில் அக்கினி, இந்திரன், சூரியன் ஆகியோர்க்கும் பக்த னாயிருந்தவன், பிறகு ஏழு பிறவிகளில் சிவ பக்தனாவான்; பின்னால் மூன்று பிறவிகளில் பிரமனது பக்தனாவான்; அதன் பின்னரே விஷ்ணு பக்தனாகி வைஷ்ணவப் பிறப்பெடுப்பான்; அவ்வாறு வைஷ்ணவனாகப் பிறந்தும் அவன்ஏகாங்கி யாமளவும் ( ஏகாங்கி எல்லாவற்றையும் உள்ளும் புறமும் மனத்தாலே துறந்தவன்) இறைவன் பார்த் திருந்து, அவன் ஏகாங்கியானதும் தன்னுடைய பரமபதத்தை யருளுவன்' என்று பாகவதத்தில் சுகமுனிவர் கூறியவாறே,

**181. மூலம்:**

*என்று ஆசார்ய வரணம் பண்ணி வைஷ்ணவனான பின்பு பகவதேகாங்கியாமளவும் பிறந்து பூர்வ பக்திவாஸனை விடாதே க்ரமமாக முக்தனாம் என்று சொல்லப்பட்டதிறே. இஜ்ஜந்மத்திலே அதிகாரியாம் போது, ஆசார்யாபிமாநத்துக்கு அபேக்ஷிதம்; ஸதாசார்ய வரணம் பண்ணி தனக்குள்ளதெல்லாம் அங்குத்தைக்கு சேஷமாக்கி, ப்ராதிகூல்யங்களெல்லாம் பரித்யஜித்து, அருளாளப்பெருமாளெம் பெருமானார், எம்பார், ஆழ்வான், ஆண்டான், வடுகநம்பி, நஞ்ஜீயர் முதலானார் போலே ஆசார்யனையொருக்ஷணமும் பிரியாதே பாதச் சாயைபோலே வர்த்தித்துக் கொண்டிருக்க வேணும். அப்படியான அதிகாரமில்லையானாலும், 'மாளுமோரிடத்திலும்' (திருவாய் 1-3-8) என்கிறபடியே, மரண தசையிலேயானாலும் அநாதியாகத் தான் பண்ணிப் போந்த ப்ராதிகூல்யங்களை நினைத்து "நீசனேன் நிறைவென்றுமிலேன்" "நானே நாநாவித நரகம் புகும் பாவஞ் செய்தேன்" (பெரிய திரு. 1-9-2) (14) 'அமர்யாத$_3$: க்ஷ"த்$_3$ர: ...... ந்ருபஸ"ரஸ"ப$_4$ஸ்யாஸ்பத$_3$ம் - பாபாநாம் ப்ரத$_2$மோ ஸ்ம்யஹம்' (ஸ்தோத்ர ரத்நம்) என்னும்படியே,*

**விளக்கவுரை:**

ஆசாரியன் திருவடியடைந்து வைஷ்ணவனான பின்பு, ஏகாந்தியாமளவும் பிறந்து முன் ஜென்மத்தில் எம்பெருமானிடம் பக்தனாயிருந்த பழக்கத்தினால் ஆசாரத்தை விடாமல் படிப்படியாக முக்தனாவான் என்று சான்று நூலிற் கூறப்பட்டதல்லவா? வரலாறு இவ்வாறிருக்க, ஒருவன் இந்தப் பிறவியிலேயே அதிகாரியாகும்போது,

ஆசாரியாபிமாநத்திற்கு வேண்டுவது; ஒரு நல்லாசாரியனின் திருவடிகளைப் பற்றித் தனக்குள்ள பொருட்கள் அனைத்தையும் அவ்வாசாரியனிடம் சேர்ப்பித்து, தீய செயல்கள் அனைத்தையும் விட்டு அருளாளப் பெருமாளெம்பெருமானார், எம்பார், கூரத்தாழ் வான், முதலியாண்டான், வடுகநம்பி, நஞ்சீயர், நம்பிள்ளை ஆகியவர்களைப் போல், ஆசாரியனை ஒருபொழுதும் விட்டுப் பிரியாமல், அவர் பாதநிழலைப் போல வாழ்ந்து கொண்டிருத்தல் வேண்டும். அப்படியிருக்கத் தனக்கு வாய்ப்பு இல்லையானாலும் (அதிகாரமில்லையாகிலும்) 'மாளுமோர் இடத்திலும் வணக்கொடு' என்கிறபடி, இறப் பெய்துங்காலத்திலேயாகிலும், தொன்றுதொட்டு தான் முற்பிறவிகளில் செய்துவந்த பாவங்களை நினைத்து, 'நீசனேன் நிறைவொன்றுமிலேன்', 'நானே நாநாவித நரகம் புகும்பாவஞ் செய்தேன்' என்றும், 'சாத்திரங்களை மதிக்காதவன் கீழ்மகன்',(148) 'மனிதனாம் விலங்கை யொத்தவன், தீயவற்றுக்கெல்லாம் இடமானவன், பாபம் செய்வதிலே முதன்மையானவன்' என்னும்படி,

182. மூலம்:

ஸ்வதோஷங்களை யநுஸந்தித்துக் கொண்டு, பரதே$_3$ாஷ நிரீக்ஷணம் பண்ணப் போகாதே தனக்கு ஆசார்ய கடாக்ஷத்தாலே பிறந்த ஜ்ஞானபக்தி$_4$ வைராக்யங்கள் தன்னாலே வருமவையாக நினைத்து இறுமாயாதே ப$_4$த்த ஸம்ஸாரிகளிலும் நிக்ருஷ்ட தமனாகத் தன்னை அநுஸந்தித்துக் கொண்டு ப$_4$க$_3$வத் ப$_4$ாக$_3$வ த$_3$ரிடத்திலானாலும், ஸம்ஸாரிகளிடத்திலானாலும் தே$_3$ாஷம் காணுமளவில் ஸ்வதோஷமென்று நினைத்து வாய்விட்டு ஒருவர்க்கும் வெளியிடாதே மிகவும் பாகவத

*அபசாரபீருவாய், ஸவாஸநமாக அஹங்கார மமகார நிவ்ருத்தனாகும்படி நிர்ஹேதுக பகவத் கடாக்ஷம் பலித்ததாகில், இத்தேஹாவஸாநத்திலே முக்தனாம். அக்காலத்துக்கும் தேஹத்திலும் தாரபுத்ராதிகளிலும் அஸக்தனாய் சப்தாதி விஷயங்களில் வாஸநை நிவர்த்திக்கப் பெறாதே, அஹங்கார மமகாரங்களோடே ப்ரவர்த்தித்துப் போந்தானாகில், ஜடபரதனைப் போலே ஐந்மாந்தரத்தை ப்ராபிக்கும்; ஆசார்ய ஸம்பந்த முண்டென்று ஈடேற விரகில்லை. ஜ்ஞாநாநுஷ்டாநங்க ளில்லாமையாலே வருங்குறை தீர்க்குமதே ஆசார்ய க்ருத்யம்.*

**விளக்கவுரை:**

தன்னுடைய தோஷங்களையெல்லாம் நினைவு கூர்ந்தும், பிறர் குற்றங்களைக் கண்காணாமலிருந்து கொண்டு, தனக்கு ஆசாரியன் அருளாற் பிறந்த ஞானம், பக்தி, வைராக்கியங்கள் யாவும் தன்னாலே வந்ததாக நினைத்துக் கர்வப்படாமல் இவ்வுலகில் பாவ புண்ணியங் களாற் கட்டுப்பட்ட ஸம்ஸாரிகளைக் காட்டிலும் தன்னை மிகவும் தாழ்ந்தவனாக நினைத்துக் கொண்டு, பகவானிடத்திலோ, பாகவதரிடத்திலோ, ஸம்ஸாரிகளிடத் திலோ யாதேனும் குற்றங் கண்டால் அது தனது குற்றமென நினைத்து, வாய்விட்டு, ஒருவருக்கும் வெளியிடாமல், பாகவத குற்றத்திற்கு மிகவும் அஞ்சி, அகங்கார மமகாரங்களை முழுவதும் விட்டுவிட, அப்போது பகவானது காரணமற்ற இன்னருள் விளைந்தால் இந்தச் சரீரத்திலே மோட்சமடைவான். அவ்வாறு இல்லாது அந்தக் காலத்தி லேயும், தன்னுடைய தேகத்திலும், மனைவி, மக்கள் முதலானாரிடத்திலேயும் பாசம் வைத்து, புலனின்பங்களில்

ஆசையை விடாமல் யான், எனது என்னும் செருக்கோடு வாழ்ந்தானாகில் சடபரதனைப்போல் மறுபிறப்பை யடைவான். ஆகையால் ஒருவன், தனக்கு ஆசாரிய ஸம்பந்தமுண்டென்று ஈடேற வழியில்லை. சீடனுக்கு ஞான அநுட்டான மின்மையாலே அவற்றால் வருகின்ற குறையைத் தீர்ப்பதே ஆசாரியனுடைய கடமையாகும்;

183. மூலம்:

*ஆச்ரயணாத் பூர்வம் அநாதிகாலார்ஜித பாபங் களைப் பொறுப்பிக்குமதே, புருஷகார க்ருத்யம்; பூர்வக்ருத ஸர்வாகங்களும் ப்ராமாதிக உத்தராகங்களும் பொறுத்து ரக்ஷிக்குமது உபாயக்ருத்யம்; இது பரமார்த்தம்; மிகையாம் படி சொல்லுமவையெல்லாம் ப்ரஶம்ஸா பரவாக்யங்களா கையாலே, அதிவாதங்களாயிருக்கும். ஆசார்ய ஸம்பந்த மானாலும் ஸித்தோபாயமானாலும் சேதநனுடைய அந்தః கரணம் பாஹ்யவிஷயங்களில் நின்று மீளும்படி பண்ணி 'என்னெஞ்சினாரும் அங்கே யொழிந்தார்' (திருவாய். 7-3-4) என்னும்படி பகவத் விஷயத்தில் அத்யந்தாஸக்த ஸித்தனாய் பரமார்த்தனாம்படி பண்ணியல்லது கார்ய கரமாகாது. ஆகையாலிறே ஆழ்வார், 'தொழுதெழு என்மனனே' (திருவாய் 1-1-1) என்று உபக்ரமித்து, 'ஊனில் வாழ் உயிரே நல்லைபோ' (திருவாய். 2-3-1) என்றும், 'நெஞ்சமே நல்லை நல்லை' (திருவாய். 1-10-4) என்றும் ச்லாகித்து, 'நீயும் நானுமிந் நேர் நிற்கில் மேல் மற்றோர் நோயுஞ்சார்கொடான்' என்றும், 'கனமே சொல்லினேன் இது சோரேல் கண்டாய்!' (திருவாய்.9-3-5) என்றும் ப்ரார்த்தித்து 'அருள்பெறுவார் அடியார்' (திருவாய். 10-6-1) என்கிறபாட்டிலே,*

**விளக்கவுரை:**

இறைவனைச் சரணடைவதற்கு முன்பு, ஈட்டப் பெற்ற தொன்மையான பாவங்களைப் பொறுப்பித்தலே பிராட்டியினுடைய சேர்ப்பிக்கும் தொழிலாகும்; இறைவனை அடைவதற்கு முன்னர் சீவனால் செய்யப்பெற்ற பாவங்க ளையும் அவனையடைந்த பின்னர்த் தன்னையறியாமல் செய்யும் பாவங்களையும் பொறுத்துக் காப்பதே உபாயமாம்; இறைவனது செயலாகும்; இதுவே உண்மையான தத்துவமாகும்; இதற்குமிகையாம்படி சொல்லுவதெல்லாம் புகழ்ச்சியில் நோக்காகையாலே மிகைப்பட கூறுதலாகும். ஆசாரிய சம்பந்தமானாலும், இறைவனாகிய ஸித்தோபாய மானாலும் சீவனுடைய மனத்தைப் புற விஷயங்களில் நின்று மீளும்படி பண்ணி, 'என்னெஞ்சினாரும் அங்கேயொழிந்தார்' என்னும்படி இறைவன் விஷயத்தில் மிகவும் பாசமுடைய வனாய் மேலான ஆர்த்தியுடையனாம்படி பண்ணியல்லது பயன் விளைய மாட்டாது. ஆகையால்தான் நம்மாழ்வாரும், 'தொழு தெழு என் மனனே!' என்று ஆரம்பித்து, 'ஊனில் வாழ் உயிரே! நல்லை போ' என்றும், 'நெஞ்சமே நல்லை நல்லை' என்றும் புகழ்ந்து கொண்டாடி, 'நீயும் நானும் இந்நேர்நிற்கில்-மேல் மற்றோர் நோயும் சார்கொடான்' என்றும், 'கனமே சொல்லினேன் இது சோரேல் கண்டாய்!' எனவும், பிரார்த்தனை செய்து 'அருள்பெறுவார் அடியார்' என்னும் பாசுரத்திலே;

**184. மூலம்:**

***அவன் க்ருபை பண்ணாநின்றான், நானும் இந்த ஸம்ஸாரத்தில் நிஸ்ப்ருஹனானேன், அவன் கொடுக்க நினைத்தாலும் நான் லபிக்க வேணுமென்றிருந்தாலும், நீ ப்ரதி கூலமானால் கார்யமில்லையிறே. ஸௌஹார்த்தம்***

நித்யமாகச் செல்லாநிற்கச் செய்தேயும், உன்னுடைய ப்ராதிகூல்யத்தாலேயிறே அனாதிகாலம் இழக்க வேண்டு கிறது; இனியானாலும் நீ அஜ்ஞாநத்தைவிட்டு அவன் திருவடிகளைப் பற்றப்பார் என்று, தலைக் கட்டுகையாலே மநோநைர்மல்யம் இல்லாத போது பகவத் ப்ராப்தி யோக்யதையில்லையாய் விடும் என்றருளிச் செய்தது.

ஸர்வேச்வரன்தான், தன்னைச் சேர்த்துக் கொள்ள நினைத்த ஆத்மாவினுடைய மநஸ்ஸை திருத்தி விநியோ கங் கொள்ளும் ப்ரகாரம், ''பெரும்பாழில் 'க்ஷேத்ரஜ்ஞன்'' என்று தொடங்கி ஒரு சூர்ணையிலே சொல்லப்பட்டதிறே. ''பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செய் கலியாரேவ ஆளும் வன்குறும்பர் குடியேறிப் பெருங்குடியும் தங்கள் கருத்துள்ளேயாக்கிப் படிந்துண்ணும் போகத்தே தூராதே பொறுக்கொணாப் போகத்துக் காவல் செய்து குமைத்துத் திரித்து வீழ்த்தி வலித்தெற்றி யருவியறுத்துக் கடனாயின இறுப்பிக்கப் பாழ்த்த விதியானவாறே தன்பால் மனம் வைப்பிப் பதாகத் தேய்ந்தற மன்னி ஒள்வாளுருவி வினைத்துறற்றை வேரறுவித்து'',

185. மூலம்:

தீக்கொளீஇக் கவ்வையெருவிட்டு அமுதவாறு தலைப்பற்றி ஈரியாய்க் கசிந்ததிலே ஈர நெல் வித்தி யெழுநாற்றுக் களையையும் வேர் முதல் மாய்த்துப் பட்டிச் சேவதக்கி மீது கொள்ளாமல் குறிக் கொள்வித்துக் கடல்புரைய விளைந்து தலை வணக்கினவாறே நாளுநாள் கோட் குறையாக நின்றாரறியாமல் குந்தங் கொண்டு ஆராமையுண்டு காலக் கழிவாலே நிலத்துகாமல் பற்றறுத்துத் தண்டாலடித்துப் பதரறுத்துப் போர்த்த தோல்

*விடுத்து ஸூக்ஷ்ம வொட்டும் நீரிலே கழுவி வேறோர் கலத்திட்டுப் பைந்தொடி மடந்தையரைக் கொண்டு ஷட்குண ரஸாந்நமாக்கி வானோர்க்காராவ முதானவாறே முற்றும் உண்ண முன்னம் பாரிதது உழுவதோர் நாஞ்சில் கொண்டு பெருக முயலும் பக்தியுழவன் க்ருஷிபலமிறே (ஆசார்ய. ஹ்ருதயம்-104) என்று பக்தி கர்ஷகனான ஸர்வேச்வரன், இவ்வாத்மா உஜ்ஜீவனத்திற்கு க்ருஷி பண்ணுகிற ப்ரகாரத்தை ஆசார்ய ஹ்ருதயத்திலே அருளிச் செய்தார்.*

**விளக்கவுரை:**

''மனமே! அவன் அருள் செய்தற்கு விரைகிறான், நானும் இக்கொடிய உலகில் அவா அற்றவனானேன்; அவன் பரமபதத்தைக் கொடுக்க நினைத்தாலும், நான் அதனை அடைய வேண்டு மென்றிருந்தாலும், நீ இந்த ஸம்பிரதாயத்திற்கு விரோதமாகச் செயற்படு வாயானால் பயனில்லையே. அவ்விறைவனுக்கு நம்மேல் நட்புடைமை எப்போதுமிருக்கச் செய்தேயும், உன்னுடைய விரோதமான நடத்தை யினால் அல்லவா நெடுங்காலம் நான் அவனை இழக்க வேண்டுகிறது. இனி, நீ அறிவின்மையை விடுத்து இறைவன் திருவடிகளைச் சார்தற்க்கு இலக்குப் பாராய்!'' என்று ஆழ்வார் பிரபந்தத்தில் கூறித் தலைக்கட்டுவதாலே, மனம் மாசு அறாதபோது பகவானை அடைவதற்குத் தகுதியில்லையாய்விடும் என்று ஆழ்வார் அருளிச் செய்தார்.

பகவானான எம்பெருமான் ஒருவனைச் சேர்த்துக் கொள்ள நினைத்து அவனது மனதைத் திருத்திப் பயன் கொள்ளும் விதமாவது, 'பெரும்பாழில்' (ஆசார்ய ஹ்ருதயம்-104. இதற்குப் பதவுரை மாத்திரம் உரைக்கப்

படுகிறது.) 'பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன்'-மூலப் ப்ரக்ருதியில் கட்டுப்பட்டிருக்கிற சீவாந்மா, பெருஞ்செய் கலியார் ஏவ-பக்திக்கு விளைநிலமான நெஞ்சானது; கலியார் ஏவ-கலிபுருடன் ஐம்பொறிகளை ஏவும்படியாக, ஆளும் வன் குறும்பர்-ஆந்மாவிற்கு உரிய மனத்தைத் தங்களுக்கு உரியதாகி நடத்துகின்ற ஐம்பொறிகளாகிய வலிய குறும்பர், குடிஏறி-(இவன்) சரீரத்தில் புகுந்து, பெருங்குடியும் தங்கள் கருத்துள்ளே ஆக்கி-பெருங்குடியைப் போன்று சரீரத்தில் முதன்மை பெற்ற மனத்தையும் தாங்கள் நினைத்தபடி ஒழுகச் செய்து,

படிந்து உண்ணும் போகத்தே - தீய விஷயங்களில் மூழ்கி நுகரும் போகத்திலே, தூராதே - தூராக்குழி என்னும்படி ஒரு காலும் நிறைவு பெறாதே, பொறுக்கொணா போகத்துக்கு - ஆற்ற வொண்ணாத விஷயபோகங்களை அனுபவிக்க வேண்டுமென்று, காவல் செய்து - சிறை செய்து, குமைத்து - துகைந்து இழுத்து, திரித்து - சரீரமாகிய செக்கிலிட்டுச் சுழற்றி, வீழ்த்தி - விஷயங்களாகிய படுகுழியில் தள்ளி, வலித்து எற்றி - இழுத்து நலிந்து, அருவி அறுத்து - நெருக்கித் தண்டித்து, கடனாயின இறுப்பிக்க - தங்களுக்குத் தக்க கடனாம் கப்பத்தை இறுப்பித்துக் கொள்ள, பாழ்த்த விதி ஆனவாறே - எம்பெருமானை வாழ்த்தி வணங்காமையாலே அவன் கொள்கைக்குப் பற்றாசான புண்ணியம் சிறிதுமின்றிப் பாழ்பட்டவாறே, தன்பால் மனம் வைப்பிதாக -ஐம் பொறிகளுக்கு வயப்பட்டதாலே இப்படிப்பாழ்பட்ட மனத்தினை இறைவன் பயிர் செய்யும்படி தன்பால் மனம் வைக்கப் பண்ணுதற்காக, தேய்ந்து அற மன்னி - ஐம்பொறிகளாகிய ஐவர் வலி குறைந்து முடிந்து போம்படி இறைவன் அந்த மனத்திலே தாவரம் போலே மன்னியிருந்து,

ஒள்வாள் உருவி - வினைகளை மாய்ப்பதற்காக ஒளி பொருந்திய தன் அருள் என்னும் வாளைத் தடை படாமல் செய்து, வினை தூற்றை - இவனால் அடிகாண முடியாதபடி மூடிய பாவங்களாகிய தூற்றை, வேரறுவித்து - மறுகிளை யுண்டாகாதபடி வாசனை சுவை என்னும் ஊசிவேரோடும் பக்க வேரோடும் அறுப்பித்து;

தீ கொளீஇ - அவை உருமாய்ந்து போம்படி நீறாக்கி, கவ்வை எரு இட்டு - பக்தியாகிய பயிர் வளர்க்கும்படியான (ஊரார் ஏசலை) எருவாக இட்டு, அமுதஆறு தலை பற்றி - ஞானமாகிற அமுதவாற்றை வாயளவாய்த் தலைக்கு மேலே போம்படி பண்ணி, ஈரியாய் கசிந்ததிலே- 'கசிந்தநெஞ்சினள்' என்று கூறும்படி அந்த ஞான வெள்ளத்திலே நல்லது கண்டால் இறைவனுக்கும் என்னும் நினைவாலே அன்பு விளையும்படி நெஞ்சுபதஞ் செய்து அந்நெஞ்சிலே ஈர நெல் வித்தி - அன்பாகிய நெல்லை விதைத்து, எழுநாற்று - இறைவனுக்கே இனிதாய் வளரும் இப்பயிரில் களையையும், வேர்முதல் மாய்த்து - யான் எனதென்னும் செருக்காகிய களையை ஊசிவேரோடு பறித்துப் போகட்டு, பட்டி சே அதக்கி - பக்தியாகிய பயிருக்கு இந்திரியங்களாகிய எருதுகள் தம் விருப்பப்படி திரிதற்குக் காரணமான செருக்கைப் போக்கி, மீது கொள்ளாமல் -பக்தி என்னும் பயிர் செழித்து வளருங்காலத்தில் பாகவதர் அல்லாதவர்கள் அவற்றைக் கவர்தற்கு இடமில்லாதபடி, குறிக்கொள் வித்து - அதனைக் காவற் செய்து, கடல்புரைய விளைந்து - அந்த பக்தியாகிய பயிர் கடல் போலே அளவிடற்கு அரிதாம்படி பலித்து, தலை வணக்கினவாறே - பலித்த பயிரானது காய்த்துக் கதிர் முற்றித் தலை வணக்குமாறு போலே பக்தியின் பரிபாகம் காரணமான ஆர்த்தியால் வரும் தன் வசமின்மை பிறந்தவாறே - நாளுநாள்

கோட்குறையாக நின்றார் அறியாமல் - நாள்தொறும் இந்த ஆன்மாவை இறைவன் அநுபவித்துக் கொண்டிருக்க மனம் நிறைவு பெறாதவனாகிப் படுகிற அலமாப்புக் கண்டு இத் தலையில் சிறிது தொங்கிற்று உண்டு என்று ஆராய்ந்து அறிய வேண்டும் படியாக பகவதநுபவத்தில் தலைநின்ற பிராட்டி திருவடி திருவநந்தாழ்வான் முதலோரும் அறியாத வண்ணம், குந்தம் கொண்டு ஆராமை உண்டு - பெரும்பசியரானவர்கள் விளைந்த நெல்லை அறுத்துக் கொண்டு போய் சமைத்து உண்ணுகிறவரையிலும் தரிக்க மாட்டாமல் கதிர் முற்றினவுடன் வயலிலேயே கிள்ளி எடுத்து உண்ணுவது போல் ஸம்சாரத்தில் கட்டுப் பட்டிருந்த இவ் ஆத்மாவை இச்சரீரத்தோடே யிருக்கும்போதே விளைந்த பக்திக்குத் தகுதியாக, மனக் காராமை மன்னி உண்டிட்டாய் என்கிறபடியே ஒருகாலும் நிறைவு பெறாமலே மேன்மேலும் அநுபவித்து;

காலக்கழிவாலே நிலத்து உகாமல் - பரிபக்குவ நிலை எய்திய இச்சீவன் காலக்கழிவினாலே தரைப்பட்டு மங்கிப் போகாமல், பற்று அறுத்து, - பேற்றிற்குத் தடையான வினைகளை விட்டுப் போம்படி அறுத்து, தண்டால் அடித்து பதர் அறுத்து- அறுத்த நெற்கதிர்களைத் தடியாலே அடித்துப் பதரும் மணியும் பிரிக்குமாறு போலே இறைவன் தன் அருளென்னும் மிக்க திடமான கருவியாலே நெல்லோடு ஒக்க விளைந்திருக்கும் சாரமில்லாத பதர்போலே யிருக்கும் ஆந்ம அநுபவத்தி லுள்ள சுவையை அறுத்து, போர்த்த தோல்விடுத்து - அந்நெல்லின் உமியை விடுவிக்குமாறு போலே சீவனோடு கூடியிருக்கும் (ஸ்தூல சரீரத்தை) நுண் உடலை விடுவித்து, சூக்ஷ்ம ஒட்டும் நீரிலே கழுவி - பின்னர் அரிசியை உமியற நீரிலே கழுவுமாபோலே ஆந்மாவோடே

ஒட்டியிருக்கும் மூலப்பகுதியின் துகள் வாசனை அணுக்கள் முதலா வற்றைப் பரமபதத்திலோடும் விரஜா நதியில் கழுவி, வேர் ஓர் கலத்திட்டு - பரமபதத்திலிருக்கும் (அப்ராக்ருத மான) திவ்யமான தெய்வ நலம் பொருந்திய தேகத்தில் புகுவித்து, பைந்தொடி மடந்தயரை கொண்டு - அங்கிருக்கும் தேவமாதரைக் கொண்டு இறைவன் தன்னின் பத்திற்கு ஏற்றவாறு இவனை அலங்கரிப்பித்து, ஷட்குண ரச அன்னமாக்கி - இவ்வாந்மாவின் குணங்களாகிய ஆறு சுவையோடு கூடியதாக அஹமந்நம் என்கிற அன்னமாக்கி, வானோர்க்கு ஆரா அமுது ஆனவாறே - வானோர்க்கு ஆராவமுதே என்கிறபடி நித்ய சூரிகளுக்கு மிகமிக இனிப் பொருளானவாறே;

முற்றும் உண்ண - இறைவன் இந்த சீவனை முற்றும் அநுபவிப் பதாக முன்னம் பாரித்து - 'என்னில் முன்னம் பாரித்து' என்கிறபடி இவனுக்கு இறைவனிடத்தில் ஆசையாம் சுவை பிறப்பதற்கு முன்பே இறைவன் பாரித்து, உழுவது ஓர் நாஞ்சில் கொண்டு - இறைவன் இவ்வுலகில் பக்தி பயிரிடுவோன் என்று தோற்றும்படி பயிர்த் தொழிலுக்கு வேண்டிய கலப்பை கொண்டு, பத்தி உழவன் - பத்தியுழவன் என்றபடியே இவ்வுயிருக்குத் தன்னிடத்தில் பக்தியை விளைகைக்கு வேண்டிய செயலைச் செய்து திரியும் எம்பெரு மானுடைய க்ருஷிபலம், இறே - முயற்சியின் பயனன்றோ? என்று பக்தியை யுண்டாக்குபவனான இறைவன், இவ் ஆந்மா உய் வடை வதற்கு முயலும் விதத்தை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருதயத்தில் அருளினார்.

**186. மூலம்:**

***இத்தால், ஸம்பந்தம் மாத்ரம் போராதே தான் கூட்டிக் கொள்ளுகைக்கு நினைத்தவரை பரிஸுத்த அந்த:***

*கரணராம்படி 'இருந்தான் கண்டு கொண்டு எனதேழை நெஞ்சாளும், திருந்தாத ஓரைவரைத் தேய்ந்தற மன்னி' (திருவாய்.8-7-2) என்கிறபடியே, விஷயங்களில் சபலமாய்ப் போருகிற என்னுடைய ஏழை நெஞ்சை யாளுகிற இந்த்ரிய புருஷர் ஐவரும் நசிக்கும்படி ஸ்தாவர ப்ரதிஷ்டை யாகவுள்ளே நிவஸித்து, நிர்த்தநிகன் நிதி கண்டார் விட்டுப் போக மாட்டாதே கண்டு கொண்டிருக்குமோபோலே, தான் என்னைக் கண்டு கொண்டிருந்து, துர்விஷய ப்ராவண்யத்தைப் போக்கி க்ருபை பண்ணினானென்று ஆழ்வார் அருளிச் செய்கையாலே, தான் விசேஷ கடாக்ஷம் பண்ணி நிர்மலனான பின்பு, போகத்திலே கூட்டிக் கொள்ளு மென்கிற அர்த்தம் சொல்லப்பட்டது.*

*அவன்படி இதுவாயிருக்க, 'வெறிதே யருள் செய்வர்' (திருவாய். 8-7-8) என்று சொல்லுகிறதென்? என்னில் வெறிதே யருள் செய்வதுதான் ப்ரதம கடாக்ஷம் பண்ணும் போது (149) 'நாஸௌ புருஷகாரேண ந சாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவ அஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந' (லக்ஷ்மிதந்த்ரம்);*

**விளக்கவுரை:**

இவ்வாற்றால் சீவனுக்கும் பரமனுக்கும் உள்ள ஸம்பந்த ஞானம் மாத்திரம் போராமல் இறைவனாம் தான் கூட்டிக் கொள்வதற்கு நினைத்த மக்களைக் குற்றமற்ற மனத்தையுடையராய்த் தூய்மையாம்படி, 'இருந்தான் கண்டு கொண்டேன் எனதேழை நெஞ்சாளும், திருந்தாத ஓரைவரைத் தேய்ந்தற மன்னி' எனத் திருவாய் மொழியில் ஓதுகிறபடி, தாழ்ந்தவைகளான பார்த்தல், சுவைத்தல், அணைத்தல் முதலிய விஷயங்களில் ஈடுபடுகின்ற

என்னுடைய அறிவிலா நெஞ்சை ஆளுகிற ஐம்பொறிகள் தேய்ந்து அறும்படியாய் இறைவன் தாவரமாம் மரத்தைப் போல் இடம் பெயராது என் உள்ளத்திலே வசித்து, நிதியற்றவன் நிதியைக் கண்டால் விட்டுப் போக மாட்டாமல் அதனையே கண்டு கொண்டிருப்பதுபோல், இறைவன் என்னைக் கண்டு கொண்டிருந்து அத்தீய விஷயத்திலீடு பாட்டைப் போக்கிக் கருணை செய்தான் என ஆழ்வார் அருளிச் செய்கையாலே, தான் விசேடமான அருளென்னும் பார்வையைப் பண்ணித் தூய்மையான பின்னர் இச் சீவனை இறைவன் பேரின்பாநுபவத்தில் கூட்டிக் கொள்ளும் என்னும் பொருள் ஆசார்ய ஹிருதயத்தில் சொல்லப்பட்டது.

மேற்சொன்னவாறு இறைவன் இயல்பு இதுவா யிருக்க, 'வெறிதே அருள் செய்வர்' என்று ஆழ்வார் சொல்லுகிறதென்? எனின், வெறிதே அருள் செய்வது, இறைவன் ஒருவனை முதன்முதலில் கடாக்ஷம் பண்ணும் போது (149) "யான் ஒருவனை அங்கீகரிக்க நினைக்கும்போது (பிராட்டியின்) புருஷகாரத்தையோ - வேறு காரணத் தையோ எதிர்பார்க்காமல் வெறும் எனது இச்சையாலேயே எப்பொழுதாவது ஒருகால் அவனை கடாக்ஷிக்கிறேன்;"

**187. மூலம்:**

*என்று நிர்ஹேதுகமாக கடாக்ஷம் பண்ணிப் போருமென்று சொன்னதித்தனையொழிய, ப்ராப்தி தசையிலும் பத்த ஸம்ஸாரியாய், துர்விஷயப்ரவணனாய், அஹங்கார மமகார வச்யனாய், பாகவதாபசார பரனாய்த் திரியா நின்றாலும் 'வெறிதே யருள் செய்வர்' என்றால் வைஷ்ணவனாகவும் பணியில்லையிறே. இச்சேதநன் பகவத் போகார்ஹனாம் போது, வைஷ்ணவத்வ மாத்ரம் போராது, ப்ரபந்நனாக வேணும்; அதுவும் போராது,*

*ஏகாந்தியாக வேணும்; அதுவும் போராது, பரமை காந்தியாக வேணும்; அஹங்கார மமகாரங்கள் ஸவாஸந மாக நிவ்ருத்தமாக வேணும்; விஹித நிஷித்த விஷயப்ராவண்யம் நிவ்ருத்தமாக வேணும்; அது செய்யுமிடத்தில் விருத்தமென்று த்யஜிக்கப் போகாது; (150) 'க்ஷேத்ராணி மித்ராணி' (ப்ரமாண்ட புராணம், ஹஸ்திகிரி. மாஹாத்மியம்) என்கிற ச்லோகத்தில் அவஸ்த்தை பிறக்க வேணும் ஸ்வரூபங்குலை யாமைக்கென்று ஸ்வரூப ஸித்தியர்த்தமாக இவை யெல்லாம் வேணும் என்று ஒரு கால் சொன்னாப் போலே பலகால் சொல்லிக்கொண்டு ஆழ்வார்களும் ஆசார்யர் களும் சேதநனுடைய ஹிதத்துக்காகப் படாதனபட்டு, ஒன்றிரண்டில் அன்றிக்கே பல ப்ரபந்தங்களிலும் ஒருவர் சொன்னத்தை வேறொருவர் சொல்லி ஏக கண்டமாகக் கூப்பிட்டுக் கொண்டு ஸகலேதர பரித்யாகம் விதிக்க ஹேதுவில்லையிறே.*

**விளக்கவுரை:**

என்று இறைவனானவன் வேறொரு காரணம் பற்றாத அருளைப்பண்ணிப்போரும் என்று கூறுவதன்றி, இறைவனை அடையக்கூடிய இறுதி காலத்திலும் உலக விஷயத்தில் கட்டுண்ட ஸம்சாரியாய் அழியக்கூடிய பெண்பற்று, பொருளின்பம் ஆகியவற்றில் மனத்தைச் செலுத்தியவனாய், அஹங்கார மமகாரங்களுடையனாய், பாகவதாபசாரம் பண்ணித் திரியா நின்றாலும், 'வெறிதே அருள் செய்வர்' என்றால், வைஷ்ணவனாக வேண்டாமன்றோ? இம்மனிதன் இறைவனுக்குப் போகப் பொருளாய்த் தகுதி பெற்றவனாம் போது, ஒருவன் விஷ்ணுபக்தனாம்போது, பத்துவித நிலைகளுண்டு. அவற்றில், வைஷ்ணவத்வம் என்பது

ஆறாம் நிலையாம். அத்தன்மை பெற்ற வைஷ்ணவத்வ நிலை மாத்திரம் போராது, பிரபந்ந நிலையை அடைய வேண்டும்; அதுவும் போராது ஏகாந்தி என்னும் நிலை யடைதல் வேண்டும்; அது மாத்திரம் போராது,அதனினும் சிறந்ததும் உயர்ந்ததுமான பரமஏகாந்தி நிலையை அடைதல் வேண்டும்;

பின்னும் அகங்கார மமகாரங்கள் முழுதும் விட வேண்டும்; அவற்றோடு சாத்திரத்தில் விதித்த காமிய பயன்களை விரும்புதல், வேறு பயன் விரும்புதல், பிறர் மனைவியைப் புணர்தல் முதலானவைகளும், சாத்திரத்தில் விலக்கப்பட்ட தீய விஷயங்களில் ஈடுபாடு ஆகிய வற்றையும் வாசனையோடு விட வேண்டும்; அவற்றை முரண்பட்டவை என்று விடுவது மாத்திரம் போராது; (150)'அத்திகிரிநாதனே! எனக்கு உன் பிரிவு மாடு, மனை, நிலம், நண்பர், சுற்றத்தார் ஆகியவை நெருப்பாய்த் தோன்றுகின்றன' என்று மேற்காட்டிய சுலோகத்தில் அவஸ்த்தைப் பிறக்கவேணும் என்று ஒருகால் சொன்னாற் போலே பல்கால் சொல்லிக் கொண்டு ஆழ்வார் ஆசார்யர் களும் மக்களின் நன்மைக்காகத் தாங்கள் படாதன பட்டு, ஒன்று இரண்டிலன்றிக்கே பல நூல்களிலும், ஒருவர் சொன்னதையே வேறொருவர் சொல்லி ஒரே குரலாக ஒத்துச் சொல்லிக் கொண்டு தீயன எல்லாவற்றையும் முழுவதும் விடுங்கோள் என்று விதிக்க வேண்டிய காரணம் ஏதும் இல்லை அல்லவா?

**188. மூலம்:**

***ஸர்வேச்வரன் தானும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் சேதநோஜ்ஜீவநத்துக்குப் பண்ணுகிற க்ருஷி இதுவாயிருக்க, சிலர் ஸர்வேச்வரனுக்கு ஸ்வாச்ரிதர்***

*நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினால் மிகவும் உகப்பா யிருக்கும்; தன் குணங்களுக்கு ப்ரகாசகமென்று (151) 'தே₃ாஷோ யத்₃யபிதஸ்ய ஸ்யாத்' (ராமா. யுத். கா.) என்று, சொன்னானே யென்று வித்யாபலத்தாலே குதர்க்கங்களைச் சொல்லிக் கொண்டு, வேத சாஸ்த்ர புராணேதிஹாஸாதிகள் கரை கட்டா காவேரியாகையாலே, பாஹ்ய குத்ருஷ்டிகள் விபரீதார்த்தங்களைச் சொன்னாப்போலே, அதில் சொன்னதொன்றாயிருக்க வேறே சில அர்த்தங்களைச் சொல்லிக் கொண்டு தமக்கிஷ்டமானபடி ஸஞ்சரிப் பார்கள்.*

*அவர்கள் சொல்லும் படியென்? என்னில், 'மந்த்ரத்திலே ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய நிவ்ருத்தி சொல்லப் பட்டதிறே'; நிஷித்தங்கள் கூடாதென்று த்யஜித்தால் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் வருமாகை யாலே, தன்னுடைய ரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தி யில்லை என்று சொல்லுகிற மந்த்ரத்துக்கும் இதுவே பொருளென்றும், தத்விவரணங்களான த்வய சரமச்லோகங்களுக்கும் இதுவே தாத்பர்யமென்றும்; இல்லையாகில், சரமோபதேசம் பண்ணி (152) 'இத₃ம் தே நாதபஸ்காய நாப₄க்தாய கத₃ாச ந' (கீதை.18-67) என்று கைப்பட்ட பொருளைக் கடலிலே வீழ்ந்தோமென்று வயிறு பிடிக்குமோ?*

**விளக்கவுரை:**

எல்லார்க்கும் இறைவனான தானும், ஆழ்வார் களும் ஆசாரியர்களும் இம்மக்கள் உய்வடைவதற்குச் செய்யும் முயற்சி இவ்வாறாயிருக்க ஒரு சாரார்; இறைவனுக்குத் தன் அடியார் தீயவொழுக்கத்தை மேற்கொண்டால் மிகவும் உகப்பாயிருக்கும்; அதோடு தன் குணங்களையும் ஒளிரச்

செய்யும் என்று,(151) "உள்ளத்தில் பகைமையும் புறத்திலே நான் நண்பன் என்று கூறிக்கொண்டு என்னைத் தஞ்சம் பற்றுபவனையும் யான் விடமாட்டேன், காத்தே தீருவேன் அப்படிப் பட்டவன் குற்றமுள்ளவனாயினு மிருக்கட்டுமே; அவனைக் காப்பதனை நல்லோர்கள் ஏற்றுக் கொள்ளுவர்கள்" என்று இராமனாம் இறைவன் கூறினான் என்று தன்னுடைய பாண்டித்தியத்தாலே நடுநிலை குன்றிக் கோணல் பொருளைச் சொல்லிக் கொண்டு வேதம் புராணம் இதிகாசம் அறநூல்களெல்லாம் கரையழித்துச் செல்லும் காவிரிபோலே உள்ளன. ஆகையால், புறமதத்தவரும் வேதத்திற்கு முரண்படும் பொருளைச் சொல்லும் அகச் சமயவாதிகளும் தவறான பொருளைச் சொல்லி மக்களைக் குழப்புவர்களைப் போலே, அவற்றில் சொன்ன தொன்றாயிருக்க, வேறே சில பொருள்களைச் சொல்லிக் கொண்டு தம் இஷ்டபடி திரிவார்கள்;

அவர்கள் சொல்லும்படி என்? எனின், திருமந்திரத்தில் நமப் பத்தில் தன்னைத்தான் காத்துக் கொள்ளுதல் கூடா எனக் கூறப் பட்டதல்லவா? தீயவற்றைச் செய்தல் கூடாதென்று அவற்றைச் செய்யாமல் விட்டால், தன்னைத் தான் காத்துக் கொள்ளும் நிலை வந்துவிடும். ஆகையால், "தன்னுடைய காப்பில் தனக்கு உரிமை இல்லை" எனக்கூறுகிற திருமந்திரத்துக்கும் இதுவே பொருளென்றும், அதன் விரிவான த்வய சரமச்லோகங்களுக்கும் இதுவே கருத்தென்றும்; இல்லை யாகில் கீதையின் இறுதியில் இறுதி உபதேசஞ்செய்து, "இந்த சரம ச்லோக அர்த்தத்தை, அர்சுன! தவஞ் செய்யாதவனுக்குக் கூறாதே; என்னிடம் பக்தியில்லா தவனுக்குக் கூறாதே; குருவிற்குப் பணிவிடை செய்யாதவ னுக்குக் கூறாதே என்று இறைவன் கைப்பட்ட பொருளைக் கடலிலே வீழ்த்தினோம் என வயிறு பிடிக்குமோ?

189. மூலம்:

*அதுக்குக் கருத்தென்? என்றும், (153) 'சோத$_3$நாலக்ஷ ணார்த்தே$_2$ாத$_4$ர்ம:' (பூர்வமீம். 1-1-2) என்றும், தர்மம் விதிசோதிதமாயிருக்கும் (154) 'ஸூக்ஷ்ம: பரமது$_3$ர்ஜ்ஞேய: ஸதாம்த$_4$ர்ம: ப்லவங்க$_3$ம' (ராமா. கிஷ். காண்.) என்று ஸத்துக்களாசரிக்குமது பரமதுர்ஜ்ஞேய மான தர்ம ஸூக்ஷ்மமாயிருக்கும் அஹங்கார ராஹித்யத் யத்துக்கு ஹேதுவாகையாலே இந்த நிஷித்தாநுஷ்டாநம் தர்ம ஸூக்ஷ்ம மென்றும் வேத சாஸ்த்ரங்களில் (155) 'ப்ராஹ்மணோவை ஸர்வாதேவதா:' (வேதம்) என்று சொல்லாநிற்க, மஹர்ஷிகள் தர்ம ஸூக்ஷ்மத்தைப் பார்த்து அஹங்கார ராஹித்ய ஐந்மங்களென்று, (156) 'ஸ்த்ரியஸ் ஸாது$_4$: ஸூத்$_3$ரஸ் ஸாது$_4$:' (மஹா. பார) (157) 'ச்வ பசோபி மஹீ ப$_4$ால! விஷ்ணு பக்தோத்$_3$விஜாதி$_4$க:' (பாகவதம்) என்றும் சொன்னாப்போலே, இதுவும் அஹங்கார நிவ்ருத்திக்கு ஹேதுவாகையாலே அவச்யம் இது வேணும் என்று இன்னமும் அநேகமாகக் கேட்பார் செவி சுடும்படியான விபரீதார்த்தங்கள் சொல்லிக் கொண்டு, தாரபுத்ராதிகளையும் விஷய ப்ராவண்யத்தையும் அஹங் கார மமகாரங்களையும் விடமாட்டாதே, விட்டால் ஸ்வரக்ஷ ணே ஸ்வாந்வயம் வருமென்று;*

**விளக்கவுரை:**

அவற்றுக்குக் கருத்தென்? என்றும், (153) வேத ங்களிலும் தரும சாத்திரங்களிலும் விதிக்கப்பட்டதே தருமமாகும் என்று, அதாவது இதைச் செய்; அதைச் செய்யாதே என்றாற்போன்று ஒரு விதியானால் விதிக்கப்படும் பொருள், தர்மம் எனப்படுகின்றது என்று

தருமம் விதியை முன்னிட்டிருக்கும். (154) 'வாலியே! நுட்பமானதும் அறிவதற்கு மிகவும் அரிதானதுமான தருமத்தை நீ அறியமாட்டாய்' என்று கூறுகிறபடி, நல்லோர்கள் அநுட்டிக்கின்ற மிகவும் அறிவதற்கு அறிதாகிய தருமம் நுட்பமானதாயிருக்கும்; அது அகங்காரமில்லா மைக்குக் காரணமாகையாலே, இந்தத் தாழ்ந்த ஒழுக்கம் நுட்பமான தருமமென்றும்,

(155) அந்தணனே! எல்லா தேவதையுமாய் இருக்கின்றான் என்று வேதம் சொல்லா நிற்க, மகா முனிவர்கள் நுட்பமான தருமத்தைப் பார்த்து, அகங்கார மில்லாத பிறவிகள் என்று மற்றவருணத்தவரைக் காட்டிலும், (156) பெண்களும் நாலாம் வருணத்தவரும் ஒரு சில அறத்தைச் செய்து மிகச் சுலபமாக நற்கதி அடைகின்றனர் என்றும் (157) இப்புவிக்கு அரசனே! நாயின் மாமிசத்தை உண்டானாயினும், விஷ்ணுவிடம் பக்தியுடையவனானால் அவன் அந்தணனைக் காட்டிலும் உயர்ந்தவனாகிறான் என்று கூறுவதுபோல், இதுவும் அகங்கார மின்மைக்குக் காரணமாகையால் அவசியம் இது வேண்டும் என்று இன்னமும் பலவிதமாகக் கேட்பார் செவிசுடும் படியான ஸம்பிரதாயத்துக்கு மாறுபட்டக் கருத்துகளைக் கூறிக் கொண்டு மனைவி, மக்கள் உறவினர் ஆகியோரையும் புலனின்பங்களில் ஈடுபடுதலையும் அகங்கார மமகாரங் களையும் விட மாட்டாமல் விட்டால் தன்னைத் தான் காப்பதில் தொடர்பு வருமென்று முரண்பட்டுக் கூறுவர்கள்.

**190. மூலம்:**

*'வீடுமின் முற்றவும்...... நீர்நுமதென் றிவைவேர் முதல் மாய்த்து', 'பற்றிலையாய் அவன்முற்றிலடங்கே'*

என்றும், *'கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்' (158) 'க்ஷேத்ராணி மித்ராணி' (ஹஸ்தி. மாஹாத்மியம்) (159) 'பிதரம்மாதரம் தாராந் ........ ஸர்வதர்மாம்ஸ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஸ்ச ஸாக்ஷராஞ் லோக விக்ராந்த சரணௌ ஶரணம் தே(அ)வ்ரஜம் விபோ' (சரணாகதி கத்யம்)* என்று ஸகலேதர பரித்யாக பூர்வக ஸ்வீகாரம் **வித்யாநுஷ்டாநங்களாலே காட்டிக் கொடுக்கிற ஆழ்வார் ஆசார்யர்களுடைய ப்ராக்தந (பழமையான) சிஷ்டாசாரங்களெல்லாம் பஸ்மம் ஆக்கித் திரியா நின்றார்கள்;** அது பகவந்மாயா கார்யமென்றே கொள்ள வேணும். அதுண்டானால், ஸர்வேச்வரனும் *மயர்வறமதிநலமருளப்* பெற்ற ஆழ்வார்களும் ஆசார்யர்களும் சேதநோஜ்ஜீவநத்துக்காகக் கூப்பிட்டுக் கொண்டு க்ருஷி பண்ணுகைக்கு ஹேதுவில்லையிறே. இதுக்கு ப்ரமாணம் வேணுமோ? ஒருவனுக்கு ப்ரியதமையானவள், மற்றொருவனை அபேக்ஷித்தால், அவனுக்கிவளிடத்தில் ருசி பிறக்குமோ? அவன் ப்ரபதநத்துக்கும் *(அடைக்கலத்திற்கும்)* அநந்யம் அநந்யம் *(வேறு ஒருவனுக்கு ஆட்படாதிருக்கும் தன்மை)* என்று சொல்லா நிற்க, அந்ய ஸங்க மிவனுக்கிஷ்டமென்னில், அது விபரீத ஜ்ஞாந கார்யமென்று தோற்றாதோ?

**விளக்கவுரை:**

''வீடுமின் முற்றவும் நீர் நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து, பற்றிலையாய் அவன் முற்றிலடங்கே'' என்றும், 'கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்' (158) 'க்ஷேத்ராணி.....பிதரம் மாதரம்' என்று, பகவத் விஷயத்திற்குப் புறம்பான எல்லாவற்றையும் விடுவதற்கு முன்னாக பகவானை பற்றுவது முதலாயவற்றை விதிப்பதையும்

ஒழுகுவதையும் அநுட்டாநங்களாலே காட்டிக் கொடுக்கின்ற ஆழ்வாராசாரியர்களுடைய உயர்ந்த சிஷ்டாசாரங்களை யெல்லாம் நீறாக்கித் திரியா நின்றார்கள். அவை பகவானின் மாயச்செயல் என்றே உணர வேண்டும். கீழ்ச் சொல்லப்பட்ட தாழ்ந்த ஒழுக்கங்கள் உண்டா னால் யாவர்க்கும் இறைவனான எம்பெருமானும், மயர்வற மதி நலமருளப் பெற்ற ஆழ்வார்களும், ஆசாரியர்களும் மக்கள் உய் வடையும் பொருட்டு அவர்களை அழைத்து உபதேசம் பண்ணியும் நூல் வெளியிட்டும் இவ்விதம் முயல்வதற்கு வேறு காரணமில்லையல்லவா!

இதற்கொரு சான்று வேண்டுமோ? ஒருவனுக்கு மிகவும் விருப்பமாயிருப்பவள், பிறனொருவனை விரும்பினால், அவளை முன்பு விரும்பியவனுக்கு அவளிடத்தில் இச்சை வருமோ? அதுபோலே இறைவனாகிய அவன் என்னைச் சரண் அடைந்தவன் பிறவற்றை எல்லாம் விட்டு, எனக்கே யாயிருக்க வேண்டும் என்று கீதை முதலாம் சாத்திரத்தில் கூறியிருக்க, இறைவன் தவிர்த்த பிறவற்றில் இச்சீவன் ஈடுபாடு கொள்ளுதல் அவ்விறைவனுக்கு இஷ்டமாகும் என்னில், அது விபரீத ஞானத்தின் பயன் என்று தோன்றாதோ?

**191. மூலம்:**

*ஆகையாலே (160) 'விஷயேஷ்வ நிசம் ராகே₃ா மாநஸோமல உச்யதே-தேஷ்வேவ வீதராகே₃ாயஸ்ஸ நிர்மல உத₃ாஹ்ருத:' (?) என்று இதர விஷயாநுராகம் நசித்தாலொழிய நிர்மலனாக மாட்டான்; நிர்மலனா னாலொழிய போகார்ஹனனாக மாட்டான்; இந்த மநோநைர்மல்யம் ஸித்திக்கைக்கு மந்த்ரத்ரய அர்த்தா*

***நுஸந்தாநத்தாலும், ஆழ்வார்களுடைய அருளிச் செயல் அர்த்தாநுஸந்தாநத்தாலும் போது போக்கிக் கொண்டு, தானிருந்தவிடம் ஸம்ஸாரிகளறியாதபடி ஏகாந்த சீலனாய்; அர்த்தாநுஸந்தாந யோக்யதையில்லையானால், தன் நெஞ்சிலே தோற்றுகிற அர்த்தங்களை பரமார்த்தங்க ளென்று சொல்லுகிற அப்ரமாணிகரோடே கூடாதே அஹங்கார அர்த்தகாம உபகதர் அல்லாத பரம ஸத்வ நிஷ்டரான ஜ்ஞானாநுஷ்டாந ஸம்பந்நரோடே ஸஹ வஸித்துக் கொண்டு இருக்க வேணும்; இனி, அவனுடைய க்ஷமா குணமும், ஒரு கால் பூர்வாபராதங்களைப் பொறுக்கைக்கு சரண வரணம் பண்ணி, பின்பு, புத்தி பூர்வக நிஷித்த ப்ரவ்ருத்தி வாராமலிருந்தாலொழிய;***

**விளக்கவுரை:**

ஆகையால், (160) ''ஐம்புலன் விஷயங்களில் எப்போதும் விருப்பங் கொள்ளுதல் அது, மனத்திலுள்ள அழுக்கு என்று சொல்லப்படுகிறது; அந்த விஷயங்களில் எவன் ஒருவன் பற்றற்று இருக்கிறானோ, அவன் மாசற்றவன் என்று புகழப்படுகிறான்'' என்று கூறுகிறபடி, பிறவிஷயங் களில் விருப்பமாகிய ஆசை ஒழிந்தாலொழிய அவன் குற்றமற்றவனாக மாட்டான்; குற்றமற்ற தன்மையானாலன்றி பேரின்பத்திற்குத் தகுதி பெறமாட்டான்; இந்த மாசற்ற தன்மையை அடைய வேண்டுமானால், திருமந்திரம் த்வயம் சரம ச்லோகம் ஆகிய மும்மந்திரங்களின் பொருளை உணர்வதாலும், ஆழ்வார்களது அருளிச் செயலின் பொருள் உணர்த்தியாலும் அறிவு தெளியப் பெற்றுப் பொழுதைக் கழித்துக் கொண்டு, தன்னிருப்பிடம் இவ்வுலகிலுள்ள ஸம்சாரிகள் அறியாதவாறு தனியிடத்திலிருப்பவனாய்; முற்கூறிய மந்திரங்களிலும் ஆழ்வாரருளிச் செயல்களிலும்

கூறப்பட்ட பொருளை அறிவதற்குத் தகுதியில்லை யானால், தன் நெஞ்சிலே தோற்றுகிற அர்த்தங்கள் மேலான அர்த்தங்களென்று கூறுகிற சான்றோரல்லாதாரிடங் கூடாமல், அகங்காரம் பொருள், இன்பம் ஆகியவையில்லாத மிகவும் ஸாத்விக குணமுடைய ஞான அநுட்டாநத்தில் சிறந்தவ ரோடு கூடி வாழ வேண்டும்.

இனி, இறைவனது க்ஷமையெனும் பொறையுடைமை என்ற குணமும் ஒருகால் முன் செய்த குற்றங்களைப் பொறுப்பதற்கு இறைவனைச் சரணடைந்து பின்னர், நினைவறிந்தே தீயவற்றில் ஈடுபாடுகொள்ளுதல் வாராதி ருந்தால் ஒழிய;

192. மூலம்:

***(161) "தி$_4$க் க்ஷமாமீத்$_3$ருஶோ ஜநே" (?) என்று விட்டுப்போம், அவனை க்ருபாபரனாகையாலே நெடு நாள் அந்ய பரையான பார்யை லஜ்ஜா பயங்களின்றிக்கே பர்த்ரு ஸகாசத்திலே நின்று, என்னை அங்கீகரிக்க வேணும் என்று ப்ரார்த்தித்தாப்போலே, இவன் பண்ணுகிற சரணவரணம் அபராத கோடி கடிதமானாலும், அநாதி காலார்ஜித புத்திபூர்வக ப்ராதி கூல்யங்களையெல்லாம் க்ஷமையாலே பொறுத்தால் இனிச்செய்ய வொண்ணா தென்று பயப்பட்டிராதே, 'பயமற்றிருந்து செய்பவர்கள் தாம்பாவத்திறம்' (ஆர்த்தி. ப்ர.44) என்கிறபடியே, அடுத்தடுத்து அபராதங்களிலே அந்வயித்து, 'க்ஷேத்ராணி மித்ராணி' என்று தொடங்கி 'ப$_4$வந்தி ஸர்வே ப்ரதி கூலரூபா:' (?) என்று தாரபுத்ராதிகள் ப்ரதிகூலங்களென்று அறிந்து வைத்தும், 'பிதரம் மாதரம் தாராந்' என்று தொடங்கி, ப்ரதிகூலங்களெல்லாம் விட்டு உன்***

***திருவடிகளைப் பற்றுகிறேன் என்று பொய் சொல்லி துர்வாஸநையாலே பின்னையும் விடமாட்டாதே ப்ரத்யஹமும், அப்படித் தொழ, வந்த போதெல்லாம் ஶுஷ்க ப்ரிய வசநங்கள் சொல்லிக் கொண்டு;***

**விளக்கவுரை:**

(161) (தீயவைகள் இறைவன் பார்வையால்) இருந்தவிடம் தெரியாமல் ஓடிப்போம் என்கிறபடி, விட்டுப்போம். இறைவன் கருணையே வடிவெடுத்த வனாகையால் பலநாள் வேறு ஒருவனுக்குக் காமக்கிழத்தியாய்ப் போந்த ஒருவன் மனைவி, வெட்கமும் அச்சமில்லாது தனது முன்னைய கணவனிடம் வந்து என்னை நீர் அங்கீகரிக்க வேண்டும் என்று வேண்டுவது போலே இவன் இறைவ னிடம் செய்யும் சரணாகதி என்று ஸ்ரீவசனபூஷணத்தில் பிள்ளை உலகாரியன் அருளிச் செய்துள்ளார். இது குற்றத்தின் எல்லையிலே சேர்ந்ததானாலும், தொன்மை காலந்தொடங்கி மனிதனால் தெரிந்தே செய்த தீவினைகளையெல்லாம், இறைவன் தன்பொறையாலே பொறுத்தால்;

இனிமேல் தீயவற்றை நாம்செய்தல் கூடாதென்று அச்சங் கொண்டி ராமல் பயமற்றிருந்து செய்வார்கள்தாம் பாவத்திறம் என்ற ஸ்ரீமணவாள மாமுனிகள் கூற்றின்படி அடுத்தடுத்துக் குற்றங்கள் செய்வதில் தொடர்பு கொண்டு, நிலம், நண்பர், உறவினர்....... என்று தொடங்கி, இவையெல்லாம் எம்பெருமானே! உன்னைக் கூட வேண்டும் என்றிருக்கிற என் தன்மைக்கு விரோதமாயுள்ளன என்று மனைவி மக்கள் நண்பர் முதலானவர்கள் எனக்கு விரோத மானவர்கள் என்று தெரிந்தும், தந்தை தாய் மனைவி என்று தொடங்கி விரோதங்களை எல்லாம் விட்டு உன்

திருவடிகளைப் பற்றுகிறேன் எனவும், புராணங்களிலும் உடையவரும் கூறிய வற்றைத் தானும் மேலெழ சொல்லிக் கொண்டு கெட்ட வாசனை யாலே, பின்னையும் அவர்களை விடமாட்டாமல் ஒவ்வொரு முறையும் இறைவனைத் தொழுவதற்கு வரும் போதெல்லாம் நெஞ்சில் ஈரமற்ற இனிய வசனங்களைச் சொல்லிக் கொண்டு;

193. மூலம்:

*(162) "து₃:க்க₂ாவஹோஹமநிஶம் தவது₃ஷ்ட சேஷ்ட:" (யதிராஜவிம்சதி- 8) என்று, அக்ருத்ய கரணசீலனுமாய், துர்விஷய ப்ரவணனுமாய், சரணாகதனு மாய் பற்றவும் விடவும் யோக்யதையில்லாதபடி து:க்கப்ரதனானால், க்ஷமை ஜீவிக்க மாட்டாதிறே. இனி, வாத்ஸல்யமாவது, வத்ஸத்தின் பக்கல் தேநுவிருக்கு மிருப்பாகையாலே, அந்த தேநுவானது தன் வயிற்றிலே பிறக்குளவிலுள்ள மாலிந்யமெல்லாம் போக்யமாக ஸ்வீகரித்து ததேஹ தாரகமாக வர்த்திக்கும் காலத்திலே அத்யாதரம் பண்ணிக்கொண்டு திரியுமதொழிய தன் ஸ்தந்யத்தை விட்டு, புல்லும் நீருங்கொண்டு திரிகிற வளவில் சாணகச்சாற்றையுடம்பிலே பூசி வந்தால், அத்தைக் கொள்ள மாட்டாதிறே. அப்படியே, இந்த சேதநனன் தன்னையாச்ரயிக்க வருகிற தசையில், இவனிடத்தில் உண்டான தோஷங்களை போக்யமாகக் கொண்டு ததேகாநுபவபரனாய் ப்ரவர்த்திக்குங் காலத்தில், (163) 'யோக₃ க்ஷேமம் வஹாம்யஹம்' (கீதா. 9-22) என்று, இவன் பாரமெல்லாம் தானே யேறிட்டுக் கொண்டு திரியுமதொழிய, உத்தர காலத்தில் புத்தி பூர்வக ப்ரவ்ருத்திகளை போக்யமாகக் கொள்ளுதல், இவன் நிரந்தர விஷயப்ரவணனானால் இவன் பரத்தைத்*

*தானேறிட்டுக் கொள்ளுதல் செய்யானென் னுமர்த்தம் தோன்றாநின்றதிறே. ஆகையாலே எல்லாம்விட்டு பரமார்த்த னானாலொழிய, இவன் பக்கல் அவனுக்கு ருசி பிறவாது.*

**விளக்கவுரை:**

(162) 'எம்பெருமானாரே மிகவும் கெட்ட நடத்தை களையுடைய நான், கேட்டல் சுவைத்தல் பார்த்தல் ஆகிய ஐம்புலன் விஷயங்களில் ஊற்றமுடையனாய் பிரபந்நன் என்னும் பெயரை மாத்திரம் வைத்துக் கொண்டு எப்பொழுதும் தேவரீருடைய திருவுள்ளத்தைப் புண்படுத்திக் கொண்டு நல்லோர்கள் நடுவில் திரிகிறேன் இப்படி மூடனாயுள்ளேன்' என்றுமாமுனிகள் தம்மைத் தாழ்த்திக் கூறுகிறபடியே, செய்யத்தகாதவற்றைச் செய்பவனாய், தீய விஷயத்திலீடுபட்டவனாய், இறைவனைச் சரணடைந்த வனாய், நல்லவற்றைப் பற்றவும் தீயவற்றைவிடவும் தகுதியற்றவனானால், இறைவனின் பொறுமை குணம் வாழாதல்லவா?

இனி வாத்ஸல்யம்: குற்றத்தை நற்றமாகக் கொள்ளும் குணமாவது, கன்றினிடத்திலே அன்போடு கூடிய பசு விருக்கு மிருப்பாகையாலே, அப்பசுவானது தன் வயிற்றி லிருந்து பிறந்த கன்றினுடைய அழுக்கையெல்லாம் இன்ப மாகக் கொண்டு நாவால் நக்கி அதையே தாரகமாகக் கொண்டு வாழுங்காலத்திலே மிகவும் அக்கன்றை அன்பு செய்து கொண்டிருக்குமன்றி சற்று வளர்ந்து தன் முலைக் காம்பை விட்டு அகன்று அக்கன்றானது புல்லும் நீருங்கொண்டு திரிந்து சாணத்தையுடம்பிலே பூசி வந்தால், அதையும் நக்கித் தூய்மைப்படுத்த மாட்டாதல்லவா.

அதுபோலே, ஒரு மனிதன் இறைவனான தன்னைச் சரணடைய வருங்காலத்தில், அவனிடத்திலுள்ள குற்றங் களையெல்லாம் இன்பமாகக் கொண்டு அம்மனிதனிடத்தில் அன்பு செய்து கொண்டிருக்குங்காலத்தில்,

(163) ''என்னைத் தவிர வேறு பயனில் பற்றிலில்லா தவர்கள், என்னை எப்போதும் சேர்ந்திருக்கையாகிய பயனையும், அவர்களுக்கு நலனையும் அளிக்கிறேன்'' என்று கீதையில் எம்பெருமான் கூறியவாறே இவனது சுமைகளை எல்லாம் தானே ஏறிட்டுக் கொண்டு ''வேங்கடத்துறை வார்க்கு நமவென்னல் ஆங்கடமை அது சுமந்தார்கட்கு'' என்னும்படி இறைவன் சுமப்பானேயன்றி சரணாகதி செய்த பிற்பட்ட காலத்திலும் தெரிந்தே செய்யும் தீய ஒழுக்கங் களையும் இன்பமாகக் கொள்ளுதல், இம்மனிதன் நிரந்தரமாகக் கெட்ட விஷயங்களிலீடுபாடு கொண்டானானால் இவனது சுமையை இறைவனாம் தான் ஏறிட்டுக் கொள்ள மாட்டான் என்பது மேற்கூறியவற்றிலிருந்து கருத்துத் தோன்றா நின்றதிறே. ஆகையால் கெட்ட விஷயத்தை எல்லாம் விட்டு மிக்கஆர்த்தியென்னும் துடிப்புண்டானால் ஒழிய, இவனி டத்தில் இறைவனுக்கு இரக்கமென்னும் சுவை பிறவாது.

**194. மூலம்:**

***அவன் ரக்ஷிக்கைக்கு பரிகரம் ஆர்த்தியல்ல தில்லை; இது குறைவற இருவர் ஸ்வரூபமும் குறைவுறும் என்று ஆச்சான்பிள்ளை அருளிச் செய்தாரிறே. ஆக, இத்தால் ப்ராதிகூல்ய நிவ்ருத்தியும் ஆர்த்தியுமில்லாத வனுக்கு ஸதாசார்ய ஸம்பந்தமும், புருஷகாரமும், அபிமாநமும் கார்யகரமாகாது, க்ஷமாவாத்ஸல்யங்களும் ஜீவிக்க மாட்டாதே விடும் என்றதாயிற்று.***

*ஆகையாலே, ப்ரபந்நனுக்கு அக்ருத்ய கரணாதி சதுர்வித நிஷித்தாநுஷ்டாநமும், உபாயாந்தர ப்ரதிபத்தியும், ப்ரயோஜ நாந்தரங்களான தார புத்ராத்யைஹிக போகங்களும், ஸ்வர்காதி பரலோக ஸுகங்களும், ஸ்வாத்மாநுபவ ஸுகமான இவையெல்லாம் பரித்யஜித்து, "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன் மக்களும் மேலோத்தாய் தந்தையும் அவரேயினியாவாரே" (திருவாய்.5-1-8) என்றிருக்கவேணும். ப்ரபந்நனுக்கு உபாய அபாய ப்ரவ்ருத்திகளிரண்டும் த்யாஜ்யமென்கிற அர்த்தம் "தீர்ப்பாரை யாமினியில்" ஸ்வாபதேச அந்யாப தேசங்களாலே ஆழ்வார்தாமே யருளிச் செய்தாரிறே. ஸ்வாபதேசத்தில் ஸித்தோபாயம் சடக்கெனப் பலியாமையாலே, உபாயாந்தர ப்ரவ்ருத்தி களாலே தேவதாந்தரங் களை யாராதித்து, (164) 'ஸோமபா: பூதபாபா': (?) என்கிறபடியே;*

**விளக்கவுரை:**

இறைவன் இவனைக் காப்பதற்குக் கருவி ஆர்த்தி யல்லது இல்லை, இந்த ஆர்த்தி குறைவற்றிருந்தால் சீவன், பரமன் ஆகிய இருவர் இயல்பும் திறம்பெறும் என்று பெரியவாச்சான்பிள்ளை தமது மாணிக்கமாலையில் அருளிச் செய்தார். ஆக, இவ்வாற்றால் விரோத செயல்களினின்று மீட்சியும் ஆர்த்தியுமில்லாதவனுக்கு நல்லாசிரியர் ஸம்பந்தமும், பிராட்டியின் சிபாரிசின் செயலும், சீவ பரஸம்பந்த ஞானமும் பயனளிக்காது, இறைவனது பொறையும் அன்பும் உயிர் பெறாதே விடும் என்றவாறு. ஆகையாலே, பிரபந்நனுக்குச் செய்யக்கூடாதவற்றைச் செய்தல், செய்ய வேண்டியவற்றைச் செய்யாமல் விடுதல், பகவதாபசாரம், பாகவதபசாரம் முதலான நாலுவித தாழ்ந்த,

ஒழுக்கங்களும், வேறு உபாயத்தை மேற் கொள்ளவேண்டும் என்ற எண்ணமும், பிறபயன்களான மனைவி மக்கள் முதலாம் இம்மை இன்பங்களும், சுவர்க்கம் முதலாம் மேலுலகில் பெறும் மறுமை இன்பங்களும், ஆந்மாநுபவ இன்பமான இவையெல்லாம் முழுவதுமாக விட்டுவிட்டு, ''சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய் தந்தையும் அவரேயினி யாவாரே'' என்று கூறியது போலவே இருத்தல் வேண்டும்.

பிரபந்நனுக்கு உபாயத்திலும், அபாயம் என்று சொல்லக்கூடிய வேறு உபாயத்திலுமாகிய இரண்டிலும் முயற்சியற்றிருக்க வேண்டும் என்று அர்த்தம். தீர்ப்பாரையாமினி என்னும் திருவாய்மொழியில் உள்ளுறைப் பொருளும் வெளிப்பொருளும் ஆகிய இரண்டையும் ஸ்வாமி நம்மாழ்வார் தாமே அருளிச் செய்தார் அல்லவா? உள்ளுறைபொருளில் ஸித்தோபாயமான இறைவன் முகங்காட்டுதல் என்னும் பயன் பெறாமையாலே, வெளிப் பொருளில் வேறு உபாயத்தைச் செய்யுமுகத்தாலே பிற தெய்வங்களைப் பூசித்து, (164) ''இந்திரன் முதலானாரைக் குறித்துச் செய்யும் யாகத்தில் மீந்திருக்கும் சோமச் சாற்றைப் பருகுகின்றவர்களாய், சுவர்க்கத்தை எய்தத் தடையாயிருக்கும் பாவங்களிலிருந்து நீங்கப் பெற்றவர்கள்'' என்கிறபடி;

**195. மூலம்:**

***ஸோமபாநாதிகளாலே நிஷ்பாபராக வேணு மென்று ததநுஷ்டாந ப்ரவர்த்தகரான ஸாதநாந்தர நிஷ்டரைக் கூட்டிக்கொண்டு உபாயாநுஷ்டாநத்துக்கு உபக்ரமிக்கிறவளவில், ஸம்பந்த ஜ்ஞானம் மேலிட்டு வந்து அத்யவஸாயத் தினுடைய கலக்கம் போம்படி, 'நீ***

இப்படி ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்தியில் அந்வயிக்கப் போமோ? அநந்யார்ஹ ஶேஷத்வாத்யாகார ஷட்கத்தாலே பிராட்டியோடொத்த பரிசுத்த ஆத்ம ஸ்வரூபத்துக்கு, தேவதாந்தர ஸாதநாந்தரங்களும், தந்நிஷ்டருடைய ஸஹவாஸமும் ஸ்வரூப நாஶகமாமித்தனை ஒழிய ப்ராப்தி ஸாதநமாமோ?' என்று, ஸ்வரக்ஷண ப்ரவ்ருத்தி களைத் தவிர்க்குமதாயிருக்கையாலே, ப்ரபந்நனுக்கு உபாயாந்தர ப்ரவ்ருத்தியாகாதென்று சொல்லிற்றாயிற்று. அந்யாப தேஶத்தில் நாயகனை ப்ராபிக்கப் பெறாதே நாயகி மோஹங்கதையாய்க்கிடக்க, தாயார் கலங்கிப் பெண் பிள்ளை மோஹம் நிக்ருஷ்ட தேவதாராதநத்தாலும் க்ஷுத்ர தேவதைகளுக்குப் ப்ரியமான மத்யமாம்ஸாதி களாலும் தீர்க்க வேணுமென்று கட்டுவிச்சி சொன்ன படியே நிஷித்தாநுஷ்டாநத்துக்கு உபக்ரமிக்க, தோழி யானவள் கடுக வந்து, 'அய்யோ' 'அய்யோ' இவள் ப்ரக்ருதி அறிந்த நீங்கள், ஸ்வரூப நாசங்களான நிஷித்த ப்ரவ்ருத்திகளில் அந்வயிக்கக் கூடுமோ? இப்பெண் பிள்ளைக்கு க்ஷுத்ர தேவதா ப்ரஸங்கமுண்டோ?

விளக்கவுரை:

சோமரசம் முதலானவைகளாலே பாபம் நீங்க வேண்டும் என்று தாழ்ந்த தெய்வங்களை ஆராதிக்க முயலுகின்ற அளவில், சீவ பர ஸம்பந்த ஞானம் நினைவுக்கு வர, இறைவனே உபாயம் என்னும் மனவுறுதிக்குக் கலக்கம் போம்படி தோழிப் பேச்சாலே நீங்கள் இந்தவாறு தற்காப்பிற்கு முயலலாமோ? அநந்யார்ஹத்வம், அநந்ய சரணத்வம், அநந்ய போக்யத்வம், விச்லேஷத்தில் தரியாமை, ஸம்ச்லேஷத்தில் தரிக்கை, ததேகநிர்வாஹ் யத்வம் (பிறர்கடிமை படாமை, பிறவுபாயத்தைக் கொள்ளாமை,

பிறவற்றை விரும்பாமை, இறைவனது பிரிவில் வாழ இயலாமை, சேர்த்தியில் வாழ்தல், அவனிட்ட வழக்கா யிருத்தல்) என்ற ஆறு தன்மைகளையுடைய திருமகளோ டொத்த பரிசுத்த ஆந்ம இயல்புக்கு, பிற தெய்வங்களின் தொடர்பு-பிற உபாயங்களின் தொடர்புகளும்-அவற்றைச் செய்பவரோடு கூடி வாழ்தலும் ஆகிய இவை, ஆந்மாவின் அழிவிற்குக் காரணமாம் இத்தனையொழிய, இறைவனை அடைய சாதனமாமோ? என்று தற்காப்புக்கு முயலும் முயற்சியைத் தவிர்க்குமதாயிருக்கையாலே, பிரபந்நனுக்கு வேறு உபயாத்வத்தைச் செய்ய முயல்வது தகாதென்று சொல்லிற்றாயிற்று.

வேறு வாயால் (தோழிப்பேச்சால்) கூறும் பொருளில், நாயகனை அடையப் பெறாதே நாயகியானவள் மயங்கிக் கிடக்க, தாயார் கலங்கிப் பெண்பிள்ளையின் மயக்கம் தாழ்ந்த தெய்வத்தைப் பூசிப்பதாலும், சிறு தெய்வங்களுக்கு விருப்பமானகள்,புலால் முதலிவற்றைப் படைத்தல், வெறியாடுதல் ஆகியவைகளாலே குறை தீர்க்க வேண்டும் என்று கட்டுவிச்சி சொன்னபடியே தாழ்ந்த ஒழுக்கத்தைச் செய்ய ஆரம்பிக்க, தோழியானவள் விரைந்து வந்து ஐயோ! ஐயோ!இவள் உள்ளத்தை அறிந்த நீங்கள் ஆந்மாவையே அழிக்கக் கூடிய தாழ்ந்த தெய்வங்களின் தொடர்புண்டோ? இவளுக்கு-

**196. மூலம்:**

*(165) "த்$_3$ரவ்யம் நிந்த்$_3$யஸ"ராதி$_3$தை$_3$வதமதி$_4$ க்ஷ"த்$_3$ரஞ்ச ப$_3$ாஹ்யாக$_3$ மோ - த்$_3$ருஷ்டிர்தே$_3$வலகாச்ச தே$_3$ஸிக ஜநா தி$_4$க்தி$_4$க்தி$_4$ கே$_3$ஷாம் க்ரம:" (?) என்று* தன்னோட்டை ஸ்பர்சத்தாலே தன்னோடு ஒக்கப்

பண்ணுகிற அத்யந்த நிஷித்த த்ரவ்யங்களான மத்ய மாம்ஸாதி ஸ்பரிசமும், கட்டுவிச்சி கீழ்மகன் முதலான விபரீதார்த்த போதகருடைய ஸ்பரிசமும் பொறுக்குமோ? பகவந்நாம ஸங்கீர்த்தனமும் பரம வைதிகராய் ப்ரமாண பரதந்த்ரரான ஸ்ரீமஹாபாகவத பாதரேணு ஸ்பரிசமும் ஒழிய மற்றொன்று கூடுமோ? நம்முடைய வைஷ்ணவ குலமர்யாதைக்கு நிஷித்த ப்ரவ்ருத்திகள் சேருமோ? என்று 'தீர்ப்பாரை யாமினி' என்று தொடங்கி இவள் நோயை ஓர்த்துப் பார்த்தால், பார்த்தஸாரதியானவனுடைய ஆச்ரித பாரதந்த்ர்யத்தாலே மோஹங்கதையானாள், இது க்ஷுத்ர தேவதா ப்ரஸங்கமன்று, அவனுடைய சிஹ்நங்களைச் சொன்னால் இவள் மோஹந்தீரும், நீர் அதைச் செய்யாதே, விப்ரதிபந்நபாஷிணியான கட்டுவிச்சி சொல் கொண்டு செய்ய வொண்ணாது.

வைஷ்ணவத்வ ஹாநிகரங்களான நிஷித்த க்ருத்யங்களிலே அந்வயித்து மத்யமாம்ஸம் தூவிக் கொண்டு இவள் ஜீவிக்கைக்கு இதவே திவ்ய ஔஷதமா மென்று ராஜஸ தாமஸ தேவதா ப்ரியங்களான நிஷித்த அந்நங்களைக் களனிழைத்து தெய்வாவிஷ்ட யாய், இவள் ஆடுகிற கூத்தால் இவளைப் பெறப் போமோ? இவள் ரூபஸ்ரீநசித்துக் கொண்டு வாராநின்றது- இந்த நீசஸ்பர்சத்துக்கு ப்ராயசித்தமாக பாகவத ஸ்ரீபாத ரேணுவை இவள் மேல் வைக்கப் பாருங்கோள்.

**விளக்கவுரை:**

(165) வேதம் முதலான சாத்திரங்களால் இகழப் பட்ட உணவு, மாமிசம், சாராயம் ஆகியவற்றை மிகவும் தாழ்ந்த வர்களான சிவன் முதலாம் தேவர்களுக்குப் படைக்கப்

படுபவை, இதற்குச் சான்று நூல்களோ வேதத்துக்குப் புறம்பான சைவ ஆகமம் முதலியன. இதனைச் செய்யும் ஆட்களோ கூலிக்குப் பூசை செய்யுமவராய் ஆவேசம் வந்து ஆடும் பூசாரிகள் என்கிறபடி, இந்தத் தீய உணவு வகைகளைப் படைப்பவர்களான அப்பூசாரிகளைத் தொடு வதாலே தாமும் அவர்களைப் போல் தாமசர்களாய் ஆவர் என்னும்படி, மிக மிகத் தாழ்ந்த பொருள்களாம் கள்,புலால், சாராயம் முதலியவற்றைத் தீண்டுதலும், கட்டுவிச்சி வேலன் வெறியாடுபவன் முதலாம் வேத சாத்திரங்களுக்கு முரண்பட்ட பொருளைப் போதிப்பவர்களின் தொடர்பும் சுத்தசாத்விகையான இவளுக்குப் பொறுக்குமோ?.

பகவான் திருமாலின் நாமத்தை ஏத்துதலும், மேலான வேதாந்தங்களை ஓதுபவராய் அவ்வேதாந்தங்களின் சான்று நூல்களில் சொல்லப் பெற்றவற்றைப் பின்பற்றுபவரான திருவின் சம்பந்தத்தைப் பெற்ற ஸ்ரீவைஷ்ணவர்களான உத்தம பாகவதர்களின் திருப்பாதப்பொடியினைத் தீண்டுதல் ஒழிய, மற்றொன்றாம் அந்தத் தாழ்ந்த தேவதைகளின் தொடர்பு கூடுமோ? நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ குலமரியா தைக்கு அந்தத்தீய செயல்கள் சேருமோ? என்று, தீர்ப்பாரை யாமினி என்னும் திருவாய் மொழியிற் தொடங்கிக் கூறப்பட்ட தலைவியின் நோயினை கூர்ந்து பார்த்தால், பார்த்தசாரதியாம் கண்ணனுடைய அடியார்க்கு வசப்பட்டி ருத்தல் என்னும் மகா குணத்திலீடுபட்டு இவள் மயங்கி விழுந்தாள். இஃது தாழ்ந்த தெய்வத்தின் தொடர்பன்று. கண்ணனெம் பெருமானுடையதான அடையாளங்களைக் கூறினால் இவள் மயக்கந்தீரும்.

நீங்கள் அதனைச் செய்யாமல், முரண்பட்ட சொற்களைக் கூறும் கட்டுவிச்சியின் சொற்கொண்டு

எதையாயினும் செய்யக் கூடாது. வைஷ்ணவத்திற்கு ஆகாத தாழ்ந்ததான வேலன் வெறியாடல் கள் புலால் முதலிய வற்றைத் தூவும் செயலைக் கொண்டு இப்பெண்பிள்ளை உயிர்வாழ்தலுக்கு இதுவே சிறந்த மருந்தென்று, ராசத தாமச முதலாம் குணங்களையுடைய தெய்வங்களுக்குப் பிரியமான தாழ்ந்த கருஞ்சோறு, செஞ்சோறு ஆகியவற்றைக் களனி ழைத்து தெய்வாம்வேசம் போல் கட்டுவிச்சி ஆடும் கூத்தால் இத்தலைமகளாம் பெண்பிள்ளையைப் பெறமுடியுமோ? இவளது அழகான திவ்விய ஆத்ம சுவரூபம் அழிந்துக் கொண்டு இரா நின்றது. இந்த மிகத் தாழ்ந்த செயலுக்குக் கழுவாயாகப் பாகவதரடிப் பொடியை இவள் மேலிடப் பாருங்கோள்.

**197. மூலம்:**

*பிராட்டியோடொப்பாளான இப்பெண்பிள்ளை நோய்தீர்க்கைக்கு அருமருந்தென்று மத்யமாம்ஸங்களை யிட்டு சுணங்கை யெறிந்து நுந்தோள் குலைக்க நீர்படுகிறபாடோ? இது ஐயோ! அன்னைமீர்காள் வாய்புகு சோறான இவள் நசிக்கும்படி இந்தக் கழுதையினுடைய உதடாட்டம் கண்ட வித்தால் ப்ரயோஜனம் என்? அப்பிரமாணிகையான இவளுடைய விருத்த வாதங் களைக் கேட்டு வேதவிதக்ரேஸரராய் ப்ரமாண பரதந்த்ர ரான ஜ்ஞாநாதிகரை புருஷகாரமாகக் கொண்டு நித்யஸூரி நிர்வாஹகர்களை ஆச்ர யித்து, இவள் நோய் தீர்த்துக் கொள்ளாதே மத்யபாநம் பண்ணி மெய் மறந்து கீதம்பாடுகிற இவளோடே நீருங்கூடி கீழ்மகன் வாத்யத்தின் கீழ் கூத்தாடுகிற இப்பொய் நான்காண மாட்டேன். கண்ண பிரானுடைய கழலை வாழ்த்தினால் இவள் நோய் தீரும். ஸ்வரூப ப்ராப்தமுமாம் நான்*

**சொன்னபடி செய்திகோளாகில் இவள் ஜிவித்துக் தொழுதாடுமென்று நிஷித்தாநுஷ்டாநமும், தந்நிஷ்டரு டைய ஸஹவாஸமும் நிவர்த்திப்பிக்கையாலே, ப்ரபந்நனுக்கு அக்ருத்ய கரணாதி நிஷித்தாநுஷ்டாநமும் தந்நிஷ்டருடைய ஸஹவாஸமும் த்யாஜ்யமென்று சொல்லிற்றாயிற்று. ஆனால், அவனுக்குந் தனக்கு முண்டான சரீராத்மா பாவமும் அவயவாவய விரூபைக் யமும் அறிந்தவன் பண்ணுகிற வ்யாபாரங்க ளெல்லாம் அவனதேயாய், தத்கத புண்ய பாவங்களி வனுக்கு வாராதென்று ப்ரமாணஞ் சொல்லா நின்றதே யென்னில்? இதுக்கர்த்தம் கீழ்ச் சொன்னோமே.**

**விளக்கவுரை:**

பெரிய பிராட்டியாரான திருமகளோடொத்தவளான இப்பெண்பிள்ளையின் (பராங்குச நாயகியின்) நோயைத் தீர்ப்பதற்கு அரிய மருந்தென்று, கள், மாமிசங்களை யிட்டுச் சுணங்கையாகிய கைகொட்டுதலைச் செய்து உங்கள் தோள்கள் குலையும்படி நீர்படுகிற பாடுதான் என்னோவிது? ஐயோ அன்னையர் காள். வாய்புகும் சோறான இவளை யழியும் படியும், வாயிலில் காய்ந்து கிடக்கும் நெற்கள் தீர்ந்து போகின்றனவே என்று நோக்காமல் அவற்றையுண்ணும் கழுதையினுடைய உதட்டசைவைக் கண்டு களித்தலால் வரும் பயனென்? பிரமாணமான உண்மை நூல்களுக்கு எதிரான காரியங்களைச் செய்யச் சொல்லும் இவளுடைய முரண்பட்ட பேச்சைக் கேட்டு, வேத பிரமாணத்தைக் கொள்ளுபவரில் சிறந்த தலைவராய் அதற்கு வசப்பட்ட வரான ஞானமிகுந்தவரை புருஷகாரமாகக் கொண்டு, நித்திய சூரிகளுக்குத் தலைவனான இறைவனைச் சரணடைந்து, இவளது நோயைத் தீர்த்துக் கொள்ளாமல், கள் சாராயம்

இவற்றைக் குடித்து மெய் மறந்து பாட்டுப் பாடுகின்ற இக்கட்டுவிச்சியோடு நீங்கள் சேர்ந்து ஒரு கீழ்மகன் இசைக்கும் முழவின் கீழ் கூத்தாடுகின்ற இப்பொய் ஆசாரத்தை யான் காணமாட்டேன். கண்ணபிரானது திருவடியை ஏத்தினால் இவள் நோய் தீரும். ஆன்மவியல் புக்குந் தகுதியாம் யான் கூறியவாறே செய்தீர்களானால். அதைவிட்டு இவள் உயிர் வாழ்வாள் என்று கொண்டு தாழ்ந்தவொழுக்கம் அவற்றைச் செய்பவரோடு கூடி வாழ்தலைத் தவிர்ப்பிக்கையாலே, பிரபந்நனுக்குச் செய்யத் தகாதனவற்றைச் செய்கின்ற தாழ்ந்த ஒழுக்கமும், அவற்றைச் செய்பவரோடு கூடியிருத்தலும் விடவேண்டியவை என்று கூறப்பட்டதாயிற்று.

ஆனால் இறைவனுக்கும் சீவனுக்குக்குமுண்டான சரீராத்ம பாவமும் (சரீர ஆத்ம பாவம்-இறைவனுக்குச் சீவன் சரீரமாயிருத்தல்; சரீரம்-உடல்) இறைவனுக்குச் சீவன் கை, கால் முதலிய உறுப்பாயிருத்தலால் இருவரும் ஒன்றெனலா யிருக்கையும் இதை அறிந்தவன், தான் செய்கிற செயல்களையெல்லாம் இறைவனதேயாகி, அதனால் சீவனால் செய்யப் பெற்ற நல்வினை தீவினைகள் இறைவனுக்கு வாராதென்று சாத்திரங்களாகிய பிரமாணங்கள் கூறிற்றே எனின், இவற்றுக்குப் பொருள் முன்னமே சொன்னோம்; மேலும் சொல்வோம்,

**198. மூலம்:**

*ஸதா பரகுணாவிஷ்டனாய் மநோபுத்திகளிரண்டும் அவனிடத்தில் பர்யவஸித்து மெய் மறந்து புத்திபூர்வ ப்ரவ்ருத்திகளொன்றுமின்றிக்கே, (166) 'யஸ்ய நாஹங் க்ருதோ ப₄ாவ': (கீதா.18-17) என்கிபடியே, ப்ரவ்ருத்தித் தானாகில், அவனுக்கு வாராது. இந்த ஜ்ஞாந மாத்ரம்*

வேதாந்த ஜ்ஞாந வாஸநை உடையார் எல்லாருக்கு முண்டு; தததநுரூபாநுஷ்டாநமுண்டானாலிறே அநுபவிப் பது. இந்த ஜ்ஞாநம் ராவணனுக்குண்டா யிருக்கச் செய்தேயும் பரஹிம்ஸா பரதார பரிக்ரஹ பரத்ரவ்யா பஹார அபேயபாந அபக்ஷ்ய பக்ஷணாதிகள் மாறாதே நடக்கும்படியான அநுஷ்டாநம் இதிஹாஸாதிகளிலே காணாநின்றோமிறே. *(167)* *'ஆதே$_4$யத்வ விதே$_4$யத்வ ஶேஷத்வ ரஸதாஶ்ரயா:ஶ்ரீபதேர்முக்$_2$யதநவ: பரமைகாந்தி நஸ்ஸ்ம்ருதா:' (?)* என்று, *ததே$_3$கதாரகமாயிருக்கிற சரீரலக்ஷணங்களுண்டான பரமைகாந்திகளையிறே அவனுக்கு சரீர பூ$_4$தராகச் சொல்லுவது. (168) 'ராக$_3$ாதி தூ$_3$ஷிதே சித்தே நாஸ்பதீ$_3$ மது$_4$ஸூத$_3$ந: ந ப$_3$த்$_4$நாதி ரதிம் ஹம்ஸ: கத$_3$ாசித் கர்த$_3$ மாம்ப$_4$ஸி' (?)* என்று ராகாதி தூஷித சித்தன் சரீரபூதனாக மாட்டானே, சரீரபூதனான பரமை காந்தி *(169)* 'பே$_4$ாக$_3$ா: புரந்த$_3$ராதீ$_3$நாம் தேஸர்வே நிரயோபமா:' (ப்ரஹ்.புரா.) என்று இஹலோகாத் விலக்ஷ ணமான ஸுவர்காதி போகங்களும், ஸ்வாத்மாநுபவ ஸுகமும் நரகோபமாக நினைத்திருக்குமதொழிய;

**விளக்கவுரை:**

எப்பொழுதும் இறைவனது குணங்களிலீடு பட்டு மனமும் அறிவும் ஆகிய விரண்டையும் இறைவனிடத் திலேயே செலுத்தித் தன்னுடலை மறந்து நினைவறிந்து செய்யும் செய்கைகள் ஒன்றுமின்றிக்கே, (166) 'யாவனுடைய நினைவு யானே செய்கிறேன் என்னும் அபிமாநம் விளையா மலிருக்கின்றதோ' என்று கீதையில் கூறுகிறபடி அபிமான மற்று செயல்பட்டானாகில் மிகத் தாழ்ந்த விஷயத்திலீடுபாடு அவனுக்கு வாராது. இந்த ஞானமாத்திரம் வேதாந்த மறிந்தவர் எல்லார்க்கு முண்டு;

அதற்கேற்ற ஞானமுண்டானாலல்லவோ இறைவனை அநுபவிப்பது. இந்த ஞானம் இராவணனுக்கு உண்டாயிருக்கச் செய்தேயும் பிறரை நலிதல், பிறர்மனை நயத்தல், பிறர் பொருளைக் கவர்தல், அருந்தாதவற்றை அருந்துதல், உண்ணத்தகாதவற்றை உண்ணுதல், நுகரத்தகாதவற்றை நுகர்தல் இவற்றை எப்போதும் செய்து திரிந்த இராவணனது ஒழுக்கத்தினை, இதிகாசம் புராணம் ஆகியவற்றில் காணலாம். (167) இறைவனால் தாங்கப்படுதல், அவனிட்ட வழக்காயிருத்தல், அவனுக்கே அடிமைத்திறம் பூண்டவர்களாய்த் தொண்டு செய்பவர்களாயிருத்தல் ஆகியவற்றில் சுவையுடையவர்களாயிருப்பவர்கள் திருமகள் கேள்வனுக்கு இன்றி யமையாத சரீரமாயிருக்கிறார்கள்; அவர்களே பரமைகாந்திகள் என்றழைக்கப்படுகின்றனர் என்று பிரமாண நூற்களில் கூறுகிறபடி இறைவனுக்கே அடிமையாய் அவனிட்ட வழக்காய் அவனாலேயே தாங்கப்படு பொருளாளாயிருப்பது என்னும் சரீர இலக்கணத் தையுடைய பரமைகாந்திகளையிறே அவ்விறைவனுக்குச் சரீரமாகச் சொல்லுவது.

(168)''புலன் விஷயங்களில் ஈடுபாடு,பற்று முதலானவற்றால் மனம் கெட்டிருக்கும்போது மது என்னும் அசுரனைக் கொன்றழித்த இறைவனாம் மதுசூதநனை, அம் மனத்தில் ஒருபோதும் கோயில் கொள்ள மாட்டான்; அன்னப்பறவை யானது சேற்றுநீரில் கால் வைக்காதன்றோ'' என்று கூறுகிறபடியே பொருள் இன்பம் முதலான கெட்ட விஷயத்தில் மனம்வைத்தவன் இறைவனுக்குச் சரீரமாக மாட்டான்; இறைவனுக்குச் சரீரமா யிருப்பவனான பரமைகாந்தியும், (169) ''இறைவனது பரமபதத்தை எய்தவிரும்பும் சிறந்த அடியார்களுக்கு இந்திரன் முதலானாருடைய

போகங்கள் அனைத்தும் நரகத்தையொப்பவை'' என்று சான்றுகள் கூறுகிறபடி இம்மையாம் இவ்வுலகைக் காட்டிலும் சிறப்பான பிரமன் சிவன் இந்திரன் முதலியோருடைய போகங்களும், ஆத்மாநுபவ சுகமும் நரகத்திற் கொப்பாக நினைத்திருப்பன்;

**199. மூலம்:**

*(170)'அமேத்₄ய பூர்ணம் க்ரிமிஜால ஸங்குலம் ஸ்வப₄ாவது₃ர்க₃ந்த₄ம் அஸௌ சமத்₄ருவம், கலேப₃ரம், மூத்ர புரீஷப₄ாஜநம் ரமந்திமூட₄ா நரமந்தி பண்டி₃தா:' (?)* என்று, மூடரைப் போலே ஹேய துர்விஷய ப்ரவணனாய், ஸம்ஸாரிகளும் த்யாஜ்யமாக நினைக்கிற நிஷித்த வ்யாபாரத்தைப் பண்ணானிறே. *(171) 'அக்ருத்யம் வைஷ்ணவ: பாபபு₃த்₃த்₄யா சாஸ்த்ர விரோத₄த: ஏகாந்தி பரமைகாந்தீ ருச்யப₄ாவாச்ச ஸந்த்யஜேத்' (?)* என்று, அக்ருத்ய கரணாதி நிஷித்தாநுஷ்டாநம் ப்ராப்ய ப்ரதிபந்தகம் என்கிற பயத்தாலே வைஷ்ணவனும், சாஸ்த்ர விரோதமாகையாலே பகவதாஜ்ஞாதிக்ரமணம் வரும் என்கிற பயத்தாலே ஏகாங்கியும், ஹேயமாய்த் தோற்றி ருச்யபாவத்தாலே பரமைகாந்தியும் த்யஜிப்ப ரென்று சொல்லா நின்றதிறே. இருவரும் ருசி செல்லா நிற்கச் செய்தே விரோத பயத்தாலே த்யஜிப்பர்கள். சரமாதிகாரிக்கு ப்ராப்யருசி கண்ணழிவறவுண்டா யிருக்கையாலே, பீத்யா (அச்சத்தாலே) விடுகையன்றிக்கே ருச்ய பாவத்தாலே விடும்.

இப்படியான அதிகாரியினுடைய க்ருத்யங் களிறே, அவன் தன்னதாக அபிமாநித்திருக்கிறது. இது பொருளல்லவாகில், ஸகல சேதநா சேதநங்களும்

***அவனுக்கு சரீரமேயாய், இவர்கள் எல்லாருடைய க்ருத்யங்களும் அவனதேயாய் விடும். அவை போல ன்றிக்கே ஜ்ஞானமுண்டிறே இவர்களுக்கென்னில்? அந்த பக்ஷத்திலே வேதாந்த ஜ்ஞாநமுடைய ராவணாதி களுடைய ஆஸுரக்ருத்யங்களும் அவனதேயாய் விடும்.***

**விளக்கவுரை:**

(170) ''மலங்களாலும் புழுக்களாலும் நிரப்பப் பட்டதும் இயல்பாகவே தீண்டத்தகாததும், அருவருப்பை யுடைய தீயநாற்றம் கொண்டதும், மூத்திரம் உதிரம் சீழ் ஆகியவற்றாலான இவ்வுடலில் மூடர்கள் இன்பம் காண்கின்றனர்; அறிவு உடையவர்களோ அதை வெறுக் கின்றனர்'' என்று பிரமாண நூல்கள் கூறுகின்றவாறு, அறிவிலிகளைப் போன்று தாழ்ந்ததும் நீசத்தன்மை யுடையதுமான மகளிர் உடலில் ஈடுபாடு கொண்டவனாய், இவ்வுலகோரும் அவ்வீடுபாட்டை விடவேண்டும் என நினைக்கின்ற கெட்ட செயல்களை அறிவுடையோன் செய்ய மாட்டானல்லவா.

(171) ''வைஷ்ணவன் பாபம் மோக்ஷத் திற்குத் தடையை உண்டாக்கும் என்ற எண்ணத்தாலே செய்யத்தகாத செயலைச் செய்ய மாட்டான்; ஏகாந்தி என்பவன் சாத்திரத்துக்கு முரணாகும் என்று தீய காரியத்தைச் செய்யமாட்டான்; பரமைகாந்தி என்பவன் அத்தீய காரியத்தின் விளைவையறிந்ததாலும் அதில் நாட்டமின்மை யாலும் அத்தகாத காரியத்தைச் செய்வதைத் தவிர்ப்பான்'' எனக் கூறுகிறபடி, மகளிர் இன்பத்திலீடுபாடு முதலான தீயஒழுக்கம் வீடுபேற்றிற்குத் தடை ஏற்படும் என்னும் அச்சத்தால் வைஷ்ணவனும், நற்கதியை உபதேசிக்கும்

சாத்திரங்களுக்கு விரோதமாகையாலும் இறைவனின் ஆணையை மீறுதல் என்னும் அச்சத்தால் ஏகாந்தியும், அத்தீய ஒழுக்கம் தாழ்ந்தது எனவும் அவற்றில் தனக்குச் சுவையில்லை என்பதாலும் பரமகாந்தி முதலானோர் அவற்றைத் துறப்பார்கள் என்று சாத்திரங் கூறா நின்றது. வைஷ்ணவனும் ஏகாந்தியாகிய இருவரும் அவற்றில் சுவையிருக்கச் செய்தேயும் தம் இயல்பிற்கு விரோதமாம் என்னும் அச்சத்தாலே செய்யாமல் விடுவர்; இறுதியில் சொன்ன பரமைகாந்திக்கு வீடுபேற்றில் தனக்கு மிகவும் அளவிறந்த நம்பிக்கையுள்ளதாகையாலே, அச்சத்தாலே அவற்றை விடுவதன்றிக்கே சுவையின்மை யாலே அத்தீய ஒழுக்கத்தை விட்டு விடுவான்.

இப்படியான சிறப்புடைய அதிகாரிகளுடைய செயல்களை இறைவன் தன்னுடையதாக நினைத்திருப்பது. யாம் கூறும் இவை பொருளல்லவாகில், இவ்வுலகிலுள்ள பொதுவான எல்லா மக்களும் அவ்விறைவனுக்கு சரீரமாய் இவர்கள் செய்கின்ற எல்லாச் செயல் களும் இறைவன் செயலாகக் கூற வேண்டிவரும். ஆனால் சாமானிய மக்களைக் காட்டிலும் சரணாகதி செய்த இவர்களுக்கு ஞானமுண்டு அல்லவா? எனின், அப்படிச் சொல்லப் போனால் வேதாந்த ஞானமுடைய இராவணன் போல்வார் செய்யும் அசுரத்தனமான செயல்களும் இறைவன தாகவேயாகிவிடும்.

**200. மூலம்:**

***ஆகையாலே ஸம்பந்தம் மாத்ரம் போராது; ஜ்ஞாநமும் போராது; ததநுரூபாநுஷ்டாநம் உண்டாக வேணும். சரம ச்லோகத்தில் ஸர்வதர்ம பரித்யாக பூர்வக ததேக உபயாதயா அத்யவஸாயமே அதிகாரிக்ருத்யம்.***

*விரோதி நிவர்த்தகத்வம் உபாய பூதனுடைய க்ருத்யமென்று சொல்லாநிற்க, அத்யவஸாய முண்டா னாலும் ஆர்த்தியில்லாதபோது ப்ராபிக்கைக்கு யோக்ய னன்றென்று சொல்லுவானென்னென்னில் உபா யாதிகாரத்துக்கு அத்யவஸாயமே போரும். உபேயாதி காரத்துக்கு ஐஹிகாமுஷ்மிகாதி ஸகல போக விரக்தியும் வேணும். 'உபாயாந் தரங்களைவிட்டு சரமோபாயத்தைப் பற்றினாப்போலே உபேயாந்தரங்களான ஐச்வர்ய கைவல்யங்களைவிட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது'. (முமுக்ஷுப்படி-த்வயப்ரகரணம்-162) என்று உபேய ப்ரதிபாதகமான உத்தரவாக்யத்துக்கு அர்த்தம் சொல்லப்பட்டதிறே.*

*த்வய பூர்வோத்தர வாக்யங்களில் சொல்லுகிற உபாயாதிகாரங்களுண் டானாலிறே உத்தேச்யனாவது. இவ்வுபாயம் ப்ராப்யாந் தரங்களுக்கும் ஒக்குமாகையாலே; அத்யவஸாயம் ப்ரயோஜநாந்தரபரருக்கும் உண்டே; அத்ய வஸாய மாத்ரத்தாலே பகவத் போகத்துக்கு அர்ஹனாக மாட்டான். 'கடையறப் பாசங்கள் விட்டபின்னையன்றி அவன் அவை காண் கொடானே' (திருவாய்- 8-2-8) என்று, ஸகலேதர பாஹ்யவிஷய பரித்யாகாநந்ரத்தில் ஒழிய முக்தி பூமியை காணவுங் கொடானென்று ஆழ்வார் தாமே அருளிச் செய்தாரிறே.*

**விளக்கவுரை:**

ஆகையால், சீவனுக்கும் இறைவனுக்கும் சொல்லப் பட்ட சம்பந்தமாத்திரம் போராது, ஞானமும் போராது. அதற்கேற்ற ஒழுக்கமுண்டாக வேண்டும். சரம ச்லோகத்தில் கூறப்பெற்ற எல்லா தருமங்களையும் விடுதல் முன்னாக

இறைவனே உபாயம் என்னும் உறுதி மனப்பான்மையே அதிகாரியானவன் செய்யத் தகுந்தது, விரோதிகளைப் போக்குதல் உபாயமாய் நிற்கும் இறைவனது செயல் என்று கூறா நிற்க, (முன்சொன்ன) இறைவனே உபாயம் என்னும் உறுதியுண்டானாலும் ஆர்த்தியில்லையென்றால் வீடு பேற்றையடைவதற்குத் தகுதியில்லை எனக்கூறுவது, என்னையோ? எனின், உபாயாதிகாரத்திற்கு மன உறுதியே போரும்; மோட்ச பயன் கொள்ளும் அதிகாரத்திற்கு, இம்மைப் பயன் மறுமையாம் சுவர்க்கம் ஆந்மாநுபவம் ஆகிய இன்பத்தில் வெறுப்பு இவனுக்குண்டாக வேண்டும். பிற சாதனங்களை விடுத்து எல்லையான உபாயத்தைப் பற்றினாற்போலே, பிற பயன்களான செல்வம், கைவல்யம் ஆகியனவற்றை விடுத்து இதற்கு மேல் சிறப்பானது ஒன்று இல்லை என்னும் எல்லையான பேரின்பத்தைப் பிரார்த்திக்கிறது எனப் பிள்ளை உலகாசிரியர் கூறியவாறு, பேரின்பப் பயனை விளக்குகின்ற உத்தர வாக்கியத்துப் பொருள் மாமுனிகளால் ஸ்ரீவசனபூடணத்திற் கூறப்பட்ட தல்லவா? த்வயத்தின்முன் பின் வாக்கியங்களிற் சொல்லப்படுகிற உபாயாதிகாரங்கள் உண்டாகிலன்றோ பிரபந்நனாக உரியனாவது.

பிரபத்தியாம் உபாயம் பிற பயன்களையும் அடைவிக்கு மாகையாலே, மனவுறுதி என்பது பிறபயன்களை அடைய விரும்பு வார்க்கும் உண்டே, எனவே 'அவனே உபாயம்' என்ற மனவுறுதி மட்டும் உள்ளவன் பகவானை அனுபவிப்பதற்குத் தகுதியாக மாட்டான்; 'கடை யறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண் கொடானே' என்று புறம்புண்டான விஷயங்களில் பற்றுக்களை அடைய வாசனை யோடு விட்டாலன்றி முக்தி

உலகமாம் பரமபதத்தை இறைவன் அளிக்க மாட்டான் என நம்மாழ்வாரும் அருளினாரன்றோ.

**201. மூலம்:**

*ஆகையாலே, அங்குச் சொல்லுகிறது உபாயாதி கார மாத்ரம் என்று கொள்ள வேணும். அந்த ச்லோகத்தில் இது சொல்லா தொழிகிறது என்னென்னில்? இந்த ச்லோகத்துக்கு உபாயத்துக்கு அபேக்ஷிதமான த்யாக ஸ்வீகாரங்கள் பூர்வார்த்தத்தாலே சொல்லி உத்தரார்த் தத்தாலே அதுக்கு பலமாக ப்ராப்தி ப்ரதிபந்தக ஸகல பாப நிவ்ருத்தி மாத்ரஞ் சொல்லி ப்ராப்தியைச் சொல்லா தொழிந்தாலும், கீழ் ச்லோகத்தில் (172) 'மாமே வைஷ்யஸி' (கீதா.18.65) என்று சொல்லுமது இதுக்கு அர்த்தமாகக் கொள்ளுமாபோலே பலம் சொல்லுகிற இந்த ச்லோகத்தில், பூர்வார்த்தத்தாலே சொல்லுகிற உபாயாதிகாரத்தைக் கொள்ள வேணும்.*

*(173) 'மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்யாஜீமாம் நமஸ்குரு மாமே வைஷ்யஸி-ஸத்யந்தே ப்ரதிஜாநே ப்ரியோஸிமே' (கீதா. 18.65) என்று மதேக மநஸ்கனாய் மதந்யப்ரீதிவியுக்தனாய் மத்கைங்கர்ய நிரதனாய் மதேகசரணனாயிருந்தாயாகில் உன்னுடைய பாபநிவ்ருத் யர்த்தமாக நீ யத்நம் பண்ண வேண்டா என்னைப் பெறுகிறாய் என்று ஸத்யமாக வார்த்தை அருளிச் செய்து, இச்லோகத்தில் சொன்ன ததேக சரணத்வ ரூப உபாயாதி காரத்துக்கு அபேக்ஷிதமாயிருந்ததாய், இதில், சொல்லாத உபாயாந்தர ஸவாஸநாத்யாகத்தை (174) 'ஸர்வ த$_4$ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ' (கீதா.18.66) என்று விதித்து, அதில் உத்தரார்த்தத்தில், ''மாமேவைஷ்யஸி''*

*என்று சொன்ன பலத்துக்கு அபேக்ஷி தமாய், இதில் சொல்லாத ப்ராப்திப்ரதிபந்தக நிவ்ருத்தியை,*

**விளக்கவுரை:**

ஆகையால், அங்கு சொன்ன ஸர்வ தருமங்களையும் விடுவதாகிய உபாயாதிகார மாத்திரங் கொள்ளவேண்டும். ஆனால், அந்தச்லோகத்தில் பகவதநுபவமாகிய பேரின் பத்தைக் கூறா தொழிந்தது என்? எனின், இந்த சரமச்லோகத் தில் அதிகாரிக்கு வேண்டியதான எல்லாத் தருமங்களையும் விடுதலும் எம்பெருமான் ஒருவனையே உபாயமாகப் பற்றுதலுமாகிய தன்மையை முற்பாதியாலே சொல்லி, பின்வாக்கியமாம் உத்தரார்த்தத்தாலே உபாயத்தைப் பற்றியதற்குப் பயனாக இறைவனை அடைதற்குத் தடை களாம் பாபத்தைப் போக்குதல் மாத்திரஞ் சொல்லி அடையும் பயனைச் சொல்லா தொழிந்தாலும்;

கீழே பதினெட்டாம் அத்தியாயம் அறுபத்தைந்தாம் சுலோகத்தில், (172) 'என்னையே பயனாக அடைவாய்' என்று எம்பெருமான் சொன்னதை இதற்குப் பொருளாகக் கொள்ளுமாறு போலே, பயனையுங் கூறுகின்ற இந்த சரமச் லோகத்தில் முன்பாதியாலே உபாயாதிகாரத்தைக் கொள்ள வேண்டும். (173) 'என்னிடத்தில் இடையறாத மனத்தைச் செலுத்தியவனாக ஆவாய். என்னிடம் அன்புடையவனாக ஆவாய்; என்னை ஆராதிப்பவனாக ஆவாய்; என்னை வணங்குவாய்; என்னையே மேலான கதியாகவுடையவ னாவாய்; இவ்வண்ணமாக மனத்தைப் பயிற்சி செய்வதன் வழி என்னையே அடைவாய்-இது சத்தியம்; ஆணை யிடுகிறேன் எனக்கு மிகவும் இனியனல்லவா என்று, என்னிடத்தில் மனத்தை வைத்தவனாய், என்னை

ஆராதிப்பவனாய், என்னையே வணங்கியிருந்தாயாகில், உனது பாபத்தைப் போக்குதற் பொருட்டு நீ முயல வேண்டாம், என்னை அடைகிறாய்' என்று எம்பெருமான் சத்தியமான வார்த்தை அருளிச் செய்து, இந்த சரமச்லோகத்திற்கு கூறப்பெற்ற அவனே உபாயம் என்னும் உபாயாதிகாரத்துக்கு வேண்டியிருந்ததாய் அந்த அறுபத்தைந்தாம் ச்லோகத்தில் கூறாத வேறு உபாயத்தை முற்றும் விடுதலாகிய தியாகத்தை, (174) 'மோக்ஷ உபாயமாகிய எல்லாத் தருமங்களையும் அடைவே விட்டு என் ஒருவனையே உபாயமாகக் கொள்வாய்' எனவிதித்து, 'என்னையே அடைவாய்' என்று முற்கூறப்பட்ட சுலோகத்தின் பொருளான பயனையே இந்தப் பிற்பாதி சுலோகத்துக்குப் பொருளாகக் கொள்ள வேண்டியதாய் அதில் வெளிப்படையாகக் கூறாத இறைவனை அடைவதற்குண்டாம் தடை நீக்குதலை,

**202. மூலம்:**

***(175) 'அஹம்த்வா ஸர்வபாபே$_4$ப்யோ மோக்ஷயிஷ்யாமி' (கீதா.18-66) என்று அருளிச் செய்கையாலே, இவ்விரண்டு ச்லோக ங்களும் பரஸ்பர அபேக்ஷிதங்களாய் ஏகார்த்தமாயிருக்கும். (176) யதே$_2$ச்ச$_2$ஸி தத$_2$ாகுரு (கீதா.18.63) என்னஅநந்தரம், காயக்லேசங்களுமாய் ஸ்வரூப விருத்தங்களுமான கர்மயோகாத் யுபாயங்களுக்கு நான் அசக்தனென்று சோகித்த பின்பு, (177) 'ஸர்வகு$_3$ஹ்ய தமம்பூ$_4$ய: ச்ருணுமே பரமம்வச:' (கீதா.18.64) என்று உபதேசித்தவையாகையாலே, இவ்விரண்டு ச்லோகங்களும், விவர்ய விவரண ரூபங்களாய் ஏகார்த்தங்களாயிருக்கும். ஆகையாலே கீழ் ச்லோகத்தில் பலமே இதுக்கு பலமாகையாலே, அதில்***

**சொன்ன உபேயாதி காரமும் இதில் சொல்லிற்றாகக் கொள்ளவேணும். இதில் 'மத்பக்த' என்றது, தத்ஸாதந பக்தியன்று, கைங்கர்யோ உபகரண ஸாத்ய பக்தியை. இன்னமும் உபாயாதி காரத்துக்கு சுஷ்காத்யவஸாய மாத்ரம் போராதே ப்ராதிகூல்ய த்யாகமும் வேணுமே. ப்ரபத்தி ஸ்வரூபம் சொல்லுகிறவிடங்களில், *(178) 'உபாயாபாய நிர்முக்தா மத்₄யமாம் ஸ்தி₂திமாஸ்தி₂தா'* (பாரதம்) என்றும், *(179) 'உபாயாபாயஸம்யோகே₃ நிஷ்ட₂யா ஹீயதேநயா'* (ஸ்ரீபாஞ்சராத்ரம்) என்றும், புண்ய பாபரூப உபாய கர்மங்களும் த்யாஜ்மாகக் சொல்லா நின்றதிறே.**

**விளக்கவுரை**

(175) 'நீ என்னையடைவதற்குத் தடையான எல்லாப் பாவங்களை நான் போக்கிவிடுகிறேன்' என்று எம்பெருமான் அருளிச் செய்கையாலே, இவ்விரண்டு சுலோகங்களும், ஒன்றை ஒன்றை வேண்டியிருப்பதால் ஒரே பொருளைக் கூறுவனவாகயிருக்கும். (176) 'அருச்சுன! தத்துவவிஷய மாகவும், மோக்ஷ விஷயமாகவும் உனக்குக் கூறவேண்டி யதைக் கூறிவிட்டேன் உனக்கு விருப்பமானவற்றைச் செய்' என இறைவன் கூறிய பின்னர், உடலை வருத்தக் கூடியதாயும் பரதந்திரமான இயல்புக்கு முரண்பட்டதாயு மிருக்கும் கருமயோகம் ஞானயோகம் பக்தியோகம் ஆகிய உபாயங்களைச் செய்வதற்கு நான் ஆற்றலுடைய வனன்று என்று அர்ச்சுனன் கவலையடைந்த பின்பு (177) 'ரகசியங்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த ரகசியமாயிருக்கும் என்னுடைய மேலான வார்த்தையை மறுபடியும் கேட்பாயாக....' என்று கண்ணனால் உபதேசித்தவை யாகையாலே 'மந்மநா பவ'- 'ஸர்வ தர்மாந்' ஆகிய

இவ்விரண்டு சுலோகங்களும், சுருக்கம் விரிவு என்னும் வடிவங்களாய் ஒரே பொருளுடையவையாயிருக்கும். ஆகையால் 'மாமேவைஷ்யஸி' என்னும் ச்லோகத்தில் கூறப்பட்ட பயனே இதற்கும் பயனாகையாலே, அதிற் சொல்லப்பெற்ற பயனைக் கொள்ளும் அதிகாரமும் இச்சரமச்லோகத்தில் சொல்லிற்றாகக் கொள்ள வேண்டும்.

'மந்மநாபவ' என்ற சுலோகத்தில் 'மத்பக்த' என்றது அந்த ஸாதநபக்தியாம் பக்தியோகத்தையன்று, கைங்கர் யத்திற்கு உறுப்பாயிருக்கும் ஸாத்ய பக்தியை. இன்னமும் உபாயாதிகாரத்துக்கு வெறும் திடநம்பிக்கை யாம் மனவுறுதி மாத்திரம் போராதே ஆந்மவியல்பிற்குத் தகாத விரோதமான செயல்களை விட வேண்டுமே. பிரபத்தியின் இயல்புகளைக் கூறுமிடங்களில், (178) உபாயமான தருமங்களிலிருந்தும் அபாயமான அதருமங்களிலிருந்தும் விடுபட்டவனாய் நடுவான நிலையில் நன்றாக நின்றவன் என்றும், (179) வேறு உபாயமாகிய அபாயத்தின் தொடர்பு பிரபந்நனுக் கேற்பட்டால், பிராயச்சித்தம் பண்ண வேண்டும் என்றும் கூறுகிறபடியால், நல்வினை தீவினை ஆகிய இரண்டும் பிரபந்தநனுக்கு விட வேண்டியதாகச் சொல்லா நின்றனவன்றோ?

**203. மூலம்:**

***இவற்றை த்யஜித்து அவனை ஸ்வீகரித்த வநந்தர த்திலே ப்ராப்தி தசையளவும் உபாயாதிகார ப்ரச்யுதி வாராதபடி ப்ரவ்ருத்தித்தானாகில், சரமகாலத்தில் அதிகாராநுகுணமாக ப்ரதிபந்தங்களை நிவர்த்திப்பித்து முக்தனாம்படி பண்ணும் 'தெளிவுற்று வீவின்றி நின்ற***

*வற்கின்ப கதிசெய்யும்' (திருவாய் 7-5-11) என்று அருளிச் செய்தாரிறே ஆழ்வார்.*

***அதிகாரியநுகுணமாக நிவர்த்திப்பிக்கையாவது, அப்யுபகதப்ராரப்தாம்சத்தை க்ருபையாலே, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் விரக்தியை ஜநிப்பிக்கைக்காக அநுபவிப்பித்து, தத்வ்யதிரிக்த ஸமஸ்த பூர்வாகங்களும் நசித்துப் போம்படிபண்ணி, ப்ராமாதிக உத்த ராகங்களை க்ருபையாலே பொறுத்து இவன்பாடு சாராதபடி பண்ணி, புத்திபூர்வக ப்ரவ்ருத்திகளில் ஸஅநுதாபங்களை ராஜ புத்ர அபராதவத் லகுவாக அநுபவிப்பித்து, நிர்அநுதாபனா னால் யதோசித தண்டங்களையும் பண்ணிப் போக்குகை. இவன் உஜ்ஜீவிக்க வேணுமென்று தானும் கடாக்ஷித்து, இவன் உபாயவரணம் பண்ணி ப்ரக்ருதி வாஸநையாலே சில ஸ்காலித்யங்களுண்டானால் லீலைக்கு விஷய மாக்குமோ? என்னில், முடிய நடத்த மாட்டானேயாகிலும், இவன் பக்கல் அபதே ப்ரவ்ருத்திரூப அபராத அவகாசம் பெற்றால், சில காலம் லீலையிலே விநியோகங்கொள்ளக் குறையில்லை. அபராதமற ப்ரவ்ருத்திக்கும் அதிகாரிகள் விஷயத்திலும் விநியோகங் கொள்ளும் ஸ்வதந்த்ரனிடம் பெற்றால் விடமாட்டானே.***

**விளக்கவுரை:**

எனவே, தருமாதருமங்களாம் இவற்றை விட்டு, இறைவனை உபாயமாக ஏற்றுக்கொண்ட பின்னர், அவனை அடையு மளவும் உபாயாதிகாரத்தில் குறைவு ஏற்படாதவாறு செயல்பட்டானாகில், இறுதிகாலத்தில் அதிகாரத்துக் கேற்றவாறு பாவங்களாம், தடைகளை நீக்கி இவனை, இறைவன் முக்தனாக்குவான், 'தெளிவுற்று வீவின்றி

நின்றவற்கின்ப கதிசெய்யும் தெளிவுற்ற கண்ணனை' எனத் திருவாய்மொழியில் ஆழ்வாரும் அருளிச் செய்தாரன்றோ. அதிகாரிக்கேற்றவாறு இறைவன் பாவங்களைப் போக்கு தலாவது, அநுபவித்தே தீரவேண்டிய (ப்ராரப்தம்) பயன்தரக்கூடிய வினையின் ஒரு பகுதியை இறைவன் தன் கருணையாலே உடலிலும் உடற்தொடர்பான வற்றிலும் வெறுப்பையுண்டாக்குவதற்காக இவனை அநுபவிக்கச் செய்து, அதற்கெதிர் தட்டான முற்பிறவிகளில் செய்யப்பட்ட எல்லா வினைகளையும் அழியும்படி செய்து, இறைவனை அடைந்தபின் நினைவறியாமல் செய்யும் குற்றங்களைத் தன்னருளாலே பொறுப்பித்து இவன்பால் சாராதவாறு செய்து, நினைவறிந்து செய்த குற்றங்களில் இப்படிச் செய்தோமே என்ற மனவருத்தமில்லையாகில், அரசன், தன்மகன் செய்த குற்றத்தை எளிய தண்டனை அளித்து அநுபவிக்கச் செய்வதுபோல் அவ்விதம் சரணாகத நிஷ்டன் தான் தெரிந்தே செய்த குற்றத்திற்கு மனம் வருந்தவில்லை யானால், அவற்றுக்குரிய தண்டனையை அளித்து அப்பாவங்களை இறைவன் போக்கிவிடுவான்.

இவன் உய்வடைய வேண்டுமென்று தானுங் கடாக்ஷித்து, இவனைத் தன் திருவடியில் சரணாகதி செய்யச் செய்து உடலின் பழக்கத்தாலே சில தவறுகளைச் செய்வானானால், இவனைப் பிறவியில் தள்ளுவானோ? எனின், முடிய நடத்தமாட்டானேயாகிலும், இவன் தீய கருமங்களில் ஈடுபட்டானாகில் அதற்காகச் சிலகாலம் இன்ப துன்பமாகிய விளையாட்டில் விநியோகங் கொள்ளக் குறையில்லை. குற்றமில்லாமல் நடக்கும் அதிகாரி விஷயத்திலும் எளிய தண்டனை அளிக்கும் இறைவன், ஸ்வதந்திரமாகச் செயல்பட்டுக் குற்றமிழைத் தவர்களைக் கண்டால் தண்டனை அளிக்காமல் விடமாட்டானல்லவா.

**204. மூலம்:**

***இவ்வர்த்தம், தொண்டரடிப் பொடியாழ்வார் விஷய த்தில் காணப்பட்டதிறே. 'பாசங்கள் நீக்கி யென்னை யுனக்கே யறக் கொண்டிட்டு நீ மாயங்கள் செய்து வைத்தி இவையென்ன மயக்குக்களே' (திருவாய். 7-8-5) என்று ஆழ்வார் அருளிச் செய்தாரிறே. அதுவென்? என்னில், ராஜாவானவன் ந்ருத்த கீதாதி நிபுணையான வேஸ் யையை அபிமதமாகக் கொண்டாலும், போககாலம் வருமளவும் நிருத்த கீதாதிகளாலே விநியோகம் கொள்ளு மளவில் அத்யந்த ஸுகுமாரியானால் சீக்ரமாகக் கூட்டிக் கொண்டு, த்ருடஸரீரியானால் அவளுடைய இஷ்டம் போருமளவும் லீலையிலே விநியோகங் கொண்டு பின்பு அநுக்ரஹிக் குமாபோலே, ஸர்வேச்வரனும் லோக யாத்ரைக்கு அஸக்தராய் ஆர்த்தரானால் கடுக அநுக்ர ஹித்தும், இத்தைப் பொருத்திருந்து த்ருப்தரானால் சில காலம் லீலையிலே விநியோகங் கொண்டு, எப்போது ஆர்த்தராவாரோ அப்போதே அங்கீகரிக்கும். (180) 'த்ருப்தாநாம் அபிஜந்தூநாம் தேஹாந்தர நிவாரிணீ' (பாஞ்சராத்ரம்) என்று சொல்லா நின்றதே? என்னில், இப்போது சிரபரிசயத்தாலே த்ருப்தராய் ப்ராரப்த சரீரத்தைப் பொறுத்திருந்தாலும், சரமகாலத்தில் ஆர்த்தனாக்கி ஸர்வேச்வரன் கைக்கொள்ளுமென்னுமத்தாலே சொல்லப் பட்டது.***

**விளக்கவுரை:**

இக்கருத்து, தொண்டரடிப்பொடியாழ்வாரை இறைவன் கடாக்ஷித்து அரங்கனான தனக்கு நந்தவனம் அமைத்துக் கைங்கர்யம் செய்துவந்த நிலையில், அவர்

தேவதேவி விஷயத்தின் ஈடுபாட்டால் குற்றமிழைக்க, அக்குற்றத்தை சோழமன்னன் அளித்த சிறைதண்டனை வாயிலாக பிராரப்தம் என்னும் காரணத்தையிட்டு துன்பம் அநுபவிக்கச் செய்து, பின்னர் விசேஷ கடாக்ஷம் செய்து அவ்வாழ்வாரை அங்கீகரித்ததை அவர் சரிதத்தில் காணலாமன்றோ. 'பாசங்கள் நீக்கி என்னையுனக்கேயறக் கொண்டிட்டு நீ மாயங்கள், செய்துவைத்தி இவையென்ன மயக்குகளே' என்று இவ்விஷயத்தை ஸ்வாமி நம்மாழ்வாரும் அருளிச் செய்தார்.

அதுவென்? எனின், ஓர் அரசனானவன், ஆடல், பாடல், பிறரை மயக்குதல் ஆகியவற்றில் வல்லமை பெற்ற விலைமகளைத் தனக்குக் காதலியாக்கிக் கொண்டாலும், போககாலம் வருமளவில் மிகவும் தனக்கு வசப்பட்ட வளானால் விரைந்து போகத்தில் கூட்டிக்கொள்வான், அதற்கு இணங்காமல் முரண்பிடித்தால், அவள் தன்னைக் கூடுதற்கு விருப்பப்படும் வரையில் ஆடல், பாடல் முதலாம் விளை யாட்டில் கண்செலுத்திப் பின்பு அவளைப் போகத்துக்கு அங்கீகரிக்கும். அதுபோலே, யாவர்க்கும் இறைவனான எம்பெருமான் இவ்வுலகத்தில் வாழ்வதற்கு இயலாதவராய் அவ் இறைவன் அடைதற்கு ஆர்த்தியுடையவரானால் விரைவில் அங்கீகரித்தருள் செய்தும், அவ்வாறில்லாது இவ்வுலகத்தில் வாழ்வதற்கு வருத்தமின்றிப் பொருந்தியி ருந்தாராயின் சிலகாலம் விளையாட வைத்து எப்போது ஆர்த்தராவாரோ, அப்போது அவர்களை இறைவன் அங்கீகரிக்கும். (180) 'ஸம்ஸாரத்தில் வருத்தமில்லாத பிரபந்நர்களும் சரீரத்தின் இறுதியில் மோட்சமடைவார்கள்' என்று சான்றுகள் பகரா நின்றனவே? எனின், இப்போது பல கைங்கரியங் காரணமாக வருத்தமின்றி இந்தப் பிராரப்த

சரீரத்தைப் பொறுத்திருந்தாலும், இறுதி காலத்தில் இறைவன் இவனை ஆர்த்தனாக்கிக் கைக்கொள்வான் என்பதாலே அவ்வாறு கூறப்பட்டது என்றறிக.

205. மூலம்:

*த்ருப்தனாமவனும் ஆநிரைமேய்த்து வந்தான ல்லனே, தேஹாவஸாநத்தளவும் இத்தேஹத்தோடே பொருந்தி யிருக்குமது ஒன்றேயிறே இவ்வதிகாரிக்கு தோஷம், மற்றுமுண்டான த்யாக ஸ்வீகாரங்களெல்லாம் இருவருக்கு மொக்குமிறே, "இருந்திருந்து எத்தனை காலம் புலம்புவனே கூவிக்கொள்ளுங்காலம் இன்னுங் குறு காதோ - என்னையென் செய்கின்றாய்? என்தாமரைக் கண்ணா - நெறிகாட்டி நீக்குதியோ-பல நீ காட்டிப் படுப்பாயோ - தீயோடுடன் சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ'' என்றிப்படி கூப்பிட்டுக் கொண்டு, 'கங்குலும் பகலும் கண்டுயில் அறியாள் - இட்டகால் இட்ட கையளாயிருக்கும் - சிந்திக்கும் திசைக்கும் தேறுங் கைகூப்பும் - அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடியலற்றுவன்' என்று ஆஹார நித்ரைகளில் நசை யற்றுக் கண்ணீர் நிறைத்துக் கொண்டு காலுங்கையுஞ் சலிப்பிக்க மாட்டாதே மூர்ச்சித்து, திரிய வுந்தெளிந்து அழுவதும் தொழுவதும் ஆடுவதும் பாடுவதுமாய், 'எங்கும் நாடிநாடி நரசிங்கா' என்று ப்ரலாபிக்கும் ஒன்றுமே ஆர்த்தனுக்கேற்றம்.*

விளக்கவுரை:

இறைவனை அடைவதில் வருத்தமற் றிருப்பவனும் உடலை வளர்ப்பதற்காகப் பசுக்களை மேய்த்துக் கொண்டு

இறுதி வரையிலும் திரிகிறான் என்பதில்லையே. மரணம் ஏற்படும் வரையில் இவ்வுடலோடு பொருந்திவாழ்தல் ஒன்றே இந்தப் பிரபத்தியதிகாரிக்குக் குற்றம். மற்று முண்டான விடுமவையும் பற்றுமவையும் ஆர்த்தனாயுள்ளவனுக்கும் ஆர்த்தியில்லாதவனுக்கும் அவையிரண்டும் ஒக்கும். இருந்திருந்து எத்தனை காலம் புலம்புவனே கூவிக் கொள்ளுங் காலம் இன்னுங் குறுகாதோ?-என்னையென் செய்கின்றாய் என்தாமரைக் கண்ணா-நெறிகாட்டி நீக்குதியோ - தீயோடு உடன்சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ? என்றிவ்வாறு கூப்பிட்டுக் கொண்டு,

கங்குலும் பகலும் கண்டுயில் அறியாள் - இட்ட கால் இட்டகைளாயிருக்கும் - சிந்திக்கும் திசைக்கும் தேறுங் கை கூப்பும் - அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடி அலற்றுவன் என்று (திருவாய் மொழிகளில் கூறுகிறபடியே), உண்ணல் உறங்கல் இவைகளில் விருப்பற்றுக் கண்களில் நீர் நிறைத்துக் கொண்டு, கைகளையும் கால்களையும் நீட்டவும் நடக்கவும் மாட்டாமல் மூர்ச்சையடைந்து மீண்டும் தெளிந்து அழுவதுந் தொழுவதும் பாடுவது மாடுவதுமாக, எங்கும் நாடி நாடி நரசிங்கா என்று ஆற்றாமை மீதூர்ந்து நிற்பதே ஆர்த்தியுள்ளவனுக்கு ஏற்றமாம்.

**206. மூலம்:**

***அஹங்கார, மமகார, காம, க்ரோத, லோப, மோஹாதி நிவ்ருத்தியும், புத்ர, தார, க்ருஹ, க்ஷேத்ர, தந, தாந்யாதி விரக்தியும் தாரக போஷக போக்யங்களெல்லாங் கண்ணன் என்றத்யவஸித்திருக்கையும், இருவருக்கும் ஸமாநமாகையாலே நாலுநாள் சிரபரிசயத்தாலே பொருந்தி யிருந்தாலும் சரமகாலத்திலே யெல்லாவற்றிலும்***

*அருசியைப் பிறப்பித்து ஆர்த்தனாம்படி பண்ணி அங்கீகரிக்கும். அந்த ஆர்த்தியைக்கண்டு, இது சரம, சரீரமென்று தானும் விச்வஸிக்கும் படியாய், பிறரும் ஸம்மதிக்கும்படியாய் உஜ்ஜீவிக்கும். அக்காலத்துக்கும் புத்ர தாராதி ஸங்கமே யாத்ரையானால் இவ்வாத்மாவைக் கடுக அங்கீகரிக்க நினைத்தானல்லன் என்று தத்வஜ்ஞானன தனக்கும் பிறர்க்கும் தோற்றுப்படியாய் தேஹாந்தர ப்ராப்தி தப்பாதென்று அஸ்மதாசார்யோக்தம், இதுவே பரமார்த்தமென்றருளிச் செய்ய, ஸேநாபதியாழ் வாரும் விஷண்ணராய், இவ்ஆர்த்திக்கு அதிகாரிகள் ஆர்? பரிகரணீயங்களானவற்றை பரித்யஜிப்பார் ஆர்? 'எங்கினித் தலைப்பெய்வன்' (திருவாய். 3-2-9) என்கிறபடியே இனிஇழந்தே போமத்தனை என்று வேரற்றமரம் போலே, திருவடிகளிலே விழுந்து அழப்புக்கவாறே,*

**விளக்கவுரை:**

அகங்காரம், மமகாரம், ஆசை, கோபம், கடும்பற்று, மயக்கம், அறிவின்மை, திரிபுணர்ச்சி ஆகிய இவைகளை விட்டு, மனைவி, மக்கள், இல்லம், நிலம், செல்வம், தானியம், அணிகலன் முதலானவற்றில் வெறுப்பும், சரீரம் நிலைப்பதற்கு நீரால் தரித்தல் உணவால் வளர்தல் வெற்றிலையால் இன்பம் தூய்த்தல் எல்லாம் கண்ணனே என்ற மனவுறுதியும் முன்னர்க் கூறப்பட்ட இருவருக்கும் ஒப்பாகையாலே, சில நாட்கள் பகவத் பாகவத தொண்டு காரணமாக இவ்வுலகில் பொருந்தியிருந்தாலும், இறுதி காலத்தில் எல்லாவற்றிலும் இறைவன் சுவையின்மையை யுண்டாக்கி ஆர்த்தனாக்கி இவனை அங்கீகரிக்கும். அவ் ஆர்த்தியைக் கண்டு, இதுவே இறுதியான சரீரம் என்று

பிரபந்தனான தானும் நம்பும் படியாய், பிறரும் இதனை ஆமோதிக்கும் படியாயிருந்து உய்வடைவான். மரணம் எய்துகின்ற அக்காலத்திலும், பிள்ளை மனைவி, உறவினர், செல்வம் ஆகியவற்றில் பற்றுக் கொண்டு வாழ்ந்தானே யானால், இறைவன் இவ்வாந்மாவை விரைந்து அங்கீகரிக்க நினைத்தான் அல்லன் என்று உண்மையறிந்த இவ்வதி காரியான தனக்கும் பிறர்க்கும் தோன்றும்படியாய், மீண்டும் பிறப்பது தப்பாது என்று எமது ஆசாரியரான ஸ்ரீமணவாள மாமுநிகள் கூறுவர், இதையே யானும் மேலான வார்த்தை என்று உங்களுக்கு கூறுவேன் என்று எறும்பி அப்பா அருளிச் செய்ய, அவர்சீடரான ஸேநாதிபதியாழ்வாரும், மனம் வருந்தியவராய் இப்படிப் பட்ட ஆர்த்தியுள்ள அதிகாரியாவர்? ஸம்பிரதாயத் திற்கு விரோதமானவற்றை முற்றவும் விடுபவர் யார்? "எங்கினித் தலைப்பெய்வன்" என்று ஓதுகிறபடி ஏங்கி, இனி இறைவனை இழந்தோ மத்தனை என்று வேரற்ற மரம்போல் அவர் திருவடிகளிலே விழுந்து அழத்தொடங்கினவாறே,

**207. மூலம்:**

*அப்பாவும் எடுத்தணைத்துக் கண்ணநீரைத் துடைத்து ஸோகிக்க வேண்டா, அப்ராப்த விஷயங்களில் இப்படி பயாநுதாப முண்டானால், ஸர்வ ஸக்தியானவன் தானே வேண்டுமவையெல்லாம் உண்டாக்கித் தானே கைக்கொள்ளும். நீயும் வேண்டா, பரிஹரணீயங்களான த்யாஜ்யங்களை விடமாட்டா தொழிந்தாலும், ஹேயங் களென்று நினைத்து விடத்தக்க அஹங்கார மமகார காம க்ரோதங்களும் பகவத் பாகவதாசார்ய அபசாரங்களுமான நிஷித்தங்களை பரித்யஜித்து யாதோரளவாலே லோக ஸங்க்ரஹமும் ஸிஷ்ய புத்ரோஜ்ஜீவநமும் ஸித்திக்கும்*

*தாவந்மாத்ரம் ஆந்ருஸம்ஸ்யத்தாலே வர்ணாஶ்ரம தர்மங்களை அனுஷ் டித்துக் கொண்டு, அஹங்காரார்த்த காம பரவசரல்லாத ஜ்ஞான பக்தி வைராக்ய ஸம்பந்நரான பரமவிலக்ஷணரோடே ஸஹவஸித்து, இடை விடாதே குணாநுபவ கைங்கர்யங்களாலே போது போக்கிக் கொண்டு, பக்த ஸம்ஸாரிகளோடே கூட்டற்று ஸதாசார்ய அபிமாநமே உத்தாரகமாக அத்ய வஸித்து, இவ்வாத்ம குணங்களெல்லாம், 'மருவித் தொழும் மனமே தந்தாய்' (திருவாய் 2-7-7) 'என்னைத் தீமனங் கெடுத்தாய்' (2-7-8) என்று அவரருளாலே வந்தவையென்று நிரஹங் காரனாயிருந்தால், ஸர்வ ஸக்தியானவன் சரமதசையில் பரமாத்தியை யுண்டாக்கி ரக்ஷிக்கும்.*

**விளக்கவுரை:**

எறும்பியப்பாவும் அவரை எடுத்தணைத்துக் கண்ணீரைத் துடைத்து, நீர் துன்புற வேண்டாம், தகுதியற்ற விஷயங்களில் இவ்வாறு அச்சமும் கழிவிரக்கமும் உண்டானால், ஸர்வ வல்லமை படைத்த எம்பெருமான் தானே உமக்கு வேண்டியவையாம் ஆந்ம குணங்களெல்லாம் உண்டாக்கி தானே கைக்கொள்ளுவன், உம்மைக் காப்பதற்கு நீர் முயல வேண்டாம், தள்ளத்தக்கவைகளானவற்றை விடமாட்டா தொழிந்தாலும், இழிந்தவைகள் அவை என்று எண்ணி, விடக்கூடிய அகங்காரம், மமகாரம், அவா,கோவம், அழுக்காறு போன்ற வைகளும், பகவத் பாகவத ஆசாரிய அபசாரங்களுமான தாழ்ந்தவைகளை நன்றாகவிட்டு எவ்வளவு முடியுமோ அவ்வளவாக உலகம் கெடாமைக் காகவும், சீடர்கள் புத்திரர்கள் உய்வடைவதற்கு மாத்திரம் கருணையாலே வருண தருமங்களையும் ஆசிரம தருமங்களையும் அநுட்டித்துக் கொண்டு, அகங்காரம்

பொருள் இன்பத்தில் வயப்பட்ட வரல்லாத ஞானம், பக்தி, (உலக) வைராக்கிய ஸம்பத்துள்ளவரான சிறந்த மேன்மக்களோடு கூடி வாழ்ந்து பகவத் பாகவத ஆசாரிய குணாநுபவ கைங்கரியங்களை இடையறாது செய்து பொழுதைக் கழித்துக் கொண்டு, இவ்வுலக வின்பத்தில் பற்றுடைய மக்களோடு தொடர்பற்று, நல்லாசிரியன் அபிமாநமே நற்கதிக்கு வழிஎன்று மனவுறுதி கொண்டு, முன்னே கூறப்பட்ட நற்குணங்களெல்லாம், 'என்னைத் தீமனங் கெடுத்தாய்' - 'மருவித் தொழும் மனமே தந்தாய்' என்றவாறு, அவ்ஆசாரியன் அருளாலே நமக்கு வந்தவை என்று, அகங்காரமற்றிருந்தால் அவனை, ஸர்வ சக்தியான எம்பெருமான் இறுதி காலத்தில் மேலான ஆர்த்தியை யுண்டாக்கிக்காப்பான்.

208. மூலம்:

***இது, துர்லபமென்று நினைக்கவேண்டா. ஒரு குணலேசமும் ப்ரக்ருதிவஶ்யனான இவனாலே பிறப் பித்துக் கொள்ளவொண்ணாதிறே. அவன் இவ்வாத் மாவை உஜ்ஜீவிப்பிக்க வேணுமென்று நினைக்கிலிறே இவன் முக்தனாவது, முக்தனாம்படி பண்ணும்போது ததநுரூபமான ஆத்ம குணங்களையுண்டாக்கிக் கொள்வது அவனுக்கே பாரமாகையாலே அயோத்யா வாஸிகளான சராசரங்களெல்லாம் தத் ஸம்ஸ்லேஷ விச்லேஷைக ஸுகதுஃக்கராம்படியான ஆத்ம குணங் களுண்டாக்கி ரக்ஷிக்கிற ஸர்வஸக்தி, ந்யஸ்தபரனான இச்சேதநனுக்கு உண்டாக்குகையில் அருமையில்லை யிறே. இவன் ப்ரக்ருதி வஶ்யனாய் தேஹாத்மாபிமாநியாய் ததிக்ஷீராஜ்யாதிகளாலே உடம்பைப்பெருக்கி, ''ஊன் மல்கி மோடு பருப்பார் உத்தமர்கட்கென் செய்வார்''***

*(திருவாய் 3-5-7) என்கிறபடியே, ஸாத்விக கோஷ்டிக்கு ஆளாகாதே பத்தஸம்ஸாரிகளாய் ஸப்தாதி விஷய ப்ரவணராய் அஹங்காராதி வஶ்யராய்க்களித்து வர்த்திக்காமல், இவர்கள் பட்டது படுகிறார்களென்று கர்மாநுகுணமாக நிர்வஹித்துக் கொண்டு போருமதொழிய யதா சாஸ்த்ரவஶ்யராய், த்யாஜ்யோ பாயங்கள் அறிந்து இவற்றினுடைய த்யாகஸ்வீகாரம் தனக்க வஶ்யமென்று "விண்ணுளார் பெருமாற் கடிமை செய்வாரையும் செறும்ஐம்புலனிவை மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா மற்றுநீயும் விட்டால்" (திருவாய்.7-1-6) என்றும், "இடகில்லேன் ஒன்றட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன்- கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித் தேத்த கில்லேன் (திருவாய் மொழி 4-7-9) என்று,*

**விளக்கவுரை:**

இஃது இயலாதென்று நீ. எண்ணவேண்டாம். ஒரு நற்குணத்தையும் தாழ்விற்கிருப்பிடமான இவ்வுடலோடு கூடியிருக்கும் மனிதனான இவனால் உண்டாக்கிக் கொள்ள முடியாது. எல்லாம் வல்ல இறைவன் இவ்வாத்மாவை உய்வடைய வேண்டுமென்று நினைக்கில் அல்லவா இவன் முக்தனாவது, அவ்விதம் இவனை முக்தனாம்படி பண்ணும் போது, அதற்கேற்றவாறு நற்குணங்களையுண்டாக்கிக் கொள்ளும் செயல் அவ் இறைவனுக்கே சுமையாகையாலே, அயோத்தியில் வாழ்ந்த உயிருள்ளவை உயிரற்றவை யாவும் இவ் இறைவனான இராமனோடு சேர்ந்திருந்த நிலையிலும் பிரிந்திருந்த நிலையிலும் இன்பத்தையும் துன்பத்தையும் அடையும்படியான நற்குணங்களை யுண்டாக்கிக் காத்த

ஸர்வசக்தியான இறைவன், தன் திருவடியைச் சரணாகக் கொண்ட இம்மனிதனுக்கு அக்குணங்களை யுண்டாக்கு வதில் அருமைப்பாடு ஒன்று மில்லையன்றோ.

இவன் உடலின்பத்திலீடுபாடுடையனாய், உடலே ஆந்மா என்னும் எண்ணத்தையுடையனாய் நெய் பால்மோர் ராஜஸ தாமச உணவுகளால் உடம்பைப் பெருக்கி, ''ஊன்மல்கிமோடு பருப்பார் உத்தமர்கட்கு என்செய்வார்'' என்று கூறுகிறபடி, நற்குணங்களமைந்த சாத்துவிகரான சான்றோர் அவையில் சேராமல், இவ்வுடல்வழி செல்லும் புலன்களுக்குக் கட்டுப்பட்டிருக்கும் மனிதர்களாய் ஐம்பொறி களால் நுகரும் விஷயத்தில் ஈடுபாடுடையவராய், அகங்காரம் மமகாரம் முதலியவற்றோடு காமவசராய்க் களித்து வாழாமல், இவர்கள் பட்டது படுகிறாரென்று இவர்கள் செய்த நல்வினை தீவினைகளுக் கேற்றவாறு இறைவன் நிர்வகித்துக் கொண்டு போவதன்றி, உண்மையானவராய் சாத்திரங்களுக்குக் கட்டுப்பட்டவராய், விட வேண்டிய வையும் கைக்கொள்ளுமவையும் உள்ளவாறறிந்து, இவற்றி னுடைய விடுபவையும் பற்றுபவையும் தனக்கின்றியமை யாமை என்று, 'விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை. மண்ணுள் என்னைப் பெற்றால் என்செய்யா மற்றும்நீயும் விட்டால்', என்றும், 'இடகில்லேன் ஒன்றட்ட கில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன் - கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித் தேத்தகில்லேன்' என்று,

**209. மூலம்:**

*பரிதாபம் பிறந்து நீயே ரக்ஷிக்கவேணும் என்று சரணம்புக் கால், (181) ''யதி$_3$வா ராவணஸ்வயம்''*

*(ஸ்ரீராமா.யுத்.18.35)* என்கிறபடியே ரிபூணாமபி வத்ஸலனானவன் இவனை விட்டுக் கொடானிறே. “அடியரை வல்வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடானவன்” *(திருவாய் 1-7-2)* என்று ஸ்வாஸ்ரிதரை ப்ரபல கர்மங்களிலே மூட்டானிறே. பஞ்சேந்த்ரியங் களாலும் விஷயங்கள் யநுபவித்து நிற்கும்படி விட்டுக் கொடானென்று ஆழ்வார் அருளிச்செய்கையாலே அவன் அநுக்ரஹத்துக்கு பாத்ரபூதரான அடியார் ஸாது கர்மங்களைச் செய்து முக்தனாமதொழிய விஷயப்ரவண னாய் நஸிக்குமதில்லை. அவனே திருத்திப் பணிகொள்ளு மளவில், இவனுக்கருமையான தொன்றில்லை. க்ரமக்ரம மாக ப்ராக்தந ஸிஷ்டாசார அநுஸந்தாநத்தாலும், அருளிச் செயலர்த்த அநுஸந்தாநத்தாலும் தெளிவு பிறக்கும்படி ஹ்ருதிஸ்த்தனாய் (மனத்தில் இருப்பவனாய்) நின்று, *(182)* “தேஷாம் ஏவாநுகம் பார்த்த$_2$ம் அஹமஜ்ஞாநஜம் தம:| நாஸயாம்யாத்ம ப$_4$ாவஸ்த$_2$: ஜ்ஞாநதீ$_3$ பேந ப$_4$ாஸ் வதா||” *(கீதா.10.11)* என்கிறபடியே ஜ்ஞாநதீ$_3$பத்தாலே அஜ்ஞாந அந்தகாரத்தைப் போக்கி ஸதநுஷ்டாநத்திலே ப்ரவர்த்திப்பித்து ரக்ஷிக்குமதில் ஸம்சயமில்லை. இவன் சேதநனான வாசியைப் பெற்ற ப்ராதிகூல்யங்களை பரித்யஜித்து, ஆநுகூல்யங்களில் ஸங்கல்பமாத்ர முண்டானால் தானே இவையெல்லாம் உண்டாக்கி நிர்வஹித்துக் கொண்டு போரும்.

**விளக்கவுரை:**

தன்வெறுமையை நினைத்து அநுதாபம் பிறந்து எம்பெருமானைக் குறித்து, நீயே என்னைக் காக்கவேண்டும் என்று சரணடைந்தால், (181) ‘விபீஷணன் என்ன, அந்தக் குற்றம்புரிந்த இராவணனே என்னைத் தஞ்சமடைய வரினும்

ஏற்றுக்கொள்வேன்' என்றபடி பகைவனிடத்தும் அருளுள்ளங் கொண்ட இறைவன், தன்னைச் சரணடைந்த இவனைக் கண்டால் விடமாட்டானன்றோ! ''அடியாரை வல் வினைத்துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடானவன்'' என்றுங் கூறுகிறபடி, இறைவன் தன் அடியவரைப் பெரிய தீய வினைகளில் மூளும்படி செய்யானிறே. ஐம்பொறிகளால் தீய விஷயங்களை அநுபவித்தும்போம்படி விட்டுக் கொடானென்று நம்மாழ்வார் அருளிச்செய்கையாலே, இறைவன் தன் கருணைக்கு இலக்கான அடியவர்கள் நல்வினைகளைச் செய்து முக்தராகுவாரன்றி, ஐம்புலன் விஷயங்களில் ஆழ்ந்து அழிவதில்லை.

அவ்விறைவனே இவனைத் திருத்திப் பணி கொள்ளுமளவில் இச்சீவனுக்கு அரிய தொன்றுமில்லை, படிப்படியாகத் தொன்மையான முன்னோர்கள் ஆசரித்த சிஷ்டாசாரத்தை நினைப்பதினாலும், ஆழ்வார்கள் அருளிச் செயலின் பொருளுணர்த்தியாலும் தெளிவு பிறக்கும்படி இறைவன் இருதயத்திலே நின்று, (182) ''அந்தவேறு பயன் கருதா பக்தர்களுக்கு என் அருளினாலேயே அவர்களது நெஞ்சிலே நின்று என் கல்யாண குணங்களை வெளிப்படுத்தி என் விஷயமான ஞானமென்னும் ஒளிவிளக்காலே, அந்த ஞானத்துக்குப் பகையான பண்டை வினை களாலே உண்டான புலன்விஷயமான இருளை நான் அழிக்கிறேன்'' என, இறைவனும் கீதையில் கூறியவாறே இறைவனே ஞானமாம் விளக்கினால் அறிவின்மையாம் இருளைப்போக்கி நல்லொழுக்கத்தில் ஒழுகச்செய்து இவனைக் காக்கும் என்பதில் ஐயமில்லை. இவன் அறிவுடையவன் என்பதால் செய்யத் தகாதவற்றை அடைவே விட்டு, இவன் இறைவனுக்கு உகப்பான

நற்செயல்களைச் செய்ய வேண்டும் என்னும் நினைவுமாத்திரமுண்டானால், இறைவன் தானே அவை களையெல்லாம் உண்டாக்கி நடத்திக்கொண்டு போகும்.

**210. மூலம்:**

***ஆகையாலே, (183) "ந பி₃பே₄தி குதஶ்சந", (184) "மித்ரப₄ாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கத₂ஞ்சந, தே₃ாஷோ யத்₃யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத₃க₃ர்ஹிதம்" (ஸ்ரீராமாயணம் யுத்த காண்டம்), "யே பாபிநோ(அ)பி ஶிஶுபாலஸுயோத₄நாத்₃யா: முக்திம் க₃தா:" (?), என்கிற ஶரண்ய ப்ரபாவ வாக்யங்களைச் சொல்லிக் கொண்டு அவற்றுக்கு தாத்பர்ய மறியாதே, தாமும் பத்த ஸம்ஸாரி களாய் ஸப்தாதி விஷயப்ரவணராய் அஹங்காராதி வஶ்யராய், "ஆசாரியர்களனைவரும் முன் ஆசரித்த ஆசாரந் தன்னை யறியாதார் - பேசுகின்ற வார்த்தைகளைக் கேட்டு மருளாதே, பூருவர்கள் சீர்த்தநிலை தன்னை நெஞ்சே சேர்" (உபதேச-67) என்கிறபடியே, பலநீ காட்டிப் படுப்பாயோ - இன்னங் கெடுப்பாயோ என்று பூர்வாசார்யர்கள் அனைவரும் விஷயாந்தர தர்ஶநத்தில் பீதபீதராய், தந்நிவ்ருத்தியை ப்ரார்த்தித்துக் கொண்டு, ப்ராமாதி கமாகவும் அவை வாராதபடி முன்னாசரித்த பராங்குச பரகாலாதிகளுடைய ஶிஷ்டாசாரங்களறியாதே, எனக்கு பகவத் ஸம்பந்த முண்டு ஸதாசார்ய ஸம்பந்தமுண்டு என்று ப்ராதிகூல்யங்களை பரித்யஜிக்கமாட்டாதே, தாமும் நிர்பயராய் பிறர்க்குமிதுவே உபதேசித்து நிர்பயராம்படி பண்ணித் திரிகிற ஸ்வபரவிநாஶகரோடே கலந்து அவர்கள் உபதேசங்கேட்டு நசித்துப் போகாதே நாத யாமுந யதிவர ப்ரப்ருதிகளுடைய உக்த்யநுஷ்டா நங்களைக் கொண்டு,***

**விளக்கவுரை:**

ஆகையாலே, (183) அந்தப் பரம்பொருளை அடைந்தவன் யாதொன்றுக்கும் அஞ்சுவதில்லை. என்கிறபடியே, இறைவனை அடைந்தவன் இப்படிப்பட்ட மேன்மையையடைகின்றான். (184) ''உள்ளத்தில் என்னிடம் உண்மையான நட்பில்லாவிடினும் மேலெழ நட்பு பூண்டவனைப் போல் நடித்து என்னை அடைய வந்தவனையும் (விபீஷணனையும்) நான் காப்பாற்றாமல் விடமாட்டேன், அவன் தோஷமுடையவனானாலும் இருக்கட்டுமே, அவன் காக்கப்படுவதை நல்லோர்கள் வெறுக்க மாட்டார்கள், மாறாக ஏற்றுக்கொள்ளச் செய்வார்கள்'' என்றும், ''பாபம் புரிந்தவர்களான சிசுபாலனும் துரியோதநனுங்கூட முக்தியடைந்தார்கள்'' என்னும் யாவர்க்கும் வன்சரணனாம் இறைவனுடைய பெருமையைக் கூறும் இப்படிப்பட்ட வாக்கியங்களைக் கூறிக் கொண்டு அவற்றின் உட்பொருளை அறியாமல் தாமும் இவ்வுலகிலுள்ள மக்களைப் போன்றே பிறவியில் கட்டுப்பட்டவர்களாய் ஐம்புலன் விஷயத்தில் ஈடுபட்டவர்களாய் யான் எனது என்னும் நினைவுடையவராய், ''ஆசாரியர்கள் அனைவரும் முன்னாசரித்தாசாரந் தன்னை அறியாதார், பேசுகின்ற வார்த்தைகளைக் கேட்டு மருளாதே பூருவர்கள் சீர்த்தநிலை தன்னை நெஞ்சே சேர்'' என்று மாமுனிகள் கூறியவாறே, ''பலநீ காட்டிப்படுப்பாயோ? - இன்னங் கெடுப்பாயோ?'' என்றும் ஆழ்வார் கூறுகிறவாறு,

நம்பூருவாசாரியர்கள் அனைவரும் ஐம்புலன் விஷயங்களைக் கண்டால் மிக்க அச்சங் கொண்டு, அவை தமக்கு நேராமலிருக்க இறைவனிடத்துப் பிரார்த்தனை செய்து கொண்டு, தெரியாமலுங்கூட அவை தம்மிடத்தில்

வாராதபடி எச்சரிக்கையாயிருந்து முற்காலத்தில் பராங்குசர் பரகாலர் இராமாநுசர் போன்றோர் நடந்துகாட்டிய சிறந்த ஆசாரங்களையறியாமல், எனக்கு இறைவனின் ஸம்பந்த முண்டு நல்லாசாரியன் ஸம்பந்தமுண்டு என, விரோதியான ஒழுக்கங்களை விடமாட்டாமல், தாமும் தாம் செய்யும் தீய ஒழுக்கத்தால் என் வருமோ? என்னும் அச்சமின்றித்தன்னைச் சார்ந்தவர்க்கும் அதனையே உபதேசித்து அச்சங்கெடும்படி உபதேசித்துத் திரிகிற தன்னையும் பிறரையும் அழிக்குமவர் களோடு கலந்து அழிந்துபோகாமல், நாதமுநிகள் யாமுநமுநிகள் எதிராசர், மணவாள மாமுநிகளின் உபதேச அநுட்டானங்களைக் கைக்கொண்டு,

**211. மூலம்:**

*ததநுகுணமான ஸம்யக் அநுஷ்டாநமுடையராய், ப்ராப்ய ப்ரதிபந்தக நிஷித்தாநுஷ்டாந பரித்யாக பூர்வ கமான அநுஷ்டாநத்தையே பிறர்க்குமுபதேசித்துக் கரையேற்றவல்லராய்,*

*நம்மாழ்வார் பூத பவிஷ்யத் வர்த்தமாந காலத்ரய வ்யவஸாய ஜ்ஞாநமுடையவராகையாலே, (185) 'ஸ்ருதிர் நஷ்டாஸ்ம்ருதிர்லுப்தா ப்ராயேண பதிதாத்$_3$விஜா:'(?) என்கிறபடியே, கலிப்ரபலமாகா நிற்குமளவில், விபரீ தார்த்த போதகரும், விபரீதாநுஷ்டாநங்களும் ப்ரபலமாயே வர்த்திக்கு மென்று கடாக்ஷித்து, விஷ்ணு ஸித்தாந்தத்தில் அவை புகுராதபடி பண்ணவேண்டும் மென்று எம்பெருமா னாருடைய பவிஷ்யதாசார்ய அவதாரத்தைக் கண்டு, 'பொலிக!பொலிக!! பொலிக!!!' (திருவாய்.5-2-1) என்று, தாமும் மங்களாசாஸநம் பண்ணி, 'சென்று தொழுதுய்மின் தொண்டீர்' என்று அவரையே முமுக்ஷுக்களுக் கெல்லாம்*

*ஸமாஶ்ரணீயராகச் சொல்லி, மதுரகவி நாதமுநிகளுக்கு த்ரிதண்டகஷாயாதிகளோடே அந்த அவதாரம் காணவரும்படி விஶேஷகடாக்ஷம் பண்ணி, நமக்கடியு மாய் நம் கார்யத்துக்குக் கடவது மாயிருக்கு மென்றும், இவ் அவதாரமே ஸர்வோத்தாரகம்,*

*இவரே நம் தர்ஸநத்துக்கெல்லாம் குருபதமூர்த்தா அபிஷிக்தர் என்றும் அருளிச்செய்கையாலே நாதமுநிகள் தொடங்கி அஸ்மதா சார்யர்களளவும், எம்பெருமானாரே உத்தாரக ஆசார்யராகவும், அவருடைய உக்த்யநுஷ்டா நங்களே ப்ரமாணங்களாகவும் அங்கீகரித்து அவரையே உத்தாரகராகக் காட்டுகிற மறுவற்ற ஸதநுஷ்டாந ஸம்பந்நரான ஸதா சார்யனே மஹோபகாரக ஆசார்யனாக வும் புத்தி பண்ணி பிறர்க்கும் உபதேசித்து, (186) "ராமாநுஜார்யே குருரிதிசபதம் பாதி நாந்யத்ர" (சரமகுரு நிர்ணயவுரையில் பெரியவாச்சான்பிள்ளை ஸ்தோத்ரம்) என்று மற்றொரு விஷயத்தில் இப்படிப்பட்ட ஆசார்யத்வ முண்டாவதாகச் சொன்னால், ருசிபேதங்களாலே அநேக விபரீதார்த் தங்கள் புகுரும் என்று ஆகாம்யநர்த்தத்தை நிரீக்ஷித்து இதர நிஷேதம் பண்ணுகையாலே க்ரந்தஸ்தங் களான அவருடைய உக்த்யநுஷ்டா நங்களே உபாதேயங் களாயிருக்கும். ஆகையாலே, எம்பெருமானார் திருவடி களே சரணமென்று காட்டுகிற ஸதாசார்யன் அபிமாநத் திலே ஒதுங்கியிருந்தவாசார்யனே,*

**விளக்கவுரை:**

அவற்றிற்கேற்றவாறு நல்ல தெளிந்த அநுட்டாந முடையவர் களாய், இறைவனை அடைதற்குத் தடையான தாழ்ந்த ஒழுக்கங்களை முன்னம்விட்டு சிறந்த ஒழுக்கத் தையே பிறர்க்கும் உபதேசித்துப் பிறவிக்கடலைக்கடந்து

கரையேற்ற வல்லவர்களாய், ஸ்வாமி நம்மாழ்வார், இறந்த காலம் எதிர்காலம் நிகழ்காலங்கள் அறியவல்ல ஆற்றல் மிக்க ஞானப்பெருமையையுடைவராகையால், (185) ''வேதம் அழிந்தன, தருமநூல்கள் மறைந்துபோயின, இருபிறப்பாளர் பெரும் பாலும் தருமத்தை விட்டுவிலகியதால் அவர்கள் தாழ்ந்து போனார்கள்'' என்னும்படி கலியானவன் தருமத்தை அழிப்பதில் பேராற்றலுடையவனாய் வளருமளவில், மாறுபட்ட பொருளை உபதேசிப்பாரும் மாறுபட்ட ஒழுக்கத் தையுடைவர் தாம் அதிகமாய் வாழ்வார்கள் என்று, இவ்வுலகைத்திருத்துவதற்காகப் பேரருள் செய்து வைஷ்ணவ சமயத்தில் அந்த மாறுபட்ட பொருளும் ஒழுக்கமும் புகாதபடி செய்யவேண்டும் என்று பிற்காலத்தில் நிகழப்போகும் இராமாநு சருடைய அவதாரத்தை அப்போதே ஆழ்வார் கண்டு;

பொலிக பொலிக பொலிக என்று வாழ்த்துப்பாடி, சென்று தொழுதுய்மின் தொண்டீர் என்று அந்த இராமாநுச ரையே முக்தியடைய விரும்புவோர்க்கெல்லாம் நன்றாக அடையப்பட்ட ஆசாரியராகக்கூறி, மதுரகவியாழ்வார்க்கும் நாதமுநிகளுக்கும் முக்கோலை கைக்கொண்டவராகவும் துவராடையணிந்தவராகவும் அந்த இராமாநுசர் அவதாரத்தை அவ்விருவரும் காணும்படி சிறப்பான பேரருள்செய்து, இவரே நமக்கடியவராய், நாம்செய்யவந்த செயலைச் செய்து முடிப்பவராய், இவரது அவதாரமே எல்லார்க்கும் மேம்பட்ட நற்கதிக்கு அழைத்துச் செல்லும் அவதாரமாயிருக்கும், இந்த இராமாநுசரே நம் சமயத்துக்கெல்லாம் ஆசார்ய பீடத்தில் முடிசூடப்பட்டவர் என்று நம்மாழ்வாராலே அருளிச் செய்யப் பட்டதாகையாலே ஸ்ரீமந்நாதமுநிகள் தொடங்கி எமதாசாரியரான ஸ்ரீமணவாளமாமுநிகள் வரை இராமாநுசரே உயர்கதிக்கிட்டுச் செல்லும் ஆசாரியராகவும், அவரது உபதேசமொழி ஒழுக்கங்

களுமே உண்மையான சான்றாகும் என அங்கீகரித்து, அவ்வி ராமாநுசரையே மேலான ஆசாரியராகக் காட்டுகிற குற்றமற்ற நல்லாசார சம்பத்தையுடைய ஸதாசாரியனே பேருதவி செய்த ஆசாரியனாகவும் எண்ணிப் பிறருக்குமுபதேசித்து, (186) ''இராமாநுசரே குருவின் பதத்திற்குத் தகுதி பெற்றவர், அது மற்றவர்க்கில்லை'' என்னும்படி, மற்றொரு விஷயத்தில் இத்தன்மையாம் ஆசாரியத் தகுதியுண்டென்று கூறின், மக்களாகிய அவரவர் பல்வேறு சுவையின் காரணமாக இச்சமயத்தில் முரண்பட்ட தத்துவப்பொருள் புகுந்துவிடும் என்பதை, அதுவருமுன் அறிந்து அவ்அவப் பொருளைக் களைந்து தம்பிரபந்தங்களில் கூறப்பட்ட உபதேச மொழியும் அநுட்டா நங்களுமே கைக்கொள்ளத் தக்கதாயிருக்கும். ஆகையால், எம்பெருமானாரே சரணமென்று காட்டுகிற ஸதாசாரியன் அபிமாநத்தில் ஒதுங்கியிருந்த ஆசாரியனே;

**212. மூலம்:**

*(187) ''மாதா பிதாயுவதய:'' (ஸ்தோத்.5) (188) ''ஐஹிகாமுஷ்மிகம் கு$_{3}$ருஸர்வம்'' (?) ''இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்'' (இராமாநுச. நூற்.106) முதலான இவையெல்லாமாக நினைத்து ஸர்வோத்தாரகரான எம்பெருமானாரே உத்தாரகாசார்யராக அத்யவஸித்து (189) ''க்ஷேமஸ்ஸ ஏவஹி யதீந்த்$_{3}$ரப$_{4}$வச்ச்$_{2}$சிதா நாம்'' (யதிராஜ விம்ஸதி) என்கிறபடியே, அவர்பண்ணின சரமகால ப்ரபத்தியே ரக்ஷக மென்றுபுத்தி பண்ணிக்கொண்டு,*

**விளக்கவுரை:**

(187) தாய், தந்தை, மனைவி, மக்கள் ஆகிய எல்லா உறவும் எனக்கு ஆசாரியராம் நம்மாழ்வாரே என்று ஸ்ரீ ஆளவந்தார் கூறியவாறும், (188) இம்மை மறுமை ஆகிய பயன்களெல்லாம்

எனக்கு ஆசாரியனே ஆவார் என்றும் இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை ஆகிய இறைவன் உகந்தருளிய இத்திவ்வியதேசங் களெல்லாம் ஆசாரியனி ருக்குமிடமாக நினைத்து எல்லா ஆசார்யர்களுக்கும் மேம்பட்டவரான எம்பெருமானாரே உத்தமாசாரியராக மனவுறுதி பூண்டு (189)எதிராசரான எம்பெருமானார் இறுதிக்காலத்தில் இறைவனிடம் பண்ணிய சரணாகதியே நமக்கு நன்மையை அளிக்கும் என்று ஆன்றோர் கூறியவாறே, அந்த இராமாநுசர் தம் இறுதிக் காலத்தில் இறைவனிடம் செய்த சரணாகதியே நம்மைக்காக்குமென்று நினைவிலிருத்திக் கொண்டு,

**213. மூலம்:**

*(190) ஜகதாசார்ய ரசிதே ஸ்ரீமத் வசநபூஷணே- "தத்வஜ் ஞாநம் ச தந்நிஷ்ட$_2$ாம் தே$_3$ஹிநாத$_2$ யதீந்த்$_3$ரமே" (ஸ்ரீவச.தனி.) என்று ப்ரார்த்தித்துக் கொண்டு க்ரமமாக அதில் சொன்ன ஸதநுஷ்டாநங்களை அநுஸந்தித்துக் கொண்டு, அவை கைபுகுரும்படி ஸதநுஷ்டாந ஸம்பந்நரான பரமார்த்தரோடே ஸஹவாஸம் பண்ணிக் கொண்டு, அஹங்காரமக்நிஸ்பர்ஸம் போலே தக்தமாக்குமென்றும், விஷய ஸ்பர்ஸம் விஷபக்ஷணம் போலே முடித்து விடுமென்றும், பாகவதாபசாரம் த்ரிசங்குவைப் போலே கர்மசண்டாளனாக்கி அநந்தரம் தக்தபடம் போலே உருமாய்ந்து போம்படி பண்ணுமென்றும் பயப்பட்டு, பரதோஷ நிரீக்ஷணம் பண்ணப் போகாதே ஸர்வபூததயாபரராய் ஆந்ருஸம்ஸ்யத்தாலே விஹித கர்மம் லோக ஸங்க்ரஹார்த்தம் யதோசிதமாக அநுஷ்டித்துக் கொண்டு ஆஹாராநுவர்த்தநஸஹவாஸ நியதிகளையுடையனாய், தேஹத்திலும் தார புத்ராதிகளிலும் அநுராகத்தை விட்டு, ப்ரக்ருதி விகாரம் பிறந்தால் தர்ம போகபுத்திகளிரண்டும்*

***விட்டு, ஶாஸ்த்ர விஹிதமான ஸ்வதார விஷயத்தில் காதாசிதமாக மூத்ரோத்ஸர்ஜநவத் நிவர்த்திப் பித்துக் கொண்டு, குலாலகீடவத் வர்த்திக்குமவன் பகவத் பிரிய தமனாய் ததநுக்ரஹத்தாலே சரமகாலத்தில் அத்யந்த ஆர்த்தியையுடையவனாய்க் கொண்டு நலமந்த மில்லதோர் நாட்டிலே ஆநந்த நிர்ப்பரனாயிருக்கும்.***

**விளக்கவுரை:**

(190) முக்கோல் துறவிக்கெல்லாம் அரசரே எனக்குத் தலைவரே பிள்ளை உலகாசாரியரால் செய்யப்பட்ட ஸ்ரீவசநபூஷண என்னும் உயர்ந்த சாத்திரத்தில் உண்மை ஞானத்தையும், அதிற் கூறியவாறு ஒழுகும் ஒழுக்கத்தையும் எனக்குத் தந்தருள வேண்டும் என வசநபூஷணத்தனியனில் கூறிய நல்லொழுக்கங்களைப் பேணிக் கொண்டு, அவை கைபுகும்படி நல்ல ஒழுக்கத்தையுடைய சான்றோர்களான மேலான ஆர்த்தியையுடையவர்களோடு கூடிவாழ்ந்து கொண்டு, அகங்காரம் என்பது தீயைத் தீண்டுதல் போன்று தன்னைக் கொளுத்தி விடும் என்றும், மகளிர் இன்பம் முதலானவை நஞ்சைப்போன்று உயிரை அழித்து விடும் என்றும், பாகவதர்க்குச் செய்யும் தீமை திரிசங்கு என்னும் அரசனைப் போலே இழிதொழில் செய்பவனைப் போலாக்கிப் பின்னர் நெருப்பில் வெந்த வேட்டியைப் போல் உருமாய்ந்து அழியும்படி செய்யுமென்றும் அதற்கஞ்சி, பிறர் குற்றத்தைக் கண்டு பேசாதே, எல்லாவுயிரிகளிடத்தும் இரக்கமுடை யவராய், (பிறரிடத்துக்) கருணையினாலே சாத்திரத்தால் விதிக்கப்பட்ட கருமத்தை உலக நலனுக்காக வென்று ஓரளவு அநுட்டித்துக் கொண்டு உணவிலும் அடிமையிலும் கூடி வாழ்தலிலும் எவை எவையார்யாரிடம் இவற்றைச் செய்ய வேண்டும் என வரையறைகளையுடையனாய்,

தேகத்திலும் மனைவி மக்கள் உறவினர் செல்வம் ஆகியவற்றில் பற்றைவிட்டு, புணர்ச்சியின் நிமித்தம் உடலில் விகாரம் பிறந்தால் தருமசிந்தையும், போக சிந்தையும் ஆகிய இரண்டையும் விட்டு சாத்திரம் விதித்த தன் மனையாளிடத்தில் எப்போதோ ஒருமுறை சிறுநீர் கழிப்பது போன்று புணர்ச்சியிலீடுபட்டு அவற்றைத் தவிர்த்துக் கொண்டு, சேறுபடாத பிள்ளைப்புழுவைப் போலே வாழ்பவன், பகவானுக்கு மிகவும் பிரியனாய், அவனருளாலே இறுதிக் காலத்தில் மிகவும் ஆர்த்தியை எய்தி நலமந்தமில்லதோர் நாடான பரமபதத்திற்புக்கு அளவிலா இன்பவெள்ளத்தில் திளைத்து வாழாநிற்பன்.

**214. மூலம்:**

***(191)"கௌந்தேய ப்ரதிஜாநீஹி நமே ப₄க்த: ப்ரணஸ்யதி" (கீதா.9-31) என்கிறபடியே, இவ்வர்த்தம் ஸத்யம். நான் இப்போது சொன்னபடியே த்ருப்த அதிகாரத்திலே நித்யம் நின்று நிர்பரனாய் ஸுகமேயிரும் என்ன ஸந்துஷ்டராய் தண்டம் ஸமர்ப்பித்து நின்ற வளவிலே, நானுமக்கின்னமும் சொல்ல வேண்டுவதொரு பரமார்த்தமுண்டு இவ்வாத்ம குணங்களெல்லா முண்டா னாலும் 'நமக்கு இவையுண்டு' என்கிற அஹங்காரலேசம் தன்னெஞ்சுக்குத் தோற்றினாலும் நஹுஷ ந்ருக யயாதிகளுடைய யஜ்ஞ தாந தபஸ்ஸுக்கள் போலே வ்யர்த்தமாய் பகவந் நிக்ரஹ பாத்ரமாய்ப் போமாகை யாலே, தன்னை நித்ய ஸம்ஸாரிகளிலும் நிக்ருஷ்டத மனாக அநுஸந்தித்துக் கொண்டு, நிரஹங்காரியாய் வர்த்திக்கவேணும். இவ்வர்த்தம் திருவுள்ளம் பற்றியிறே "நீசனேன் நிறைஒன்றுமிலேன்" (திருவாய்.3-3-4) என்றும், (192)"அமர் யாத₃:க்ஷுத்₃ர:" (ஸ்தோத்.62)***

*என்றும், (193) ''ததோ நிக்ருஷ்டே மயி ஸந்நிக்ருஷ்டே'' (ஸ்ரீரங். ஸ்தோத்.7) என்றும், (194) ''பாபாநாம் ப்ரத₂ மோ(அ)ஸ்ம்யஹம்'' (க்ஷ.க்ஷோடஸி.2) என்றும், (195) ''வ்ருத்யாபஸ்ய: (யதிரா. விம்.7) என்றும் நம் முதலிகள் எல்லாரும் அநுஸந்தித்துக்கொண்டு போருவது.*

**விளக்கவுரை:**

(191) ''குந்தியின் பிள்ளாய்! என்னுடைய பக்தன் முன்னர் ஆசாரமற்றவனாயிருந்தாலும் என்னிடத்தில் வேறு பயன் கருதா பக்தியையுடையவனாயிருப்பதால் அவன் அழியமாட்டான் என்னும் இந்த அர்த்தத்தை நீயே ப்ரதிஜ்ஞை செய்வாயாக'' என்று இறைவன் கூறியவாறே, 'இவ்வர்த்தம் உண்மையே; யான் கூறியவாறே துடிப்பெய்தி உடனே பரமபதம் அடையாமல் சிலகாலம் இவ்வுலகினில் நின்று சுமையற்றவனாய் சுகமாக வாழ்வாய்' என்று எறும்பியப்பா வும் அருளிச் செய்ய, சேநாபதியாழ்வான் அதனைக் கேட்டு அவரைத் தண்டனிட்டு நின்ற அளவில், 'நான் உமக்கு இன்னமும் சொல்ல வேண்டியதொரு மேலான பொரு ளுண்டு; அதைக் கேட்பீர்' என்று அப்பா கூறத் தொடங்கினார்.

யாம்முன்பு கூறிய ஆந்மாவுக்கு வேண்டிய அக்குணங்களெல்லாமுண்டானாலும், 'நமக்கு இவை யுண்டு' என்கிற அகங்காரம் சிறிது தன் நெஞ்சுக்குத் தோற்றினாலும், நஹுஷன் நிருகன் யயாதி என்னும் பேரரசர்களுடைய யாகம், தானம், தவம் ஆகியவை போலே வீணாகி பகவானுடைய சினத்திற்கிடமாய்ப் போகுமாகை யாலே, பிரபந்நன் எப்போதும் பிறப்பிறப்புகளில் வீழ்ந்தழியும் இவ்வுலக மக்களைப்போலே தன்னைத்

தாழ்ந்தவனாக நினைத்துக் கொண்டு, அகங்காரமற்றவனாய் வாழவேண்டும். இப்பொருளைத் திருவுள்ளம் பற்றியே, 'நீசனேன் நிறைவொன்று மிலேன்' என்றும், (192) 'வேத மரியாதையைக் கடந்தவன்; மிகவும் தாழ்ந்தவன்' என்றும், (193)'தாழ்ந்த குணங்கள் எல்லாம் என்னிடமே அவை பொருந்தியிருக்கின்றன' என்றும், (194)'பாவங்கள் புரிவதில் முதலாமவன் யான்' என்றும், (195) 'என்னுடைய செயல்களெல்லாம் விலங்கையொத்தன' என்று ஆழ்வார் தொடங்கி நம் பூருவாசாரியர்களெல்லாம் இவ்விதமே தாங்கள் குற்றமற்றவராயினும் குற்றம் புரிந்தவர்போலே தங்களை நினைத்துக் கொண்டிருந்தனர் என்பதையறியலாம்.

**215. மூலம்:**

***இப்படி ஸம்ஸாரிகளிலும் தன்னை நிக்ருஷ்டத மனாக அநுஸந்தித்துக் கொண்டிருக்கை ப்ராப்தமாயிருக்க, பாகவதரிடத்தில் அஹங்கரித்துத்தான் அவர்களோடே ஸமனென்றும், அவரைக் காட்டில் அதிகன் என்றும் நினைத்தானாகில் ஆத்மநாசமாம் என்னுமிடம் சொல்ல வேண்டாவிறே. ஆனால் ஸ்வாமி! பாகவதாநுவர்த்தந க்ரமம் அருளிச் செய்யவேணும் என்ன, இது த்ரிப்ரகாரமா யிருக்குமென்று நம்பிள்ளை அருளிச் செய்வர். ஸத்கார யோக்யரென்றும், ஸஹவாஸ யோக்யரென்றும், ஸதாநுபவயோக்யரென்றும் த்ரிவித மாயிருக்கும். ஸத்கார யோக்யராவார், நாமரூபப்ரதாநர். (196) 'யே கண்ட$_2$லக்$_3$ந துளஸீ நளிநாக்ஷமாலா யே ப$_3$ாஹுமூல பரிசிந்ஹிதசக்ரா: யே வா லலாட ப$_2$லகே லஸதூ$_3$ர்த்$_4$வ புண்ட்$_3$ரா: தே வைஷ்ணவா பு$_4$வநமாசு பவித்ரயந்தி' (பாத்மம்) என்கிற படியே அவனுடைய பேரும் சிந்நங்களும் தரித்திருக்கு மவர்கள். (197) 'சோரோப்யவத்$_4$ய: ப்ஶ்வப சொப்யது$_3$ஷ்ய:***

*ருண்யப்யபீட்$_3$ய: பஶ்ரப்யப$_3$ாத்$_4$ய: யோஹ்யங்கிதோ வைஷ்ணவ லாஞ்ச$_2$ நேந பூஜ்யஶ்ச விஷ்ணோ: ப்ரதிமா ஸமாந:' (?) என்று,*

**விளக்கவுரை:**

இவ்வாறு ஸம்சாரிகளிலும் தன்னை மிகவுந் தாழ்ந்தவனாக நினைத்துக் கொண்டிருப்பதுவே தகுதி யாயிருக்க, பாகவதரிடத்தில் தன் பெருமை பேசி அகங்கரித்துத் தான் அவர்களோடு சமம் என்றும், அவரைக் காட்டிலும் தான் பெரியவன் என்றும் நினைத்தானாகில், 'ஆந்மாவுக்குத் தன்னியல்வு அழியும் என்பதைச் சொல்லவும் வேண்டா மல்லவா! இதனைச் செவியேற்ற சேநாபதி யாழ்வான், 'ஆனால் ஸ்வாமி! அடியேனுக்குப் பாகவதர் களைப் பின்பற்றும் (அல்லது அடிமை செய்யும்) முறைமையை அருளிச் செய்யவேண்டுமென்று' கூற, அருளிச் செய்கிறார் அவரது ஆசாரியரான எறும்பியப்பா; அதாவது, இது மூன்று வகையாயிருக்கும் என்று நம்பிள்ளை அருளிச் செய்வர்; (ஸத்கார யோக்கியரென்றும்) வணங்கி நல்லுபசாரஞ் செய்வதர்க்குத் தகுதியுடையவர் என்றும், கூடிவாழ்வதற்குத் தகுதியுடைவரென்றும், எப்போதும் பகவதநுபவத்தைப் பெற்றுத் தருவதில் தகுதியுடையவர் என்றும் இப்படி மூன்று வகையாகயிருப்பர்.

நல்லுபசாரம் செய்வதற்குத் தகுதியுடையவர் என்பவர், பகவானுடைய சங்கம் சக்கரம் முதலிய குறி களையும் அவன் பெயர்களில் யாதேனும் ஒன்றைப் பெற்றிருப்பர். (196)'எவர்கள் துளசி மணிமாலைகளையும் தாமரை மணிமாலைகளையும் தம் கழுத்தில் சூடியுள்ளனரோ, எவர்கள் நெற்றியில் விளங்கு கின்ற திருமண் என்னும்

நாமத்தை அணிந்துள்ளனரோ, எவர்கள் இரண்டு தோள்களின் அடிப்பாகத்தில் சங்க சக்கரங்களால் குறியிடப் பட்டுள்ள னரோ, அவர்களே வைஷ்ணவர்கள்; இவ்வுலகினைத் தூய்மைப்படுத்துகிறார்கள்' என்று சான்றுகளில் கூறிய படியே, இறைவனுடைய பெயரையும் அவன் சின்னங் களையும் தரித்திருப்பவர்கள். (197)'திருட்டுத் தொழிலால் கெட்டவரும், நாய் மாமிசம் உண்டலால் தூஷிக்கப் பட்டவரும் கடன் கொடுத்தவர்களைத் துன்பத் துக்குள்ளாக்கி யவரும் ஆகிய இவர்கள், இறைவனை அடைவதற்கு முன்னர் இத்தீயத்தொழிலால் தாழ்ந்த பிறவி எடுத்திருந்தாலும் அவர்கள் அனுகூலித்து விஷ்ணுவின் சின்னங்களை தங்கள் அங்கங்களில் தரித்த மாத்திரத்தில் விஷ்ணுவின் அர்ச்சா வடிவை ஆராதிப்பதைப்போல் அவர்களை ஆராதிக்க வேண்டும்'.

**216. மூலம்:**

***இவருடைய ஜன்மவ்ருத்தங்கள் எப்படியிருந் தாலும் அவமதி பண்ண போகாதே, சக்த்யநுகுணமாக கிஞ்சித்காரம் பண்ணி பகவத் விக்ரஹத்தில் அபசாரத் துக்கு பயப்படுமாபோலே, அவ்விஷயத்திலும் பயப்பட்டு அர்க்யபாத்யாதி களாலே திருவுள்ளம் ஸுப்ர ஸந்நமாம்படி ஆராதித்துக் கொண்டு ப்ரவர்த்திக்க வேணும். அவமதி பண்ணினாகில், (198) "மத்$_3$ப$_4$க்தம் ச்வபசம் வாபி நிந்த$_3$ாம் குர்வந்தியே நரா: பத்$_3$மகோடி ஶதேநாபி ந க்ஷமாமிவ ஸுந்த$_4$ரே" என்கிறபடியே பகவந்நிக்ரஹ பாத்ரனாய் (199) "அநாசாராந் து$_3$ராசாராந் அஜ்ஞாத்ருந் ஹீநஜந்மந:, மத்$_3$ப$_4$க்தாந் ச்ரோத்ரியோ நிந்த$_3$ந் ஸத்$_3$யஶ் சண்ட$_3$ாளதாம் வ்ரஜேத்" (?) என்கிறபடியே, கர்ம சண்டாளனாய் விடுமா கையாலே, ஜந்ம வ்ருத்தங்களால் எப்படிப்பட்ட நிஹீந***

***ரானாலும், ப்ரஹ்ம ஹத்யை வருகைக்கு சிகா யஜ்ஞோப வீத தாரணம் போருமாப்போலே, அபசாரத்துக்கு அவ்வளவே போருமாகையாலே, அவமதி பண்ணப் போகாதே கிஞ்சித்காரத்தாலும் ஸ்வநைச்யோக்தி களாலும் உகப்பித்துக் கடக்க வர்த்திக்க வேணும்; ஸஹவாஸ ஸதாநுபவங்களுக்கு யோக்யதை யில்லை.***

***ஸஹவாஸ யோக்யராவார், ஜ்ஞாநப்ரதாநர் (200) அபக$_3$தமத$_3$ மாநை: அந்திமோபாய நிஷ்டை$_2$: அதி$_4$க$_3$த பரமார்த்தை: அர்த்த$_2$காமா ந பேக்ஷை: நிகி$_2$லஜந ஸுஹ்ருத்$_3$பி$_4$: நிர்ஜிதக்ரோத$_4$லோபை$_4$: வரவர முநிப்$_4$ருத்யை: அஸ்து மே நித்யயோக$_3$: (உத்தர தினசர்யா.12) என்கிறபடியே.***

**விளக்கவுரை:**

என்று கூறப்பட்ட ப்ரமாணத்தின்படி, இவர்களுடைய பிறப்பு குலவொழுக்கங்கள், எவ்வாறாயினும், அவர்களை இழித்தும் தாழ்த்தியும் பேசி அவமதிக்காமல், தன்னால் இயன்றளவு உபகாரம் செய்து இறைவனுடைய அர்ச்சைத் திருமேனி உலோகத்தால் ஆனது என்றாற் போன்ற அபசாரத்துக்கு அஞ்சுதற் போன்று, பாகவதரிடத்தும் அஞ்சி அவர் திருக்கை அலம்புதல், திருவடி விளக்குதல் போன்றவை செய்து திருவுள்ளம் மகிழும்படி ஆராதிக்க வேண்டும்.

அவமதிப்பானாகில், (200) ''அழகியவளே! பூமியே! என்னுடைய பக்தன் முன்னர் நாய் மாமிசத்தை உண்டிருந் தானாலும் அவனை யாவர் இழித்து உரைக்கின்றனரோ, அவர்கள் நூறுகோடி வருடம் என்னைத் தாமரை மலர்களால் ஆராதித்தாலும் நான் அவர்களைப் பொறுக்க மாட்டேன்'' என வராகப்பெருமாள் கூற்றுப்படியே, இறைவனுடைய

சினத்திற்காளாகி, ''ஆசாரமில்லாமலிருந்தாலும் கெட்ட ஆசாரத்தையுடையவனானாலும் அறிவின்மை எய்திய பிறவியை உடையவனாயினும், வேத அத்யயனம் செய்தவன் என்னைச் சரணடைந்த என் பக்தனை நிந்தித் தானாகில் உடனே சண்டாளத் தன்மையை அடைகிறான்'' என்கிறபடி, கரும சண்டாளனாகி விடுவான். ஆகையாலே, பிறவியாலும், தொழிலாலும் எத்தன்மையான தாழ்ந்தவரா னாலும் அவர்களை அவமதித்தால் பிராமணனைக் கொன்றபாவம் வருவதற்குச் சிகையும் பூணூலும் தரித்தி ருந்தாலே போதும் அவனைக் கொன்றால் அந்தப் பாவம் சூழ்வதற்கு, அதுபோலே, பாகவதாப சாரத்திற்கு அவ்வளவே போரும். அதனால் பாகவதர்களை அவமானம் பண்ணப் போகாதே அவர்களுக்கு ஏதேனும் உதவுதலாலும் தன்னைத் தாழ்த்திச் சொல்லும் சொற்களாலும், அவர் களை உகப்பித்துக் கடக்க நின்று வாழ்தல் வேண்டும். ஆனால் அவர்களோடு கூடி வாழ்தல் கூடா.

ஸஹவாசயோக்கியர்கள் என்பவர், நிறைஞானம் பெற்றவர். குலம், செல்வம், கல்வி ஆகிய மூவகை மதமற்றவர்கள்; ஆசாரியனே தெய்வம் என்னும் நிட்டையையுடையவர்கள்; ஆர்த்தியையுடைய வர்களும் பொருளின்பத்தில் விருப்பமில்லாமையும் எல்லா மக்களின் நன்மையையே விரும்புவர்களும் கோபத்தையும் ஆசையை யும் விட்டவர்களுமான மணவாளமாமுனிகளின் அடியார் களே எனக்கு எப்போதும் கூடி வாழத்தக்க செல்வமாக விருக்கத் தக்கவர்கள் என்கிறபடி,

**217. மூலம்:**

***த்யாஜ்யோ பததேய விவேகஜ்ஞாந பரிபூர்ணராய், த்யாஜ்யங்களை பரித்யஜித்து உபாதேயத்தைப் பற்றி***

*சரமோபாய நிஷ்டரான த்ருப்தாதிகாரிகள் ஸஹவாஸம் பண்ணுகைக்கும், (201) ''போ₃தய₄யந்த: பரஸ்பரம்'' (கீதா.10-9) என்கிறபடியே, ஒருவருக்கொருவர் ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தனமான சித்த காலுஷ்யம் வாராதபடி போதகராகைக்கும் யோக்யர். ஸதாநுபவயோக்யராவார், அநுஷ்டாநப்ரதாநர்; அவர்கள் ஆரென்னில், த்யாஜ்ய பூமியான இவ்விபூதியில் ஜிஹாஸையும் பிறந்து பகவதனுபவ அலாபத்தாலே பரமார்த்தராய் பாலோந்மத்த பிசாசாவிஷ்டரைப் போலே, நம்முடம்பை மறந்து இருந்த விடத்திலிராதே ஸம்சாரிகளைக் காணவுமாட்டாதே, "இவை யென்னவுலகியற்கை கொடுவுலகம் காட்டேல்'' (திருவாய்.4-9-17) என்றிவர்களோடு இங்கிருக்குமிருப்பு, (202) ''வரம்ஹுதவஹஜ்வாலா பஞ்ஜராந்தர் வ்ய வஸ்திதி:'' (?) என்கிறபடியே, அத்யந்தம் அஸஹ்யமாய், ''கங்கலும் பகலும் கண்டு யிலறியாள்-கண்ணநீர் கைகளால் இறைக்கும்'' ''வட்கிலள் இறையும் மணி வண்ணா வென்னும்'' - ''அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன்- அயற்குஞ் சுற்றும் பற்றி நோக்கி-வெவ்வுயிர்க் கொள்ளும் மெய் சோரும்'' - ''உலோகர் சிரிக்கர் சிரிக்க நின்றாடி'' (திருவாய்மொழி7-2 பதிகச் சொற்றொடர்கள்) என்கிறபடியே,*

**விளக்கவுரை:**

விடவேண்டியவற்றையும் பற்ற வேண்டியவற் றையும் நன்றாக அறிந்தவராய், பகவத் விஷயத்திற்குப் புறம்பானவற்றையெல்லாம் நன்றாக விட்டுக் கைக்கொள்ள வேண்டியதைப் பற்றி ஆசாரிய நிஷ்டையாம் சரமோபாய நிஷ்டரான ஆறியிருக்கும் அதிகாரிகளோடு கூடி வாழ்வ தற்கும், (201) ஒருவருக்கொருவர் பகவத் விஷயத்தைப்

போதித்துக் கொண்டு என்னும்படியே, பிரக்ருதியின் பரிணாமமான உடற் தொடர்பால் வரும் மனக்கலக்கத்தால் பகவத்நிஷ்டையைக் கைவிடுதல் முதலாகிய தவறுதல் வாராதபடி ஒருவருக்கொருவர் உபதேசம் செய்வதற்குத் தகுதிபெற்றவர்.

ஸதாநுபவயோக்கியர் என்பார், அநுட்டாநத்தை முதன்மை யாகக் கொண்டவர். அவர் யாவர் எனின், துன்பம் சூழ்ந்திருத்தலால் விட வேண்டியதான இவ்வுலகத்தில் வெறுப்புப் பிறந்து, பகவதநுபவமின்மையால் மிகவும் வருத்தமுடையவராய், சிறுபிள்ளை, பித்தம் பிடித்தவர் பேய்பிடித்தவர்களைப் போலே, தம்முடம்பை, மறந்து இருந்தவிடத்திராமல் இவ்வுலகமக்களைக் காணவும் மாட்டாமல், இவை யென்ன, உலகவியற்கை, கொடுவுலகம் காட்டேல் என்று இவ்வுலக வரோடு இங்கிருக்குமிருப்பு (202) 'கொழுந்துவிட்டு எரியும் நெருப்பி னுடைய ஜ்வாலைகளாகிற கூட்டினுள் அடங்கியிருத்தல் சிறந்தது; கண்ணனாம் இறைவனுடைய வடிவழகு முதலானவற்றைச் சிந்திக்காத கூட்டத்தில் சேர்ந்திருத்தல் சிறப்பாகாது' என்றும் பிரமாணங் கூறுகிறபடி, இவ்வுலகத்திலிருப்பு மிகவும் பொறுக்ககில்லாததால், கங்குலும், பகலும் கண்துயில் அறியாள்-கண்ணநீர் கைகளால் இறைக்கும்-வட்கிலள் இறையும் மணிவண்ணா வென்னும்-அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன்-அயற்கும் சுற்றும் பற்றி நோக்கி- வெவ் வுயிர்க் கொள்ளும் மெய்சோரும்-உலோகர் சிரிக்க நின்றாடி முதலான திருவாய்மொழிகளில் ஆழ்வார் கூறுகின்றபடி,

**218. மூலம்:**

*திவாராத்ரி நித்ரையற்று பாஷ்பாகுல லோசநராய் லஜ்ஜையை விட்டு திருநாமங்களை ஜல்பித்துக் கொண்டு*

***அழுவது, தொழுவது, அயர்ப்பது, பாடுவது, மோஹிப்பது, தீர்க்கநிச்வாஸம் பண்ணுவது ப்ராந்தரென்று லௌகிகர் நகைக்கும்படி சஞ்சரித்துக் கொண்டு ஸுக துஃக்க மானாவமான நிந்தாஸ்துதி சத்ரு மித்ர லோஷ்ட காஞ்சந ஸமராய் ஜகத்தெல்லாம் பகவதாத்மகமாபாவித்துத் கொண்டு ஸமஸ்த வஸ்துக்களிலும் ப்ராதிகூல்யமற்று (203) "ஸக்ருத்வத$_3$ாகார விலோக நாஶயா த்ருணீக்ருதானுத்தமபு$_4$க்தி முக்திபி$_4$:| மஹாத்மபி$_4$ர் மாமவ லோக்ய தாம் நய க்ஷணேபி(அ)தேயத்$_3$விரே ஹோ(அ)தி து$_3$ஸ்ஸஹ:||" (ஸ்தோத்ர ரத்னம்-56) என்கிறபடியே அவனைக் காண வேணுமென்கிற அபேக்ஷையாலே அநுத்தமபுக்தி முக்திகளை த்ருணீகரித்து அத்தாலே அவனுக்கு க்ஷணமும் தம்மைப் பிரிந்து நிற்கவொண்ணாதபடி அத்யந்த ப்ரியதமரான மஹாத்மாக்கள்.***

**விளக்கவுரை:**

பகலிலும் இரவிலும் உறக்கமற்று நீர்மல்கு கண்ணினராய் வெட்கத்தைவிட்டு எப்பொழுதும் இறைவனின் திருப்பெயர்களைச் சொல்லிக் கொண்டு, அழுவதும் தொழுவதும் அயர்ப்பதும் பாடுவதும் உணர்வின்றிக் கிடப்பதும், பெருமூச்செறிவதுமாய், பித்தர் என்று இவ்வுலகோர்கள் சிரிக்கும்படி உலாவிக் கொண்டு, இன்பம் துன்பம் மாநம் அவமாநம் பழிப்புப் புகழ்ச்சி பகைமை நட்புடைமை இவைகளில் ஒருபடிப்பட்ட மனத்தையுடையவராயும், மண் என்றும் பொன் என்றும் பாராது அவற்றில் சமநிலையெய்தி இயங்கும் உலகத்தை எல்லாம் இறைவனாகவே எண்ணிக் கொண்டு, எல்லாம் பொருட்களிலும் விரோதமற்று, (203)இறைவனே! அந்தப் பெரியோர்களின் பிரிவானது, உனக்கு ஒரு கணப்பொழுதும்

மிகவும் பொறுக்க முடியாததா யுள்ளதோ அப்படிப்பட்ட மகான்கள், ஒருகால் உன்னுடைய திருமேனியைக் காணவேண்டும் என்னும் வேட்கையால் மேலான இவ்வுலக அவ்வுலக இன்பங்களையும் மோட்சத்தையுங்கூட துரும்பைப் போல் நினைக்கத் தக்க பெருமையை யுடையவர்களான பெரியோர்களால் அருள் நோக்கும் செய்யக்கூடிய தன்மையை எனக்குச் செய்வாயாக என்று எம்பெரு மானைக் குறித்து பரமாசாரியரான ஸ்ரீஆளவந்தார் கூறியவாறு, இறைவனைக் காணவேண்டும்படியான விருப்பத்தாலே உலகவின்பத்தையும் முக்தியையும் புல்லென மதித்து அதனால் அவ்விறைவனுக்கும் சிறு பொழுதும் தம்மைப் பிரிந்திருக்க வொண்ணாதபடி மிகவும் பிரிய முடைய உயர்ந்த மகான்களாவர்.

219. மூலம்:

*இப்படிப்பட்ட அதிகாரிகளையாயிற்று ஆசார்யர் களாக வரணம் பண்ணவும், தீர்த்த ப்ரஸாத ஸ்வீகாரம் பண்ணவும் யோக்யராய் இச்சேதனரைக் கரையேற்ற வல்லரென்று விச்வஸிக்கத் தக்கது.*

*இதில், ப்ரதமாதிகாரிகள் ஜந்மாந்தரத்திலொழிய இஜ் ஜன்மத்தில் கரையேறப் பெறார்கள்; தம்மிடத்தில் அபசாரப்பட்டாரை நசிப்பிக்க வல்லவராவதே அவர்க ளுக்கு அதிகாரம். இரண்டாம் அதிகாரி ஸஹவாஸ யோக்யனாய் ஜ்ஞாப்ரதாநத்தாலே ஒருவனுக்கு ஸஹகரித் துத் தன்னுடைய ஆசார்ய ப்ரஸாதத்தாலே தான் கரையேற வல்லனாய் உஜ்ஜீவிப்பதே அவனுக்கேற்றம். மூன்றாம் அதிகாரியாயிற்று ஸர்வேச்வரனுக்குப் பிராட்டியைப் போலே அத்யந்த ப்ரியதமனாய், ஸர்வேச்வரனை ப்ருகுடீபடனாக வசீகரித்துக் கொண்டு, "கீழ்மேல் எமரேழ்*

*எழுபிறப்பும் மாசதிர்இதுபெற்று நம்முடைய வாழ்வுவாய்க்கின்றவா" (திருவாய். 2-7-1) என்றும், "எமர்கீழ் மேலெழு பிறப்பும் விடியா வெந்நரகத்தென்றும் சேர்தல் மாறினரே" (திருவாய். 2.6.7)*

**விளக்கவுரை:**

இத்தன்மையான அதிகாரிகளை ஆசாரியராகப் பற்றுவ தற்கும் அவர் அளிக்கும் தீர்த்த பிரசாதங்களை ஏற்றுக் கொள்ளு தற்கும் தகுதியுடையவராய், தன்னைப் பற்றிய மனிதர்களைப் பிறவிச் சூழலிலிருந்து கரை யேற்றவல்ல வரென்று (விச்வாசம்) நம்பிக்கைக் கொள்ளத் தக்கதாம்.

இவற்றில் முற்கூறப்பட்ட ஸத்காரயோக்கியரான முதலதிகாரிகள், வேறு பிறவியிலொழிய இப்பிறவியில் மோட்சத்தை அடைய மாட்டார்கள். இவர்களுக்கு அதிகாரம், தங்களிடத்தில் அபசாரம் செய்தவரை அழியச் செய்வதே வல்லமையாகும். இரண்டாவது அதிகாரி, கூடிவாழ்தற்குத் தக்கவனாய் தன்னுடைய நிறை ஞானத்தாலே ஒருவனுக்கு உதவி, தனது ஆசாரியன் அருளாலே தான் கரையேற வல்லவனாய் மோட்சமடைவதே அவனுக்கு ஏற்றமாம். மூன்றாம் அதிகாரியான சதாநுபவயோக்கியன் என்பவனே, இறை வனுக்கு திருமகளாம் பிராட்டியைப் போலே மிகவும் பிரியமான உயர்ந்தவனாய் இறைவனைத் தன் சொல்வரும்படி வசீகரித்துக் கொண்டு "கீழ்மேல் எமரேழ் எழுபிறப்பும் மாசதிர் இதுபெற்று நம்முடைய வாழ்வுவாய்க்கின்றவா" என்றும், "எமர்கீழ் மேலெழு பிறப்பும் விடியா வெந்நர கத்தென்றும் சேர்தல் மாறினரே";

**220. மூலம்:**

*என்றுஞ் சொல்லும்படி, தம்முடைய ஸம்பந்த*

ஸம்பந்திகளையும் உத்தரிப்பிக்கவல்ல ஸமர்த்தனாவது -ஆசார்யவரணம் பண்ணுவதும் தீர்த்த ப்ரஸாதங்கள் ஸ்வீகரிப்பதும் தத்ஸம்பந்தத்தாலே தன்னுடைய அவித்யா கர்ம வாஸநா ருசிகள் நசித்து தானுஜ்ஜீவிக்க வேணுமிறே; அந்த உஜ்ஜீவநம் அஹங்காரத்தையும் விஷயங்களையும் விரும்பி தாம் நசித்துப் போவாரும், பனைநிழல்போலே தாம் தாங்கள் பராதீநராய் உஜ்ஜீவி(ப்பி)த்துப் போவாரும் இவனைக் கரையேறும்படிப் பண்ணி இவனுக்கு (மோக்ஷத்தை) லபிக்கப் பண்ண மாட்டாறிறே; ஆகையிறே, *(204) "பி$_4$ந்ந நாவாச்ரயஸ் தப்தோ யத$_2$ாபாரம் ந க$_3$ச்ச$_2$தி" (?)* என்று அநதிகாரி ஸம்பந்தம் ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமாய் விநாசஹேதுவாகச் சொல்லப்பட்டது. அபிமாந தூஷித ருடைய தீர்த்த ப்ரஸாதாத்யங்கீகாரம் ஜ்ஞாந மாந்த்ய ஹேது; உபாயாந்தர நிஷ்டருடைய தீர்த்த ப்ரஸாதாத் யங்கீகாரமும் ஜ்ஞான மாந்ய ஹேது என்று சொல்லப் பட்டதாகையாலே, ப்ரண வோக்த பாகவத சேஷத்வ பர்யந்த பகவச்சேஷத்வ ஜ்ஞான ஸௌந்யரான அஹங்கார க்ரஸ்தருடையவும், மத்ய பதோக்த ஸித்தோ பாயாத்ய வஸாமில்லாத உபாயாந்தர நிஷ்டருடையவும், சரமப தோக்த அநந்யபோகத்வ ஸ்வரூபஜ்ஞாந ஸௌந்யராய்,

**விளக்கவுரை:**

என்று ஆழ்வார் கூறும்படி தம்முடைய சம்பந்தம் பெற்றவர் அனைவரையும் மேற்கதிக்கு அழைத்துச் செல்லும் வல்லமையுடையவராவர்.

ஒருவன் ஆசாரிய சம்பந்தம் பெறுவதும், அவரது தீர்த்த பிரஸாதங்களையேற்பதும் அந்த ஆசார்யன் சம்பந்தத்தாலே தனது அறிவின்மை புண்ணியபாவங்கள்

அவற்றால் வரும் தீய பழக்கம் அதனால் தீயவற்றில் விளையும் சுவை முதலானவை அழிந்து தான் முக்தியடைய வேண்டுமல்லவா. இவ்வாறு உய்வடையாமல், அகங் காரத்தையும் புலன் விஷயங்களையும் விரும்பித் தாம் கெட்டழிந்து போகக்கூடிய ஆசாரியராயி ருப்பவர், தன்னையடைந்த மனிதனைக் கரை யேறும்படிச் செய்து இவனுக்கு முக்திகிடைக்க வழி செய்ய மாட்டார். ஆகையால் அல்லவா, (204) ''ஓட்டை ஓடத்தைப் பற்றிய வரை அவ்வோடமானது நீர்முகந்து தன் மீதமர்ந்துள்ளவரைக் கரை யேற்ற மாட்டாது கடலில் அமிழ்ந்துவிடும்'' என்கிறபடி, அதனால் தான் (தாழ்ந்த) அதிகாரியின் தொடர்பு ஓட்டையோடத்தோடு ஒழுகல் ஓடமாய் அழிவுக்குக் காரணமாகக் கூறப்பட்டது.

கெட்ட அபிமானத்தை உடையவரது தீர்த்த பிரசாதத்தை ஏற்றுக் கொள்ளுதல் ஞானக்குறைவிற்குக் காரணமாம்; வேறு உபாயத்தைக் கைக்கொண்டவரது தீர்த்த பிரசாதத்தை ஏற்பதும் ஞானக்குறைவிற்குக் காரணமாகும். வேறு பயனைக் கொள்பவர் தீர்த்த பிரசாதமும் ஞானக் குறைவிற்குக் காரணமாகும் என்று சாத்திரங்களில் கூறப் பட்டதாகையால், பிரணவத்தில் மறைந்த நான்காம் வேற்றுமையாற் கூறப்பட்ட அடியார்க்கடிமைப்படுவது வரையிலான பகவானுக்கு அடிமைப்படுவது என்னும் ஞானமில்லாத அகங்காரத்தோடிருப்பவருடையவும், நடுவில் பதமான நமப்பதத்திற் பொருளாற்றலாற் கூறப்பட்ட இறைவனே உபாயம் என்ற ஸித்தோபாயத்தில் நம்பிக்கை யற்று வேறு உபாயத்தைப் பற்றியவருடையவும், இறுதிப் பதமான ஆய என்ற பதப்பொருளான இறைவன் தவிர்த்த வேறு பயனை விரும்பாமையாகிற உண்மை அறிவு

இல்லாதவராய், ஐம்புலனின்பத்திலீடுட்டவராய், பிள்ளை மனைவி பொருள் முதலியவற்றில் பற்றுடையவராய்,

**221. மூலம்:**

*சப்தாதி விஷயப்ரவணராய் புத்ரதாராதி ஸக்தராய் ஸம்ஸார பத்தரான ப்ரயோஜநாந்தர பரருடையவும், தீர்த்த ப்ரஸாத ஸ்வீகாரங்களும் ஆதி சப்தத்தாலே தத்ஸஹவா ஸமும் ஜ்ஞாநமாந்த்ய ஹேதுவாகையாலே த்யாஜ்ய மென்று 'ப்ரமேயரத்நத்திலே' சொல்லப்பட்ட தாகையாலே, மந்த்ரார்த்த ஜ்ஞாநாநுஷ்டாநஹீநராய் அஹங்கார அர்த்த காம பரவசரானவரோடே ஸஹவாஸ ஸதாநுபவங்கள் தூரத: பரிஹரணீயங்களாயிருக்கும்.*

ஆனால், ஸத்காரயோக்யரிடத்தில் தீர்த்தாத்யங்கீ காரம் பரிஹரித்தால், தான் அதிகாரியென்கிற அஹங்கார மும், அவர் திருவுள்ளங் கலங்கி அத்தாலே தோஷமும் வாராதோ? என்னில், அவர் பக்கல் தோஷமும், தன் பக்கல் குணாதிக்யமும் உண்டென்று நினைத்தாலிறே தோஷம் வருவது, அப்படி நினையாதே அவர் என் செய்வர்? அவித்யா ப்ரபாவம் இதுவென்று, தனக்கு ஸித்தித்த மாத்ரம் ஸத்கரித்து, அத்தோஷம் அவர் மேலே ஆரோபித்து நிந்திக்கப் போகாதே ப்ரணி பதாதிகளாலே ஸவிநயமாக வர்த்தித்தால் ஒரு தோஷமும் வாராது. தன்னை ஸம்ஸாரி களிலும் நிக்ருஷ்டதனமாக அநுஸந்தித்துக் கொண்டு தனக்குண்டான குணங்களுக்கடி ''அதுவும் அவன தின்னருளே'' (திருவாய்.8-8-3) என்று அவனுடைய நிர்ஹேதுக கடாக்ஷமென்றிருந்தால், அஹங்காரம் வாராது.

**விளக்கவுரை:**

ஸம்சாரத்தில் கட்டுண்டவரான வேறு பயனை விரும்பக் கூடியவருடையவும் தீர்த்த பிரசாதத்தை ஏற்றுக் கொள்ளுதலும் ஆதி சப்தத்தாலே அவர்களோடு கூடி வாழ்தலும் ஞானங்கெடுதலுக்குக் காரணமாகையாலே அவர்கள் விடத்தக்கவர்கள் என்று பிரமேயரத்தின நூலில் அருளிச் செய்யப்பட்டதாகையாலே, திருமந்திரத்தில் கூறப் பட்ட ஞானத்தையும் அநுட்டானத்தைக் கைக்கொள்ளாத அகங்காரம் பொருள் இன்பத்திலீடுபட்டவரோடு கூடி வாழ்தலும் அவரோடு பழகுதலும் வெகு தூரத்தில் விடத்தக்கவை யாயிருக்கும்.

ஆனால் ஸத்காரயோக்கியரிடத்தில் தீர்த்தம் பிரசாதம் முதலான வற்றை ஏற்றுக் கொண்டால் தான் அதிகாரி என்கிற அஹங்காரமும் அவரது திருவுள்ளங் கலங்கி அதனால் தோஷமும் வாராதோ? எனின், அவரிடத்து தோஷமும், தன்னிடத்துக் குணநிறைவும் உண்டென்று நினைக் கில்லவோ, தோஷம் வருவது. அவ்வாறு நினையாமல், அவர் என் செய்வார்? (அவித்யாம்) அதிவின்மையாம். மாயையின் பெருமை அவரிப்படியிருக்கிறார் என்று நினைத்து, தனக்கு வாய்த்த அளவு அவரை உபசரித்து ஞாநாநுட்டாநமில்லாத அந்தக் குற்றத்தை அவர் மேலேறிட்டு அவரை நிந்திக்காமல், கை, கால் அலம்புதலுக்கு நீர் கொடுத்து உபசரித்து நடந்து கொண்டால், ஒரு குற்றமும் வாராது. தன்னை ஸம்சாரி களிலும் தாழ்ந்தவனாக நினைத்துக் கொண்டு தனக்கு ண்டான குணங்களுக்கடி ''அதுவும் அவனதின்னருளே'' என்று இறைவனுடைய ஒரு காரணமும் பற்றாத இன்னருளே என்றிருந்தால் இந் நற்குணமுடையோனுக்கு அஹங்காரம் வாராது என்றவாறு.

**222. மூலம்:**

*கலக்கம் வருமென்று அவர் திருவுள்ளமநுஸரிக்கப் புக்கால் அவர் ஒரு நிஷித்தாநுஷ்டாநம் பண்ணுமென்று நியமித்தாராகில், அதுவும் செய்ய வேண்டிவரும். ஆகையாலே, அவருக்குத் திருவுள்ளங் கலங்குமென்று அத்தைச் செய்யப் போகாதே, ஆகையாலே தன்னாலே அவர்களுக்கொரு விரோதம் வாராதபடி வர்த்திக்குமதே அவர்களிடத்தில் வேண்டுவது. ஸஹவாஸ யோக்யரி டத்தில் தீர்த்த ப்ரஸாதாங்கீகாரத்துக்கு குணதோஷங்கள் இரண்டும் இல்லை. சரமாதிகாரி பக்கல் அங்கீகாரமே இவனுக்கு ஸமுத்தாரகஹேது. இதுக்கு வர்ணாச்ரம நியமமும், ததநுகுணவ்ருத்தி நியமமில்லை. அதிகாரி நியமமேயுள்ளது. இவ்வர்த்தம் ''பயிலுந் திருவுடையார் எவரேலும்'' (திருவாய். 3-7-1)என்றும், ''வானுளார் அறியலாகா வானவா வென்பராகில்-போனகஞ் செய்த சேடந் தருவரேல் புனித மன்றே'' (திருமாலை.41) என்றும், எப்படிப்பட்ட நிஹீனஜந்மவ்ருத்த ரானாலும் பகவதநுபவ ஸம்பத்தியுடையராய், உபாயோபேயாதிகாரிகளானால் நமக்கு ஸ்வாமிகளென்றும் தீர்த்தாத்யங்கீகாரத்துக்கு யோக்யரென்றும் ஆழ்வார் அருளிச் செய்தாரிறே.*

**விளக்கவுரை:**

பாகவதாபசாரம் என்னுங்கலக்கம் வருமென்று ஸத்கார யோக்கி யராம் அவர் திருவுள்ளத்தை அநுசரிக்கப் புகுந்தால்;- அவர் திருவுள்ளம் அநுசரிக்கலாவது. அவர் மேற்கொள்ளும் தாழ்ந்த ஆசாரத்தை. அந்த ஆசாரத்தை நீரும் செய்யுமென்று நியமித்தாராகில், அதையும் செய்ய வேண்டி வரும்.

ஆகையாலே அவர் திருவுள்ளங் கலங்குமென்று அவற்றைச் செய்யப் போகாது. ஆகையால், தன்னாலே அவர்களுக்கு ஒரு விரோதம் வாராதவாறு நடந்து கொண்டு வாழ்தலே அவர்களிடத்தில் தான் செய்யத் தக்கது. ஸகவாச யோக்கியரிடத்தில் தீர்த்த பிரசாத அங்கீகாரத்திற்கு குணதோஷங்கள் இரண்டுமில்லை. ஆகையால் அவர் கொடுப்பதை ஏற்றுக் கொள்ளலாம். இறுதி நிலையாம் அதிகாரியான ஸதாநுபவ யோக்கியரிடத்தில் அங்கீகாரமே நல்லோனுக்கு நற்கதி அடைவதற்குக் காரணமாகும்.

இதற்கு வருண ஆச்ரம நியமமும் அதற்கேற்ற குணமும் செய்கையுமாகிய நியமமுமில்லை. அதிகாரி நியமமே உள்ளது. அதிகாரி நியமமாவது; முற்கூறப் பெற்ற ஸதாநுபவயோக்கியர் இவர்களிடத்தில் தான் தீர்த்தம் முதலானவை கொள்ளத்தகும் என்றவாறு இப்பொருளை ''பயிலும் திருவுடையார் யவரேலும்'' என்ற திருவாய் மொழியிலும், ''வானுளார் அறியலாகா வானவா! என்பராகில் போனகஞ் செய்த சேடம் தருவரேல் புனித மன்றே '' என்று திருமாலையிலும் ஓதப்பட்டவாறே, பகவானை அடைவ தற்கு முன்னர் எத்தன்மையான இழிபிறப்பும் தாழ்ந்த செயலுமுடையவரானாலும் பகவதநுபவமாகிற செல்வத்தை யுடையராய், பகவானே தமக்கு உபாயமும் பயனும் என்ற நிஷ்டையுடைய அதிகாரிகளானால், அவர்களே நமக்கு ஸ்வாமிகளென்றும், தீர்த்த பிரசாதங் கொள்வதற்குத் தகுதியுடையவரென்றும் நம்மாழ்வார், தொண்டரப்பொடி யாழ்வார் ஆகியோர் அருளிச் செய்தார்கள் அல்லவா.

**223. மூலம்:**

***ஆனால், ஸ்வாமிந்! நாம ரூபதாரிகளிடத்திலும், அவமதி பண்ணாதே அநுவர்த்திக்க வேணுமென்று தேவர்***

*அருளிச் செய்தது, "தமர்களில் தலைவராய சாதியந்தணர் களேலும்" (திருமாலை-43) என்றும், பாகவதாக்ரகண் யராய் ப்ராமணோத்தமரானாலும் பாகவதாபசாரபரர் சண்டாளராவ ரென்று தொண்டரடிப்பொடியாழ்வாரும், நாமரூபங்களையுடையராய் பாகவதாபசாரம் பண்ணி னாலும் த்ரிசங்குவைப் போலே கர்ம சண்டாளராவரென்று பிள்ளைலோகாசார்யரும் அருளிச் செய்த அர்த்தங் களுக்குப் பூர்வோத்தர விரோதம் வாராதபடி விசாரித்து ஹிதோபதேசம் பண்ண மாட்டாதே, தன் நெஞ்சில் தோற்றினதே சொல்லுமவர் மூர்க்கராவாரென்று விபரீ தார்த்த போதகரான ஆசார்யனையும், "ஓர்த்து நெஞ்சே! முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டு" (உபதே. மாலை-68) என்றும், நாமரூபங்களைக் கண்டு அவர் சொல்லிற்றெல்லாம் மெய்யென்று பூர்வர்களாசரித்த ஆசாரத்தையறியாதவர்கள் பேசுகின்ற வார்த்தை களைக் கேட்டு மருளாதே அவர்களுடைய ஸ்வரூப ஸ்வபாவங் களை நன்றாகப் பரிசீலநம் பண்ணி அஜ்ஞாந கேவல நாஸ்திகரையும், ஜ்ஞாநத்தையுடையவராய் அநுஷ்டாந மில்லாத ஆஸ்திக நாஸ்திகரையும் மூர்க்கரென்று பரித்யஜித்து,*

**விளக்கவுரை:**

ஆனால் ஸ்வாமிகாள்! இறைவனுடைய பெயரையும் அவனது சின்னங்களைத் தரித்தவர்களையும் அவமதிக்காமல் அவர்கள் மனங் கொள்ளும்படி உபசாரஞ் செய்தல் வேண்டுமென்று தேவரீர் அருளிச் செய்தது, "தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும்" என்றும், "பாகவதர் களில் தலைவராய் அந்தணர்களில் சிறந்தவரானாலும் பாகவத அபசாரம் செய்தவர்கள் கீழ்ச் சாதியினராவார் என்று

தொண்டரடிப்பொடியாழ்வாரும், இறைவனது பெயரையும் உருவத்தையும் உடையவராய் பாகவதாபசாரம் செய்தாலும் திரிசங்கு என்னும் அரசனைப் போல் கரும சண்டாளர் ஆவார் என்று பிள்ளைலோகாசார்யரும் அருளிச் செய்தப் பொருள்களுக்கு முன்பின் விரோதம் வாதாபடி ஆராய்ந்து நல்உபதேசம் செய்ய மாட்டாமல், தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லக்கூடியவர் மூர்க்கராவார் என்று, மாறுபட்ட பொருளைக் கூறும் ஆசார்யனையும், ''ஓர்த்து நெஞ்சே! முன்னவரும் பின்னவரும் மூர்க்கரெனவிட்டு'' என்று மணவாளமாமுனிகள் கூறின படியும் இறைவனின் பெயரையும் வடிவத்தையுங் கண்டு அவர்கள் கூறிற் றெல்லாம் மெய்யென்று, முன்னோர்களாசரித்த ஆசாரத்தை அறியாதவர்கள் கூறுகின்ற வார்த்தைகளைக் கேட்டு மருளாதே அவர்களுடைய உண்மையான இயல்பையும் சுபாவங்களை நன்றாக ஓர்ந்து தேர்வு செய்து அறிவொன்று மில்லாத நாத்திகரையும், ஞாநமாத்திரமுடையவராய், அநுட்டாநமில்லாத ஆத்திக நாத்திகரையும் மூர்க்கர் என்று நன்றாக விட்டு;

224. மூலம்:

**ஆஸ்திகரையே அநுவர்த்திக்க வேணுமென்று பெரிய ஜீயரும், பாகவத நாமரூபங்களுடையரானா ரையும் அவமானம் பண்ணச் சொல்லுகிறது என்? என்ன, விபரீத போதகரான ஆசார்யரையும் நிஷித்தாநுஷ்டா நபரராய்த் திரிகிற பாகவதரையும் அவமதி பண்ணச் சொல்லாதே, பஹுமந்தவ்யராகச் சொன்னால், அவருடைய உக்தி அநுஷ்டானங்கள் உத்தேச்யமென்று அஜ்ஞர் ஆசரித்துப் போனால் விநாசம் வருமென்று சேதனருடைய ஹிதத்தைப் பார்த்து ஸஹவாஸாதி**

*களுக்கு, அயோக்யராகச் சொல்லிற்றாகக் கொள்ள வேணும். இப்படி நினையாதே, நிஷித்தாநுஷ்டாநபரர் அவமதிக் கைக்கு யோக்யரென்றால் (205)"அநாசாராந் து₃ராசாராந்" (?) என்றும், (206)"மத்₃ ப₄க்தம் ச்வபசம்வாபி" (?) என்று தொடங்கி, (207) "நக்ஷமாமி கத₃ாசந" (காருடம்) என்று, ஸர்வேச்வரன் அருளிச் செய்த வசநங்களோடு விரோதிக்கும். ராஜகுமாரரை ராஜாவே சிக்ஷிக்க வேணு மித்தனையொழிய, பிறர் அவமதி பண்ணப் போகாதிறே. அர்த்த ஸ்திதி இதுவானாலும் ஆசார்யர்கள் ஹிதோபதேசம் பண்ணுகிற தந்தாமுடைய க்ரந்தங்களிலே லோகஹிதார்த் தமாக அபதே ப்ரவ்ருத்தரைக் கண்டு, எல்லாரும் அப்படியே ப்ரவர்த்திப் போகாதபடி யருளிச் செய்தாராகை யாலே அது, சேதநோஜ்ஜீவந ஹேதுவாய் அவன் திருவுள் ளத்துக்கு காலுஷ்யம் வாராதென்றும் ப்ரஸந்நமாம்.*

**விளக்கவுரை:**

சாத்திரங்கூறும் நெறியை அறிந்த ஆத்திகரையே பின்பற்ற வேண்டுமென்று ஸ்ரீமந்மணவாளமாமுனிகளான பெரியசீயரும், பாகவதருடைய பெயரையும் வடிவத்தையு முடையவரையும் அவமதிக்கச் சொல்லியிருக்கிறார்களே அதுவென்? என்று சேநாபதியாழ்வார் தம்மாசாரியரான எறும்பியப்பாவை வினவ, அதற்கு அவர் சாத்திரத்துக்கு முரண்பட்ட பொருளை உபதேசிக்கும் ஆசாரியரையும், கெட்ட வொழுக்கங்களை மேற்கொண்ட பாகவதரையும் அவமதி பண்ணச் சொல்லாமல் பலரிடத்து ஞானம் பெற்றுச் சிறந்த கேள்வி ஞானம் பெற்றவர் என்று அவர்களைச் சொன்னால், அவர்களது பேச்சும் அநுட்டானங்களும் ஏற்றுக் கொள்ளத்தக்கன என்று ஞானமில்லாதவர்கள் அவ்வாசாரத்தைக் கைக்கொள்வ ரானால் அவர்களுக்கு நாசம் வருமென்று மக்களுடைய

நன்மையைப் பார்த்து அந்த முதலதிகாரியான ஸத்கார யோக்கியரை அவர்களோடு கூடிவாழ்தற்குத் தகுதியற்றவர் என்று கொள்ளவேண்டும். இப்படி நினையாமல், ஸத்கார யோக்கியரை கெட்ட ஒழுக்கமுடையவர் என்று அவரை அவமதித்தால் (205) "ஆசாரத்தை விட்டவர்களாயும், கெட்ட ஆசாரத்தையுமுடைய வர்களான என்னுடைய பக்தர்களை நிந்திக்கிறவன் அந்தணனானாலும் உடனே சண்டாளனாகிறான்" என்றும், (206) "என்னை அடைவதற்கு முன் நாயினது மாமிசத்தை யுண்டானேயாகிலும் அந்த என் பக்தனை அவமானம் பண்ணியவனை என்று தொடங்கி, நான் பொறுக்க மாட்டேன்" அவனை அசுரப் பிறவிகளில் தள்ளுவேன்" என்று எம்பெரு மான் தன் சோதிவாய் திறந்து அருளிச் செய்த வசனங்களோடு விரோதிக்கும்.

அரசகுமாரரை அவ்வவ் அரசனே தண்டிக்க வேண்டுமொழிய, பிறர் அவமதிக்கப் போகாதல்லவா. ஆதலால், பாகவதர் குற்றமிழைத்தால் அவரை நாம் தண்டிக்கக்கூடாது என்று கருத்து. அர்த்தத்தினுடைய தன்மை இதுவானாலும் ஆசாரியர்கள் நல்லுபதேசம் பண்ணுதற்காகத் தங்களுடைய நூல்களில் உலக நன்மையின் பொருட்டு கெட்ட ஒழுக்கத்தில் ஈடுபடுபவரைக் கண்டு அவரை திருத்துவான் பொருட்டு, எல்லோரும் அவர்வழி ஒழுகாமலிருக்கும்படி அருளிச் செய்யப்பட்டவையாகை யாலே, அது மக்கள் உய்வடைவதற்குக் காரணமாய் இறைவன் திருவுள்ளத்தை மகிழ்விப்பதற்கேயன்றி எக்குற்றமும் வாராதென்று காட்டியவாறாம்.

**225. மூலம்:**

*அவர் அருளிச் செய்தாரென்று நாமும் அப்படியே சொன்னால், அநேகர் மாயாபலத்தாலே பத்த ஸம்ஸாரி*

களாய் அர்த்த காமபரவசராய் துர் விஷய ப்ரவணராய் விபரீத ப்ரவ்ருத்தராயிருக்கையாலே அபசாரம் வரும். கேவல ஸம்ஸாரிகள் தோஷங்கண்டாலும் அவர்களை நிந்திக்கப் போகாது, அது தன்னதென்று நினைக்க வேணுமென்று சொல்லாநிற்க, ஸதாசார்ய ஸம்பந்தமும் நாமரூபங்களும் அருளிச் செயலும் உள்ள விடங்களில் தோஷமுண்டானாலும் மூர்க்கரென்று அவமதி பண்ணப் போகாது.

**226. மூலம்**

***ஆகையாலே, ''விண்ணுளார் பெருமாற் கடிமை செய் வாரையும் செறும் ஐம்புலன் இவைமண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா'' (திருவாய்.7-1-6) என்றும், ''இன்னமு தெனத் தோன்றி ஓர் ஐவர் யாவரையும் மயக்க நீவைத்த முன்னமாயம்'' (திருவாய். 7-1-8) என்றும், ''துயக்கறு மதியில் நன்ஞானத் துள் அமரரைத் துயக்கும் மயக்குடைய மாயைகள்'' (திருவாய். 1-3-10) என்றும் அஸ்கலித ஜ்ஞானரான ஸூரிகளையும் மோஹிக்கப் பண்ணுகிற மாயா ப்ரபாவமென்று நினைத்து, கேட்பாராகில் ஹிதவசநம் விண்ணப்பம் செய்வது; இல்லையாகில் ஐயோ! என்று கண்ணநீரோடே மீண்டு சக்தியநுகுணமாக கிஞ்சித்கரித்து ஸவிநயராய் ஒரு தண்டன் ஸமர்ப்பித்து, ஸஹவாஸதீர்த்தங்கீகாரம் பண்ணப் போகாதே ஸ்வநைச்ய பாஷணங்களாலே யுகப்பித்துக் கடக்க நிற்கவேணும்.***

**விளக்கவுரை:**

அதாவது நம்முடைய பூருவாசாரியர்கள் தம்

நூல்களில் இன்றியமையாமையைப் பற்ற மந்தாதிகாரிகளை நிந்தித்துக் கூறியுள்ளனர் என்று நாமும் அவ்வாறே அவர்களை நிந்தித்துக் கூறினால், பலர், அவர்கள் இறைவனது மாயாசக்தியால் ஸம்சாரத்தில் கட்டுப்பட்டவராய், பொருள் இன்பங்களில் வேட்கையுடையவராய், கெட்ட விஷயத்தில் ஈடுபாடு கொண்டவராய், மாறுபட்ட வழிகளில் நடப்பவர் களாயிருப்பதாலே, நமக்கும் அபசாரம் வரும். சுத்த ஸம்சாரிகளது குற்றங்களைக் கண்டாலும் அவர்களை நிந்திக்கப் போகாது என்று திருமங்கை மன்னன் முதலான ஆழ்வார்களுங் கூறா நிற்க, நல்லாசாரிய சம்பந்தமும் இறை வனது பெயரையும் திருமண் சங்கு சக்கரம் ஆகியவற்றைப் பொருத்திக் கொண்ட வடிவங்களும் அருளிச் செயல் ஓதுதல் உள்ள இடங்களில் தோஷமுண்டானாலும் அவர்களை மூர்க்கரென்று அவமதிக்கவொண்ணாது.

ஆகையாலே, ''விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா'' என்றும், ''இன்னமுதெனத் தோன்றி ஓர் ஐவர் யாவரையும் மயக்க நீ வைத்த முன்னமாயம்'' என்றும், ''துயக்கற மதியில் நன்ஞானத்துள் அமரரைத் துயக்கும் மயக்குடை மாயைகள்'' என்றும் திருவாய் மொழியில் கூறுகிறவாறு, கலங்கா அறிவினையுடைய நித்ய சூரிகளையும் மயங்கப் பண்ணுகிற இறைவனின் மாயையின் பெருமை யென்று நினைத்து, அவர்கள் சிறந்த ரகசிய விஷயங்களைத் தக்கோரிடத்தில் கேட்க வேண்டும் என வந்து கேட்பாராகில் அவற்றை (ஹிதவசநத்தை) அவர்களுக்கு விண்ணப்பம் செய்ய வேண்டும்; இல்லையாகில், ஐயோ! என்று கண்ணீரோடே மீண்டும் தன்னுடைய சக்திக்கேற்றவாறு உபகாரஞ் செய்து அன்போடு ஒரு தண்டனிட்டு, அவரோடு கூடி வாழ்தலும் தீர்த்த

பிரஸாதம் கொள்வதையும் நீக்கி, தனது தாழ்ச்சியைத் தெரிவிக்கும் அடியேன் போன்ற சொற்களாலே மகிழ்வித்து, அவர்களை விட்டு விலகியிருக்க வேண்டும் என்றவாறு.

**227. மூலம்:**

***ஸ்வாமிந்! உபாயாந்தரங்களெல்லாம் ஸவாஸந மாக பாதகாதிகளைப்போலே யோக்யதாபாதகங்களோடே ஸவாஸநத்யாகம் பண்ண வேணுமென்று சொல்லாநிற்க, திரியவும் ஆந்ருஸம்ஸ்யத்தாலே, சில செய்யும்படி அருளிச்செய்வானென்னென்னில்? பரமார்த்தனாய் பூர்ணப்ரபதநாதிகாரியாய் (அடைக்கலம் கொண்ட - பூர்ண சரணாகதியைச்செய்த) திருக்கண்ணமங்கையாண் டானைப் போலே ஸ்வவ்யாபாரங்களெல்லாம் ஸவாஸந மாக விட்டால், அவனுக்கு லோகாபவாதமும் வாராது. சாஸ்த்ர விரோதமும் வாராது. பகவந்நிக்ரஹமும் வாராது. இவன் த்ருப்தனாய், தேஹத்தில் பொருந்தி வர்த்தித்து ஸ்த்ர்யந்நபாதிகளை விரும்பி வர்த்திக்குமவனாகை யாலே, லோகோபவாதாத்யநர்த்தங்கள் மூன்று வரும். ஆனால், அந்யயோக அஸஹமான ஸித்தோபாயத்தின் கார்ய கரத்வத்துக்கு ப்ரதிபந்தகமாகாதோ? என்னில், அவ்விஷயம் உபாயதசையில் அந்யயோகாஸஹமாய் உபேயதசையில் அந்யயோகத்தை ஸஹிக்குமதன்றோ.***

**விளக்கவுரை:**

இவற்றைக் கேட்டு ஸ்ரீசேநாபதியாழ்வான் எறும்பி யப்பாவை நோக்கி, ஸ்வாமிகாள்! இறைவனைத் தவிர்த்த பிற உபாயங்கள் எல்லாவற்றையும் முழுமையாக அவற்றைச் செய்வதற் கேற்ற தகுதியானவற்றோடு செய்யத் தகாதவற்றை விடுவதுபோலே பரிபூரணமாக விடவேண்டுமென்று

பிரபத்தி சாத்திரங்கள் கூறா நிற்க, மீண்டும் (பிறர்பால்) இரக்கத்தாலே சிலவற்றைச் செய்யும்படி அருளிச் செய்வது எதன் பொருட்டு என்பதை விண்ணப்பிக்க வேண்டும் என்று வினவ, அதற்கு அவர் கூறும் விடை:

''மிக்க ஆர்த்தியை யுடையனாய், பிரபத்தி நிட்டை நிறைவாகவுடைய அதிகாரியாய், திருக்கண்ணமங்கை யாண்டானைப் போல் தன் தொழிலை விட்டால், அவனுக்கு உலகோர் தூற்றும் பழியுடைமை வாராது. சாத்திர விரோதமும் வாராது; பகவானுடைய சினத்தால் வரும் தண்டனையும் வாராது; பிரபத்தி அதிகாரியான இவன் இறைவனை அடைவதில் ஆறியிருப்பவனாய், தேகத்தில் பொருந்தி வாழ்பவனாய் மகளிர் இன்பம் உண்ணுஞ்சோறு பருகுநீர் வெற்றிலை முதலான போகப் பொருள்களை விரும்பி வாழ்பவனா கையாலே உலகவர் சாத்திர விரோதம், பகவானது ஆணையைக் கடத்தல் என்ற இம்மூன்று (அநர்த்தங்களும்) குற்றங்களும் இவனுக்கு வாராது. பிறர் முயற்சியைப் பொறுக்காத ஸித்தோபாயத்தின் செயல் பாட்டிற்குத் தடையாகாதோ? இவன் தினந்தோறும் மாத பிற்பாதி முற்பாதியில் பண்ணும் மூன்றன லோம்புதல் சந்தியா வந்தனம் ஏகாதசி விரதம் முதலானவைகள் எனின், அது உபாயவேளையில் பிறவற்றைப் பொறுக்காது, பயன்தரும் வேளையில் ஆந்மாவால் இறைவற்கு கைங்கர்யமாகச் செய்யும் நற்காரியங்கள் பொறுத்துக் கொண்டி ருக்குமன்றோ''.

228. மூலம்:

***ப்ராபகதசையில், ப்ராபகாந்தர பரித்யாகம் போலே ப்ராப்ய தசையில் ப்ராப்யாந்தர பரித்யாகம் அபேக்ஷித மாயிருக்க, நாத யாமுந யதிவர கூரநாத பட்டாரகாதி***

***களைப் போலே ப்ராப்யாந்தரைக தேசங்களான தார புத்ராதி ஸங்கங்களை பரித்யஜித்ததில்லையே. இந்த ப்ராதி கூல்யங்களெல்லாம் ஸவாஸநமாக விட்ட பூர்வாசார்யர்க ளெல்லாம் உசித கர்மங்களெல்லாம் உபாய புத்யா ஸவாஸநமாக விட்டு, இவையும் க்ருத்யமாகவே பாவித்து, (207)"குர்யாத்$_3$ வித்$_3$வாம்ஸதத$_2$ா (அ) ஸக்தஶ் சிகீர்ஷுர் லோக ஸங்க்$_3$ரஹம்'' (கீதா.3.25) என்று பகவதபிமத முண்டாகையாலே விருத்தங்களென்று ஸவாஸநமாக த்யாகம் பண்ணினால், இவரைக் கண்டு அஜ்ஞரானார் பரித்யஜித்துச் சிலரும் பரிஹஸித்துச் சிலரும் நசிப்பர்க ளென்று ஆந்ருஸம்ஸ்யத்தாலே லோக ஸங்க்ரஹமாக யதார்ஹமாக ஆசரித்துப் போந்தார்களிறே. தனக்கது விஹித கர்மங்களென்றும் ரக்ஷகமென்றும் நினை வின்றிக்கே ஆந்ருஸம்ஸ்யத்தாலே அனுஷ்டிக்கில் (208) "ஸர்வ பாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி'' என்னுமவனாலே விடுவிக்கப்பட்ட பாபங்களிலே அந்தர்பவித்துப் போமா கையாலே இவனுக்கு ப்ரதிபந்தகமாகாது.***

**விளக்கவுரை:**

உபாயவேளையில் பிற உபாயங்களை விட்டிருத்தல் போல பயனைப் பெற்றுக் கொள்ளும் வேளையில் பிற பயன்களை முழுவதும் விட்டிருத்தல் வேண்டியிருக்க, நாதமுனிகள் ஆளவந்தார் இராமாநுசர் கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை ஆகியவர்களைப் போலே, பிறபயன்களான மனைவி மக்கள் உறவினர் செல்வம் ஆகிய தொடர்புகளை முழுவதும் நாம்விடவில்லையே.

இந்த இறையநுபவத்துக்கு விரோதமானவற்றை யெல்லாம் முழுமையாக விட்ட பூருவாசாரியர்களெல்லாம் தேவையான தகுந்தநற்கருமங்களை எல்லாம் 'உபாயமாகும்'

என்னும் எண்ணத்தை முழுவதும் விட்டு, இவையும் செய்ய வேண்டியவை களே என்று எண்ணி, (207) ''கருமங்களில் தொடர்பற்றவனாய்,ஆந்மாவின் உண்மை தன்மையறிந்த வனாய், உலகத்தைக் காப்பாற்ற விரும்பியவன் (நன்மையின் பொருட்டு) நற்கருமங்களைச் செய்யக் கடவன்'' என்று கீதையில் கூறிய இறைவனுக்கு அவை செய்யக் கூடியது என்னும் விருப்பமும், உண்டாகலின் அவை செய்தால் முரண்பாடுவரும் என்று முழுவதும் விட்டால், விட்ட இவர்களைக் கண்டு அறிவற்ற சிலரும் அவற்றைச் செய்யாமல் விட்டு விடுவார்கள். செய்கின்ற வர்களில் சிலர் எள்ளி நகையாடுவதால் அவர்களும் அழிவார்கள் என்று இரக்கத்தாலே உலக நன்மையின் பொருட்டுத் தகுந்தவற்றை (நம் முன்னோர்கள்) ஆசரித்து (ஒழுகிப்) போந்தார்கள் அல்லவா. பிரபந்நனானவன், தனக்கது விதிக்கப்பட்ட கருமங்களெ ன்றும் அதுவே நம்மைக் காப்பாற்றும் என்று நினையாமல் பிறர்க்காக இரக்கத்தாலே அவற்றை அனுட்டிக்கில், எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக் கிறேன் என்று கூறிய இறைவனால் விடுவிக்கப்பட்ட பாவங்களில் சேர்ந்து விடுமாகையாலே இவனுக்கு அவை தடையாகாது என்று உணர்க.

**229. மூலம்:**

*இவ்வர்த்தம், "நோற்றநோன்பிலே, தேறு ஞானத்தர் வேத வேள்வியறாச் சிரீவரமங்கலநகர்" (திருவாய். 5-7-4) என்கிற விடத்தில் தேறுஞானத்தரித்யாதி-அவராகிறார், நிர்மலஜ்ஞானிகள். அதாவது அநுஷ்டாந அநநுஷ்டாநங் களான விஹித நிஷித்தங்களை ஸமமாக விகல்பிக்கலாம் படி தெளிந்திருக்கு மவர்கள்.*

*அதாவது அனுஷ்டாநம் சாதனமாகாதே நிஷித்தா சரணம் நமக்கு ரக்ஷகமன்று என்றிருக்குமோபாதி விஹிதாசரணமும் நமக்கு ரக்ஷகமன்று என்றிருக்கு மவர்கள் என்கை. ஆனாலிது அநுஷ்டிக்கிறதென்? என்னில், அனுஷ்டிக்க வேணுமென்கிற அபேக்ஷை யில்லாத அதிகாரிகளுக்கும் லோகஸங்க்ரஹார்த்தமாக அநுஷ்டிக்க வேணுமென்கிற ஈச்வர ஆஜ்ஞாநுவர்த்தநம் பண்ணினானாகிறான்.*

*இனித்தான் நிஷித்தாசரணம் ரஜஸ்தமஸ்ஸுக்களை வர்த்திக்குமாபோலே, இந்த விஹிதாசரணமும் ஸத்வ வ்ருத்தியையும் பண்ணிக் கொடுக்கக் கடவதாயிருக்கும். இனித்தான் சேதநனாகையாலே, ஒரு வ்ருத்தி பண்ணியல்லது நில்லானே (209) "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" என்று ஜ்ஞாநத்துக்குமடியாயிருக்குமிறே. ஆகையாலே அநுஷ்டேயமாயிருக்குமென்று நம்பிள்ளை யருளிச் செய்ததாக வடக்குத் திருவீதிப்பிள்ளை ஈட்டில் அருளிச்செய்தாரிறே.*

**விளக்கவுரை:**

இப்பொருளை நோற்ற நோன்பிலே காணலாம். அதாவது "தேறு ஞானத்தர் வேத வேள்வியறாச் சிரீவரமங் கலநகர்" என்ற திருவாய்மொழியில் தேறு ஞானத்தர் இதுமுதலான. தேறு ஞானத்தவர் யாவர் எனின், குற்றமற்ற ஞானிகள். அதாவது ஒழுக்கத்தையும் ஒழுக்கமில்லாத் தன்மையையும் சாத்திரங்களில் செய் என்று விதித்தவையும் செய்யாதே என்று விலக்கிய தாழ்ந்தவைகளையும் ஒப்பாகக் கொண்டு இவை இவை இத்தன்மையானவை என்று பிரித்தறியும் ஆற்றலுடையவர்களாய்த் தெளிந்திருப்

பவர்கள். அதாவது தாங்கள் அனுட்டிக்கும் அனுட்டானம் சாதனமாகாதே, தாழ்ந்த அநுட்டானம் நமக்குக் காப்பன்று என்றிருத்தல் போலவே, நல்ல அநுட்டானமும் நமக்குக் காப்பு அன்று என்றிருக்குமவர்கள் என்பது. ஆனால் இவர்கள் வேள்வி முதலானவற்றை அநுட்டிக்கிறார்களே அதுவென்? எனின், அநுட்டிக்க வேண்டும் என்ற விருப்பமில்லாத அதிகாரிகளுக்கும் உலகைக் காக்கும் பொருட்டு அவற்றை அநுட்டிக்க வேண்டும் என்கிற இறைவன் ஆணையைப் பின்பற்றுகிறார்கள் எனக் கொள்ளவேண்டும் என்றவாறு.

இனி, தீயவொழுக்கம் ராஜச குணத்தையும், தாமச குணத் தையும் வளர்ப்பதுபோலே, இந்த நல்லொழுக்கமும் ஸத்துவ குணத்தைக் கிளர்ந்தெழச் செய்வதாயிருக்கும். அதனால் ஞானமும் நமக்கு மிகும். மனிதன் அறிவுடை யனாகையாலே யாதேனும் ஒரு செயல் செய்தல்லது நில்லானிறே. (209) ''ஸத்துவ குணத்தால் ஞானம் உண்டாகும்'' என்பதால் ஸத்துவ குணமும் ஞானம் வளர்தலுக்குக் காரணமாயிருக்கும் அல்லவா? ஆகையால் நித்யம் நைமித்திகம் போன்ற ஆசாரங்களை அநுட்டிக்கத் தக்கதாயிருக்குமென்று நம்பிள்ளை அருளிச் செய்ததாக வடக்குத் திருவீதிப்பிள்ளை நோற்ற நோன்பு என்னும் திருவாய்மொழி ஈட்டின் பேருரையில் அருளிச் செய்தாரல்லவா?

**230. மூலம்:**

***(210) ''சிகீர்ஷுர் லோகஸங்க்₃ரஹம்'' (கீ₃தை) என்று, ஈச்வராஜ்ஞை பலஸங்க நிஷ்காமனாய் அநந்யப்ரயோஜநனான உபாயாந்தர நிஷ்டனுக்குச் சொல்லப்பட்டதேயொழிய அநந்யஸாதநனான ஸித்தோ பாய நிஷ்டன் அனுஷ்டித்தால், அவனுக்கு இஷ்டமாயிருக்***

***குமோ? என்னில் இவ்வர்த்தம் இத்திருவாய்மொழியிலே, "செந்தொழிலவர் வேத வேள்வி" (திருவாய் 5-7-7) என்கிற விடத்திலே செந்தொழிலவர் (211) "தே₃ஹிமே த₃த₃ாமி தே" (யஜுர் காண்டம். 1-8) என்னாதவர்கள் தாம் பண்ணுகிற க்ரியைக்கு வேறொரு பலத்தையபேக்ஷியாதே அவனுகப்பே பலமாக கைங்கர்யபுத்யாப் பண்ணுமவர்க ளென்கை. அவனுக்கு ரக்ஷணம் போலே இவர்களுக்கு கைங்கர்யம். அதாவது அவனுக்கு ரக்ஷணம் ஸ்வார்த்த நிரபேக்ஷமாய் ரக்ஷகத்வ ஸ்வரூபத்துக்கு அநுரூபமானா போலே, இச் சேதனனுக்கு இந்த ஆஜ்ஞாகைங்கர்ய ரூபமான வைதிகக்ரியைகள், சேஷத்வ ஸ்வரூபத்துக்க நுரூபமாய் ஸ்வார்த்த நிரபேக்ஷமாயிருக்கும். இங்ஙன் அன்றாகில் வ்யர்த்தமாமே. ஆகையாலே, செந்தொழிலவ ரென்றது, அநந்ய ப்ரயோஜநரையாகில் ஆர்ஜவத்தை யுடைய வ்ருத்தி விசேஷங்களுடையவர்களென்கை.***

**விளக்கவுரை:**

(210) ''உலகத்தை அழியாது அதைக் காக்க விரும்பியவன் பிறர்க்காகவாவது நற்கருமங்களைச் செய்யக் கடவன்'' என்று கூறிய இறைவனது ஆணையைப் பின்பற்றுதல், பயனில் விருப்பமற்ற வனாய் வேறு பயனைக் கருதாதவனான வேறு உபாயத்தைச் செய்பவனுக்குச் சொல்லப்பட்டதே யொழிய, வேறு உபாயத்தைக் கைக் கொள்ளாத வனான ஸித்தோபாய நிஷ்டன் அனுட்டித்தால் இறைவனுக்கு உகந்ததாயிருக்குமோ?

எனின் இப்பொருள் இத்திருவாய் மொழியிலேயே, ''செந்தொழிலவர் வேத வேள்வி'' என்கிறவிடத்தில் ''செந்தொழிலவர் (211) தேவனே! எனக்கு இப்பயனைக்

கொடுப்பாயாக; யான் உனக்குக் (யாகத்தில் ஹவிஸைக்) கொடுக்கின்றேன்'' என்று வேதத்தில் கூறியபடி, ''தேவனே! நீ ஒன்று கொடு; யான் ஒன்று உனக்குக் கொடுக் கிறேன் '' என்று கூறாதவர்கள் தாம் செய்கிற செயலுக்கு வேறொரு பயனை விரும்பாமல் இறைவன் உகப்பே பயனாக கைங்கர்யம் என்னும் எண்ணத்தோடு செய்பவர்கள் என்பது. இறைவனான அவனுக்குக் காக்குந்தொழிற்போலே இவர்களுக்கு கைங்கர்யம். அதாவது அவனுக்குக் காத்தற் தொழில் தனக்கு விருப்பமில்லாவிடினும் அத்தொழில் அவனது இயல்புக்கு தகுதியாயிருத்தல் போலே, இந்த அறிவுடைய சீவனுக்கு இறைவனது ஆணையைக் கடவா நடத்தலும் அவனுக்குக் கைங்கர்ய வடிவமான இந்த வைதிகச் செய்கைகள் சீவனின் அடிமைத்தன்மைக்கு ஏற்றதாய் தனக்கென்று ஒன்று வேண்டாத தாயிருக்கும். இங்ஙன மில்லாமலிருந்தால் ஆந்மாவின் இயல்பு வீணாகிக் கெட்டழியும். ஆகையாலே, 'செந்தொழிலவர்' என்று ஆழ்வார் குறிப்பிட்டது, வேறுபயனை விரும்பாதவர்களை யாகில் செம்மையான வேதத்தொழில்களை உடையவர்கள் என்று பொருளாகிறது.

231. மூலம்:

*இப்படியானவருடைய வேத வேள்வியறா வேத கோஷங்களும் வைதிகக்ரியா கோலாஹலமும் மாறாதே செல்லுகை. ப்ராப்ய விரோதியாதல் ப்ராபக விரோதி யாதலில்லாமையாலே நாச்சிமாருடைய பரிஷ்வங்கத் தோபாதியாய்ச் செல்லா நிற்கும். ப்ராப்ய விரோதியாவது, ஐஹிகபாரலௌகிகைச்வர்யங்களை ஸாத்யமாக நினைத்து அவற்றுக்கு ஸாதநமாகப் பண்ணுகை. ப்ராபக விரோதியாவது, பகவத் ப்ராப்திக்கு ஸாதநமாகப்*

***பண்ணுகை. இவ்விரண்டு நினைவுகளு மின்றிக்கே அவனுக்கே ரஸமாகப் பண்ணுகையாலே, ''அகல கில்லேன் இறையும்'' (திருவாய் 6.10.10) என்கிற நாச்சிமாருடைய பரிஷ்வங்கத்தோபாதி அவனுக்கு போக்யமாகச் செல்லா நிற்குமென்கை. இவை த்ருப்த னுக்கு உபாயபுத்யா த்யஜிக்கையும் ஆந்ருஸம்ஸ்யத் தாலே ஸ்வீகரிக்கையும் சிலாசாஸ நமாம்படி க்ரந்த ஸ்த்தங்களாகச் சொல்லி வைத்தார்களிறே. மிகவும் ஸவாஸநமாக த்யாஜ்யமாக ''வேர்முதல் மாய்த்து'' (திருவாய் 1-2-3) என்றருளிச் செய்த அஹங்கார மமகார காம க்ரோத லோபமோஹாதிகளை விடமாட்டாதே திரிகிறதுக்கு நிர்பயராய்;***

**விளக்கவுரை:**

இப்படிப்பட்ட கைங்கர்யத்திலூற்ற முடையவருடைய வேத வேள்வியறாத, வேதத்தை ஓதுவதால் வரும் ஒலி அலைகளும் வேத கிரியைகளான யாகம் முதலானவை செய்வதால் உண்டாகும் அழகோலக்கங்களும் மாறாமல் செல்லுமிடமாகும் அத்திவ்யதேசம். கைங்கர்யத்தில் விரோதியாதல் உபாயத்தில் விரோதியாதலில்லாமையாலே இறைவனுக்குத் திருமகள் முதலாம் நாச்சிமார்களுடைய ஆலிங்கனத்தைப் போலே செல்லாநிற்கும். கைங்கர்ய மாகிய பயனில் விரோதியாவது, இம்மை மறுமைப் பயனாம் செல்வங்களைப் பெறுவதாக நினைத்து, அவற்றுக்குச் சாதனமாகப் பண்ணுதல். உபாய விரோதியாவது, பகவானை அடைவதற்குச் சாதனமாகப் பண்ணுதல். இவ்விரண்டு நினைவுகளுமின்றிக்கே இறைவனுக்கே சுவையாம் சாறுபோல் அவற்றைச் செய்கை யாலே, ''அகலகில்லேன் இறையும்'' என்று கூறும் நாச்சிமாருடைய ஆலிங்கனத்தைப்

போன்று இறை வனுக்கு இன்பமாகச் செல்லாநிற்கும் என்பது. மேலே கூறப்பட்ட சாதனமாம் இவை, இறைவனை அடைதலில் வருத்தமற்றிருப்பவனுக்கு (த்ருப்தனுக்கு) உபாயம் என்ற எண்ணத்தை விடுகையும், கருணையாலே, அவற்றை ஏற்றுச் செய்கையும்கற்றூணில் எழுத்தைப் போலே பிள்ளை உலகாசாரியர் போன்ற நம்பூருவாசார்யர்கள் தம் நூற்களில் எழுதி வைத்தார்களல்லவா. மிகவும் எல்லா வற்றையும் விட்டு 'வேர்முதல் மாய்த்து' என்று ஆழ்வார ருளிச் செய்த அகங்காரம் மமகாரம் சிற்றின்பம் சினம் பேராசை மயக்கம் அழுக்காறு போன்றவற்றை விடமாட் டாமல் திரிவதற்கு அச்சமற்றவராய்;

232. மூலம்:

*அதிகாரி பேதத்தாலே அபிஸந்திபேதமாக யுக்த மான வ்ருத்தி விசேஷங்களுக்கு பயப்பட வேணுமோ? "காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்" (பெரிய திருவந்-34) என்று, பக்தி பாரவஶ்யத்தாலே சிதில கரணராய் ஒன்றும் அடைவுபட அனுஷ்டிக்க க்ஷமரன்றிக்கே, "என்னான் செய்கேன்" (திருவாய்.5-8-3) என்று பரமார்த் தரான அதிகாரி களுக்கு ஸ்வாஸநத்யாகமே ஸித்தாந்தம்.*

*த்ருப்தன் மந்தாதிகாரியாகையாலே ஆர்த்தனைப் போலே எல்லாம்விட்டால் அநர்த்தம் வருமென்று ஸர்வ பூர்வ குரு அபிப்ராய ஸித்தமாக ஸர்வ ரஹஸ்ய கோசரம். இருவர்க்கும் அதிகாராநுகுணமாக ப்ராரப்தானுபவ பேதத்தோபாதி அனுஷ்டாநபேதமுண்டு. (212) "ஆர்த் தஸ்ய ஸத்₃யோ முக்திஸ்யாத் ஏதத்₃ தே₃ஹவிமோசநாந்" (?) என்று ஆர்த்தனுக்கு ஸகல கர்மஸத்யோ முக்தியும், (213) "த்₃ருப்தாநாம் அபிஜந்துநாம் தே₃ஹாந்தரநிவாரணீ"*

*(பாஞ்சராத்ரம்) என்று, த்ருப்தனுக்கு அப்ப்யுபகத ப்ராப்த அம்சம் அநுபவித்தபின்பு தேஹாந்தரத்தில் பலமாகவும், சொல்லா நிற்கிறதிறே. அதுபோலவே அதிகார அனுகுணமாக அனுஷ்டாந பேதமும் அங்கீகரிக்க வேணும். தீர்த்தாங்கீகார க்ரமமிருக்கும்படி; கீழ்ச் சொல்லப்பட்ட அதிகாரிகளை அநுவர்த்தித்து அவர், ஸ்வநைச்யத்தாலே மூவாறுமாஸம் பரிஹரித்துக் கொண்டு, ''நீசனேன் நிறைவொன்றும் இலேன்'' (திருவாய்.3-3-4) என்று கடக்கவர்த்திக்கச் செய்தேயும். அவரை பஹுஶ: ப்ரார்த்தித்து ஸதாசார்ய விக்ரஹத் தோபாதி புத்தி பண்ணி திருவடி விளக்கி, அவர் திருக்கை யாலே(214) ''த ந்யோஸ்மி க்ருதக்ருத்யோஸ்மி'' (?) என்று ஸ்வீகரிக்க வேணும்.*

**விளக்கவுரை:**

அதிகாரிகள் வேறுபாட்டாலே வேறுபட்ட எண்ண முடையதான செய்யத் தகுந்த கைங்கர்ய விசேடங்களுக்கு அஞ்சவேண்டுமோ? ''காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்'' என்று பக்தியின் பரவசத்தாலே உறுப்பாம் கரணங்கள் சிதைந்து, ஒன்றையும் அடைவுபட அநுட்டிக்க மாட்டாதே, ''என்னான் செய்கேன்'' என்று மேலான ஆர்த்தியை யுடையவரான அதிகாரிகளுக்கு திருக்கண்ணமங்கை யாண்டானைப் போல் செயல்பாட்டை முழுதும் விடுதலே சித்தாந்தம். பகவானை அடைவதில் ஆறியிருப்பவன் ஞானத்தில் குறைவுடைய அதிகாரியாகையாலே ஆர்த் தனைப்போலே எல்லாம் விட்டால் குற்றம் வரும் என்று பூருவாசார்யர்கள் எல்லோருடைய அபிப்ராயமாக எல்லா ரகசியநூற்களிலும் கூறப்பட்டுள்ளது.இந்த ஆர்த்தன் த்ருப்தன் என்னும் இருவருக்கும் அதிகாரத்துக்கு ஏற்றவாறு ப்ராரப்த

கர்மாநுபவத்தில் வேறுபாடு எவ்வாறோ அவ்வாறே அநுஷ்டானத்திலும் வேறுபாடு உண்டு. (212) ''ஆர்த்தியை யுடையவன் தேகம் விழுந்தவுடன் உடனே முக்தி அடைகிறான்'' என்ற ஆர்த்தியையுடையவனுக்கு எல்லாக் கருமமும் அழிவதால் உடனே முக்தியும் (213)''த்ருப்த பிரபந்நர்க்கு அந்த தேகத்தின் முடிவில் மற்றொரு தேகம் விளையாதபடி முக்தியடையவர்'' என்று அனுபவித்தே தீரவேண்டிய பிராரப்த கர்மம் முடிந்த பின்னரே தேகத்தின் முடிவில் முக்தியாகிய பயன்விளையும் எனப் பிரமாணங் களிற் கூறப்படுகிறதல்லவா.

அவைபோலே அதிகாரத்துக் கேற்றவாறு அநுட்டான வேறுபாடும் கொள்ளவேண்டும். இனி ஸ்ரீ பாததீர்த்த அங்கீகார முறையைக் கூறுவோம்; முன்னர்பூரண அதிகாரிகளாகக் கூறப்பட்ட அதிகாரிகளை ப்ரார்த்தித்து அவர் தம்முடைய தாழ்ச்சியை முன்னிட்டு மூன்றோ ஆறு மாத காலமோ ஸ்ரீபாத தீர்த்தம், கொடாமல் ''நீசனேன் நிறைவொன்றுமிலேன்'' என்று ஆழ்வார் கூறுகிறபடி இறாய்த்து நாளைத் தள்ளிக் கொண்டு வந்தாலும் அவரைப் பன்முறை பிரார்த்தித்துத் தனது ஆசாரியர் திருமேனியே என்று நினைத்து அவரது திருவடியை விளக்கி அவர் திருக்கையாலே (214) ''செய்ய வேண்டிய செயலைச் செய்ததால் தந்யனானேன்'' என்று கூறி அத்தீர்த்தத்தைப் பருக வேண்டும்.

**233. மூலம்:**

***ப்ரஸாதிக்கிற க்ரமமிருக்கும்படி என்னென்னில், விலக்ஷணனான தான் பரமவிலக்ஷணரிடத்தில் ஸ்வீக ரிக்குமதே க்ருத்யமாகவும், ப்ரஸாதிக்கை ஸ்வநைச்யத்***

துக்கநுசிதமாகவும் நினைத்து ஸ்ரீவைஷ்ணவர்கள் அபேக்ஷித்தாலும், ஸ்வஸம்பந்திகள் அபேக்ஷித்தாலும் நாமதாரிகள் அபேக்ஷித்தாலும் தம்முடைய ஸ்வாசார்ய ஸ்ரீபாததீர்த்தத்தை அவர்களுக்குக் கொடுத்துவிட வேணும். அபேக்ஷித்ததே போருமென்று தான் அதிகாரி யென்கிற அஹங்காரத்தாலே கேட்ட அப்போதே சடக்கென அடிகளை நீட்டிக் கொடுக்கையும் தன்னடி களைத் தானே விளக்கிக் கொடுக்கையும், ஸ்வரூபஹாநி.

அந்த தீர்த்தம் ஸ்வீகரிக்கையும் ஜ்ஞானமாந்த்ய ஹேது. தன்னையொருவன் அபேக்ஷித்தால், ஸ்வநைச்யத் தாலே தான் பரிஹரித்துக் கொண்டிருக்கையில் பலகாலம் அபேக்ஷித்து நிரஹங்காரனாய் அனுவர்த்தித்தானாகில், ஸ்வாசார்ய விக்ரஹத்தை த்யாநித்துக் கொண்டு குருபரம்பரா பூர்வகமாக த்வயாநுஸந்தானம் பண்ணிக் கொண்டு ஸவிநயராய் ப்ரஸாதிக்குமது ஸ்வரூபப்ராப்தம்; மற்றுமுள்ளார்க்கு ஸ்வாசார்ய தீர்த்தங்கொடுக்கையே யுசிதம். இந்தத் தீர்த்தம் ஜாத்யபிமாநஸூந்யரான விலக்ஷண ஜந்மஜாத ஸ்ரீவைஷ்ணவரிடத்தில் அங்கீ காரமே முக்யம். (215) "தஸ்மை தேயம் ததோக்ராஹ்யம்" (பாரதம்) என்றும், "தருவரேல் புனிதமன்றே" (திருமாலை -41) என்னுமதுவே க்ராஹ்யமுமாய் பவித்ரதமமுமாய் இவனுடைய ஜாத்யபகர்ஷ நிவர்த்தகமுமாய் உஜ்ஜீ விப்பிக்கும்.

**விளக்கவுரை:**

ஸ்ரீபாததீர்த்தம் தந்தருளுகிற முறைமையிருக்கும்படி என்? சிறந்த அதிகாரியான தான், மேம்பட்ட சிறந்தோரி டத்துத் தீர்த்தம் அங்கீகரிப்பதே செயலாகவும், தீர்த்தங்

கொடுப்பது தன் தாழ்ச்சிக் கேற்றவாறு என நினைத்து, தன்னை ஸ்ரீவைஷ்ணவர்கள் விரும்பினாலும் தனது சீடர்கள் தீர்த்தம் வேண்டினாலும் இறைவன் பெயரையும் உருவத்தையும் உடைய சாதாரண அதிகாரிகள் வேண்டினாலும் தம்முடைய ஆசாரிய ஸ்ரீபாததீர்த்தத்தை அவர்களுக்குத் தந்துவிட வேண்டும்.

அவர்கள் வேண்டினதே போருமென்று, தான் அதிகாரி யென்ற அகங்காரத்தால் கேட்டவுடன் சடக்கென காலை நீட்டிக் கொடுக்கையும், தன் காலைத் தானே விளக்கித் தீர்த்தங்கொடுக்கையும், தன் இயல்பிற்கு நேரே அழுக்கு. அத்தன்மையான தீர்த்தத்தை அவர்கள் ஏற்றுக் கொள்ளுதலும் ஞானங் கெடுதற்குக் காரணமாம். தன்னை ஒருவன் ஸ்ரீபாத தீர்த்தம் கொடு என விரும்பினால், தன் தாழ்வை முன்னிட்டுக் கொடாமலிருக்க, பலகாலம் வேண்டி, அகங்காரமற்றவனாய்ப் பிரார்த்தித் தானாகில், தனது ஆசாரியனது உருவத்தைத் தியானித்துக் கொண்டு குருபரம்பரையை முன்னிட்டு த்வயத்தை உச்சரித்து அன்புடன் தருமதுவே ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததாம். மற்றுள்ள திருநாமதாரி போன்ற அதிகாரிகளுக்குத் தன் ஆசாரியரது தீர்த்தங்கொடுக்கையே உசிதம். இந்த ஸ்ரீபாத தீர்த்தம் ஜாதியபிமாநமில்லாத சிறந்த குடியிற் பிறந்த ஸ்ரீவைஷ்ணவரிடத்தில் அங்கீகாரமே இன்றியமை யாதது. (215) ''எவன் நாயினது புலாலைத் தின்ற வனாயிருந்த போதிலும் அவன் என் பக்தனாயிருப்பானாயின், எப்போதும் என்னால் விரும்பத்தக்க வனாவான். அவனுக்கு ஞானத்தைக் கொடுத்தல் வேண்டும். அவனி டத்திலிருந்து ஞானத்தைப் பெறுதல் வேண்டும். அவன் என்னைப் போன்று பூசிக்கத் தக்கவனாகிறான்'' என்றும் தருவரேல் புனிதமன்றே எனத்

தொண்டரடிப் பொடியாரும் கூறுவதாலே, அந்த ஸ்ரீபாத தீர்த்தமே பெறக்கூடியதாயும் பரிசுத்தமாய் இவனுடைய சாதியால் வந்தத் தாழ்வு நிவர்த்திக்கப் பட்டதாய் உய்வடைவிக்கும்.

234. மூலம்:

*மற்றையது ஜாத்யுசிதகர்மங்கள் போலே ஸாமாந்ய மாயிருக்கும். ஆனால், உத்க்ருஷ்ட ஜந்மஜாதர் ஜ்ஞாநாதி கரரானாலும் ப்ரமஹேதுவும் ப்ரம்ஶஸம்பாவனையுண் டாகையாலே, அபக்ருஷ்ட வைஷ்ணவரென்றும், (216) "ஶ்வபசோபி மஹீபால விஷ்ணு ப$_4$க்தோத்$_3$ விஜாதி$_4$க:" (பாகவதம்) என்றும் (217) "ப$_4$க்திரஷ்டவித$_4$ாஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சே$_2$பிவர்த்ததே- ஸவிப்ரேந்த்$_3$ரோ முநிஸ்ரீமாந் ஸ யதிஸ்ஸ ச பண்டி$_3$த:" (காருடம்) என்றும் ச்வபசரானாலும் பகவத் பக்தராகில் த்விஜாதிகராகவும், ஸ்ரீமாநாகவும், யதிகளாகவும், பண்டிதராகவும் சொல்லி, வர்ணாச்ரம ததநுரூபாநுஷ்டாநங்களாசரிக்கிற அஹங்கார ராஹித்ய ஜன்ம வ்ருத்தங்களுடையராய் பகவத் பக்தரான விலக்ஷணரே பூஜ்யரென்றும், ஜ்ஞாநாதிகளும் தீர்த்தாதி களும் அபேக்ஷித்தால் அவருக்கே கொடுக்கவேணு மென்றும் க்ருபை பண்ணி ப்ரஸாதித் தாராகில் ஸ்வீகரிக்க வேணுமென்றும், பகவத பிப்ராய ஸித்தமாக வ்யாஸாதி களும், "பயிலும் திருவுடையார் யவரேலும் அவர் கண்டீர்" (திருவாய் 3-7-1) என்றும், "தருவரேல் புனிதம்" (திருமாலை-41) என்றும் ஆழ்வார்களும் அவரே பாவந தீர்த்த ப்ராஸாதகராகச் சொன்னார் களிறே. அபக்ருஷ்ட ஜந்மர் உத்தேசயரானால் தத்வ்ருத்தங்களும் உத்தேச்ய மாய் வாராதோ? அப்போது சாஸ்த்ரவிரோதமும் ஸ்வரூப விரோதமும் உபாய உபேய ப்ரச்யுதியும் ப்ரஸக்தமாமே?*

***இதுக்கு தாத்பர்யம் அருளிச் செய்ய வேணுமென்ன? அநுவர்த்த நீயராகச் சொன்ன அதிகாரிகள்;***

**விளக்கவுரை:**

மற்றையொழுக்கம் அவரவர் சாதிக்கேற்ற கருமங்கள் போலே பொதுவாகவிருக்கும். ஆயின் உயர்ந்தவருணத்தில் பிறந்தவர், ஞானம் அதிகம்பெற்றிருந்தாலும் அது மயங்கு வதற்குக் காரணமாகவும், புகழ்தலில் நோக்குடையதாக வுண்டாகையாலே தாழ்ந்த வைஷ்ணவரென்றும், (216) ''ஏ அரசனே! விஷ்ணு பக்தியுடையவனான நாய் மாமிசம் தின்பவனும் பிராமணைக் காட்டிலும் உயர்ந்தவன்'' என்றும், (217)'' எட்டு விதமான பக்தியானது எந்த மிலேச்சனிடம் உளதோ, அவன் அந்தணரிலே உயர்ந்தவன், அவனே முனிவன், அவனே செல்வ முடை யவன், அவனே சந்நியாசி, அவனே பண்டிதன்'' எனக் காருடம் முதலான அறநூல்களிற் கூறப்பட்டபடி,

நாய் மாமிசமுண்பவனாயினும் அவன் பின்னர், பகவானுக்கு பக்தனானால் அந்தணனாகவும் ஸ்ரீமானாகவும் துறவியாகவும் பண்டிதனாகவும் கூறிவருண ஆச்ரமத்திற் கேற்ற அனுஷ்டானங்களைச் செய்கிற, அகங்காரமில்லாத தங்குலத்திற் கேற்ற தொழிலைச் செய்கின்றவராய் பகவத் பக்தரான சிறந்தவர் களே பூஜிக்கத் தக்கவரென்றும், ஞானபக்தி வைராக்கியங்களையும், தீர்த்தம் பிரஸாதங் களையும் அவர்கள் வேண்டினால் அவருக்கே கொடுக்க வேண்டும் என்றும் அவர்கள் இவர்களுக்குக் கருணையால் தீர்த்தம் முதலானவற்றை கொடுத்தாராகில் அவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் பகவானுடைய நினைவாக வியாசர் சுகர் ஆகியோரும் ''பயிலும் திருவுடையார்

யவரேலும் அவர் கண்டீர்'' என்று நம்மாழ்வாரும், ''தருவரேல் புனிதம்'' என்று ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் தொடக்க மானாரும், அவர்களே புனிதமான தீர்த்தப்பிரசாத கராகச் சொன்னார்கள் அல்லவா?

தாழ்ந்த வருணத்தில் பிறந்தவர் உயர்ந்தோர் எனின், அவர்கள் செய்யும் தொழில்களும் உயர்ந்ததாகக் கொள்ளும்படி வாராதோ? அப்போது சாத்திர விரோதமும் ஸ்வரூப விரோதமும் உபாயத்திற்கும் பயனுக்கும் குற்றஞ் சொல்லவருமே? இதற்குக் கருத்து அருளிச் செய்ய வேண்டும் என்று கூறுகிறார். பின்பற்றச் சொன்ன அதிகாரிகள் தாம் யாவரெனின்;

**235. மூலம்:**

***(218)''ப$_4$க்திஷ்டவித$_4$ாஹ்றயேஷா யஸ்மிந் ம்லேச் சே$_2$பிவர்த்ததே'' ''பயிலும் திருவுடையார் யவரேலும்'' என்றும் ஜந்மத்தால் அபக்ருஷ்டரானாலும் மத்பக்தஜந வாத்ஸல்ய மென்று தொடங்கி சொன்ன அஷ்டவித பக்திகளும் பகவதநுபவ ஸம்பத்தியுமுடைய திருப்பா ணாழ்வார், மாறநேரி நம்பி, திருக்கச்சிநம்பி, விளாஞ் சோலைப்பிள்ளை முதலானார் வர்த்திக்கிறாப்போலே லோக யாத்ரையையும் ஸம்ஸார ஸம்பந்தமும் மற்றும் பந்து ஸங்கமும் பரித்யஜித்து ஸ்வரூப விருத்தங்களுமாய் ஸத்வ விநாசகரங்களுமாய் ரஜஸ், தமோ, அபிவ்ருத்தி ஹேதுக் களுமான நிஷித்த ப்ரவ்ருத்திகளை யருவருத்து, நான் கீழ்ச் சொன்ன வ்ருத்தி நிஷ்டர்படியே, தம்முடம்பை மறந்து பக்தி பாரவச்யத்தாலே திரிகிறவதிகாரிகள், (219) ''ஏகாந்தீ வ்யப தே$_3$ஷ்டவ்யோ நைவக்$_3$ராம குலாதி$_3$பி$_4$:- விஷ்ணு நாவ்யபதே$_3$ஷ்ட வ்யஸ்தஸ்ய ஸர்வம்ஸ ஏவ***

*ஹி'' (விஷ்வக் ஸம்) என்று க்ராம குலாதி வ்யபதேச மின்றிக்கே ஸகல வர்ணாச்ரம வ்யாவ்ருத்தராய் பரம விலக்ஷணராய்த் திரியுமதொழிய, தமக்கொரு நிக்ருஷ்ட வர்ணமும் தததநுகுண நிஷித்த வ்ருத்தமும் ஏறிட்டுக் கொண்டு திரிவரோ? திரிந்தால் அவர் உத்தேச்யராவரோ? தாஸ்யநுகுணமான நிரஹங்கார ஜந்மமும் தாஸ்ய க்ருத்யங்களாகிற நிரஹங்கார வ்ருத்தமுடைய பரம விலக்ஷணரை அன்றோ உத்தேச்யரென்று சொன்னது.*

**விளக்கவுரை:**

(218) எட்டுவிதமான பகவத் பக்தியானது எந்த மிலேச்சனிடமிருக்கிறதோ என்றும், பயிலும் திருவுடையார் யவரேலும் என்றும் சாதியால் தாழ்ந்தவராயினும் எனது அடியார்களிடத்தில் அன்புடையவன் என்று தொடங்கிச் சொன்ன எட்டுவிதமான பக்திகளும் பகவதநுபவ சம்பந்தமுடைய திருப்பாணாழ்வார், மாறனேரிநம்பி, திருக்கச்சி நம்பி, விளாஞ்சோலைப்பிள்ளை, பிள்ளையுறங்கா வில்லிதாசர் ஆகியோர் வாழ்ந்தாற்போலே, உலகத்தார் தொடர்பும் ஸம்சாரத் தொடர்பும் மற்றும் உறவினர் தொடர்பும் ஆகிய எல்லாவற்றையும் நன்றாகவிட்டு, ஆந்மாவிற்கு எதிரானவையும் ஸத்வகுணத்தை அழிக்கக் கூடியதாய் ராஜச தாமச குணங்கள் வளருவதற்குக் காரணமான தாழ்ந்த செயல்களை அருவருத்து யாம் முன்னர் சொன்ன பகவத் பாகவத கைங்கர்யங்களில் ஊற்றமுள்ள வர்களைப் போலே. தம்முடம்பை மறந்து பக்தியின் பரவசத்திலே இருக்குமதிகாரிகள். (219) ''பிரபந்நனானவன் கிராமம் குலம் முதலாயினவற்றைக் கொண்டு வழங்கப்ப பவனல்லன் பகவானுடைய சம்பந்தத்தையிட்டுக் கூறத் தக்கவனல்லவா'' என்று கிராமம் குலம் தொழில்

ஆகியவற்றையிட்டுக் கூறத் தக்கவரன்றிக்கே, எல்லா வருணத்தார்க்கும் வேறுபட்டவராய் மேலான சிறப்புடைய வராயிருப்பரன்றி தனக்கொரு தாழ்ந்த வருணமும் அதற்கேற்ற தாழ்ந்த செயலையும் ஏறிட்டுக்கொண்டு திரிவரோ? திரிந்தால் அவர் உயர்ந்தோராவரோ? பகவானின் அடிமைக்கேற்ற அகங்காரமற்ற பிறவியும், அவ்வடிமையின் செய்கையாம் அகங்காரமில்லாச் செயலும் உடைய மேம்பட்ட சிறந்தவரையன்றோ உயர்ந்தோர் என்று கூறுவது.

**236. மூலம்:**

*இப்படிப்பட்ட அதிகாரிகள் எங்கேனும் ஒருவருண் டாகில் உத்தேச்யரென்று சொல்லுகிறதொழிய அஹங் காரார்த்த காம பரவசரான மூர்க்கரெல்லாரும் க்யாதிலாப பூஜாநுபவார்த்த நாதிகளுக்காக சிரோமுண்டநம் பண்ணிக் கொண்டு வைஷ்ணவ நாமரூபங்களுடையவராய் யதாபூர்வ நிஷித்தாநுஷ்டாந நிரதராய் பத்த ஸம்ஸாரி களாய், திரியவும் நிரஹங்காரிகளாயிராதே நாமன்றோ விலக்ஷண வைஷ்ணவ ரென்று அஹங்கரித்துக் கொண்டு திரிகிற ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங் களிரண்டுக்கும் தப்பி நடக்கிற உபயப்ரஷ்டரை அநுவர்த்திக்க வேணுமென்று ஆரேனும் சொன்னாரோ? வஞ்சநார்த்தமாகவானாலும், நாமரூபங்களுண்டாகையாலே தத்நுகுணமாக கிஞ்கித் கரித்து நிந்திக்கப் போகாதே, பரம ஸத்வ நிஷ்டராய் பரம விலக்ஷணராய் ஸ்வநைச்யாநுஸந்தாந நிரதராய் நிரஹங்காரியாய், பரமார்த்தருமாய் (220) "ய: பச்யதி ஸ்ரீ ப$_{4}$ராசாரம் வைஷ்ணவம் வீதகல்மஷம்- யஸ்மிந் கஸ்மிந் குலே ஜாதம் ப்ரணமேத்$_{3}$ த$_{3}$ண்ட$_{3}$வத்$_{3}$ பு$_{4}$வி" (லிங்க.புரா.) என்கிறபடியே, ஸதநுஷ்டாந ஸம்பந்நராய் வீதகல்மஷ ரான வைஷ்ணவர்கள் இந்தளத்தில் தாமரைப் பூத்தாப்*

**போலே, இருள்தருமாஞாலமான இவ்விபூதியிலே ஓரொரு வருண்டாய், *(221) "ஆஹ்லாத$_3$ ஶீத நேத்ராம்பு$_3$: புளகீக்ருத க$_3$ாக்ரவாந், ஸத$_3$ா பரகு$_3$ணா விஷ்டோ த்$_3$ரஷ்டவ்யஸ் ஸர்வ தே$_3$ஹிபி$_4$:" (?)***

**விளக்கவுரை:**

இத்தன்மையான அதிகாரிகள் எங்கேனும் ஒருவர் உண்டாகில் அவரையன்றோ சிறந்தோராகச் சொல்லு கிறதன்றி, அகங்காரம் பொருள் இன்பங்களில் வேட்கை யுடைரான மூர்க்கர் எல்லோரும் புகழ் பணம் பூசை முதலான வற்றைப் பின்பற்றித் தலையை முழுக்க மழித்துக் கொண்டு வைஷ்ணவப் பெயரோடு வடிவத்தையுடையராய், முன்னிலை யிலுள்ள கெட்ட ஒழுக்கத்தை மேற்கொண்ட வராய், ஸம் ஸாரத்தில் கட்டுப்பட்டவராத் திரியவும், அகங்காரத்தை விடாமல் நாமன்றோ சிறந்த வைட்டணவர் என்று தன்னை உயர்வாக நினைத்துக் கொண்டு திரியும் பொதுவாயும் சிறப்பாயுமுள்ள இரண்டு வகைப்பட்ட சாத்திரத்திற்கும் தப்பி நடந்து கொள்கிற இரண்டுங் கெட்டாரைப் பின்பற்ற வேண்டுமென்று எவரேனும் சொன்னாரோ?

பிறரை வஞ்சிப்பதற்காகவானாலும் எம்பெருமா னுடைய பெயரும் சின்னமுடையவராகையாலே, அதற்கேற்ற வாறு அவர்க்கு யாதேனும் சிறிது உதவி செய்து அவரை நிந்திக்காமல் கடக்க நின்று மேலான சத்துவ குணமுடை யராய் மேம்பட்ட சிறப்புடையவராய் தம்மை எப்போதும் தாழ்த்திக் கொள்பவராய் அகங்காரமற்றவராய் மேலான ஆர்த்தியையுடையராய் (வருத்தமுடையராய்) (220) நல்ல ஆசாரத்தையுடையவனாயும் குற்ற மற்றவனாயும் தாழ்ந்த

குலத்தில் பிறந்தவனாயுமிருக்கிற ஒரு வைஷ்ணவனை எவன் காண்கிறானோ அவனைப் புவியில் ஒரு தடியைப் போன்று விழுந்து வணங்கவேண்டும் என்கிறபடி,

நல்ல அநுட்டாந சம்பத்தையுடையராய், குற்றமற்ற வரான வைஷ்ணவர்கள் இரும்படிக்கும் குழியிலே தாமரை பூத்தாற் போலே அஞ்ஞானமாம் இருள்மூடியிருக்கும் இவ்வுலகத்திலே ஒரொருவர் உண்டாகில் (221) "எப்போதும் இறைவனுடைய குணங்களை அனுபவித்துக் கொண்டு அந்த ஆநந்தத்தால் பெருகுகிற குளிர்ந்த கண்ணீரையுடை யவனாயும் மயிர்க்கூச்சு எறிகிற சரீரத்தையுடையவனாயும், மக்கள் எல்லாராலும் பார்க்கத் தகுந்தவனாயும் இருப்பான்".

**237. மூலம்:**

என்று காணப்பட்டாராகில், ஜந்மக் கொற்றை பாராதே தண்டவத் ப்ரணாமம் பண்ணி, (222) "விப்ராத்$_3$ த்$_3$விஷட்$_3$கு$_3$ணயுதாத$_3$ரவிந்த$_3$நாப$_4$ பாத$_3$ாரவிந்த$_3$ விமுக$_2$ாத் ச்வ பசம் வரிஷ்ட$_2$ம்- மந்யே தத$_3$ர்ப்பிதம் மநோவசநே ஹிதார்த்த$_2$ ப்ராண: புநாதி ஸ குலம் ந து பூ$_4$ரிமாந:" (பாகவதம்) என்கிறபடியே, ஸபர்சபாவனரென்று அநு வர்த்தித்தால் ஒரு விரோதமும் வாராது. பகவானுக்கும் உகப்பாய் ஸ்வரூபமும் உஜ்ஜீவிக்கும், ஜ்ஞாநாதிகர் நிஹீந குலஜாதரானாலும் ஆதரணீயர் என்னுமர்த்தம். சங்கர பாஸ்கர யாதவாதி மதாந்தரஸ்தரும் அங்கீகரித் தாரிறே (223) "ஜாக்$_3$ரத் ஸ்வப்நஸு"ஷு"ப்திஷு" ஸ்பு$_2$டதரா யா ஸம்விது$_3$ ஜ்ஜ்ரும்ப$_4$தேயாவத்$_3$ ப்$_3$ரஹ்ம பி பீலி காந்த தத$_3$நுப்ரோதா ஜக$_3$த்ஸாக்ஷிணீ-நைவாஹம் ந ச த்$_3$ருஶ்ய வஸ்த்விதி த்$_3$ருட$_4$ ப்ரஜ்ஞாதுயஸ்யா ஸ்திசேத் சண்ட$_3$ா ளோஸ்து ஸக்ருத்$_3$த்$_3$ விஜோஸ்து கு$_3$ருரித்யேஷா மநீஷா மம" (மநீஷா பஞ்சகம்) என்று, ஸ்வமதாநு குணஜ்ஞாந

*முடையவர் சண்டாளரானாலும் ப்ராஹ்மணரானாலும் கௌரவ்யரென்று சொல்லிப் போந்தாரிறே. ஆகையாலே பகவத் விஷயைக ஜ்ஞாந பக்தி பரிபூர்ணராய், (224) 'பரமாத்மநியோரக்தா விரக்தோ பரமாத்மநி' (பார் ஹஸ்பத்ய. ஸ்ம்ருதி) என்று அபரமாத்ம வைராக்ய முடைய அதிகாரிகளையே யநுவர்த்தித்தால் ஸர்வ ஸம்மதமாயிருக்கும். (225) 'ஸ சபூஜ்யோ யத$_2$ாஹ்யஹம்' (பாரதம்) என்றும்,*

**விளக்கவுரை:**

என்று இத்தன்மையானவர்கள் இவ்வுலகத்தில் காணப் பட்டராகில் அவர்களது பிறப்பின் தாழ்வைப் பாராது தடியைப் போலே பூமியில் விழுந்து சேவித்து, (222) ''உந்தியிலே தாமரை மலரையுடையோனான இறைவனது திருவடித் தாமரைகளில் பக்தியில்லாத பன்னிரண்டு குணங்களுடைய அந்தணனைக் காட்டிலும், நாயினது மாமிசத்தைத் தின்றவன் (என்னிடத்தில் பக்தியுடைவனா கையால்) உயர்ந்தவன் என்று எண்ணுகிறேன். அவ்விறை வனுடைய திருவடிகளில் வைக்கப்பட்ட மனம் சொல் உடல் பிராணன் என்னுமிவற்றையுடையவன் எல்லா உலகத் தையும் தூய்மையாக்குகிறான். மிக்க அகங்காரத்தை யுடையவன் அப்படித் தூய்மை செய்ய மாட்டான்'' என்று கூறுகிறபடி, இத் தன்மையானவர் புனிதத் தன்மையுடையவர் என்று அவர்க்கடிமை செய்தால் ஒரு விரோதமும் வாராது. பகவானுக்கும் உகப்பாய் ஆந்மா உய்வு எய்தும். பகவானிடத்து பக்தியும் மிக்க ஞானமும் உடையார் தாழ்ந்த குலத்தில் அவதரித்தவரானாலும் ஆதரிக்கத் தக்கவர் என்னுமர்த்தம், சங்கர பாஸ்கர யாதவ முதலிய மத வாதிகளும் அங்கீரித்தாரன்றோ.

(223) விழிப்பு, கனவு, உறக்கம் முதலாம் செயல் களையுடையதும் பிரமன் தொடங்கி எறும்பு வரையிலுள்ள ஜீவராசிகள் அனைத்தும் மற்றும் பிராமணர் தொடக்கமான சண்டாளர்வரை தம் மதத்திற்கேற்ற ஞானமும் உடையவ ரானால் அவர்களும் கௌரவிக்கத் தகுந்தவர் என்று அம்மதவாதியரும் சொல்லிப் போந்தாரன்றோ. ஆகையாலே, பகவத் விஷயத்திலேயே உண்டான ஞான பக்திகளை முழுமையுடைவராய், (224) 'பரம் பொருளான நாராயண னிடத்து ஆசையுள்ளவனாய், அவனுக்கு வேறுபட்ட பிறபொருளிடத்து ஆசையற்றவனாய்' என்று கூறும் படி, பரமாத்மா அல்லாதாரிடத்து ஆசையற்றவரான அதிகாரி களையே ஏற்று அடிமை செய்தல் எல்லோர்க்கும் ஏற்புடைத் தாகும். (225) "என்னைப் போலே அவனும் பூஜிக்கத்தக்கவ னாகிறான்" என்று எம்பெருமானும்,

**238. மூலம்:**

*"சயமே அடிமை தலை நின்றார்- கோதிலடியார்- நீக்க மிலாவடியார் தம்மடியார் அடியார் எங்கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே- வாய்க்கதமியேர்க்கு" (திருவாய். 8.10.2. 8.10.9, 8.10.10) என்றும் "திடங்கொண்ட ஞானியர்க்கே அடியேன் அன்பு செய்வது" (இரா. நூற். 12) என்றும் அருளிச் செய்தாரிறே. (226) சரணாகதே: பூர்வம் (?) (227) 'மத்$_3$ப$_4$க்தம் ச்வபசம்வாபி' (வராக.புரா.) என்றும் (228) 'சண்டாளம் அபிமத்$_3$ப$_4$க்தம்' (?) 'அபிசேத்ஸு து$_3$ராசாரோ ப$_4$ஜதே மாம் அநந்ய ப$_4$ாக்' (கீதா. 9.30) என்றும், 'சண்டாள சண்டாளர்களாகிலும்- வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணர்க்காளென்று உள் கலந்தார்' (திருவாய். 3.7.9) என்றும், 'எக்குற்றவாளர் எதுபிறப்பு ஏதியல்வாக*

*நின்றோர் அக்குற்றம் அப்பிறப்பு' (இரா. நூற். 26) என்றும், எப்படிப்பட்ட நிஹீநஜந்ம வ்ருத்தங்களுடையரானாலும் "மத்$_3$பு$_4$க்தஜநவாத்ஸல்யம் பூஜாயாம்" என்று தொடங்கி சொன்னபடியே அஷ்டவித பக்தி ஸம்பந்நராய் ஆந்தர பாஹ்யேந்த்ரிய நிக்ரஹமுடையராய் நிர்தோஷராய் அநந்ய ப்ரயோஜநராய், த்ருடதர ஜ்ஞாநிகளானாரை அநுவர்த்திக்க வேணும் என்ற அர்த்தமே (229) 'லக்ஷ்மீநாத$_2$ ஸமாரம்ப$_4$ாம்' என்று தொடங்கி குருபரம்ப ரையிலுள்ள அதிகாரிகள் எல்லாரும் அருளிச் செய்தாரிறே.*

*ஆனால் "பயிலும் திருவுடையார் யாவரேலும்" என்றும், "இராமானுசனை மேவும் நல்லோர் எக்குற்ற வாளர் எதுபிறப்பேதியல் வாக நின்றோர்" என்றும் சொல்லுகையாலே உத்தர காலத்திலும் எப்படிப்பட்ட நிஹீந வ்ருத்தரானாலும் உத்தேச்யரென்னும் அர்த்தம் தோன்றாதோ? என்னில் நிஹீந ஜந்மவ்ருத்தங்கள் பூர்வ தசையில் கொள்ளாதே உத்தர தசையிலும் அங்கீகரித்தால் ப்ரதம சரம விஷய ஜ்ஞாந பக்திகளில்லையாய் விடுகை யாலே அது சொல்ல வொண்ணாது.*

**விளக்கவுரை:**

சயமே அடிமை தலைநின்றார்-கோதிலடியார்-நீக்கமி லாவடியார் தம்மடியார் அடியார் எங்கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே- வாய்க்கதமி யோர்க்கு (திருவாய். 8-10-2, 8-10-9, 8-10-10) என்று நம்மாழ்வாரும், 'திடங்கொண்ட ஞானியர்க்கே அடியேன் அன்பு செய்வது' என்று அமுதனாரும் அருளிச் செய்தார் களிறே. (226) "இறைவனிடத்தில் சரணாகதி செய்த பின்னர் அவர்கள் முன்னாளில் எத்தன்மையுடையரானாலும்"

என்றும், (227) ''என் பக்தன் முன்னர் நாய் மாமிசம் தின்றவனாயிருப்பினும்'' என்றும், (228) 'என் பக்தன் சண்டாளன் ஆனாலும் ஞானமுள்ள ஒருவன் அவனை அவமதிக்க மாட்டான்' என்றும், (229) 'மிகவும் தாழ்ந்த ஒழுக்கத்தையுடையவனாக இருந்தாலும், என்னிடம் வேறு பயனை விரும்பாதவனாய் பக்தி செய்தானானால் அவன், தலை சிறந்த ஞானிகளோடு ஒப்பாவான்' என்று கீதையிலும்,

'சண்டாளர் சண்டாளர்களாகிலும்-வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணர்க்கு ஆள் என்று உள்கலந்தார்' என்று திருவாய்மொழியிலும், 'எக்குற்றவாளர் எதுபிறப்பு ஏதியல் வாக நின்றார் அக்குற்றம் அப்பிறப்பு' என அமுதனாரும் கூறுகை யாலே, எப்படிப்பட்ட தாழ்ந்த பிறப்பு ஆசாரம் உடையவ ரானாலும், என் பக்தசனங்களிடத்து அன்பும் பூசையும் புரிக என்று தொடங்கி இறைவனும் கூறியவாறே எட்டுவித பக்தி செல்வத்தையுடையராய் உள் புறப்பொறிபுலன்களை அடக்கி யவராய் குற்றமற்றவராய் வேறுபயன் கருதாதவராய் திடமான ஞான முள்ளவரைப் பின்பற்ற வேண்டும் என்றும் அர்த்தமே இலக்குமி நாதனை ஆதியாகவும் என்று தொடங்கி குருபரம் பரையிலுள்ள ஆசாரியர்கள் அனைவரும் அருளிச் செய்தார்களல்லவா.

ஆகில் 'பயிலும் திருவுடையார் யாவரேலும்' என்றும், 'இராமாநுசனை மேவும் நல்லோர் எக்குற்றவாளர் எதுபிறப்பு ஏதியல்வாக நின்றோர்' எனவுஞ் சொல்லுகையாலே, இறை வனைச் சரணடைந்த பின்னரும் எத்தன்மை தாழ்ந்த ஒழுக்க முடையரானாலும் அவர் உயர்ந்தவர் என்னும்பொருள் தோன் றாதோ எனின் தாழ்ந்த பிறப்பொழுக்கத்தை இறைவனைச் சரண டைதற்கு முன்பிருந்த நிலையில் கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்ளாமல் பிரபந்நன் ஆன நிலையிலுங்

கொண்டால், முதற்படி சரமப்படி என்ற விஷய ஞான பக்திகளில்லையாய்விடும், ஆகையால் அவ்வாறு சொல்ல வொண்ணாது.

239. மூலம்:

ஆனால் ஜந்மத்துக்கு பூர்வஜந்மமென்று கொள்ள வேணு மென்று வாராதோ? என்னில், அதுவே ஸத்யம் *(230)* "அஸந்நேவ" (தை.உ.ப.) என்றும் "அன்று நான் பிறந்திலேன்", "பண்டைக் குலம்" என்றும் ஆச்ரயணா நந்தரத்தில் இது வேறே ஒரு ஜந்மமாக அருளிச் செய்தாரிறே. இவ்வர்த்தம் நெஞ்சில் கொள்ளாதே "ஏதியல்வாக நின்றோர்" என்று உத்தரகால துர்வ்ருத்தர் உத்தேச்யரென்றால், ஸகலப்ர மாண விரோதமுமாய் ஸர்வாநிஷ்டகரமுமாய் ஸர்வ சிஷ்டகர்ஹ்யமுமாய் ப்ராக்தந ஸர்வசிஷ்டாசார விருத்தமுமாய் ஸ்வரூப நாசகமுமாயிருக்கும். அர்த்தகாமாதிகளுக்காக ததீய நாமரூபங்களையுடையராய் எம்பெருமானார் திருவடி களே சரணமென்று வாங்மாத்ரஞ் சொல்லிக் கொண்டு அஹங்காராதிகளாலே பாகவதாப சாரபரராய் உருமாய்ந்து போருகிற கர்ம சண்டாளரை யுத்தேச்யராகக் கொள்ள வேண்டிவரும். 'ஏதியல்வு' என்ற போது ஒரு நிஷித்த வ்ருத்தமுங் கூடாதென்ன வொண்ணாதிறே என்ன, ஜிதேந்த்ரி யாக்ரேஸரராய் சுத்த ஸத்வ ஸம்பந்நராய் ஸம்ஸாரிக துஷ்கர்ம கந்தரஹிதராய், பரம விலக்ஷணரான எம்பெருமானாரை ஆச்ரயித்து அவர்கருத்தறிந்து அவர் அபிமாநத்திலே யொதுங்கின சரம பர்வ நிஷ்டர் விஷயாஸக்த சித்தராவரோ? ரஜஸ்தமः ப்ரசுரராவரோ? அஹங்காரிகளாவரோ? தாரபுத்ராதிகளை விடமாட்டாதே பத்த ஸம்ஸாரிகளாவரோ?

**விளக்கவுரை:**

ஆகில் இறைவனைச் சரணடைந்த பின்புள்ள நிலைக்கு முன்பிருந்த நிலை என்று கொள்ளவேண்டும் என்ற பொருள் தோன்றாதோ? எனின், 'அதுவே உண்மை'. (230) ''பரம் பொருளாம் இறைவனை அறியாதவன் இருந்தும் இல்லையாகிறான்'' என்றும், 'அன்று நான் பிறந்திலேன்' என்றும் 'பண்டைக்குலம்' எனவும் கூறுவதாலே, இறைவனை அடைந்த பின்னர் அதனை வேறேயொரு (ஞான) சன்மமாக அருளிச் செய்தார்களல்லவா சான்றோர்கள். இப்பொருளை நெஞ்சில் கொள்ளாமல், 'ஏது இயல்வாக நின்றோர்' என்று, சரணாகதியடைந்த பின்பும் கெட்ட ஒழுக்கத்தை மேற்கொண்டவர் உயர்ந்தவர் என்று கூறினால் அனைத்துப் பிரமாணங்களும் முரண்பட்டவை யாய் எல்லாத் தீமைகளுக்கும் காரணமாய் சிட்டர்களான சான்றோர்களால் வெறுக்கத்தக்கதாகி தொன்மையான சிஷ்டாசாரங்களுக்கு எதிரானதாய் ஆந்ம ஸ்வரூபத்தை அழித்துவிடும்.

பொருளின்ப போகத்திற்காக இறைவனது பெயரையும் வடிவங்களையும் உடையவராய் எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று வாய்ச்சொல் மாத்திரம் சொல்லிக் கொண்டு, அகங்கார மமகார முதலியவற்றாலே பாகவத அபசாரம் பண்ணி உருமாய்ந்து போகிற தீயசெயல் செய்வோரையும் உயர்ந்தோ ராகக் கொள்ள வேண்டி வரும்; ஏது இயல்வு என்பதால் ஒரு தாழ்ந்த செயலையும் செய்தல் கூடா என்று சொல்லக்கூடாதல்லவா எனின் புலன்களை அடக்கியவரிற் சிறந்தோராய் சுத்த சத்துவகுண சம்பத்தை யுடையவராய், உலகோர் சிலர் செய்யும் ஒரு கெட்ட வொழுக்கமும் இல்லாதவராயிருந்து சிறப்பால் உயர்ந்துள்ள

எம்பெருமானாரை (ஆச்ரயித்தும்) சரணடைந்தும் அவர் கருத்தறிந்து அவரது அபிமாநத்திலொதுங்கி இறுதிநிலை நிட்டையில் இருப்பவர் பொருளின்பத்தில் ஆசையுடைய வராவரோ? ராஜச தாமச குண எழுச்சியுடையவரோ? அகங்காரத் தையுடையவரோ? அல்லது மனைவி மக்கள் உறவினரை விடமாட்டாத பிறவியில் துன்பமெய்தும் ஸம்சாரிகளாவரோ?

**240. மூலம்:**

*அர்த்தார்ஜநாதிதத்பரராய் அஸேவ்ய ஸேவா நிரதராவரோ? அவிலக்ஷண க்ருத்யங்களான நிஷித்தா நுஷ்டாநம் பண்ணுவரோ? இந்த நிஷித்தக்ருத்யங்களில் சரமபர்வ நிஷ்டருக்கு உத்தர காலத்தில் ஏதியல்வாக நின்றோர் என் கைக்கு யோக்யமான நிஷித்தநுஷ்டாந மேதோ? நானறியேன் சொல்லுமென்ன, நிருத்தரராய் ஸ்வாமிந்! தேவர் எப்படிச் சொன்னாலும், இன்னமும் இதுவேயநுவர்த்திக்கிறது.*

*சிலர் ஜ்ஞாதிகராய் வீதராகயி ருந்து வைத்தும், ஜாத்யுசித அபிமாந நிவ்ருத்திக்கு ஸஹக்ருதமென்றும், சரம ச்லோகத்தில் சொன்ன ஸர்வ தர்ம நிவ்ருத்திக்கு (231) 'அஹரஹஸ் ஸந்த்$_4$யாமுபாஸீத' (?) இத்யாத்யங்கஸஹி தமான விஹிதரூப தர்மங்களோ பாதி, (232) 'ந களஞ்ஜம் ப$_4$க்ஷயேத்' (?) இத்யாதி நிவ்ருத்தி ரூப தர்மங்களும் த்யாஜ்யங்களாகையாலே, தத் த்யாகத்துக்காக நிஷித்த ஸ்வீகாரம் அபேக்ஷிதமென்று சொல்லிக் கொண்டு, (233) 'சரேத$_3$ விதி$_4$கே$_3$ாசர:' (?) என்கிறபடியே, பகவத் ப்ரபந்நர் சாஸ்த்ர வச்யரன்றிக்கே வர்த்திக்க வேணுமென்று நிஷித்த ஸ்வீகாரம் விதியாகச் சொல்லா நின்றார்களே அதுக் கடியென்? என்ன, இதுக்கடி நிரங்குச ஸ்வதந்த்ரனான*

***ஸர்வேச்வரனுடைய லீலார்த்தமான அவித்யா கார்ய மென்று கொள்ளவேணும்.***

**விளக்கவுரை:**

இன்னும் பொருள் இல்லம், பதவி இவற்றையே சம்பாதிப்பதில் நோக்குடையவராய் அதன் பொருட்டு வணங்கத் தகாதவர்களை அல்லது சேரத்தகாதவர்களைச் சேர்ந்து அவர் வழி செல்லும் நிலையுடையவராவரோ? சிறப்பற்ற செயல்களான கெட்ட வொழுக்கத்தை மேற்கொள் ளுவரோ?

இந்தத் தாழ்ந்த ஒழுக்கங்களில் சரம பருவ நிஷ்டருக்குச் சரணாகதிக்குப் பின்னர் 'ஏதியல்வாக நின்றோர்' என்பதற்கு ஏற்றதான கெட்டவொழுக்கம் யாதோ? நான் அறியேன் நீர் சொல்லும் என்று எறும்பியப்பாவை அவர்கள் வினாவ, அதற்கு ஒன்றுங்கூறாமல் அவர் இருக்க, சேநாபதியாழ்வான் ஸ்வாமிந் ''தேவரீர் எப்படிச் சொன்னாலும் இன்னமும் அடியேனுக்கு இவ்விஷயத்தில் ஐயம் தீரவில்லை. அவற்றைத் தெளிவிக்க வேண்டும்'' என்று கூறத் தொடங்குகிறார். அதாவது சிலர் ஞானம் நிரம்பியவராய் புலனடக்கமுள்ளவராயிருந்தும், சாதிக்குத் தகுந்த அபிமானத்தைத் தவிர்ப்பதற்குத் துணையாகுமென்று சரமச்லோகத்தில் கூறிய எல்லா தருமங்களையும் விடுவதற்கு (231) சாத்திரத்தைப் பின்பற்றும் மூவகை சாதியரும் தினந்தோறும் மூன்று ஸந்தியைத் தொழ வேண்டும் முதலான அங்கத்தோடு கூடிய சாத்திர விதி வடிவான செய்ய வேண்டிய நற்செயலைப் போலே (232) 'காளானைப் புசித்தல் கூடாது' முதலான தவிர்க்க வேண்டிய தருமங்களும் விடத்தக்கதாகையால், அதற்காகத்

தீயவொழுக்கத்தை மேற்கொள்ளுதல் வேண்டும் என்று சொல்லிக் கொண்டு, ''கெட்டவொழுக்கம் மேற்கொள்ளு தலே விதியாம்'' என்கிறபடியே, பகவத் பிரபந்நர் சாத்திரங்களுக்கு வசப்படுதலன்றிக்கே வாழவேண்டும் என்று, தீயவொழுக்கம் மேற்கொள்ளுதலே விதியாகக் கூறா நின்றார் களே, அதற்குக் காரணம் என்? என்று அவர் வினாயெழுப்ப, அவற்றுக்கு விடையளிக்கிறார் எறும்பி யப்பா. இதற்குக் காரணம் தடையற்ற சுவதந்திரத்தையுடைய இறைவனது விளையாட்டின் நிமித்தமான மூலப்பகுதியின் மயக்கவுணர்வின் காரியமென்று கொள்ளவேண்டும்.

241. மூலம்:

*எங்ஙனே என்ன, ஜந்மத்துக்குக் கொற்றையும் அதுக்குப் பரிஹாரமும் ஸ்ரீதொண்டரப் பொடியாழ்வார் 'பழுதிலா ஒழுக லாற்று' (திருமாலை-42) என்கிற பாட்டிலே ஜந்மக் கொற்றை வம்ச ப்ரவாஹத்தில் நாம் நிரவத்யமாய் நின்றோம். வேத சாஸ்த்ரங்களையதிகரித்தோம். அவற் றுக்குப் பொருள் சொல்லவல்லோம் என்கிற அபிஜநவித் யாவ்ருத்த மதங்களாகவும் அதுக்குப் பரிஹாரம், 'இழி குலத்தவர்களும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொள்மின்' (திருமாலை-42) என்று ஜாத்யபிமாந ஸூந்யரான விலக்ஷண ஜந்ம வைஷ்ணவா நு வர்த்தநம் என்று ஸுஸ்பஷ்டமாக வருளிச் செய்யா நிற்கச் செய்தேயும் லோஹசகலத்துக்காக மணிமாடத்தை தஹிப்பிக்குமாபோலே அஹங்கார நிவ்ருத்திக்காக ஸ்வரூப விரோதி க்ருத்யங்களில் அந்வயிக்கை.*

*பகவத் ப்ரஸாதத்தாலே பிறக்கவேண்டுகிற ஜாத்யஹங்கார நிவ்ருத்தி பரதார பரிக்ரஹ அபக்ஷ்ய*

*பக்ஷணாதி நிஷித்தா நுஷ்டாநத்தாலே ஸித்திக்குமென்று ப்ரமித்து கைங்கர்ய வ்யதிரிக்த ஸ்வப்ரவ்ருத்திக ளொன்றும் ஸஹியாத பகவதத்யந்த பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கும் சேராதவையுமாய், உபாயோபேய விரோதிகளுமான பரஹிம்ஸா பரதார பரிக்ரஹ அபேய பாந அபக்ஷ்ய பக்ஷணாதிகள் பண்ணுகை.*

*ஆஸுரக்ருத்யங்களாகையாலே, பகவல் லீலார்த்த மான அவித்யாகார்யங்களாயிருக்கும். இனி, நிவ்ருத்தி ரூப தர்மத் யாகத்துக்கு அபேக்ஷிதமென்றதற்குப் பரிஹாரம் முன்பு சொன்னோமே யாகிலும் மேலும் சொல்லுகிறேன். எங்கேனும் ஓரிடத்திலேயானாலும் ஒருவ ரானாலும் தர்ம த்யாகத்துக்கு நிஷித்த ப்ரவ்ருத்திகள் அபேக்ஷித மென்று சொல்லிற்றில்லையே. ப்ரபத்தியநுஷ்டாந விசதீகரண ஸ்தலங்களிலே;*

**விளக்கவுரை:**

எவ்வாறெனின், சன்மத்துக்குக் குற்றமும் அதனுக்குப் பரிகாரமும் ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார், ''பழுதிலா ஒழுகலாற்று'' என்னும் பாசுரத்திலே சாதியபிமாநம் வருவதற்கு ஹேது, அந்தணர்மரபில் நெடுகி வருகின்ற வமிசாவழியில் பிறந்ததனால் நாம் குற்றமற்ற வரானோம்; மறைநூல்களை அதிகரித்தோம்; அவற்றுக்குப் பொருள் சொல்லவல்லோம் என்கிற உயர்குலபிறப்பால் வந்த கல்வியாலும் தொழிலாலும் செருக்கடைந்தமைக்குப் பரிகாரம், ''இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொள்மின்'' என்று சாதியபிமாநம் இல்லாதவர்களான தம்மைத் தாழ்த்திக் கொள்கின்ற பிறவியில் பிறந்த சிறந்த ஸ்ரீவைஷ்ணவரைப் பின்பற்று

தலே உங்களுக்குச் சிறப்பென்று ஆழ்வார் தெளிய அருளிச் செய்திருந்தும், அதனை மேற்கொண்டு சாதியால்வந்த செருக்கைப் போக்கிக் கொள்ளமல், சிறுபகுதியான ஒரு உலோகத் துண்டிற்காகப் பெரிய மணிமாடங்களை எரிப் பாரைப்போலே, அகங்காரத்தைப் போக்கிக் கொள்கிறோம் என்று கெட்டவொழுக்கத்தை மேற்கொண்டு ஆந்ம இயல்புக்குத் தகாததான விஷயங்களில் ஈடுபாடு கொள்ளு தல்.

பகவான் அருளாலே பிறக்கக்கூடிய உயர்சாதியால் வரும் அகங்காரம் இல்லாதன்மையை அடையும்பொருட்டு மாற்றான் மனைவியை ஏற்றல், உண்ணத் தகாதையுண்டல். அருந்தாவற்றை அருந்தல் ஆகிய கெட்டவொழுக்கத்தாலே போக்கிவிடலாம் என்று மயங்கி, கைங்கரியத்திற்கு எதிர்தட்டான தன்முயற்சிகள் ஒன்றையும் பொறுக்காத பகவானுக்கு மிகவும் வசப்பட்ட (பரதந்த்ர) ஸ்வரூபத் துக்கும் சேராதவைகளுமாய், உபாய உபேய விரோதி களுமான பிறரைத் துன்புறுத்தல், பிறன்மனைவியைக் கைப்பற்றுதல் அருந்தாவற்றை யருந்துதல், உண்ணத் தகாதப் பொருள்களை யுண்ணுதல் (ஆதிசப்தத்தாலே பிணச்சோறு மணச்சோறு விலைச்சோறு ஆகியவற்றை யுங்கொள்க.) ஆகியவை அசுரர்கள் செயலாகையாலே இவையெல்லாம் பகவானின் விளையாட்டிற்கேற்ற அறிவிலாற் செயலாக விருக்கும். இனி, செயல் தவிர்தலுக்கு வடிவமாயிருக்கும் தருமத்தியாகத்திற்கு வேண்டும் என்பதற்குப் பரிகாரம் முன்னே சொன்னோமே யாகிலும் மேலும் சொல்கிறோம். எங்கேனும் ஓரிடத்தி லேயும் நம்பூருவர்கள் ஒருவராகிலும் தருமத்தியாகத்திற்குக் கெட்ட வொழுக்கங்கள் பிரபந்ந னுக்குத் தேவையென்று கூற வில்லையல்லவா. பிரபத்தி அநுட்டாநத்தைவிரிவாகக் கூறுமிடங்களில்.

242. மூலம்:

*(233) "உபாயாபாய நிர்முக்தா மத்₄யமாம் ஸ்தி₂தி மாஸ்தி₂தா" (பாரதம்) என்று, உபாயாபாய நிர்முக்தையாய் மத்யஸ்தையாய் நின்றதென்றும், (234) "உபாயாபாய ஸம்யோகே₃ நிஷ்ட₂யாஹ்யதே நயா" (லக்ஷ்மிதந்.17.92) என்று தொடங்கி, உபாய அபாய ஸம்யோகத்தில் ஸித்தோபாய நிஷ்டை நழுவுமென்றும், அதுக்கு ப்ராய ஶ்சித்தம் பண்ணவேணுமென்றும் சொல்லுகிற தொழிய அபாயமான அக்ருத்ய கரணம் ப₄க₃வதிஷ்ட மென்றும் இது, ப்ரபத்திக்கபேக்ஷிதமென்றும், ப்ரபந் நனுக்கு வஶ்யகரணீயமென்றும் சொன்னதில்லாமை யாலே ஸாமாந்ய விசேஷ ஶாஸ்த்ர விபாகமற, ஸகல ஶாஸ்த்ர விருத்தமுமாய் சிஷ்ட கர்ஹிதமுமாய் பகவத நிஷ்டமு மாய், (235) "ஆஶாபாஶ ஶதைர் ப₃த்₃த₄ா: காமக்ரோத₄ பராயணா: ஈஹந்தே காமபே₄ாக₃ார்த்த₂ம் அந்யாயேநார்த்த₂ ஸஞ்சயாந்" (கீதா.16.12) என்றும்;*

*(236) "அநேகசித்த விப்₄ராந்தா மோஹஜாலஸ மாவ்ருதா:- ப்ரஸக்தா: காமபே₄ாகே₃ஷு பதந்தி நரகே (அ)ஶுசெள" (கீதா.16-16) என்றும், சொல்லுகிற படியே காமக்ரோத பராயணராய், இது பரமார்த்தமென்று மாயா மோஹிதராய் திரிந்தார்களாகில் பகவந் நிக்ரஹபாத்ரராய் போவார்களாகையாலே சபத ஶக்தியைக் காட்டிலும் தத்வ்யதிரிக்தமான ப்ரவ்ருத்திரூப தர்மங்களுக்கே த்யாஜ் யத்வம் அங்கீகரிக்க வேணுமென்ன, காட்டிலும் பரிக் ஹரிக்கிறதென்? என்ன, பாதகமுண்டானால், பரிக் ஹரிக்க வேணுமிறே. திருமந்த்ரத்தில் நாரபதத்தாலே, (237) "ப்₃ராஹ்ம்யமண்ட₃ம் தத₃ந்தஸ்த₂ா: லோகாஶ்ச*

*ஸசராசரா: -ஏவம் அண்ட₃ாந் யநந்தாதி தத்ஸர்வம் நாரமுச்யதே" (?)* என்று,

**விளக்கம்**

(233). "உபாயமான தருமங்களிலிருந்தும் அபாயத்தை விளைவிக்கும் அதருமங்களிலிருந்தும் விடுபட்டவனாய் நடுவான நிலையில் நன்றாக நின்றவன்'' எனக்கூறுகிறபடி, உபாய அபாயங்களில் நின்று விடுபடுபட்டு நடுவில் நிற்ப தென்றும், (234).''வேறு உபாயமாகிய அபாய சம்பந்தம் ஏற்பட்டால் பிரபத்தி நிஷ்டை நழுவும்'' என்று தொடங்கி, (வேறு) உபாயமாகிய அபாயத்தின் தொடர்பு ஏற்படின் சித்தோபாய (இறைவனே உபாயம் என்னும்) நிஷ்டை நழுவி விடும் என்றும் அதற்குக் கழுவாய் செய்ய வேண்டும் என்று கூறுகிறதேயன்றி அபாயமான செய்யத்தகாத கெட்டசெயல் பகவானுக்கு விருப்பமென்றும், இது பிரபத்திக்குத் தேவை யென்றும், பிரபந்ந அதிகாரிக்கு இன்றியமையாததென்றும் மேற்கண்ட சான்றுகளிற் கூறாமையாலே;

பொதுவான சாத்திரம், சிறப்பான சாத்திரம் என்னும் வேறுபாடின்றிக்கே எல்லாச் சாத்திரங்களுக்கும் விரோதமாய், சான்றோர்களாலும் பகவானாலும் வெறுக்கத் தக்கதாய், (235) ''ஆசையென்னும் நூற்றுக்கணக்கான கயிறுகளால் கட்டப்பட்டவர்களாய் சிற்றின்பத்திலும் கோபத்திலும் ஊன்றி நிற்பர்களாய் அந்த இன்பத்தை அனுபவிப்பதற்காக தவறான வழியில் பொருட் குவியல்களை விரும்பித் தேடுகின்றனர்'' என்னும் (236) ''பல நினைவுகளாலே அலைக்கழிக்கப்படுகின்ற வர்களாய், அறிவின்மையாகிற பல மயக்கங்களாற் சூழற்பட்டவர் களாய், புலன் இன்பங்களில் மிகவும் ஈடுபட்டவர்களாய், (இடையில் மரணமடைந்து) அசுத்தமான நரகத்தில் விழுகின்றனர்'' என இறைவனே

கூறுகிறபடி, சிற்றின்பத் திலும் (அது கிடைக்காவிட்டால்) கோபத்திலும் ஊன்றின வர்களாகவும், அவையே மேலான பொருள்கள் என்று அறிவின்மையால் கலங்கியவர் களாகவும் வாழ்ந்தார்க ளாகில், பகவான் தண்டனைக்கு ஆளாவாராகை யாலே, இவ்விடத்தில் எல்லாதருமங்களையும் விடு என்றவற்றால் விபரீதப் பொருள் தொனிக்கிற சப்த சக்தியைக் காட்டிலும் அதற்கு வேறுபட்டதான மனிதனால் செயல்படும் வடிவா யிருக்கிற தருமங்களுக்கே தியாகத்தை அங்கீகரிக்க வேண்டும் என்ன, காட்டிலும் என்று அதனை தவிர்ப்பித்தல் எதற்காக? என்ன, ஆந்ம இயல்புக்கு விரோத முண்டானால் அதனை நீக்குதல் வேண்டுமல்லவா? (237) இயங்கும் பொருளான உயிர் பொருள்களும் இயக்கம் பெறா அறிவிலாப் பொருள்களும் ஆகியவற்றைக் கொண்ட உலகங்கள் அந்த பிரம்மாண்டத் திலுள்ளன; இப்படிப்பட்ட அண்டங்களோ பலவாகவுள்ளன; அவையெல்லாம் நாரம் என்ற சொல்லாலே சொல்லப் படுகின்றன என்று;

**243. மூலம்:**

*பகவத்ஸ்வரூப வ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக் களையும் காட்டா நிற்கச்செய்தேயும், தத்புருஷ ஸமாஸத்தில் உபாயோபேயபாவங்களைச் சொல்லு மளவில் அசேதநங்களுக்கு அநபேக்ஷிதங்களாகையாலே அவற்றைப் பரிஹரித்து சேதநருக்கே சொல்லு மாபோலேயும், பஹுவ்ரிஹி ஸமாஸத்திலே ஆத்மா ச்ரயதோஷமும் அநவஸ்தையும் வருமென்று குணங்களை விட்டு தத்வ்யதிரிக்த நாரங்களுக்கே அந்தர்யாமித்வம் சொன்னாப்போலேயும், ஸ்வரூபோபாய வ்ருத்தத்வாதி பஹுதோஷமுண்டாகையாலே நிவ்ருத்திரூப தர்ம வ்யதிரிக்த ப்ரவ்ருத்திரூப தர்ம த்யாகங்கொள்ள வேணும்*

***என்ன, ஆனால் ஸாகல்யத்துக்கு ஸங்கோசம் வரும் என்னில் ஸாகல்ய ஸங்கோசம் வாராதபடி எல்லாம் ஸ்வாஸநத்யாகம் பண்ணப்புக்கால் தர்மசப்தத்தாலே அவதார ரஹஸ்யஜ்ஞானம், புருஷோத்தம வித்யை, தேசவாஸம், திருநாம ஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை முதலானவை யெல்லாம் சொல்லு கையாலே, இவையெல்லாம் ஸ்வாஸநத்யாகம் பண்ண வேண்டிய வருமிறே.***

**விளக்கவுரை:**

அந்த நாரம் என்னும் சொல் பகவானது (ஸ்வரூபத் துக்கு) இயல்புக்கு வேறுபட்ட அறிவுடைய, அறிவற்ற ஆகிய எல்லாப் பொருள்களையும் காட்டா நிற்கச் செய்தேயும் நாராணாம் அயநம் ய: ஸா நாராயண: (நாரங்களுக்கு இடமாக இருப்பவன் யாவனோ? அவனே நாராயணன்) என்று, தத் புருஷ ஸமாஸத்தில்-(வேற்றுமைத் தொகையில்) உபாய உபேய தன்மைகளைச் சொல்லுமளவில், அறிவற்ற சடப் பொருளுக்கு உபயோகமல்லாமையாலே அவற்றைத் தவிர்த்து அறிவுள்ள மக்களுக்கே சொல்லுமாபோலேயும், அன்மொழித் தொகையில் இறைவன் எல்லாப் பொருளையும் வியாபிக்கும்போது தன் குணத்தில் தான் வியாபித்தல் என்னும் குற்றமும் முடிவில்லாத் தன்மையும் ஏற்படுமென்று குணங்களைத் தள்ளி அவற்றுக்கு வேறுபட்டதான நாரங்க ளுக்கே அந்தர்யாமித்வம் சொன்னாற் போலேயும்,

திருமந்திரத்தில் பிரணவத்திற் கூறப் பெற்ற ஆந்மாவின் இயல்பிற்கும், நம: பதத்திற் கூறப் பெற்ற உபாயத்திற்கும் முரண்பாடு முதலான பல குற்றங்கள் உண்டாகையாலே செயல் தவிர்தல் வடிவாயிருக்கும் தர்மத்திற்கு வேறுபட்ட செயல்படுதல் வடிவாயிருக்கும்

தர்மத்தையே விடவேண்டிய வையாயிருக்குமென்று கொள்ள வேண்டுமென்ன, ('ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்றவிடத்து, பரி-ஸாகல்யே; ஸாகல்ய-இது, மிகுதியைக் குறிக்கும் உரிச்சொல்) ஆகில், ஸாகல்யத்துக்கு-(மிகுதி குறிக்கும் இச்சொல்,) செயல் வடிவாக இருக்கும் தர்மத்தை மாத்திரம் விட வேண்டும் என்று கூறினால், அது சுருக்கத்தைக் காட்டுமே எனின், ஸாகல்யே என்ற மிகுதிச் சுருக்கம் வாராதபடி தர்மங்கள் எல்லாவற்றையும் முழுமையாக விட்டு விட்டால், தருமம் என்ற சொல்லாலே, அவதார இரகசிய ஞானம், புருஷோத்தம வித்யை, புண்ணிய தேசவாசம், திருநாம சங்கீர்த்தனம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை முதலியவற்றைச் சொல்லுகையாலே இவை எல்லாவற்றையும் முழுமையாக விடவேண்டி வருமல்லவா.

**244. மூலம்:**

*சப்த சக்தியாலே காட்டுமதே ப்ரதாநமன்று, நிவ்ருத்திரூப தர்மத்யாகம் பண்ணச் சொன்னால், (238) "ஆந்ருஶம்ஸ்யம் பரோத,ர்ம:" (ராமா. ஸுந். கா. 38-4) என்று சொன்ன, ஆந்ரு ஶம்ஸ்யமும் விட்டு ச்ருதி ஸ்ம்ருதி நிஷித்தங்களான, பித்ரு மாத்ரு குருத்ரோஹங்களும், ஸாதுபாதையும், ப்ரஹ்மஹத்யா, ஸுராபாந ஸ்வர்ண ஸ்தேய குர்வங்கநாகமநாதிகளும் பண்ணிக் கொண்டு ந்ருசம்ஸராய் ஹிரண்ய ராவண கம்ஸாதிகளைப் போலே, ப்ரபந்நரும் நிஷித்தாநுஷ்டாநபரராய்த் திரிய வேண்டி வரும்.*

**விளக்கவுரை:**

ஆகையால் சொல்வழியாலே பொருளைக்

கற்பித்துக் காட்டுவது முக்கியமன்று. இறைவனுக்கு மகிழ்ச்சியைத்தரும் தருமங்களையும் விடவேண்டும் என்று சொன்னால் (238) ''பிறரிடத்து இரக்கமுடையவனா யிருத்தலே மேலான தருமம்'' என்று சான்றுகள் கூறியவாறே, தனக்கு இருக்க வேண்டிய இரக்கத் தையும் விட்டு, வேதங்களிலும் அறநூல்களிலும் தீய செயலாகக் கூறப் பெற்ற தந்தை தாய் குரு ஆகியோர்க்கு இழைக்குங் கொடுமைகளும் மற்றும் சான்றோர்க்குக் கேடு செய்தலும், அந்தணரைக் கொல்லுதல், கள்ளருந்துதல், பொன்னைத் திருடுதல், குருவின் மனைவியைப் புணர்தல், புலால் உண்ணுதல் போன்றவற்றைச் செய்து கொண்டு கொடுமையிழைப்பவராய், இரணியன், இராவணன், கஞ்சன், துரியோதனன் ஆகியோரைப் போல், பிரபந்நரும் கெட்ட ஒழுக்கத்தை மேற்கொள்ள வேண்டிவரும்.

**245. மூலம்:**

*இப்படி ஸ்வரூபாநுரூபமான குணாநுபவ கைங்கர்யங் களும் ஆத்ம குணங்களான சமதமாதிகளும் ஆந்ருஶம்ஸ்யாதிகளும் விட்டு நிஷித்தங்களெல்லாம் ஆசரித்துத் திரிந்தாலாயிற்று ஸர்வ தர்ம சப்தங்களுக்கு ஸங்கோசம் தீருவது. ஆகையாலே ஸங்கோஸம் தீர்க்க வேணுமென்று ப்ரவர்த்திக்கப் போகாதிறே. இனி (239) "சரேத$_3$விதி$_4$கே$_1$சர:" (?) என்றது (240) "ஜ்ஞாந வைராக்ய ஸம்பந்நோ விஷ்ணு பக்தோ விசேஷத: -நலிங்காந்யா ச்ரயேத் ஸத்வாத் சரே தவிதிகோசர:" (?) என்று, ஜ்ஞாந வைராக்ய ஸம்பந்நராய் விசேஷித்து பரமபக்தி பரியந்தமான பரிபூர்ண பக்தியையுடைய அதிகாரி பக்திபாரவச்யத்தாலே ப்ராப்தாப்ராப்த விவேக ஶூந்ய னாய் வர்ணாச்ரமங்களை கோசரித்து (இலக்காகக்*

*கொண்டு) அடைவுபட அனுஷ்டானம் பண்ண க்ஷமனன்றிக்கே கண்ணாஞ் சுழலையிட்டு, ''என்னான் செய்கேன்'' (திருவாய்மொழி 5-8-3) என்று ததேக பரதந்த்ரனாய் ததேக நிர்வாஹ்யனாய் ததிதர நிஸ்ப்ருஹனாய், ''பேர் பல சொல்லிப் பிதற்றி'' (திருவாய் 3-5-8) என்கிறபடியே பகவந் நாமங்களை ஜல்பித்துக் கொண்டு ப்ராந்தரென்று பிறர் சொல்லும் படி நகராரண்ய விபாகமற ஸஞ்சரித்துக் கொண்டு ஸம்ஸாரிகளை பரிஹஸிக்கும்படி விசிஷ்ட வேஷாநுகுணமாக விதித்த வர்ணாச்ரம தர்மங்களை கோசரிக்க மாட்டாதே திரியுமென்று சொல்லிற்றித்தனையொழிய ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களிரண்டும் தப்பின உபய ப்ரஷ்டரைப் பத்துப் பேரைக் கூட்டிக் கொண்டு ''திர்ப்பாரையாமினியில்'' கட்டுவிச்சியைப் போலே அத்தைத் தா இத்தைத் தா என்று;*

**விளக்கம்:**

இவ்வாறு ஆந்ம இயல்புக்குச் சேர்ந்த பகவானுடைய குணானுபவ கைங்கர்யங்களும் ஆந்ம பண்புகளான புறப் பொறிகளை அடக்குவதாகிய சமமும், உட்பொறியாம் மனத்தையடக்குவதாகிய தமமும் இன்னும், அன்பு, அருள், கொல்லாமை, பொறுமை ஆகிய எல்லாவற்றையும் விட்டு, தீயவற்றையெல்லாம் செய்யதாலாயிற்று 'ஸர்வ தர்ம' என்ற சொல்லுக்குச் சுருக்கம் தீருவது. ஆகையாலே அந்தப் பதத்தின் சுருக்கத்தைத் தீர்க்க வேண்டுமென்று தீய செயல்களை பிரபந்நனானவன் செய்யக்கூடாதல்லவா? (239) ''சாத்திர விதியை நோக்காதவன்'' என்றது (240) ''ஞான வைராக்கிய செல்வத்தையுடையவனாய் விஷ்ணுவிடத்தில் சிறப்பான பக்தியையுடையவன் சத்துவ குணமேலீட்டால் பிறவற்றிலீடுபாடற்று சாத்திரம் விதித்த விதியையும்

நோக்காது பித்தனைப் போலிருப்பான்'' என்று, ஞானமும் பிறவிஷயத்தில் வெறுப்புமுடையனாய், இறைவனிடத்து விசேஷமான பரபக்தி பரஞ்ஞானம் பரமபக்தி வரையிலான நிறைபக்தியுடைய அதிகாரியானவன், பக்தியின் பரவசத் தாலே தகுதியுடையது தகுதியற்றது என்னும் விவேக மில்லாதவனாய் வருணஆசிரம நெறிமுறைகளை அறிந்து அவற்றிலுள்ள முறையான செய்வனவற்றைச் செய்ய இயலாதவனாய், இறைவனிடத்து அன்பு மீதூர்ந்ததனாற் கண்களில் நீர்மல்கப் பெற்றுக் கலங்கிய நிலை எய்தப் பெற்று, 'என்நான் செய்கேன்' எனக் கூறுகிறவாறே;

இறை வனிடத்தே வசப்பட்டவனாய் அவனாலேயே காக்கப்படு பொருளாய் அவன் தவிர்ந்த பிறவற்றை விரும்பாதவனாய் 'பேர்பல சொல்லிப் பிதற்றிப் பித்த ரென்றே பிறர்கூற' என்றபடி, பகவானது திருப்பெயர்களைப் பலமுறை உச்சரித்துக் கொண்டு, பித்தர் என்று பிறர் கூறும்படி ஊர் என்றும் காடென்றும் வேற்றுமையின்றித் திரிந்து, இவ்வுல கோர் இழிவாகச் சிரிக்கும்படி உடலோடு கூடியிருக்கும் மக்களுக்கேற்றவாறு சாத்திரங்களில் விதித்த வருண ஆசிரம தருமங்களை பொதுவானவும் சிறப்பானவு மான, இரண்டு சாத்திரங்களுக்குத் தப்பிய இரண்டுங் கெடுத்தவரான பத்துப் பேரைக் கூட்டிக் கொண்டு 'தீர்ப்பாரை யாமினி'யில் பிற தெய்வத்தை இறைஞ்சும் கட்டுவிச்சியைப் போல், அதைத் தா, இதைத் தா என்று;

**246. மூலம்:**

*எதுவானுஞ் செய்து மருந்தாகுமென்று சொல்லிக் கொண்டு ''நீரணங்காடும் பொய் காண்கிலேன்'' என்று சிஷ்டர் கர்ஹிக்கும்படி நிஷித்தாநுஷ்டாநம் பண்ணிக்*

கொண்டு அவிதி கோசரனாய்த் திரிகிறானென்று ப்ரமாணஞ் சொல்லிற்றில்லையே? முந்துற முன்னம் "ஜ்ஞாநவைராக்₃ய ஸம்பந்ந:" என்றும், 'விஷ்ணு ப₄க்தோ விசேஷத:' என்றும், அதிகாரியை நிர்தேசித்து 'அவிதி₄ கோ₃சர:' என்கையாலே, வர்ணாச்ரமாநுகுண ப்ரவ்ருத்தி தர்ம நிவ்ருத்தி மாத்ரம் சொல்ல வேணுமித்தனையொழிய ஸாமாந்யருட்பட அருவருத்து பரித்யஜிக்கிற ச்ருதி ஸ்ம்ருதி விருத்தமான நிஷித்த நுஷ்டாநம் பண்ணுகிறான் என்று சொல்ல வொண்ணாதிறே.

ஆனால் *(241)* "ச்ருதி ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா" (விஷ்ணு. தர்.) என்று, ச்ருதி ஸ்ம்ருத்யாதிகள் பகவதாஜ்ஞா ரூபங்களென்று ஆசரிக்குமளவில், வர்ணாச்ரமோசிதமான விதிகளெல்லாம் பரிக்ரஹித்து நிஷேதங்க ளெல்லாம் பரித்யஜிக்க வேண்டாவோ? ப்ருவ்ருத்தியம்சம் விட்ட துக்கு ப்ரத்யவாயம் வாராதோ? நிஷித்தம் பரித்யஜித்த மாத்ரத்திலே சாஸ்த்ரமெல்லாம் ஜீவிக்குமோ? என்னில் சாஸ்த்ரங்களில் ப்ரவ்ருத்தியம்சம், கொள் கொம்பிலேறிடு கைக்கு சேதநருடைய ருசியைப் பார்த்து சத்ரு மரண காமனான தம: ப்ரசுரனைக் குறித்து, *(242)* "ஶ்யேநே நா பி₄சரந்ய ஜேத" (?) என்று, மாரணஹோமம் முதலானவை விதித்து, அத்தாலே சாஸ்த்ர விச்வாஸத்தை யுண்டாக்கி அதுண்டான பின்பு, ரஜ: ப்ரசுரனைக் குறித்து, *(243)* "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க₃காமோயஜேத" (?) என்று இஹலோகாத் விலக்ஷண ஸ்வர்க்க போகாநுபவத்துக்காக ஜ்யோதிஷ்டோமாதிகளை விதித்து;

**விளக்கம்:**

யாதானுஞ் செய்து அதுவெல்லாம் மருந்தாகும் என்று

சொல்லிக் கொண்டு ''நீர் அணங்காடும் பொய் காண்கிலேன்'' என்று சிறந்த சிட்டர்களான மேலோர் சீறும்படி தீய ஒழுக்கங்களைப் பண்ணிக் கொண்டு சாத்திரங்கள் செய்யென்று விதிக்காதனவற்றைச் செய்து திரிகிறான் என்று பிரமாணங்கள் சொல்லிற்றில்லையே. முதல் முன்னம் ''ஞானவைராக்கிய சம்பத்தையுடைவன்'' என்றும் ''விஷ்ணு பக்தியை விசேடமாகவுடையவன்'' எனவும் அதிகாரியை நிர்ணயஞ்செய்து, ''சாத்திரம் விதித்தவற்றை விட்டவன், அல்லது செய்ய இயாதவன்'' என்பதாலே, வருண ஆசிரமத்துக்கேற்ற 'ப்ரவ்ருத்தி தர்மம்' என்கிற சாமானிய தருமங்களையும் 'நிவ்ருத்தி தர்மம்' என்கிற விசேட தருமம் என்று சொல்ல வேண்டியவையே யன்றி, சாமானிய மக்களும் அருவருத்து விட்ட வேதநூலுக்கும் அறநூலுக்கும் விரோதமான தாழ்ந்த வொழுக்கத்தை மேற்கொள்கிறான் என்று சொல்லக் கூடாதல்லவா? ஆகில் (241) ''வேதமும் முனிவர்கள் செய்த அறநூலும் என்னுடைய ஆணை அதனை மீறுதல் கூடாது'' என்று எம்பெருமான் கூறியபடி, வேதம், அறநூல், இதிஹாசம், பாஞ்சராத்ரம் ஆகியவை பகவானது ஆணை என்று மேற்கொள்ளுமளவில், வருணாசிரமத்திற்குத் தகுதியான விதிகளையெல்லாம் ஏற்றுக் கொண்டு, வேதமுதலானவற்றில் தள்ளப்பட்ட அதருமங்களை விட வேண்டாவோ? செய்ய வேண்டிய தருமங்களை விட்டதற்குக் குற்றம் வாராதோ? தள்ளப் பட்டதான தீயவற்றை விட்ட மாத்ரத்திலே சாத்திரங்கள் உயிர் வாழுமோ?

எனின், சாத்திரங்களில் செய்யக்கூடிய தருமங்கள் ஒரு அவரைக் கொடியைக் கொள்கொம்பிலே ஏற்றுவதற்குச் செய்யும் முயற்சியைப் போலே, நாத்திக ஆத்திகர்களுடைய

அவையைப் பார்த்துப் பகைவனைக் கொல்லுவதில் ஆசையுடைய தாமச குணமுள்ளவனைக் குறித்து, (242) ச்யேந யாகம் என்னும் அபிசார கருமத்தைச் செய்வாயாக என்று மரண ஹோமத்தை விதித்து, அந்தக் கருமத்தால் சாத்திரத்தில் நம்பிக்கையை யுண்டாக்கி, அதுண்டானபோது, இராசத குணத்தையுடையவனைக் குறித்து, (243) ''சுவர்க்கத்தை விரும்புவாயாகில் சோதிட்ட ஹோமத்தைச் செய்வாயாக'' என்று இவ்வுலகத்தைத் காட்டிலும் சிறிது சிறப்புடைய சுவர்க்க வின்பத்திற்காக சோதிட்ட ஹோமம் ஆயுள் ஹோமங்களை விதித்து;

**247. மூலம்:**

*அத்தாலே ஆத்மநித்யத்வத்தை யறிவித்து, அநந்தரம் அநந்த ஸ்திரபல மோக்ஷகாமனான ஸத்வோத்தரனைக் குறித்து, (244) ''ப்$_3$ரஹ்ம வித$_3$ாப்நோதி பரம்'' (தை. ஆரண்ய.1) ''ப்$_3$ரஹ்மவேத$_3$ ப்$_3$ரஹ்மைவ ப$_4$வதி'' (முண். 3-2-9) ''ஆத்மாவா அரே த்$_3$ரஷ்டவ்ய ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி$_3$த்$_4$யாஸிதவ்ய:'' (ப்ருஹ.உப. 4.4.5) என்று, பகவதுபாஸநத்தை விதித்து, பகவத் சேஷத்வத்தை இசைவித்து, பரமஸத்வ நிஷ்டனாய், ஸகலேதர நிஸ்ப்ருஹனான ஏகாந்தியைக் குறித்து, (245) ''முமு க்ஷுர்வை சரணம் அஹம் ப்ரபத்$_3$யே-தஸ்மாந் ந்யாஸ மேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:'' (ஶ்வேதா. உப.) என்று ஸகலேதரபரித்யாக பூர்வகமாக பரந்யாஸத்தை விதித்து ஆத்மாவினுடைய பாரதந்த்ர்யத்தை வெளியிட்டு உத்தரோத்தர அதிகாரிகளுக்கு பூர்வ பூர்வ விஹிதங்களை பரித்யஜிக்கச் சொல்லிக் கொண்டு இப்படி அதிகாரி பேதத்தாலே ப்ரஹ்மசர்யாத்யாச்ரமங்களிலும் அக்நிஷ்டோ மாதி க்ரது தீக்ஷைகளிலும் விதிகள் பரஸ்பர*

*பேதங்களாய், ஒரு கால் விதிப்பது ஒரு கால் நிஷேதிப்பது மாய் நின்ற நின்ற அளவுகளுக் கீடாயிருக்கும். இவற்றில் (246) ''ஏகாந்தி வ்யபதே$_3$ஷ்டவ்யோ நைவக்$_3$ராம குலாதி$_3$பி$_4$: விஷ்ணுநாவ்யபதே$_3$ஷ்டவ்யஸ் தஸ்ய ஸர்வம்ஸ ஏவஹி'' (விஷ்வக்சேந -ஸம்) என்று ஸகலேதர வ்யாவ்ருத்தனாய் க்ராம குலாதி வ்யபதேசமின்றிக்கே பகவதேக வ்யபதேஷ் டவ்யனாயிருக்கிற ப்ரபந்நனுக்கு (247) ''ந கிஞ்சித$_3$பி குர்வாணோ விஷ்ணோராயத நேவஸேத்'' (?) என்கிற படியே, பகவதநுபவ கைங்கர்ய வ்யதிரிக்தங்களான ஸகல ப்ரவ்ருத்திகளும் த்யாஜ் யங்களென்று சரம ச்லோகத்திலும் ததர்த்த ப்ரதிபாதகங் களான மற்றும் அநேக ஸ்தலங்களிலும் விதிக்கையாலே ப்ரவ்ருத்தியம்சம் பரித்ய ஜிக்கைக்கு ப்ரதிபந்தகமில்லை.*

**விளக்கவுரை:**

அந்த யாகப் பயனாலே சரீரத்தை இவ்வுலகில் விட்டு ஆந்மா நுண்ணுடலோடு சேர்ந்து சுவர்க்கஞ் சென்று அப் பயனை அனுபவிப்பதாலே, ஆந்மாவானவன் அழிவில்லாத வன் எப்போதும் இருப்பவன் என அறியும்படி செய்து, பின்னர் அள விறந்ததும் மிக்க சுகத்தையளிப்பதும் நிலைபெற்ற மோட்ச பயனை விரும்பும் சத்துவ குணத்தையுடைவனைக் குறித்து, (244) ''பிரம்மமான பரம்பொருளை அறிந்தவன் மேலான பயனை அடைகிறான்''-''பரம்பொருளை அறிந்தவன் பரம் பொருளாகவே (அந்தப் பரம்பொருளின் பிள்ளையாக) ஆகிறான்''-''ஓ மாணாக்கனே! அந்தப் பரமாத்மாவே பார்க்கத் தக்கவன், கேட்கத்தக்கவன், மனனம் செய்யத்தக்கவன், மிகவும் தியானிக்கத் தக்கவன்'' என்று பகவானை உபாசிக்கும் விதத்தை விதித்து ஆந்மா அந்த

இறைவனுக்கு அடிமை என்பதை இசைவித்து, மிகவும் சத்துவ குணத்தை யுடையவனாய் இவ்வுலகிலுள்ள எல்லாவற்றிலும் ஆசையை விட்டவனான ஏகாந்தியைக் குறித்து, (245) ''முமுக்ஷுவான யான் உன்னைச் சரணடைகிறேன்''- ''ஆகையால் சரணாகதி என்றும் பிரபத்தி யையே எல்லாத் தவத்தைக் காட்டிலும் பெரியதவம் என்று கூறுகிறார்கள்'' என எல்லாவற்றையும் விடுவதை முன்னிட்டு சரணாகதியை விதித்து, ஆந்மாவி னுடைய பாரதந்திரியத்தை இறைவன் இட்ட வழக்காயிருக்கும் தன்மையை வெளியிட்டு, மேலே மேலே உயர்ந்த அதிகாரிகளுக்கு முன் முன் விதித்த தருமங்களை விடச் சொல்லிக் கொண்டு வந்து, இப்படி அதிகாரிகளின் வேற்றுமையாலே பிரமசரியம் இல்லறத் தோன் வனத்திடை நின்றவன் துறவி என்ற நாலு ஆசிரங்களிலும், அக்நிட்டோமம் முதலான யாக முதலான தீக்ஷைகளிலும் விதிகள் ஒன்றுக்கொன்று வேற்றுமைகளை யுடையதாய், ஒருகால் விதிப்பது ஒருகால் அதையே தள்ளுவதுமாய் நின்ற நின்ற அளவுக்கீடாயிருக்கும்.

இவற்றில் (246) ''ஏகாந்தியான பிரபந்நனை கிராமம் குலம் முதலானவற்றையிட்டு அழைக்கத் தக்கவனல்லன்; பகவானு டைய சம்பந்தத்தையிட்டுச் சொல்லத்தக்கவன் அல்லவா? அவனுக்கு அந்தக் கிராமம் குலம் முதலானவை எல்லாம் அந்த பகவானே ஆவன்'' என்று எல்லாரினும் வேறுபட்டு மேம்பட்ட நிலையடைந்தவனாய், அவனை ஊர் குலம் முதலானவற்றையிட்டு வழங்கல் கூடாததன்றிக்கே பகவான் என்றே அழைக்கும்படியிருக்கிற பிரபந்நனுக்கு (247) ''பகவத் கைங்கரியம் தவிர்ந்த மற்ற விஷயங்கள் விடத்தக்கன'' என்கிறபடி, பகவதநுபவ கைங்கர்யத்திற்கு வேறுபட்ட எல்லாச் செயல்களும் விடத்தக்கன என்று

சரமச்லோகத்திலேயும், அவற்றின் பொருளை விரிக்கக் கூடியதாய மற்றும் பலவிடங் களிலும் விதிப்பதாலே செயல் வடிவமான தருமங்களை விடுவதில் எந்தத் தடையுமில்லை.

**248. மூலம்:**

*விதிக்கிற சாஸ்த்ரமே அதிகாரி பேதத்தாலே நிஷேதித்தால் த்யஜிக்கைக்குக் குறைவில்லையே. அதுபோலே விசிஷ்ட வேஷங்களை நோக்கி வர்ண தர்மங்களைக் குறித்து விதித்தவை யெல்லாம் (248) "நாஹம் விப்ரோந ச நரபதிர்ந(அ)பிவைஶ்யோ ந ஸூத்$_3$ரோ- நோவாவர்ணீந ச க்$_3$ருஹபதிர் நோ வநஸ்தே$_2$ா யதிர்வா- கிந்து, ஸ்ரீமத்$_3$ பு$_4$வநப$_4$வநஸ்தி$_2$த்யபாயைக ஹேதோர் லக்ஷ்மீ ப$_4$ர்த்துர் நரஹரிதநோர்த$_3$ாஸத$_3$ாஸஸ்ய த$_3$ாஸ:" (?) என்று வர்ணாச்ரமங்களில் ஒட்டற்று, (249) "அத்$_3$ய ப்ரப்$_4$ருதிஹே லோகா யூயம்யூயம் வயம் வயம்- அர்த்த$_2$காமபரா யூயம் நாராயண பராவயம்-விஷ்ணு த$_3$ாஸா வயம்யூயம் ப்$_3$ராஹ்மணாவர்ணத$_4$ர்மிண: அஸ்மாகம் த$_3$ாஸவ்ருத்தி நாம் யுஷ்மாகம் நாஸ்தி ஸங்க$_3$தி: நாஸ்திஸங்க$_3$திரஸ்மாகம் யுஷ்மாகந்து பரஸ்பரம்-வயந்து கிங்கரா விஷ்ணோ: யூயம் இந்த்$_3$ர்ய கிங்கரா:" (?) என்று அர்த்த காம பரவசராய் சிச்நோதர பராயணரான ஸம்சாரிக ளையும், உபாயாந்தர நிஷ்டரான வர்ணதர்மிகளையும், இந்த்ரய கிங்கரரான சப்தாதி விஷய ப்ரவணரையும் ஸமமாக த்யஜித்துத் துறை வேறிட்டுக் கொள்ளுகிற வில்லிபுத்தூர் பகவரைப் போன்ற பகவதேகாந்திகளான பரமவைதிகளுக்கு த்யாஜ்யங் களாகக் குறையில்லை. (250)அத்யந்த ப$_4$க்தி யுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவசக்ரம: (?) என்றும்,*

**விளக்கவுரை:**

விதிக்கிற சாத்திரங்களே அதிகாரி வேற்றுமையாலே தடுத்தால், விடுவதற்குக் குறையில்லையல்லவா. விசிஷ்ட வேஷங்கள்-ஆந்மா சரீரத்தோடு கூடியிருக்கும் நிலை. அதாவது, மனிதனை நோக்கி வருணதருமங்களைக் குறித்து விதித்தவை யெல்லாம், (248) யான் அந்தணனுமல்லன், அரசனுமல்லன், வைசியனுமல்லன், சூத்திரனுமல்லன்; ஆனால் அழகிய இவ்வுலக மெல்லாம் தோன்றுவதற்கும் வாழ்வதற்கும், அழிவதற்கும் ஒரே காரணமாய் திருவின் நாயகனான நரசிங்கனுடைய அடியானுக்கும் அடியானுக்கும் அடியவன் என்று வருண ஆசிரமங்களில் ஒட்டற்று, (249) ஏ உலகத்தவர்களே! நீங்கள் நீங்களே, நாங்கள் நாங்களே; நீங்கள் பொருள் இன்பங்களில் பற்றுள்ளவர்கள், நாங்கள் நாராயண பாராயணர்களான அடியவர்கள்- ''ஓ அந்தணர்காள்! நாங்கள் வைஷ்ணவர்கள்; விஷ்ணுவிற்கு அடிமை செய்பவர்கள்;

நீங்கள் பிராமணர்கள், சாதிக்குட்பட்ட தருமத்தைச் செய்பவர்கள், கைங்கர்யம் செய்து போருகின்ற எங்களுக்கும். சாதிக்குரிய தருமங்களைச் செய்து போருகின்ற உங்களுக்கும் ஒரு சேர்க்கையில்லை''-''உங்களுக்கும், எங்களுக்கும் ஒருவருக்கொருவர் சேர்க்கைப் பொருந்தாது; ஏனெனில் நீங்கள் இந்திரியங்களுக்கு வசப்பட்டவர்கள்; நாங்கள் பகவான் விஷ்ணுவிற்கு அடிமைப்பட்டவர்கள்'' என்று பொருளின்பங்களில் ஈடுபாடு கொண்டு கொண்டவர்களாய் உடல்பசிக்கும் வயிற்றுப் பசிக்கும் இரை தேடுகின்ற ஸம்சாரிகளையும், வேறு உபாயத்தைப் பற்றி நிற்கும் வருண தருமிகளையும், ஐம்பொறிகளுக்கு அடிமை செய்யும் புலனின்ப வேட்கையுடையவரானவர்களையும், சமமாக

விட்டுத் துறை வேறிட்டுக் கொள்கிற வில்லிபுத்தூர் பகவரைப் போன்ற பகவானிடத்தே ஈடுபாடு கொள்ளும் ஏகாந்திகளான மேலான வைதிகர்களுக்குச் சாமானிய தருமங்களை விடுதல் குறை யில்லை. (250) அளவுகடந்த பக்தியுடையவர்களுக்குச் சாத்திர விதியும் முறையுமில்லை என்றும்,

**249. மூலம்:**

*(251) "தாந்த்ரிகம்" வைதி$_3$கம் த்யக்த்வா பரமம் வைதி$_3$கம் பு$_3$தை$_4$: அவலம் ப்$_3$யாநுஸந்த$_3$த்$_4$யாத்$_3$ விஷ்ணோச் சேஷத்வம் ஆத்மந:" (?) என்றும் (252) "விமுக்தாந்யஸ மாரம் பே$_4$ாநாராயண பரோப$_4$வ" (?) என்றும் (253) "ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்றும் "இவ்வளவு பிறந்தவன் இவற்றைவிட்டால் குற்றம் வாராது" (முமு.சர. ப்ர.ஸூத். 269) என்றும், இவ்வதிகாரிக்கு விதி பரித்யாகம் ஸகலவிசேசாஸ் த்ரஸம்மதமுமாய், சரண்யாபிமதமுமாய் ஸகல சிஷ்டாக்ரகண்ய பரிக்ரஹமுமாயிருக்கையாலே, ப்ரவ்ருத்யம்ச பரித்யாகம் நிர்பாதகமாக ஸுஸங்கதமாம். சாஸ்த்ரங்களில் கூடாதென்று நிஷேதிக்கிற பரஹிம்ஸா பரதார பரிக்ரஹ அபேய பாந அபக்ஷ்ய பக்ஷணாதிகளை அருவருத்து பரித்யஜித்து, சாஸ்த்ரங்கள் அங்கீகரித்த ஸ்வரூபாநு குண ஸாதுகர்மங்களும், ஸாத்விக ஆஹாரங்களும், பரிக்ரஹித்து சாஸ்த்ர வச்யராய்த் திரிகையாலே பகவதாஜ்ஞா பரிபாலநமும், ஸித்தித்து, (254) "ஆஜ்ஞாச் சே$_2$தீ$_3$ மமத்$_3$ரோஹீ" (விஷ்ணு தர்மம்) என்கிற பகவத்ரோஹமும் தப்பி நிஷ்கண்டக மார்க்கமாய் விடும். (255) "ந சாஸ்திரம் நைவசக்ரம:" என்கிற சாஸ்த்ராதிக்ரமணத்துக்கு இரண்டும் ஒவ்வாதோ?*

*என்று விதி பரித்யாகத்தோபாதி நிஷேத பரிக்ரஹம் பண்ணுவோம் என்னில்,*

**விளக்கவுரை:**

(251) ''அறிவாளர்களால் மந்திரமல்லாத சைகை முதலானவற்றால் செய்யக்கூடிய தாந்திரிகம் பூருவபாகத்தில் சொல்லப்பட்ட வைதிகச்செயல்களையும் விட்டு விட்டு உத்தரபாகத்தில் கூறப்பெற்ற மேலான வைதிக தருமங் களைப் பற்றி விஷ்ணுவாகிய இறைவனுக்கு ஆந்மா அடிமை என்பதைப் பற்றுக் கோடாகக் கொண்டு ஒழுக வேண்டும் எனக் கூறப்படுகிறது'' என்றும், (252) ''மற்றெல்லாவற் றையும் விட்டு நாராயணனையே மேலானவனாகக் கொள் வாயாக'' (253)''உபாயாந்தரமாகிய எல்லா தர்மங்களையும் விட்டு என் ஒருவனையே உபாயமாகப் பற்று'' என்றும், இவ்வளவு பிறந்தவன் இவற்றை விட்டால் குற்றம் வாராது என்றும், இவ்வதிகாரிக்கு விதிக்கப் பட்டதை விடுவதற்குச் சிறப்பான சாத்திரங்கள் எல்லாவற்றுக்கும் சம்மதமும் இறைவனுடைய விருப்பமும் சிஷ்டர்களில் முதன்மை யானவர் அனைவராலும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாயுள்ள தாலே, செயல்பாட்டின் வடிவமாயுள்ள தருமங்களை விடுதல் எவ்விதக்குற்றமும் இன்றிப் பொருந்தும்.

சாத்திரங்களில் செய்யக்கூடாது என்று தடை செய்யப்பட்டுள்ள பிறர்க்குத் தீங்கிழைத்தல், பிறன்மனைவி யைக் கைக்கொள்ளுதல், பருகத்தகாதவைகளைப் பருகுதல் முதலானவை, உண்ணத் தகாதணவு வகைகள் இவற்றை அருவருத்து விட்டொழித்துச் சாத்திரங்கள் அங்கீகரித்த ஆந்ம இயல்புக்கேற்ற நற்செயல்களும் சாத்துவிக உணவுகளையுங் கைக் கொண்டு சாத்திரத்தைப் பின்பற்றி வாழ்வதானால்

பகவானுடைய ஆணையைப் பாதுகாத்து, (254) ''என்னு டைய ஆணையை மீறுபவன் எனக்குத் துரோகியாவான்'' என்கிற பகவானுடைய சீற்றத்திலிருந்து தப்பி நல்ல நெறியைப் பின்பற்றுபவனாகிவிடும். (255) ''மிகுந்த பக்தியுள்ளவர்களுக்குச் சாத்திர விதியும் முறையுமில்லை'' என்கிற சாத்திரத்தை மீறுதலுக்கு இரண்டும் ஒப்பாகாரோ? என்று விதித்தனவற்றை விடுதலைப் போலே சாத்திரத்தால் தடை செய்த தீயவொழுக்கத்தைக் கைக்கொள்வோம் எனின்;

**250. மூலம்:**

*அதுக்கு விசேஷ சாஸ்த்ர பரிக்ரஹமும், சரண்யாபிமதமும் சிஷ்ட சம்மதமும் உண்டாகையாலே விரோதமில்லை. இதுக்கு ஸாமாந்ய சாஸ்த்ர மானாலும், விசேஷ சாஸ்த்ரமானாலும் தர்சநக்ரந்தங்களானாலும் அங்கீகரிக்கலாம் என்று ஒன்றும் சொல்லாமையாலும், மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார், ''புரிவதும் புகைபூவே'' என்றும், ''எண்ணிலும் வரும்'' என்றும், ''தொழுதுமா மலர்நீர் சுடர்தீபங் கொண்டெழுது மென்னும் இது மிகை'' என்றும், ''சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும்'' என்றும் ஆச்ரயணம் ஸுலபமென்று ஸ்வாராத னத்தைச் சொல்லுகிறதொழிய, ப்ரபந்நனுக்கு ப்ராதிகூல்ய நிவ்ருத்தி சொல்லுகிற விடங்களில் ஸகலோபநிஷத் ஸாரபூதமான திருவாய்மொழியில் ''வீடுமின் முற்றவும்'' என்றும், ''நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து'' என்றும் ''பற்றிலையாய் அவன் முற்றிலடங்கே'' என்றும், ''உள்ளிக் கெடுத்து இறையுள்ளில் ஒடுங்கு'' என்றும், ''கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்'' என்றும் ''சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது-ஏத்தி யெழுவது பயன்'' என்றும் ''பயனல்ல செய்து பயனில்லை''*

*(திருவாய்மொழி 2-10-3) என்றும் "கிறியென நினைமின் கீழ்மை செய்யாது" என்றும்;*

**விளக்கவுரை:**

அதற்குச் சிறந்த சாத்திரத்தைக் கைக்கொள்ளலும், இறைவனின் விருப்பமும், ஆன்றோர்கள் (சிஷ்டர்கள்) சம்மதமும் உண்டாகையாலே விரோதமில்லை. சாத்திரம் தடை செய்த தீய வொழுக்கத்தைக் கொள்வதாகிய இதற்கு, சாமானிய சாத்திரமானாலும் சிறப்புடைய சாத்திரமானாலும் வைணவ சமயநூலானாலும் (அத்தீயவற்றை ஏற்பதை) அங்கீகரிக்கலாம் என்று ஓரிடத்திலும் ஒருவராலும் ஒன்றுங் கூறாமையாலும், மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார், ''புரிவதுவும் புகைபூவே'' என்றும், ''எண்ணிலும் வரும்'' என்றும்,

''தொழுதுமாமலர்நீர் சுடர் தீபங் கொண்டெழுது மென்னும் இது மிகை'' என்றும் ''சிற்ற வேண்டா சிந்திப்பே யமையும்'' என பகவானை அடைதல் எளிதென்று அவனை ஆராதிப்பதின் எளிமையைக் கூறுவதன்றி, பிரபந்நனுக்கு விரோதமானவற்றை விடுவதைச் சொல்லுகிற இடங்களில் எல்லாவுபநிடதத்தின் சாரமானவையான எல்லாப் பிரபந்தங் களுக்கும் அரசாகிய திருவாய்மொழியில் ''வீடுமின் முற்றவும்'' என்றும், ''நீர்நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து'' என்றும், ''பற்றிலையாய் அவன் முற்றில் அடங்கு'' என்றும் ''உள்ளிக் கெடுத்து இறைவுள்ளில் ஒடுங்கு'' என்றும் ''கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்'' என்றும் ''சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது ஏத்தி யெழுவது பயன்'' என்றும் ''பயனல்ல செய்து பயனில்லை'' என்றும் ''கிறியென நினைமின் கீழ்மை செய்யாது'' என்றும்,

251. மூலம்:

''திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது'' என்றும், ''கிறியென நினை மின் கீழ்மை செய்யாது'' என்றும் ''நலமென நினைமின் நரகழுந்தாது'' என்றும், ''வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது'' என்றும், ''சூதென்று களவும் சூதுஞ் செய்யாது'' என்றும் ''மன்னா மனிசரைப் பாடிப்படைக்கும் பெரும்பொருள் என்னா வது'' என்றும், ''ஒருநாயகமாய் ஓட உலகுடன் ஆண்ட வர்-இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்'' (திருவாய்மொழி *4-1-1*), என்றும் ''ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே'' என்றும், ''கொண்ட பெண்டிர் மக்களுற் றார்-துணையும் சார்வுமாகுவார்போல்- இரணங்கொண்ட தெப்பராவர்- மதுரபோகம் துற்றவரே வைகி மற்றொன்று உறுவர்- இல்லை கண்டீர் இன்பமந்தோ!- சிற்ற வேண்டா சிந்திப்பே அமையுங் கண்டீர்களந்தோ!- வாழ்தல் கண்டீர் குணமிதந்தோ'' என்றும், ''கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்'' என்றும், ''சார்ந்த இருவல் வினைகளும் சரித்து மாயப் பற்றறுத்து தீர்ந்துதன் பால்மனம் வைக்கத் திருத்திவீடு திருத்துவான்'' என்றும்;

ஆதிமத்யாவஸநங்களாலே ஒருகால் சொன்னாப் போலே ஒன்பதின்காலுஞ்சொல்லிக் கொண்டு தஹிக்கிற க்ருஹத்திலேயகப்பட்டுக் கிடந்தாரைக்கூப்பிடுமா போலே, பராநர்த்தாஸஹிஷ்ணுக்களாய் தேவதாந்தர ஸாதநாந்தர விஷயாந்தரங்களும் அஹங்கார மமகார காமக்ரோதாதிகளும், தாரபுத்ராதி பந்து ஸங்கமும், பரதந பரதார பரிக்ரஹாத் அக்ருத்யகரணமும், மற்றும் ஐச்வர் யாதிகளும், முதலான விரோதிகளென்று பேர் பெற்றவை யெல்லாம் ஸவாஸநமாக விட்டு, அவனே பரதெய்வ

***மென்றும் உபாயோபேயங்களென்று பற்றி னால், திலதைலவத் துர்விவேசமாய்ப் பொருந்திக் கிடக்கிற புண்ணிய பாபங்களை நசிக்கப் பண்ணி;***

**விளக்கவுரை:**

''திறமுடை வலத்தால்தீவினை பெருக்காது'' என்றும், ''கிறியென நினைமின் கீழ்மைசெய்யாது'' என்றும், ''நலமென நினைமின் நரகழுந்தாது'' என்றும், ''வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது'' என்றும், ''சூதென்று களவும் சூதுஞ் செய்யாது'' என்றும், ''மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள் என்னாவது'' என்றும், ''ஒரு நாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர் இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்'' என்றும், ''ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே'' என்றும், ''கொண்ட பெண்டிர் மக்களுற்றார் துணையும் சார்வும் ஆகுவார் போல்-இரணங் கொண்ட தெப்பராவர்-மதுர போகம் துற்றவரே வைகி மற்றொன்றுவர் - இல்லை கண்டீர் இன்ப மந்தோ- சிற்றவேண்டா சிந்திப்பே அமையுங் கண்டீர் களந்தோ! வாழ்தல் கண்டீர் குணமிதந்தோ'' என்றும், ''சார்ந்த இருவல் வினைகளும் சரித்து மாயப் பற்றறுத்து-தீர்ந்து தன் பால் மனம் வைக்கத் திருத்திவீடு திருத்துவான்''-என்றும்;

''முதல் இடை கடையிலும் ஒரு கால் சொன்னாற் போலே ஒன்பதின்காற் சொல்லிக்கொண்டு, நெருப்புத் தீண்டி எரிகிற இல்லத்திலே அகப்பட்டு நின்றாரைக் கூப்பிடுவது போல், பிறர் அழிவைப் பொறுக்காதவர்களாய், பிற தெய்வத்தை வணங்குவது, பிறசாதனத்தைப் பற்றுவது, ஐம்புலன் இன்பங்களிலீடுபடுதல், அகங்காரம் மமகாரம் பேராசை கோபம் அழுக்காறு ஆகியனவும், மனைவி பிள்ளை

உறவினர் கூட்டத்திலிருப்பும் பிறன் மனைவியரை விரும்புதல், பிறர் பொருளைக் கொள்ளுதல், பொய்பேசல் முதலான செய்யத் தகாதவையும், மற்றும் செல்வம் சுவர்க்கம் கைவல்யம் ஆகிய விரோதிகளென்று, பெயர் பெற்றவை எல்லாம் முழுமையாக விட்டு, பகவான் நாராயணனையே மேலான தெய்வமென்றும், அவனே நமக்கு ஆறும் பேறுமாகப் பற்றினால் எள்ளுக்குள் எண்ணெய் போல் பிரிக்க முடியாதவையாய் இவ்வுட லோடே பொருந்தியுள்ள புண்ணிய பாவங்களை அழியச் செய்து;

**252. மூலம்:**

***அவித்யா ஸம்பந்தத்தையறுத்து அநந்ய ப்ரயோஜனனாய் தன் பக்கலிலே நெஞ்சை வைக்கும்படி பண்ணி இனி, இவன் நமக்குக் கை புகுந்தாதென்று ஸந்தோஷித்துத் தன்வீட்டை யலங்கரிக்கப் பண்ணு மென்று ஜகத் விதிதமாகக் கூப்பிடா நிற்கச் செய்தேயும் இவையெல்லாம், மர்க்கடஹஸ்த மாலிகா ப்ராயமாக்கி இவற்றுக்கும் விபரீதார்த்தங்களைச் சொல்லிக் கொண்டு அக்ருத்ய கரணம் உபாயாதி காரிக்கவச்யாபேக்ஷித மென்றும், பகவதபிமதமென்றும், இது தர்ம ஸூக்ஷ்மமென்றும், சாஸ்த்ரம் சொல்லாதொழிந்தாலும் நிரஹங்கார ஹேதுவாகையாலே இது சாஸ்த்ர தாத்பர்ய மென்றும், இது ஆர்ய ஸித்தாந்த மென்றும் ப்ரவ்ருத்தித்துக் கொண்டு, ஆரேனும் நீர் இப்படிச் செய்யக் கூடுமோ? என்னில் நான் இப்படிச் செய்வேனா? என்று தாடந பருஷோக்திதர்ஜந பர்த்ஸங்களாலே தண்டித்துக் கொண்டு ப்ரமாண பரதந்த்ரனானவன் திரிய வொண்ணாதிறே. இப்படி நிஷித்தாநுஷ்டாந பரராய்த் திரியா நின்றாலும் ஒருவன் சொன்னவளவில், நிரஹங்காரராய், (256)***

***"பாபாநாம் ப்ரத₂மோஸ்ம்யஹம்" (?) என்று, நான் பொய் சொல்லுவேனென்று பெருமாள் திருவுள்ளம் பற்றாதபடி, இது மெய்யென்று ஸாக்ஷி சொன்னாய் நீயன்றோ எனக்கு மஹோபகாரகனென்று, அவனிடத்தில் பொறையும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும், நடந்ததாகில், காலாந்தரே ஜந்மாந்தரேயானாலும் பச்சாத்தாபம் பிறந்து பகவத் நுக்ரஹ பாத்ரராவர்.***

**விளக்கவுரை:**

அறிவற்றதான இவ்வுடலிலும் இவ்வுலகத்திலும் உண்டான பற்றை அறுத்து வேறு பயனை விரும்பாது இறைவனான தன்னிடத்திலே நெஞ்சை வைக்கும்படி செய்து இனி, இந்த ஆத்மா நமக்குக் கைபுகுந்தான் என்று மகிழ்ந்து, தனது வீடாகிய பரமபதத்தை இறைவன் அலங்கரிக்கச் செய்யுமென்று ஆழ்வார் கூறுகிறபடி, பின்னர் ஆர்த்தி அதிகமாகி, காணவாராய் என்று இவ்வுலகோர் அறியும்படி கூப்பிடாநிற்கச் செய்தேயும், இவையெல்லாம் குரங்கின் கையில் பூமாலை, என்ற வழக்குப்படி இவற்றுக்கெல்லாம் மாறுபட்ட பொருளைச் சொல்லிக் கொண்டு, செய்யத் தகாதவைகளும், சித்தோபாயமான இவ்வுபாயத்தைப் பற்றிய அதிகாரிக்கு அவசியம் வேண்டுமென்றும், இறைவனுக்கு விருப்பமென்றும், இவை தருமநுட்பமென்றும், சாத்திரங் கூறா தொழிந்தாலும் அகங்காரமில்லாத் தன்மைக்கு ஏதுவாகையாலே சாத்திரத்தின் உட்கருத்தென்றும், இவை உயர்ந்த சித்தாந்த மென்றும் கூறி அத்தீய ஒழுக்கத்தைச் செய்து கொண்டு, யாரேனும் பார்த்து நீர் இப்படிச் செய்யலாமோ? என்று வினவினால் நான் இப்படிச் செய்வேனோ? என்று அடிப்பதும் கடுஞ்சொல் கூறி மிரட்டுதல் எச்சரித்தல் ஆகியவற்றாலே கேட்போரை

தண்டித்துக் கொண்டு, பிரமாணத்திற்கு வசப்பட்டு நடப்பவன் இவ்வாறெல்லாம் செய்து திரியமாட்டானிறே.

இப்படித் தாழ்ந்த ஒழுக்கத்தை மேற்கொண்டு அதன்படி திரியா நின்றாலும், ஒருவன் நல்லொழுக்கத்தைக் கூறிய அளவி லேயே, அகங்காரமற்றவனாய், (256) "யான் பாபங்களைச் செய்வதில் முதன்மையானவன்" என்று சான்றோர் கூறுவதுபோலே, தன்னைத் தாழ்த்திக் கொண்டு, நான்பொய் சொல்லுவேன் என்று இறைவன் திருவுள்ளம் பற்றாதவாறு, இது மெய்யென்று சாட்சி சொன்னாய்; நீயன்றே எனக்குப் பெரிய உதவி புரிந்தவன் என்று அவனிடத்தில் பொறையும் உகப்பும் நன்றியறிதலும்,

**253. மூலம்:**

*இத்தர்சன தூஷகர்க்கு அதுவுமில்லையே. ஆகை யாலே அதீந்த்ரியார்த்த விஷயத்தில் நம்பூர்வர்களெல் லாரும் ஐதிஹ்ய ஸம்பவார்த்த பத்ய பாவோபமாந அனுமாந ப்ரத்யக்ஷங்கள் விட்டு ஸகலவேதாந்த ஸங்க்ர ஹமான மூலமந்தர ப்ரமாணைக நிஷ்டராய், அதில் சொன்னபடியே ஸ்வஸ்வாதந்த்ர்ய அந்யசேஷத்வ தேஹாத்மாபிமாநங்களை பரித்யஜித்து ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய ப்ரவ்ருத்தி நிவ்ருத்தராய் ஸ்வபாரதந்த்ர்யத்தை யநுஸந்தித்து அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தநமான அக்ருத்யகரணாதி நிஷித்தா நுஷ்டாந நிவ்ருத்தியை ப்ரார்த்தித்து, அவனையுபாயமாக அத்யவஸித்து பாகவத சேஷத்வத்திலே யூன்றி நாரபத வாச்யரான சேதநாசேதங்களோடே சத்ரு மித்ர விபாகமற, ராகத்வேஷ ஸூந்யராய் தாரபுத்ராதி பந்து ஸங்கத்தை விட்டு அவனையே எல்லாமாகப் பற்றி ஸ்வகர்த்ருத்வ போக்த்ருத்வ நிவ்ருத்தி பூர்வக ஸர்வவித கைங்கர்ய*

*நிரதராய் வர்த்திக்கிறாப்போலே வர்த்திக்குமதொழிய, அதிகாரியாமவன் அப்ராமாண்ய க்ருத்யங்களிலே ப்ரவர்த்திக்க மாட்டானிறே. நீரிப்படி சதசः தூஷித்தீர், 'அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்ய தோஷம்' என்றும், பகவத் பாகவத விஷயங்களிலே தோஷமுண்டானாலும், குணம் போலே உபாதேயமாயிருக்குமென்றும் இம்மூன்று விஷயங்களில் தோஷமுண்டானாலும் கர்ஹிக்கப் போகாது; அதுவும் உபாதேயமாயேயாயிருக்கும்.*

**விளக்கவுரை:**

நடந்ததாகில், இத்தன்மையானவர்கள் வேறு காலங்களிலோ வேறு பிறவியிலோ அவரிடத்தில் இறைவனுக்கு அநுதாபம் பிறந்து அவ்விறைவனுடைய அருளுக்கு உரியவராவர்.

அங்ஙனன்றிக்கே இந்த ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தையும் ஆசார அநுஷ்டானங்களையும் இழித்துப் பேசுவார்க்கு அவ்விறைவனுடைய அருளும் இல்லையாய் விடும். ஆகையால் புறப்பொறியாகிய கண்களால் காணமுடியாத விஷயத்தில் சரித்திரம் முன்னிகழ்ந்த நிகழ்ச்சி, பாடல்களில் வரும் செய்தி மனிதன் செய்யும் ஆய்வு உதாரணம், அநுமானம், கண் முதலிய பொறி களால் அறியக் கூடியவற்றை விட்டு எல்லா வேதாந்தங்களின் சுருக்கமான பெரியதிருமந்த்ரத்தையே தமக்குச் சான்றாகக் கொண்டவராய், அவற்றில் சொன்ன படியே தனக்குத்தானே உரிமை என நினைத்தல், பிறர்க்கடிமை என்றிருத்தல், தேகமே ஆந்மா என்ற நினைவு ஆகியவைகளை நன்றாகவிட்டு;

தன்னைத் தானே காத்துக் கொள்ளும் முயற்சியில் நின்றும் விலகியவராய் தன்னுடைய (பாரதந்திரியம்)

ஒன்றுக்கும் இயலாமையை நினைத்து; அறிவின்மை புண்ணியபாவ கருமங்கள் தீயபழக்கம் தீயவற்றில் சுவை இவற்றால் வந்த பஞ்ச பூதங்களால் ஆன உடல் தொடர்பு காரணமாகச் செய்யக்கூடாத தீய வொழுக்கத்திலிருந்து கை வாங்கி நிற்றலை இறைவனி டத்தில் பிரார்த்தித்து, அவனையே உபாயமாக உறுதிபூண்டு பாகவதர்க்கு அடிமை புரிவதில் ஊன்றி நாரபதத்தில் கூறப்பட்டவரான அறிவுடைய மக்களிடத்தும் அறிவற்ற சடப்பொருளிடத்தும் பகைவ ரென்றும் நண்பரென்றும் வேற்றுமையின்றி விருப்பு வெறுப்பற்றவராய் மனைவி மக்கள் பெயரன் உறவினர் ஆகியோரிடமுள்ள பற்றைவிட்டு எம்பெருமானையே, எல்லா உறவுமாகப் பற்றித்தானே செயல்படுபவனென்றும் அதனால் விளையும் இன்பம் தன்னுடையது என்னும் எண்ணத்தை முதல் முன்னம்விட்டு, எல்லாக் கைங்கர்யங்களையும் இறைவனுக்குச் செய்ய வேண்டும் என்கிற நிட்டையை யுடைய ஞானிகளைப்போல் இருப்பதல்லாமல்,

**254. மூலம்:**

***(257) "ப்ராது₃ர் பாவைஸ் ஸுரநர ஸமோ தே₃வ தே₃வஸ் ததீ₃யா ஜாத்யாவ்ருத்யாத்வபிசகுணதஸ் தாத்₃ருஶோ நாத்ர க₃ர்ஹா" (?) என்று, ப்ரமாணஞ் சொல்லா நின்றதிறே? என்னில், ஸம்ஸாரிகள் தோஷமும் நாரத்வ ப்ரயுக்த பந்தத்தாலே தன்தோஷாமென்று நினைக்கச் சொன்ன நான், தூஷிக்க வருகிறேனோ? மூடனான நீ அபேத ப்ரவருத்தி ஸத்ஸம்பரதாயமென்று சிலர் சொன்னாரென்று ப்ரமிக்க, ப்ரம நிவ்ருத்யர்த்தமாக, ''என்பர் மூர்க்கராவார்'' என்கிறபடியே சொன்னேன் இத்தனையொழிய, இது நமக்குப் பணியோ? இது***

*கிடக்கட்டும். (258) "அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்ய தோ₃ஷம்" (ஸ்ரீவசன பூஷணம்-300) என்றது,*

**விளக்கவுரை:**

அதிகாரியானவன் பிரமாணங்கள் சொல்லாத தீயசெயலைச் செய்ய மாட்டானிறே. 'நீர் இவ்வாறு நூறு முறை தீய செயலைச் செய்தல் கூடாதெனக் கடுகடுத்துக் கூறினீர்' ஆனால், நம் பூருவர்கள் "அஜ்ஞானத்துக்கு இலக்கு ஆசார்யதோஷம் என்றும்", பகவத் பாகவத விஷயங்களிலே குற்ற முண்டானாலும் குணம் போலே கொள்ளத்தக்க தாயிருக்கும் என்றும், ஆசாரியன் பகவான் பாகவதர் ஆகிய இம் மூன்று விஷயங்களிலும் தோஷமுண்டானாலும் வெறுக்கப் போகாது. அவையும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாயிருக்கும்.

257. "தேவர்களுக்கும் தேவனான நாராயணன் அவதாரங்களாலே தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் ஒத்த தன்மையை அடைகிறான்; அதுபோலவே அவனது அடியார்களும் சாதியினாலும் ஒழுக்கத்தாலும் குணத்தாலும் பகவத்சம்பந்தமில்லாதவரோடு ஒத்த தன்மையுடைய வராகிறார்கள். இவ்வாறு பாகவதரல்லாரோடு ஒத்த வரானாலும் அவன் அடியார்க்கு அது பழிப்பில்லை: பின்னை இது உயர்வாவது யாங்ஙனம்? எனின் இது உலகத்தைக் காக்கும் பொருட்டாதலின், பாகவதரல்லாதாரிடத்துள்ள கல்வி ஒழுக்கம் அவற்றால் வரும் மேன்மை விதயையின் அலங்காரம் போலே பழிக்கத்தக்கது" என்று, பாகவதர் அல்லாதார் செய்யும் எச்செயலும் பழிப்புக்கிடமாகு மென்றும் பாகவதர் செய்கின்றவை எல்லாம் பழிப்பிக்கிட மாகாது அதனால், பாகவதரை வெறுக்கக்கூடாது என்று

மேற்கண்ட பிரமாணம் சொல்கிறதே யல்லவா? எனின், ஸம்சாரியான சாதாரண மக்களின் குற்றமும் நாரபதத்தால் சொல்லப்பட்ட உறவினாலே, அது தன்குற்றம் மென்று நினைக்கச் சொன்ன யான் பிறரைக் குற்றஞ் சொல்லுகி றேனா? மூடனான நீ, தீய வழி நடத்தல் நல்ல சம்பிரதாயம் என்று சிலர் சொன்னார்கள் என்று மயங்க, அம்மயக்கத்தைப் போக்குவதற்காக என்பர் மூர்க்கராவார் (உப. ரத்தினமாலை-71) என்கிறபடியே, சொன்னேன் இத்தனை யொழிய இது எமக்குப் பணியோ? இது இருக்கட்டும், 258. சீடனுடைய அறிவின்மைக்கு இலக்கு ஆசாரியனுடைய (திருமேனியால் வரும்) குற்றம் என்றது,

**255. மூலம்:**

*ஸதாசார்யனானவன், தன்னை ஆச்ரயித்து சேதனன் பூர்வவாஸனையாலே பத்த ஸம்ஸாரியாய், துர்விஷய ப்ரவணனாய் அரங்கமாளியைப் போலே திரியா நின்றால், அவனுடைய விநாசம் தன்னதாக பாவித்து ஹிதபுத்தியாலே நிக்ரஹித்து பருஷோக்தியாலே சிக்ஷித்தால், இவன் துர்புத்தியாகையாலே ஆசார்யனான வன் எல்லாம் பொறுத்து 259. யஸ்ய அபராத$_4$ாந் ஸ்வபு$_4$த$_3$ ப்ரபந்நாந்-ஸ்வகீய காருண்ய கு$_3$ணேநபாதி (குருகுணா வளி) என்று காருண்யத்தாலே ரக்ஷிக்க வேண்டாவோ? இப்படி அஹங்காரத்தாலே ஆசார்யத்வ பூர்த்தியுண்டோ? என்று நினைக்குமென்று, அதுவாராமைக்காக அந்த நிக்ரஹ ரூப தோஷமும் ஹிதபுத்தியாச் செய்கிறதாகை யாலே, உபாதேயமென்று சொன்னதித்தனை யொழிய, தோஷமெல்லாம் உபாதேயமென்றால், அக்ருத்ய கரணாதி அஸஹ்யா பசாராந்தமாக ப்ரக்ருதி குணத்தாலே வருகிற நிஷித்தாநுஷ்டாநங்களெல்லாம் உபாதேயமாம்.*

**விளக்கவுரை:**

நல்லாசாரியனானவன் தன்னை அடைந்த சீடன் முன் பழக்கத்தாலே மூலப்பகுதியின் விகாரமான இவ்வுடலில் கட்டுப்பட்ட ஸம்சாரிகளைப் போலே கெட்ட விஷயத்தில் ஈடுபட்டவனாய் அரங்கமாளி என்பானைப்போலே திரியா நின்றால், அவனுடைய அழிவு தன்னுடையதாக நினைத்து நன்மை செய்ய வேண்டும் என்னும் எண்ணத்தாலே ஆசாரியனானவன் தண்டித்துக் கடுஞ்சொற்களாலே சிட்சை செய்தால், சீடன் கெட்ட நினைவுயுடையனாகையாலே அவன் செய்த எல்லாவற்றையும் பொறுத்து, (259) ''எந்த ஆசாரியனானவன் தம்திருவடியை அடைந்த பிரபந்நன் குற்றமிழைத்தவனானாலும் அவனை ஆசாரியனானவன் தன்னுடைய கருணையாலே சீடனைக் காக்க வேண்டாவோ? இவர்க்கு ஆசாரிய நிறைவு உண்டோ என்று, சீடன் இவ்வாறு தன் அகங்காரத்தாலே ஆசாரியனைக் குற்றமுடையவன் என்று நினைக்கு மென்று அதுவாராமைக்காக அந்த சிட்சை மூலமாக வருகின்ற தோஷமும் சீடனுடைய நன்மையின் பொருட்டே செய்கிறதாகையாலே அதைக் கைக்கொள்ள வேண்டுமென்று கூறியதன்றி, இவன் குற்றமெல்லாம் ஏற்றுக் கொள்ள வேண்டு மென்றால், செய்யக்கூடாததான தீய வற்றைச் செய்தல், பகவதபசாரம் பாகவதாபசாரம் பொறுக்க முடியாத அபசாரங்கள் வரையிலான சரீரத்தின் இயல்பால் வருகின்ற கெட்டவொழுக்க மெல்லாவற் றையும் ஏற்றுக் கொள்ள வேண்டி வரும்.

**256. மூலம்:**

*அப்போது ஆசார்ய ஸ்வரூபஞ்சொல்லுகிற ச்ருதிஸ் மிருத்யாதிகளும், ஸ்ரீவசனபூஷண விசேஷ சாஸ்த்ரங்*

களும் வ்யர்த்தங்களாய்ப்போமாகையாலே, அப்படிச் சொல்லப் போகாது. ச்ருத்யாதிகள் சொல்லும்படி யன்றிக்கே, தான் ஆசார்யனென்றும் சிஷ்யனைத் தனக்கு சிஷ்யனென்றும் உபதேசபலம், த்ருஷ்டபலாதிக ளென்றும் நினைத்தால் அவனுக்கு ஆசார்யத்வ பூர்த்தியில்லை; அவனோட்டை ஸம்பந்தம் விநாசஹேது வென்று சொல்லுகிற ஸ்ரீவசனபூஷணத்திலிறே "அஜ்ஞா நத்துக்கிலக்கு ஆசார்ய தோஷமென்றது".

ஆனால் அதுக்கர்த்தம் ஏதென்னில், நம்மோபாதி ஆசார்யனும் ஆஹார நித்ரா பரவசனாய், மலமூத்ரோத்ஸர்ஜநாதிகளைப் பண்ணிக் கொண்டு திரிகிற சேதனனன்றோ என்று திருமேனி தர்மங்களையிட்டு மனுஷ பாவம் பார்க்க வொண்ணாது; ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பத்தியைப் பார்த்து, (260) "கு$_3$ருரேவ பரம்ப்$_3$ரஹ்ம" (ப்ரபஞ்சஸாரம். 23-40) என்கிற ப்ரதிபத்தி பிறக்க வேணுமென்று சொன்ன தித்தனை. இனி பகவத் பாகவத தோஷங்களை உபாதேய மென்றது, பகவத் விஷயத்தில் தோஷமுண்டென்று கொள்ளவொண்ணாதிறே. தனக்கு சேஷபூதராய் பரதந்த்ர ரான ஆத்மாக்களைக் குடல் துடக்குப் பாராதே நிர்த்த யனாய் அபராதாநுகுண தண்டம் பண்ணுவிக்கிறான் என்று, இவன் துர்புத்தியாலே தோற்றுகிற தோஷமிறே அங்குள்ளது. இச்சேதனன் அசித்துப்போலே ஜ்ஞாந ஸூந்ய வஸ்துவன்றே, இஷ்டமானபடி விநியோகங் கொள்ளுகைக்கு.

**விளக்கவுரை:**

அப்போது, ஆசாரியனுடைய இயல்புகளைக் கூறு கின்ற வேதம் தரும சாத்திரம் இதிகாசம் புராணம் ஆகிய வைகளும் ஸ்ரீவசனபூடணம் என்ற சிறப்புமிக்க சாத்திரங்

களும் வீணாகி விடுமாகையால் அவ்வாறு கூறத்தகாது. வேதமுதலானவைகள் சொல்லும்படியன்றிக்கே தான் ஆசாரியன் என்றும் சீடனைத் தனக்குச் சீடனென்றும் உபதேசிப்பதன் பயன், இவ்வுலகப் பயன்களென்றும் நினைத்தால் அவனுக்கு ஆசாரியத்தன்மை நிறைவு டைமையாகாது. அவ்வாசாரியனோடு உண்டான சம்பந்தம் அழிவிற்குப் காரணமாகும் என்று கூறுகிற ஸ்ரீவசன பூடணத்திலல்லவோ 'அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசாரிய தோஷம்' என்றது.

ஆகில் அவற்றுக்குக் கருத்து யாதெனின், நம்மைப் போலே ஆசாரியனும் உணவு உறக்கம் ஆகியவற்றுக்கு வசப்பட்டவனாய், மலம், சிறுநீர்கழித்தல் ஆகியவற்றைச் செய்து கொண்டு வாழும் மனிதனன்றோ என்று திருமேனி தருமங்களையிட்டு மானுடனென்று பார்க்கக் கூடாது; ஞானாநுட்டான சம்பத்துக்களையிட்டுப் பார்த்து (260) ''குருவே மேலான பரம்பொருள்'' என்னும் எண்ணம் பிறக்கவேண்டும் என்று கூறியதாம். இனி, பகவான் பாகவதர் குற்றங்களை நற்றமென ஏற்கலாம் என்றது, பகவான் விஷயத்தில் குற்ற முண்டென்று கூறமுடியாதல்லவா. தனக்கு அடியவராய் தானிட்ட வழக்காயிருக்கும் மக்களின் குடற்றொடர்பு பாராது, இரக்கமற்றவனாய் குற்றத்திற்கேற்ற தண்டனை அளிக் கிறான் என்று இம் மனிதனுடைய கெட்ட எண்ணத்தாலே தோன்றுகிற குற்றமே அங்குள்ளது. இவன் அறிவற்ற பொருளைப் போலன்றே; இறைவன் இவனை விரும்பிய பயன் கொள்ளுவதற்கு.

**257. மூலம்:**

*(261)* ''ஆத$_3$ா வீஸ்வரத$_3$த்தயைவ புருஷ ஸ்வா

*தந்த்ர்ய சக்த யாஸ்வயம்-தத்தத் ஜ்ஞாந சிகீர்ஷண ப்ரயதநாந் யுத்பாத₃யந் வர்த்ததே'' (தத்வஸாரம்) என்கிறபடியே, கரண களேபரப்ரதாநாதிகளைப் பண்ணி சித்சக்தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி சக்திகளைக் கொடுத்து ஹேயோபாதேய விபாகம் பண்ணுகைக்கு வேத சாஸ்த்ர ப்ரதாநாதிகளைப் பண்ணி, ராமகிருஷ்ணாவதாரமுகேந அறிய வேண்டிய அர்த்தமெல்லாம் அறிவித்தாலும் ஸம்ஸாரபத்தராய் ஸப்தாதி விஷயப்ரவணராய்த்திரிந்தால் மண்தின்ற ப்ரஜைக்கு நாக்கில் குறியிட்டஞ்சப் பண்ணும் மாதாவைப் போலே ஹிதபுத்யாச் செய்கிறதாகையாலே, அது தோஷமன்று. இனி, க்ருஷ்ணாவதாரத்தில் ஜார சோரத்வாதி ப்ரதீதியொன்றுண்டு. அதுவும் ஆச்ரிதா நுக்ரஹ கார்யமாகையாலும் அவன் ஸர்வசரீரியாகை யாலே தன் சரீரத்தைத் தானே பரிஷ்வங்கிக்கிறாப்போலே யுள்ளதொன்று ஆகையாலும்,*

**விளக்கவுரை:**

(261) ''ஆதியில், (சேதநனுக்கு) மனிதனுக்கு இறை வனான நாராயணனாலே கொடுக்கப்பட்ட சுவதந்திரமாகிய சக்தியாலே, அந்தந்த ஞானத்தையும், அதனால்தானே ஒரு காரியத்தைச் செய்யக்கூடிய இச்சையையும் முயற்சிகளையும் உண்டாக்கிக் கொண்டுள்ளான்'' என்கிறபடி, இறைவன் ஊழி வெள்ளத்திற்குப் பின்னாப் படைப்புக் காலத்தில் மக்களுக்குக் கைகால், கண், செவி, வாய் முதலானவற்றோடு சேர்ந்த உடலையும் அறியும் தன்மை செயல்படுந்தன்மை செயல் தவிருந்தன்மை ஆகிய ஆற்றல்களைக் கொடுத்து, இம் மக்களுக்குத் தாழ்ந்தவைகளையும் சிறந்தவற்றையும் வேறுபடுத்தி அறிதற்கேற்ற கருவியாம் வேத சாஸ்திரங்களை அளித்தும் உபதேசித்தும் ராமன், கிருஷ்ணன் ஆகிய

அவதாரங்களாலே அறியவேண்டிய அர்த்தங்களை அறிவித்தாலும், இவ்வுலகில் இன்ப துன்பத்திற்குக் கட்டுப்பட்டவராய் ஐம்புலன் முதலானவற்றில் ஈடுபாடு கொண்டு திரிந்தால், மண்தின்ற குழந்தைக்கு நாக்கில் தீ முதலானவற்றால் குறியிட்டு அஞ்சப்பண்ணும் தாயைப் போல் நல்ல எண்ணத்தால் இறைவன் செய்வதாகையால் அஃது அவனது குற்றமன்று. இனி கிருஷ்ணாவதாரத்தில் பிறமனைநயத்தல் பிறர்பொருளைத் திருடுதல், பொய் சொல்லுதல் போன்றவற்றை இறைவன் செய்தது மேலெழப்பார்க்கும் பொழுது குற்றம்போல் தோன்றும். ஆனால் அவையும் அடியார்களுக்கு அருள் செய்யுமுகத் தாலும் அறிவுடைய எல்லா பெண் மக்களும் அவ்விறை வனுக்கு உடலாகையாலும் தன் உடலைத் தான் அணைத் தலைப் போலேயுள்ளதாமாகையாலும்.

**258. மூலம்:**

***(262) "கே$_{3}$ாப்ய: காமாத்" (பாகவதம்) என்று, காமத்தாலே அவர்கள் முக்தராம்படி பண்ண நினைத்துச் செய்கிற செயலாகையாலும் (263) "யதி$_{3}$மேப்$_{3}$ரஹ்ம சர்யம்ஸ்யாத்" (பாரதம்) என்னும் தான் அஸ்கலித ப்ரஹ்மசாரியாய் அந்த போகத்தோடு ஒட்டற்று நிற்கிறவ னாகையாலும், அவனுடைய வ்யாபாரங்களெல்லாம் ஆச்ரித ரக்ஷணார்த்தமாகையாலே தோஷமுமன்று; கர்ஹை யுமில்லை; உபாதேயமுமா யிருக்கும். இப்படி பகவத் விஷயத்தில் தோஷ மில்லாதாப்போலே, ததீயரும் ஸ்வரூபாநுரூப ஜ்ஞாநாநுஷ்டாந பரிபூர்ணராய், ஸ்வரூப விருத்த ப்ராதிகூல்யமொன்றும் இன்றிக்கே யிருக்கச் செய்தேயும் ஸ்வதோஷத்தாலே தோற்றினால் கர்ஹிக்கப் போகாது.***

**விளக்கவுரை:**

(262) ''கோபியர்களான ஆய்ப்பெண்கள் கண்ணனி டத்திலுள்ள காமத்தாலே முக்தியடைந்தனர்'' என்று கூறுகிற வாறு, அம்மடந்தயரைத் தன்னிடத்துக் காமத்தாலே முக்தி யடையச் செய்ய வேண்டுமென்று இறைவன் செய்த செயல் ஆகையாலும், (263) ''எனக்கு பிரமசரியமிருக்கும் பட்சத்தில் இக்குழந்தை உயிர் பெற்றெழக்கடவது'' என்கிறபடி, பெண் போகத்தில் இந்திரியம் வெளிப்படாத சுத்த பிரமசாரியாய் நிற்கிறவனாகையாலும், அவ்விறைவனின் செயல்களெல் லாம் தன்னடியார்களைக் காத்தற் பொருட்டாகையாலே அவையெல்லாம் இறைவனுக்குக் குற்றமன்று; பழித்தலும் ஆகா; அவையெல்லாம் ஏற்றுக் கொள்ளுதலாயிருக்கும். இவ்வண்ணம் பகவான் விஷயத்தில் குற்றமில்லாதாப் போலே, அவனடியார்களும் உண்மை யியல்புக்கேற்ற ஞானாநுஷ்டாநம் நிறைந்தவராய்த் தம் இயல்புக்கேற்ற விரோதம் ஒன்றுமின்றிக்கேயிருக்கச் செய்தேயும் தம் குற்றத்தாலே குற்றம் போல் தோன்றினாலும் வெறுக்கப் போகாது.

**259. மூலம்:**

*அவற்றிலும் தேஹபாரவச்யத்தாலும் சர்ம கண்டுதியாலும் செய்யுமவையன்றிக்கே ஸ்வார்த்த நிரபேக்ஷமாக ஆச்ரிதரக்ஷணார்த் தமான வ்யாபாரங்களே யானால், உபாதேயங்களுமாயிருக்கும். இவ்வர்த்தம், ''நாத்ர க₃ர்ஹா'' என்று சொல்லி ''கிந்து ஸ்ரீமந்புவந பவநத்ராணத:'' என்று ஆச்ரிதார்த்தமானவை ஆகை யாலே, கர்ஹையில்லையென்று சொல்லிற்றிறே. இப்படிக் கொள்ளாதே நாம ரூபங்களுடைய பாகவதராய் எப்படித்*

*திரிந்தாலும உபாதேயமென்றால் ''ஓர்த்து நெஞ்சே முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டு நடுச் சொன்னவரை நாளும் தொடர்'' என்றருளிச் செய்யப் பணியில்லையிறே. ''ம்லேச்சனும் பக்தனானால் பாவந தீர்த்த ப்ரஸாதனாமென்று'' (ஆசார்ய ஹ்ருதயம்-85) பரமவிலக்ஷண ஸம்பந்த ஸ்வீகாரத்தை ஜகத்விதிதமாக பகவதாஜ்ஞாஸித்தமென்று நிர்பயராய் க்ரந்தஸ்தங் களாம்படி விதிக்கிற பூர்வாசார்யர்கள் ஒருவரானாலும் ஒரு ரஹஸ்யத்திலானாலும், பகவத் ப்ரபன்னன் அஹங்கார நிவ்ருத்திக்காகவும், ஸர்வதர்ம பரித்யாகத்துக்காகவும் களஞ்ச பக்ஷணாதிகள் பண்ணவேணுமென்று சொல்லிற் றில்லையே. சொல்லாதொழிந்தாலும் தூஷணமில்லை யாகில் க்ரந்தங்களிலுக்தமான அஹங்கார நிவ்ருத்திக்கும் விலக்ஷணானுவர்த்த நத்துக்கும் உபயுக்தமென்று செய்ய லாமிறே என்னில்;*

**விளக்கவுரை:**

அவற்றிலும் சரீரத்தின் வசத்தால் சரீரத்தில் தினவு கண்ட விடத்தில் தம்மையறியாமல் சொறிவது முதலான செய்தல் அன்றிக்கே சுயநலத்தை விரும்பாது எம்பெருமா னது அடியார்களைக் காத்தற் பொருட்டு அவர்கள் செய்யும் செயல்களேயானால், அவை ஏற்றுக் கொள்ளத் தக்கதா யிருக்கும். இவ்வர்த்தம் பகவானது அடியார்கள் செய்யும் செயல்களைக் கண்டு பழிக்கக்கூடாது என்று சொல்லி, ''ஆனால் அழகிய இவ்வுலகமெல்லாம் உண்டாவதற்கும் வாழ்வதற்கும் ஒரே காரணமாயிருக்கும் திருவின் நாயகனான இறைவன் அடியராயிருத்தலாலே அவர்கள் செய்யும் செயல்கள் யாவும் அடியார்களின் நிமித்தமாகையாலே வெறுத்தல் கூடா'' என்று சொல்லிற்றன்றோ. இவ்வாறு

பொருள் கொள்ளாமல், வெறிதே இறைவனது பெயரையும் அவனது சின்னத்தையும் அணிந்து கொண்டு பாகவதராய் எப்படித் திரிந்தாலும் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றால், ''ஓர்த்து நெஞ்சே! முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டு நடுச் சொன்னவரை நாளும் தொடர்'' என்று மணவாளமாமுனிகள் அருளிச் செய்யப் பணியில்லையிறே.

''மிலேச்சனும் பக்தனானால் பாவநதீர்த்த ப்ரஸாதனா மென்று'' என்று ஆசார்ய ஹ்ருதயத்திலே தாழ்ந்த சாதியில் அவதரித்த பகவத்பக்தியால் உயர்ந்த சிறப்புடைய பாகவதர் கள் ஸம்பந்த பிரஸாத சுவீகாரத்தை உலகமெல்லாம் கடைப் பிடித்தொழுக வேண்டுமென்று பகவானுடைய ஆணை எனத் துணிந்து அச்சமற்று நூல்வடிவமாக்கி விதிக்கின்ற பெரியவாச்சான் பிள்ளை, பிள்ளை உலகாரியர், அழகிய மணவாளபெருமாள் நாயனார் போன்ற நம்பூருவாசாரியர்கள் ஒருவராகிலும் அவர்கள் செய்த ஒரு ரகசிய நூலிலேயாகிலும் பகவானைச் சரணடைந்த பிரபந்நன் அகங்காரத்தை விடுவதற்காகவும், எல்லாத் தருமங்களை விடுதல் நிமித்தமாகவும் காளான், வெங்காயம் வெள்ளைப் பூண்டு ஆகியனவற்றை உண்ண வேண்டுமென்று கூற வில்லையே. அவர்கள் கூறவில்லையானாலும் கடுஞ் சொற்கள் கொண்டு மறுக்கவில்லையாகில், அவர்கள் நூல்களில் கூறப்பட்ட அகங்காரத்தை விடுவதற்கும் சிறப்பானவற்றைப் பின்பற்றுவதற்கும் இவைகள் தேவை என்று அத்தீயவற்றையுண்ணுதல் போன்றவற்றை செய்ய லாமன்றோ எனின்,

**260. மூலம்:**

*ப்ரபந்தராஜ, வசநபூஷணாதி திவ்ய சாஸ்த்ரங்களில்*

*சதச: தூஷித்த அக்ருத்யகரணாதிகள் பண்ணுகை பகவந் மாயா ப்ரபாவமென்று நினைக்க வேணுமித்தனை யொழிய சிஷ்டா சாரமென்ன வொண்ணாதிறே.*

*க்ரந்தஸ்தமாகச் சொன்னால், அநதிகாரிகள் கர்ஹித்து நசித்துப் போவாரென்று ஐதிஹ்ய ஸித்தமாய் ஸம்ப்ரதாயகமாக ப்ரவர்த்தித்துப் போருகிறதென்னில், வசநாநுஷ்டாந விரோதமில்லையானால் ஆகிலும் ஆம் என்று கொள்ளவமையும். லௌகீக வைதிக பரம வைதிக விரோதங்கள் அனேகமுண்டாகையாலே அப்படிச் சொல்ல வொண்ணாது.*

**விளக்கவுரை:**

பிரபந்தங்களுக்கெல்லாம் அரசாக விளங்கும் திருவாய்மொழி, அர்த்த பஞ்சகம், ஸ்ரீவசனபூஷணம் ஆகிய திவ்ய சாத்திரங்களில் நூறுமுறை இடித்துக் கூறிய செய்யத் தகாதவைகளான பிறர்மனை நயத்தால், பிறன்பொருள் வேட்டல், உண்ணத் தகாதவைகள் குடிக்கத்தகாதவைகள் போன்றவற்றைச் செய்வது ''மயக்குடைய மாயைகள் வானிலும் பெரியன வல்லன்'' என்ற இறைவனது மாயையின் பெருமை என்று நினைத்தல் வேண்டுமொழிய சிஷ்டாச் சாரம் எனக் கூற முடியாதல்லவா.

நூல்வழியில் இவற்றைச் சொன்னால், அதிகாரி அல்லாதார் அவற்றைக் கற்று வெறுத்து, நூலாசிரியரைக் குற்றஞ் சொல்லியதால், அதன் மூலம் அபசாரம் ஏற்பட்டு அழிந்து போவர் என்று சரித்திர வாயிலாகவும் உபதேச மூலமாகவும் அவற்றைச் செய்கின்றார்கள் என்றால், அவர்கள் கூறுகின்றவை அநுட்டானத்திற்கு விரோதமில்லையானால்

ஆகிலுமாம் என்று கைக்கொள்ளவமையும். மேற்சொன்ன தீயவற்றை மேற்கொள்ளுதற்கு உலகியலும் வைதிகத்திலும் அதற்கும் மேலான வைதிக நெறியிலும் அத்தீயவொழுக்கத் திற்கு விரோதங்கள் பலவுண்டாகையால் அவ்வாறு கூற வொண்ணாது.

261. மூலம்:

*சாஸ்த்ரத்திலொரு பரமார்த்தஞ்சொன்னால், அதுக்க பேக்ஷிதமான அங்கோபாங்கங்கள் ஐதிஹ்யங்க ளாலும் ஸம்ப்ரதாயத்தாலும் ஸங்க்ரஹிக்க வேணு மென்கிற தித்தனையொழிய, ஸகல சாஸ்த்ர தூஷிதங்களுமாய் சிஷ்டகர்ஹிதங்களுமான ததர்த்தங்கள் உபதேச பரம்பரா ப்ராப்தங்களென்று கர்ஹிக்கப் போகாதிறே. இப்படி சாஸ்த்ரங் கொண்டறியவேணுமோ? ரஜஸ் தமோத்ரேகங் களுமாய் அத ஏவ ஆஹார தோஷம் ஜ்ஞாநவிரோதி யென்கிறபடியே, அர்த்தபஞ்சக ஜ்ஞாந விரோதிகளுமாய் ஜாதி துஷ்டங்களுமாய் ப்ராக்ருத ப்ருஷ்ட துஷ்டங்க ளுமாய் அத்யந்த ஹேயங்களுமாய் லோக ஸாதனரும் உட்பட அருவருத்து பரித்யஜிக்கிற நிந்த்யங்களான நிஷித்த த்ரவ்யங்களாகாராந்தரத்தாலே கூடுமென்று ஆஸுரப்ரக்ருதிகளுக்குத் தோற்றுமதொழிய விசேஷ ஸாஸ்த்ர வச்யரான சிஷ்ட ஜநங்களுக்குத் தோற்றாதிறே. அநதிகாரிகள் கர்ஹிப்பரென்ற பயமன்றிக்கே விலக்ஷண ஜந்ம வைஷ்ணவாநுவர்த்தந தீர்த்த ப்ரஸாத ஸ்வீகாரங்கள் விதிக்கிற அதிகாரிகளிதுவுஞ் சொன்னால், அதிகாரி பேதத்தாலே கூடு மென்று தோற்றுமிறே. அவைதிகத்தைப் பார்த்தாலதிலும் விருத்தமன்றோவிது. இன்னமும் இது பாஹ்யம தஸ்தர்க்கு ஆகமங்களானாலுமுண்டு.*

**விளக்கவுரை:**

வேதசாஸ்திரங்களில் ஓர் உயர்ந்தப் பொருளைச் சொன்னால் அதற்குத் தேவையான அங்கம் துணை அங்கங்கள் சரித்திரங்களாலும் முன்னேற்கூறிய உபதேசத் தாலும் அவற்றைச் சுருக்கிச் சொல்ல வேண்டுமொழிய, எல்லாச் சாத்திரங்களிலும் மறுக்கப்பட்டவையாய் சிட்டர்க ளாலும் மறுக்கப்பட்ட அந்த மாறுபட்டப் பொருள்களை உபதேச முகத்தால் வந்தவை என்று கொள்ளக் கூடாதல் லவா. இவ்வாறு இவற்றையெல்லாம் சாத்திரங்கொண்டு அறிய வேண்டுமோ? ராஜச, தாமஸ, குணங் களால் கிளர்ந்தவையாய், அப்படியே தீய உணவாய் ஏற்படும் குற்றம் ஞானத்திற்குப் பகையாம் என்றவாறு, ஐம்பொருள் அறிவிற்குப் பகையாய் வெங்காயம், வெள்ளைப்பூண்டு, முருங்கை, வெண் கத்திரி, சுரை போன்றவை தம்மினத்தால் தூய்மையற்றவையாய், சாதாரண மக்களால் தீண்டப் பெற்ற குற்றத்தோடு கூடியவையாய், மிகவும் தாழ்ந்தவையாய், சாமானிய மனிதருங் கூட அருவருத்துவிட்ட தீயவைகளான கள், புலால், காளான் போன்ற கெட்ட பொருள்களும் வேறு வகையால் அவற்றை ஏற்கலாம் என்று அசுர மனங்கொண்ட வர்களுக்குத் தோற்றுமதொழிய, சிறப்பான சாத்திரத்தில் கூறப் பட்டவாறு நடக்கின்ற சிட்டர்களுக்குத் தோற்றா தன்றோ?

அதிகாரி அல்லாதவர் வெறுப்பரென சிறிதும் அச்சமில்லாமல் அகங்காரமில்லாத தாழ்சாதியில் பிறந்த பகவத் பக்தியால் உயர்ந்த வைஷ்ணவரைப் பின்பற்றித் தீர்த்த பிரஸா தங்களை அங்கீகரிக்க வேண்டுமென்று தம் நூலில் விதித்த அதிகாரிகள் இதுவும் சொன்னால், அதிகாரி வேற்றுமையால் மேற்சொன்னவை கூடுமென்று தோற்று

மல்லவா? இன்னமும் இந்த ஆசாரம் புறமதத்தவரால் கற்பிக்கப்பட்ட ஆகம நூலிலும் உண்டு.

**262. மூலம்:**

***பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி விதித்ததே ஹேதுவாக்கித் தன்னடையே சொல்லிற்றாகாதோ? என்ன, அப்போது சாஸ்த்ர பரிக்ரஹமானாலும், பகவதுக்தியானாலும், ப்ராக்தந (பழமையான) சிஷ்டாசாரங்களானாலும் ஒன்றுமின் றிக்கேயிருக்க, பௌத்தரைப் போலே ஆபாஸ உத்திகளாலே விபரீதார்த்தங்களைச் சொல்லிக் கொண்டு, பகவந் மாயாகல்பிதங்களான சில ப்ரத்யக்ஷங்களைக் காட்டி ப்ரமித்துத் திரியா நிற்கிற சில அப்ராமாணி கருடைய உக்த்யாநுஷ்டாநங்கள், உஜ்ஜீவநேச்சை யுடையவர்களுக்கு ப்ரமாண மாகக் கொள்ளப் போகாது. அது என்? அவர்கள் தாம் ஸ்வதந்த்ரமாய் ஓரநுஷ்டாநம் கல்பிக்கிறதில்லையே, (264) "த$_4$ர்மஜ்ஞ ஸமய: ப்ரமாணம்" (ஆபஸ். தர். 1-1-1) (265) "யத்$_3$யத$_3$ாசரதி ஶ்ரேஷ்ட்ட$_2$ஸ் தத்ததே$_3$வேதரோ ஜந:" (கீதா. 3-21) என்கிறபடியே சிஷ்டாசாரமே ப்ரமாணமாக அங்கீகரித்து, 'ஆசார்யஸ்ய ப்ரஸாதே$_3$ந மம ஸர்வமபீ$_4$ப்ஸிதம்-ப்ராப்நுயாமீதிவிச் வாஸோ யஸ்யாஸ் தி ஸ ஸுகீ$_2$ ப$_4$வேத்' (?) என்று, ஸ்வாசார்ய விச்வாஸத்தாலே ததாஜ்ஞநு வர்த்தநம் பண்ணினால் நர்த்தகரமாமோ? என்னில், ஸ்வாசார் யாஜ்ஞை என்று அங்கீகரிக்கலாவது, அவர் தல்லக்ஷண லக்ஷிதராய் சாஸ்த்ர பாணியாய் ப்ரபல ப்ரமாண பரதந்த்ரராய் ஸ்ரீவசனபூஷணாதி திவ்ய சாஸ்த்ரோக்த ரீத்யா சிக்ஷித்தாலிறே.***

**விளக்கவுரை:**

பகவான் நம்மைக் காக்கச் செயற்படும்போது அதற்கு விரோதமாக நாம் நம்மைக் காக்கச் செயற்படுதலாகிற இதனை விட வேண்டும் என்று சரமச்லோகத்திலே விதித்தால், அதனையே காரணமாக்கித் தீயவொழுக்கத்தை மேற்கொள்ளுதல் என்று பொருளாற்றலால் தன்னடையே சொல்லிற்றாகாதோ? என்ன, அக்காலை அத்தீய வொழுக்கத்தை மேற்கொள்ளலா மென்று சாத்திரங்களும் கண்ணனும் தொன்மையாய் நிகழ்ந்து வரும் நல்ல ஆசாரங்களையுடைய சிஷ்டர்களாலும் கூறுதல் ஒன்று மின்றிக்கேயிருக்க, நாத்திகரான புத்தரைப்போலே ஆபாசவார்த்தைகளாலே மக்களை மயக்கி முரண்பட்ட பொருள்களைக் கூறிக் கொண்டு, தீயோரைத் தண்டிப் பதற்காக இறைவனால் உண்டாக்கப்பட்ட மாயையால், சில கண்ணால் காணக்கூடியவைகளைக் காட்டி மயக்கமுடைய அறிவினை உடையராய்த் திரியா நிற்கின்ற சில பிரமாண மாகிய உண்மை நூலிற் கூறியவற்றை ஏற்காதவர்களது சொல்லும் செயலும், உயர்வடைய விருப்பமுடையோர்க்கு அவை சான்றாகாது.

அதுவென்? விபரீதப் பொருளைப் போதிப்பவர்கள் தாம் சுவதந்திரமாகவொரு ஒழுக்கத்தைப் படைப்ப தில்லையே? (264) ''தருமத்தை அறிந்தவர்களின் ஒழுக்கமே பிரமாணம் ஆகும்'' என்றும், (265) ''ஞானம் அனுட்டானம் இவற்றால் சிறந்தவன் எந்தக் கருமங்களை அநுட்டிகிறானோ அந்தக் கருமங்களையே சாமானிய மக்களும் செய்கின்றனர்'' என்கிறபடி, சிஷ்டாசாரத்தையே பிரமாணமாக அங்கீகரித்து ஆசாரியனுடைய அருளாலே நான் எல்லாவிருப்பங்களையும் பெறுவேன்? என்று எந்தச் சீடனுக்கு நம்பிக்கையிருக்கிறதோ

அவனே இன்பம் அடைவான் என்று தன்னுடைய ஆசார்யனிடத்திலுள்ள நம்பிக்கையாலே அவ்வாசாரியனது கட்டளையை ஏற்று நடந்தால் அழிவுவருமோ? எனின் தனது ஆசாரியன் கட்டளை என்று அங்கீகரிக்கலாவது, அவர் ஆசாரியனுக்கேற்ற சிறப்பினையுடையராய் சாத்திரங் களையே கையாகக் கொண்டவராய் மிக்க பெருமைபெற்ற பிரமாணங்களுக்கு வசப்பட்டவராய் ஸ்ரீவசனபூஷணம் ஆசாரிய ஹிருதயம் முமுக்ஷுப்படி போன்ற திவ்ய சாத்திரங்களிற் கூறப்பட்ட முறையில் பரிட்சை செய்து சீடனுக்கு உபதேசித்தாலன்றோ சீர்மையுடையனவாகும்.

**263. மூலம்:**

*அப்படிச் சொல்லாதே 'தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி இது சுத்தவுபதேச வரவாற்றது' என்று சில விபரீதார்த்தங்களை கல்பித்து, ''அணங்குக் கருமருந் தென்றுஅங் கோராடும் கள்ளும்பராய்'' என்கிறபடியே, இந்த நிஷித்தாஷ்டாநமே ஸித்தோபாயமென்று சிஷ்டஜநங் களறியாதபடி, ஒருவருக்கொருவர் ஸாங்கேத்ய பாஷணங் களாலே சொல்லிக் கொண்டு, 'சதாந்த' ந்யாயத்தாலே கூபத்திலே விழுகிற அப்ரமாணிகரைப் பற்றி ததாஜ்ஞா பரிபாலநம் பண்ணினால், ஒட்டை ஓடத்தோடு ஒழுக லோடமாய், இருவரும் மூழ்கிப் போவார் ஆகையாலே அவர்களுடைய ஸஹவாஸம் தூரத: பரிவர்ஜநீயமிறே.*

*ஆசார்யனானவன், அஹங்காரார்த்த காமோபஹத னன்றிக்கே லோக பரிக்ரஹமுடையவனாய், (266) ''ஸாக்ஷாந் நாராயணோதே$_3$வ: க்ருத்வா மர்த்யமயிம்தநும் -மக்$_3$நாந் உத்$_3$த$_4$ரதே லோகாந் காருண்யாச்ச$_2$ாஸ்த்ர பாணிநா'' (ஜயாக்-ஸம்) என்கிறபடியே, சாஸ்த்ரபாணி*

*யாய் ரக்ஷிக்குமவனிறே. அந்த சாஸ்த்ரமும் குணாநு குணமாக பஹுவித மாயிருக்கையாலே, (267) "அஸாரம் அல்ப ஸாரஞ்சஸாரம் ஸாரதரம் த்யஜேத்-ப$_4$ஜேத் ஸாரதமம் சாஸ்த்ரம் ரத்நாகர இவாம் ருதம்" (?) என்கிறபடியே,*

**விளக்கவுரை:**

அவ்வாறு செய்யாமல் ''தன்னெஞ்சில் தோற்றி னதே சொல்லி இது சுத்தவுபதேசவர வாற்றது'' என்று, சில விபரீத அர்த்தங்களைக் கற்பித்து, ''அணங்குக்கு அருமருந் தென்று அங்கோராடும் கள்ளும்பராய்'' என்கிறபடி, இந்த தீயவொழுக்கமே சித்தோபாயமென்று சிட்டர்கள் அறியாத படி ஒருவருக்கொருவர் (ஆசாரியனும் சீடனும்) இணைந்து கெட்ட நடத்தை பற்றியே பேசிக் கொண்டு ''நூறு குருடர்கள் சேர்ந்து இதுதான் வழியென்று ஒரு கிணற்றிலே விழுந்தார் கள்'' என்ற வழக்கின்படி, பாழுங்கிணற்றிலே விழுகிற பிரமாணத்தைப் பற்றாதாரைப்பற்றி அவர் கட்டளைப்படி நடந்து கொண்டால், ஓட்டை ஓடத்தோடு ஒழுகலோடமாய் சீடனும் ஆசாரியனும் ஆகிய இருவரும் பிறவிக் கடலில் மூழ்குவராகையாலே, அப்படிப்பட்டவர்களது சேர்த்தி சேய்மையில் விடத்தக்கதன்றோ.

ஆசாரியனானவன், அகங்காரம் பொருள் இன்பங் களில் ஈடுபாடு கொண்டவனாயிராமல் உலகோர் ஆசாரிய குணங்களுக்கு ஏற்றவன் இவன் என்று இசையும்படியான நல்லொழுக்கமுடையனாய் (266) நேரே பரம் பொருளான இறைவன் தனது கருணையாலே மனித உருவை எடுத்துக் கொண்டு சாத்திரங்களாம் கைகளாலே பிறவிக் கடலில் மூழ்கியிருக்கும் உலகங்களை (மக்களை) கைதூக்கி விடு கிறான் என்றபடி, ஆசாரியன் சாத்திரமாகிய கையைக் கொண்டு உலகோரைக் காப்பவனல்லவா. அந்தச் சாத்திரங்

களும் குணங்களுக்கேற்றவாறு பலவிதமாயிருக்கையாலே, (267) சாத்திரங்களில் ஸாரமற்றதாயும், குறைந்த ஸாரமுள்ள தாயும், ஸாரமுள்ளதாயும், அதைக் காட்டிலும் மிக்க ஸார முள்ளதாயிருக்கும் இவற்றைவிட்டு எல்லாவற்றைக் காட்டி லும் மிக அதிக ஸாரமுள்ளதையே கடலில் அமுதத்தைப் போலே கைக்கொள்ள வேண்டியது என்கிறபடி,

264. மூலம்:

*அஸாரமான பாஹ்ய சாஸ்த்ரமும், அல்பஸாரமான* **பூர்வ பாகமும் ஸாரமான உத்தர பாகமுமாகப் பரக்கச் சொல்லுகிறவை யெல்லாம் விட்டு, ஸாரதரமான விஷ்ணு காயத்ரியில் ஸாரதமமாக முதலிலே சொல்லப்பட்ட ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை உத்தேசித்து, ததநுரூபாநுஷ்டாநங்களை விதித்து, ஆழ்வார்களும் ஆசார்யர்களும் க்ரந்தஸ்தங்களாகவருளிச் செய்தும் தாமாசரித்தும் போருகிறபடிகளொன்றும் தப்பாதபடி தானுமாசரித்து இவனையும் ஆசரிப்பிக்கு வனாகிலிறே, இருவருக்கும் உஜ்ஜீவனம் ஸித்திப்பது. "நீச ஸ்பரிசமுடைய கு₃ருமந்திர தே₃வதைகள் பரித்யாஜ்யங் கள் என்று ஆச்சான்பிள்ளை அருளிச் செய்தாரிறே".** *(மாணிக்க மாலை)* **அர்த்த ஸ்துதியிதுவாயிருக்க ஸம்ஸார நிவர்த்தக மூலமந்த்ர உபதேஷ்டாவே ஆசார்யனென்று வாங்மாத்ரஞ் சொல்லிக் கொண்டு** *(268)* **"த்ருஷ்ணா தோயே மத₃நபவ நோத்₃து₄த மோஹோர்மிமாலே த₃ாராவர்த்தே தநய ஸஹஜ₃க்ராஹ ஸங்க₄ாகுலேச"** *(முகுந்த₃மாலா)* **என்கிறபடியே ஸம்ஸார ஸாகரத்திலே அழுந்தித்தானும் கரையேற மாட்டாதே தன்னைப் பற்றினவனையும் பத்த ஸம்ஸாரி யாம்படி பண்ணி;**

**விளக்கவுரை:**

சாரமற்றதான புறமதங்களாகிற சாத்திரமும், வேதத்தை விவரித்திடும் முன்பாகத்தை கூறும் குறைவுடைய சாத்திரமும், சாரமான பின்பாகத்தில் கூறும் பரந்து சொல்லுகிற சாத்திரங்களை எல்லாம் விட்டு மிக்க சாரமான விஷ்ணு காயத்ரியில் முதலிலே சொல்லப்பெற்ற மிகவும் அதிக சாரமான பிறவிக் கடலைத் தாண்டுவிக்கும் பெரிய திருமந்திரத்தை உபதேசித்து, அந்த மந்திரங்களில் சொல்லியுள்ள ஒழுக்கங் களைக் கடைப்பிடிக்கச் செய்து, ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இவற்றை நூல் வடிவமாக்கித் தாம் ஆசரித்தும் போந்தவைகள் ஒன்றும் தப்பாதபடி தானும் ஆசரித்துத் தன்னைப் பற்றிய சீடனையும் ஆசரிக்கச் செய்தாலன்றோ ஆசாரியன் சீடனாகிற இருவருக்கும் மோட்சம் கிடைப்பது "கெட்டவர்கள் தொடர்புடைய குரு மந்திர தேவதைகள் நல்லோர்க்கு விடத் தக்கன'' என்று மாணிக்கமாலையில் பெரியவாச்சான் பிள்ளையும் அருளிச் செய்தாரிறே.

உண்மை நிலை இதுவாயிருக்க, ஸம்ஸாரத்தைத் தாண்டுவிக்கும் மூல மந்திரமான திருமந்திரத்தை உபதேசித் தவனே ஆசாரியன் என்று வாயளவில் சொல்லிக் கொண்டு, (268) ''பெண்ணாசை என்னும் கடலிலே விழுந்து மோகம் என்னும் விகாரத்தையடைந்து மனைவி பிள்ளை என்னும் முதலைகளாலே கடிக்கப்பட்டு பாசம் என்னும் துன்பத்தை அனுபவிக்கிறான்''(?) என்கிறபடி மனைவி மக்கள் உறவினர் முதலிய வர்களோடு குடும்பம் என்னும் பெருங்கடலிலே மூழ்கி அமுந்தித் தானும் கரையேற மாட்டாதே, தன்னைப் பற்றினவ னையும் அறியாமையில் கட்டுப்பட்ட ஸம்சாரியாகும்படி செய்து;

**265. மூலம்:**

***(269) "பாபேக்ருதே யதி$_3$ ப$_4$வந்தி ப$_4$யாநுதாப லஜ்ஜா: புந:"(யதிராஜவிம்ஶதி) என்கிறபடியே துர்வாஸனையாலே பாபம் பண்ணினாலும் பய அனுதாப லஜ்ஜைகளுண்டாய் க்ருபா பாத்ரராகாதபடி நமக்கு ஆசார்ய ஸம்பந்த முண்டென்று பயங்கெடுத்து, "காது செய்வான் கூதை செய்து கடைமுறை வாழ்க்கையும் போம்" (திருவாய்.9-1-9) என்கிறபடியே, அதுவுமில்லாத படி பண்ணி வ்யபசாரி சொல்லுகிற பதிவ்ரதா தர்மங்கள் போலே ஹாஸ்ய ஆஸ்பதங்களுமாய், அப்ரயோஜநங்களாயிருக்குமிறே.***

*அவரில் பசையில்லையானாலும் (270) விச்வாஸ: ப$_2$லத$_3$ாயக: (?) என்று, இவனுடைய த்ருடாத்யவஸாய மாத்ரத்தால் பல ப்ரதமாகாதோ? என்ன, இந்த விச்வாஸம் வேதபாஹ்யனுக்கும் உண்டிறே. (271) "கு$_3$ரு உபதி$_3$ஷ்ட மார்க்கே$_3$ண ஜ்ஞாந கர்ம ஸமுச்சயாத்- மோக்ஷோ ப$_3$ந்த$_4$ விரக்தஸ்ய ஜாயதே பு$_4$வி கஸ்யசித்" (?) என்று வேத பாஹ்யனுக்கும் குரு விச்வாஸமும் தது பதிஷ்ட மார்க்க ப்ரவர்த்தகத்வமும், அத்தாலே மோக்ஷம் தப்பாதென்கிற த்ருடாத்யவஸாயமும் மிகவுமுண்டிறே. ப்ரமாண பரதந்த்ரனானவனுக்கு ஆசார்யன் சாஸ்த்ரஜ்ஞனாக வேணும். ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நனாக வேணும். ஸத்ஸம்ப்ரதாய ஸித்தனாக வேணும் என்று இவை யெல்லாம் அபேக்ஷிதங்களா யிருக்கும். பாஹ்ய மதஸ்தர்க்கு ப்ரமாணாபேக்ஷையொன்றுமில்லாமை யாலே ஆசார்ய நிஷ்டை மிகவும் பரிபூர்ணமாயிருக்கும். அதுண்டென்னுமத்தாலே பரம புருஷார்த்த லக்ஷண மோக்ஷ ப்ராப்தி சொல்ல வொண் ணாதிறே.*

**விளக்கவுரை:**

(269) ''தீயபழக்கத்தால் பாவம் பண்ணினாலும் மீண்டும் அவற்றில் பயமும் வெட்கமும் வருத்தமும் இன்றிக்கே'' என்கிறபடி கெட்ட பழக்கத்தாலே பாவம் செய் தாலும் அச்சம் வருத்தம் நாணம் ஆகியவை உண்டாகி இறைவன் அருளுக்குக் கொள் கலமாகாதவாறு 'நமக்கு ஆசாரிய சம்பந்தமுண்டு' என்று அச்சங் கெடுத்து, ''காது செய்வான் கூதை செய்து கடைமுறை வாழ்க்கையும் போம்'' என்கிற இருக்கும் நிலையுங் கெட்டு விலைமகள் கூறுகின்ற பதிவிரதையின் தருமங்கள் போலே, நகைப்பிற்கு இடமாய், பயனற்றிருக்குமன்றோ.

இத்தன்மையாம் ஆசாரியனிடம் சிஷ்டர்கள் ஆசரிக்கும் தருமங்களில்லையாகிலும் (270) ''ஆசாரி யனிடத்துள்ள நம்பிக்கையே பயனைத் தரும்'' என்று சீட னுக்கு ஆசாரியனிடத்துண்டான திட நம்பிக்கை மாத்திரத் தால் பயனை அளிக்காதோ? எனின், இந்த நம்பிக்கை வேதத்துக்குப் புறம்பான மதவாதிகளுக்கும் (நாத்திகருக்கும்) உண்டல்லவா? (271) ''குருவின் உபதேச வழியாலே ஞான கருமங்களால் மோட்சமும் அதனால் இப்புவியில் பற்றற்ற நிலையும் உண்டாகிறதல்லவா'' என வேத மதத்திற்குப் புறம் பான நாத்திகமதவாதிகளுக்கும் குருவிடத்தில் நம்பிக்கையும், அவ்வுபதேச வழியாலே செயல்படுகின்ற தன்மையும், அதனால் மோட்சம் தப்பாது என்ற திட நம்பிக்கையும் அவர் களுக்கும் மிகவும் உண்டன்றோ. அவ்வாறில்லாமல் உண்மையான பிரமாணத்தின் வழிநின்ற ஆசாரியன் வேத சாத்திரங் களை அறிந்தவனாக வேண்டும். ஞான அனுட்டாந சம்பத்தையுடையனாக வேண்டும்.

நல்ல உபதேச மார்க்கத்தையுடையனாக வேண்டும் என்ற இவை களெல்லாம் தேவையானவையாயிருக்கும். புறமதவாதி களுக்குப் பிரமாணங்கள் தேவையற்றதாலே அம்மதங்களில் சாரமான உண்மைப் பொருள் ஒன்றுமில்லா மையாலே, ஆசாரிய நிட்டை மிகவும் நிறைவுடையதா யிருக்கும். ஆசாரிய நிட்டையுள்ளது என்ற மாத்திரத்தால் அவர்களுக்கு மேலான வீட்டின்பமாகிய மோட்சம் கிடைக்குமென்று கூறமுடியாதல்லவா.

**266. மூலம்:**

*குருமந்த்ர தேவதா பேஷஜ (மருந்து) விஷயங் களில் திவ்ய சக்தியுண்டானாலும் விச்வாஸ மில்லாத போது கார்யகாரமாக தென்று, விச்வாஸாவச்யா பேக்ஷிதம் சொல்லிற்றித்தனையொழிய, சுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணி விச்வஸித்தால், அது மெய்யாக மாட்டாதிறே. ஆசார்யன் ஜ்ஞாநாதிகனாய் அவனுக்கு அத்யந்த ப்ரியத மனாயிருந்தால், சிஷ்யன் பக்கல் சில ஸ்காலித்யங் களுண்டானாலும் (சிஷ்யன் சில தவறுதல்களைச் செய்திருந்தானாலும்), ஆசார்யன் பக்கல் ப்ரேம முண்டாய்ப் போருகிறவிடத்தில், ஈச்வரன் சிக்ஷிக்க நினைத்தாலும், இவ்வாசார்யன் தன் பின்னே வைத்துக் கொண்டு ரக்ஷிக்க மாட்டானோ? என்னில், (272) "ஸ்க₂லித்யே சாஸிதாரம்" (ந்யாஸ. விம். 1) என்கிறபடியே அவை வாராதபடி சிக்ஷித்து போகயோக்யனாம்படி பண்ணி ரக்ஷிக்குமதே ஆசார்ய க்ருத்யமித்தனை போக்கி, தன்னையாச்ரயித்துத் தன் பக்கல் ப்ரேம முண்டாய்ப் போந்தால், அவிநீதனானாலும் (பணிவில்லாதவனா னாலும்) ரக்ஷிக்க வல்லனென்று நினைக்கலாகாது. (273) "கு₃ரு கர்ண த₄ாரம்" (?) என்று ஆசார்யனாகிய கர்ண*

*தாரன், விஷ்ணு போதத்திலே யொதுங்கி ஸுஸ்திரனா யிருந்தால் (மிகவும் உறுதி படைத்தவன்) உத்தாரகனாகத் தட்டில்லை. இவன் இருகையும் விட்ட விடத்தில் நிர்ப யனாய் நிர்வ்யாபாரனாயிருக்க மாட்டாதே. அகாதமான ஸம்ஸாரஸாகரத்திலே மூழ்கித் தரைப்படில், ஸர்வ சக்தியான ஸர்வேச்வரனுக்கே அசக்யமென்று,*

**விளக்கவுரை:**

குரு, மந்திரம், தேவதை, மருந்து போன்ற விஷயங் களில் மிக்க தெய்வீக சக்தியுண்டானாலும், அவற்றில் நம்பிக்கையில்லாதபோது காரியமாகாதென்று நம்பிக்கை அவசியம் வேண்டுமென்று சொல்லிற்றித்தனையொழிய, சிப்பியை வெள்ளி என்று நம்பினால், அது உண்மையாக மாட்டாதன்றோ? ஆகில், ஸதாசாரியன் ஞானமிக்கவனாய் அவனுக்கு மிகவும் மேலான விரும்பத்தக்கவனாயிருந்தால் சீடனிடம் சில குற்றங்கள் உண்டானாலும், அவ் ஆசாரியன் பால் அன்புண்டாய்ப் போருமிடத்தில், இறைவன் அக்குற் றத்தைக் கண்டு தண்டிக்க நினைத்தாலும் இவ்ஆசாரியன் தன் பின்னே வைத்துக் கொண்டு காக்கமாட்டானோ? எனின், (272) ''சீடன் தவறு செய்தால் ஆசாரியனானவன் தண்டித்துத் திருத்த வேண்டும்'' என்கிறபடி அவை நிகழாவண்ணம் கண்டித்து பகவதநுபவத்திற்குத் தகுதியாம் படி பண்ணி காப்பதே ஆசாரியனது தொழிலாகும்.

அதைவிட்டுத் தன்னையடைந்து தன்னிடத்தில் அன்புள்ளவ னாயிருக்கின்றான் என்ற காரணத்திற்காக அச்சீடன் கெட்ட வழியில் நடந்தாலும் அவனை ஆசாரியன் காக்கவல்லவன் என்று நினைக்கலாகாது. (273). ''ஆசாரியன் என்னும் ஓடக்காரன்'' என்கிறபடியே ஆசார்யனாகிய

ஓடக்காரன் என்று, விஷ்ணுவாகிய (பிறவிக் கடலைக் கடத்தும்) ஓடத்தில் ஒதுங்கி உறுதியாக இருந்தால் பிறவியைக் கடத்துபவனாகச் சொல்லக் குறையில்லை. அவ் ஆசாரியன் இரு கையும் விட்டவிடத்தில் பயமற்றவனாயும் தன்முயற்சியில்லாதவனாக விருக்கமாட்டாமல், ஆழங்காண முடியாத ஸம்சாரமாகிய பெருங்கடலிலே மூழ்கித் தரைப் படில், எல்லா ஆற்றலுமிக்க இறைவனுக்கே இத்தன்மை யான ஆசாரியனையும் காக்க முடியாது என்று,

**267. மூலம்**

***''கூவிக் கூவிக் கொடுவினை தூற்றில் நின்று பாவியேன் பலகாலம் வழிதிகைத் தலமருகின்றேன் - மேவியன்று ஆநிரைகாத்தவன் உலக மெல்லாம் தாவிய அம்மானை - எங்கினித் தலைப்பெய்வன்'' (திருவாய். 3-2-9) என்று;***

*ஸர்வஶக்தியான நீ க்ருஷ்ண வாமநாதி ரூபங்களாலே திவ்யவிக்ரஹ ஸேவையை பூ$_4$ரிதாநம் பண்ணி கீதாதி ஶாஸ்ரமுகத்தாலே ஹிதோபதேஶம் பண்ணி கைநீட்டி எடுக்க நினைத்தாலும் எடுக்க வொண்ணாதபடி து$_3$ஷ்கர்மங்களாகிற தூற்றுக்களிலே நின்று பலகாலம் கூப்பிட்டுக் கொண்டு பாபிஷ்டனான நான் மார்க்கம் தப்பியலமருகின்றேன்; அந்த பூரிதா நத்துக்கே தப்பின நான், இனி யுன்னைக் கிட்டுவ தொன்றுண்டோ? என்று ஆழ்வார் அருளிச் செய்கை யாலே, ஆசார்யனாலே ரக்ஷிக்க ஶக்யமன்றே. அந்த ஸர்வேஶ்வரன் ராமக்ருஷ்ணாதி ரூபேண திருவவதரித்து பஹுஶ: ஹிதோபதேஶம் பண்ணு மிடத்திலும் அதி$_4$காரிகளைக் காணமாட்டாதே, விஜாதீய னான எனக்கு இது கிடையாதென்று ஸஜாதீயரான இவரையிட்டு,*

**பே₂ாக₃யோக் யராம்படி பண்ணி நன்றாகத் திருத்திக் கொள்ள வேணுமொன்றிறே ஆழ்வார் முதலானரைத் திருவவதரிப் பித்தது. அவருமப்படி செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வாரானாரிறே. அவரைப் போலே திருத்தவல்லரா னாலாயிற்று, இவன் முக்தனாவது. தத்வஸ்திதி இதுவான பின்பு அவிநீதரை ரக்ஷிக்க ஶக்தரென்று சொல்லவொண்ணாது. எம்பெருமானார், அரங்கமாளி முதலானார்க்காகப் படாதனபட்டு ஶிக்ஷிக் குமதுண்டிறே.**

**விளக்கவுரை**

''கூவிக் கூவிக் கொடுவினை தூற்றினில் நின்று பாவியேன் பலகாலம் வழிதிகைத் தலமருகின்றேன் - மேவியன்று ஆநிரைகாத்தவன் உலகமெல்லாம் தாவிய அம்மானை - எங்கினித் தலைப்பெய்வன்'' எனத் திருவாய்மொழியில் கூறுகிறவாறே;

எல்லா ஆற்றலும் நிரம்பிய இறைவனான நீ, ஸ்ரீராமன் கிருஷ்ணன் வாமநன் போன்ற வடிவங்களாலே உனது திவ்வியமான திருமேனி சேவையை இவ்வுலகிலுள்ள மக்கள் அனைவருக்கும் அநுபவிக்கக் கொடுத்து, ஸ்ரீகீதை பாஞ்சராத்ரம் முதலிய சாத்திரங்களை நல்லுபதேசஞ் செய்தும், நீ என்னைக்கை நீட்டி எடுக்க நினைத்தாலும் எடுக்கவியலாதவாறு கெட்ட கருமங்களாகிய தூற்றுக்களிலே நின்று பலகாலம் கூப்பிட்டுக் கொண்டு பாவம் புரிந்த யான் உன்னை அடைய வழி தெரியாமல் அலமருகின்றேன்; அந்த அவதாரகாலத்தில் உன் திருமேனி யழகை எல்லார்க்கும் வழங்கியபோது அவற்றுக்குத் தப்பியயான், இனி உன்னைச் சேர்தல் என்பது ஒன்றுண்டோ? என்று நம்மாழ்வார் அருளிச்

செய்கையாலே, அக்கெட்டவழியில் சென்றவனை ஆசாரியனாலே காக்க இயலுமோ?.

அந்த எல்லார்க்கும் மேலான இறைவன் ராமன் கிருஷ்ணன வராக மூர்த்தி ஆகிய திருவுருவங்களை எடுத்துக் கொண்டு பலவிதமான உபதேசங்களைப் பண்ணுமிடத் திலும் அவற்றைக்கேட்க அதிகாரிகளைக் காணமாட்டாமல், மக்களில் வேறு இனத்தில் ஒருவரான நம்மாழ்வாரையிட்டு, பேரின்பத்திற்குத் தகுதியாம்படி நன்றாகத் திருத்திகொள்ள வேண்டுமென்று அன்றோ எம்பெருமான் இவ் ஆழ்வார் முதலானாரைத் திருவவதரிக்கச் செய்தது. அவரும் அவ்வாறே செயல்நன்றாகத் திருத்திப் பணிகொண்டாரிறே. அவரைப் போல் திருத்தவல்லா ராயிற்று இவன் முக்தனாவது. உண்மை நிலை இவ்வாறிருக்க கெட்ட வொழுக்கமுடையாரையும் ஸதாசாரியன் காப்பான் என்று சொல்ல இயலாது. எம்பெருமானார் அரங்கமாளி முதலியவர் களுக்காகப்படாத பாடுபட்டு அவர்களைத் திருத்தி னாரல்லவா.

268. மூலம்:

*ஆகையாலே, பாலமூக ஜடாந்தாதிகளும் திர்யக் ஸ்தாவரங்களுங்கூட முக்தராம்படி பண்ணின எம்பெரு மானார் முதலானார்க்கும், ப்ராதிகூல்யலேசமுடைய சேதநரை ரக்ஷிக்குமதில் அருமையுண்டாகையாலே, மற்றுமுள்ள ஆசார்யர்கள் ரக்ஷிப்பது 'ஐயன் பாழியில் ஆனை போருக்குறுப்பாமன்றாயிற்று', அதுபோலே நாம மாத்ரோப ஜீவ்யம்.*

*ஸர்வேஶ்வரனாவான், ஸர்வஸ்வதந்த்ரனாய் ஸர்வ ஶக்தி யுக்தனாய் லீலாரஸ லோலனுமாய் பரமதயாளுவான*

**வனொருவன் ஆகையாலே, ஜகதுத்ப,வஸ்திதி ப்ரணாஶ ஸம்ஸாரவிமோச நாதி,களுக்குத் தானே கடவனாய் ஸர்வ நிர்வாஹகனாயிருந்து வைத்தும், "புரமொரு மூன்றெரித் தமரர்க் கறிவியந்து அரனயனென உலகழித்தமைத் துளன்" *(திருவா. 1-1-8)* என்கிறபடியே, ரக்ஷணம் மற்றொருவனுக்கு அஶக்யமாகையாலே அத்தைத்தானே ஏறிட்டுக் கொண்டு ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்காக, "நன்மை புனல்பண்ணி நான்முகனைப் பண்ணி" *(திருவாய். 7-5-4)* என்கிறபடியே ஒரு குழமணனைப் பண்ணினாபோலே சதுர்முகனை ஸ்ருஷ்டித்து, *(274)* *"ஸ்ருஷ்டிம் தத: கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே"* (?) என்று,**

**விளக்கம்:**

ஆகையாலே, சிறுவர், ஊமையர், செவிடர், குருடர், சிற்றறிவினர், விலங்கு, தாவரம் ஆகியவர்களையும் முக்தியடையச் செய்த எம்பெருமானார் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் முதலியவர்களுக்கும் தீயவழி செல்லும் மனிதரைக் காப்பது அரிதென்றால், பிற ஆசாரியர்கள் காப்பார் என்பது, ஐயனார் கோயிலில் நிறுத்தப் பட்டிருக்கும் யான் குதிரைகள் போருக்கு உதவும் என்பதைப் போலே, வெறும் ஆசாரியன் என்ற பெயரை மாத்திரம் வைத்துக் கொண்டிருத்தலாகும்.

யாவர்க்கும் தலைவனான இறைவன் என்பவன், தடையற்ற சுவதந்திரனாய் எல்லாவாற்றலும் நிறைந்தவனாய் படைத்தல் காத்தல் கெடுத்தலாகிய விளையாட்டைச் செய்து இன்பம் நுகருபவனாய் உயர்ந்த கருணைக் கடலாயிருப்ப வன், ஆகையாலே உலகத்தை யுண்டாக்குதலும் நிலைபெறச்

செய்தலும் அழித்தலும் பிறவியைப் போக்குதலும் மோட்ச இன்பத்தை அளித்தலுமாகிய இவைகளுக்குத் தானே கடவனாய் இவ்வாறு எல்லாவற்றையும் தானொருவனாகவே யிருந்து நிர்வாகம் செய்தும் ''புரமொரு மூன்றெரித்து அமரர்க்கு அறிவியந்து அரன்அயன் என உலகழித்து அமைத்துளனே'' என்று கூறுகிறபடி, காத்தல் தொழில் மற்றொருவனுக்கு இயலாதது ஆகையால் அதனைத் தானே ஏறிட்டுக் கொண்டு, படைக்கும் தொழிலுக்கும் அழிக்கும் தொழிலுக்குமாக, ''நன்மை புகல்பண்ணி நான்முகனைப் பண்ணி'' என்கிறபடி சிறுவர்கள் விளையாடுவதற்கு மண்ணைப் பிசைந்து ஒரு பதுமையைப் பன்னுவதுபோல் நான்முகனைப் படைத்து, (274) ''உலகத்தைப் படைப்பதற்காக அந்தப் பிரசாபதியாகிய பிரமனுக்குள் நுழைந்து நீ படைத்தல் தொழிலைச் செய்கிறாய்'' என்று,

**269. மூலம்:**

***அவனுக்கும் அந்தராத்மாவில் ஸ்ருஷ்டித்து தேவர்களுக்கு அறிவு கொடுத்து அவனே பண்ணினான் என்று ப்ரஸித்தமாக்குமா போலேயும், முன்பு அவனாலே ருத்ரனை ஸ்ருஷ்டித்து ததந்தர்யாமியாய் ஸம்ஹரித்துக் கொண்டு த்ரிபுர தஹநம் அவனே பண்ணினானென்று ப்ரஸித்தமாக்குமாபோலேயும், துஃக்கா குலரான சேதநரைக் கண்டு ஸம்ஸார விமோசனம் பண்ணுகைக்காக ஆசார்யனென்கிற பேரையுடைய தாரு ப்ரதிமைகளை நிர்மித்துக் காக்கைப் பொன்னையிட்டு அலங்கரிக்குமா போலே, ஜ்ஞாநாநுஷ்டாநங்களாகிற வைஷ்ண வாலங் காரங்களையுண்டாக்கி, ததந்தர்யாமியாய் நின்று தன்மூலமாக சேதநரை வசீகரித்துக் கொண்டு ரக்ஷிக்குமவ னென்கையாலே, தனித்து வேறேயொரு ஆசார்யனென்***

றொரு தத்வமில்லையிறே. மேலெழப் பார்த்தால், ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள் இவ்வதிகாரிகள் பக்கல் தோற்றுகிற தித்தனை யொழிய இதுக்கடி ஆராய்ந்தால்,

*(275) "விஷ்ணுராத்மா ப$_4$க$_3$வதோ ப$_4$வஸ்யாமித தேஜஸ: (மஹாபாரதம்) என்கிற படியே, அவனேயா யிருக்குமிறே. இவ்வர்த்தம், (276) "ஈஶ்வரஸ் ஸர்வபூ$_4$தா நாம் ஹ்ருத்$_3$தே$_3$ஶ அர்ஜுந திஷ்ட$_2$தி- ப்$_4$ராமயந் ஸர்வபூ$_4$தாநியந்த்ராரூட$_4$ாநிமாயயா" (கீதா. 18-61) என்று, லீலாவிஷயமான எல்லோரும் அசித்வத் பரதந்த்ரரென்றும், தானே ஸர்வஸ்வதந்த்ரனென்றும் அருளிச்செய்தானிறே. இதுபோலே, (277) "விஷ்ணுஶ்ஶேஷி ததீ$_3$யஶ் ஶுப$_4$கு$_3$ண நிலயோ விக்$_3$ரஹ: ஶ்ரீஶட$_2$ாரி: - ஶ்ரீமாந் ராமாநுஜார்ய : பத$_3$கமலயுக$_3$ம் ப$_4$ாதிரம்யம் ததீ$_3$யம்" என்று,*

**விளக்கம்:**

அந்த பிரமனுக்குள் ஆந்மாவாயிருந்து படைத்தலைச் செய்தும், தேவர்களுக்கு அறிவு கொடுத்து, அந்தப் படைத்தல் தொழிலைப்பிரமனே செய்தான் என்று உலகோர் கூறும்படியாகவும், முன்னர்ப் பிரமனாலே உருத்திரனைப் படைத்து அவனுக்குள் புகுந்து உலகத்தை அழிக்கும் தொழிலைச் செய்துகொண்டு திரிபுரத்தை அந்த உருத்திரனான சிவனே செய்தான் என்று உலகோர் கூறும் படியாகவும் பிறவித்துன்பத்தில் வருந்துகின்ற மக்களை முக்தி யடையச் செய்வதற்காக, ஆசாரியன் என்ற பெயரையுடைய மரத் தாலாகிய பதுமைகளைச் செய்து காக்கைப் பொன்னையிட்டு அழகுபடுத்துவதுபோல், ஞானம் அநுட்டாநங்களாகிய வைணவ அலங்காரங்களை யுண்டாக்கி, அவ்ஆசாரியனுக்கு அந்தர்யாமியாய் நின்று

அவன் மூலமாக மக்களை வசப்படுத்திக்கொண்டு காப்பவன் ஆகையாலே, தனித்து ஆசாரியன் என்று வேறேயொரு தத்துவம் இல்லையல்லவா.

மேலெழப்பார்த்தால், படைத்தல், அழித்தல் தொழில்கள் பிரமன் சிவன் ஆகியோர் செய்வதுபோல் தோற்றுகிறதித்தனையொழிய இதற்குக் காரணத்தை ஆராய்ந்தால், (275) ''பகவானாகிய விஷ்ணுவை ஆந்மா வாகக் கொண்டு அளவிட முடியாத ஆற்றலைப்பெற்று சிவன் மகாமேருவை வில்லாக வளைத்துத் திரிபுரத்தை அழித்தானல்லவா'' இங்கு கூறப்பட்ட பொருள்,

(276)''அர்சுன! அனைவரையும் அடங்கியாளும் இறை வனான வாசுதேவன் எல்லாவுயிர்களின் இருதயமாகிய இடத்தில் சரீரமாகிய எந்திரத்தில் ஏறிநிற்கும் எல்லாவுயிர் களையும், முக்குணமயமான மாயையாலே அக்குணங்களுக் கேற்றவாறு செயல்படும்படி நிற்கின்றான்'' என்றபடி, அவ்விறைவனின் விளையாட்டிற்கு விஷயமான எல்லா மக்களும் சடப்பொருளைப் போன்று இறைவனுக்கு வசப்பட்டவரென்றும், தானே எல்லோர்க்கும் எசமானன் என்றும் கீதையில் அருளினான் அல்லவா. இதுபோலவே, (277) ''விஷ்ணுவானவர் அனைவர்க்கும் தலைவரா யிருப்பர்; நற்குணங்களுக்கிருப்பிடமான நம்மாழ்வார் அவருடைய திருமேனியாவர்; கைங்கர்ய செல்வம் நிறைந்த இராமானுசர் அந்த நம்மாழ்வாருடைய அழகிய திருவடித் தாமரையிணையாய் விளங்குகிறார், அந்த இராமானுசரிடத் திலேயே ஆசார்ய பதம் நிறைபொருளுடையதாய் விளங்குகிறது'' என

**270. மூலம்:**

க்ருபாவானாய் பே$_4$ரகார்த்தமாக விநியோகங் கொள்ளு மிடத்திலும், தான் அந்தராத்மாவாய்க்கொண்டு சேஷியாய் ஆதாரயேத்வ விதேயத்வ சேஷத்வ லக்ஷணங் களுடைய ஆழ்வாரைத் திருமேனியாகவும், க்ஷமாகுணத் துக்காஶ்ரயமான எம்பெருமானாரைத் திருவடிகளாகவுங் கொண்டு, ஆசார்யாவதாரம் பரிக்ரஹித்தானாகையாலே, அவனே ஸர்வ நிர்வாஹகன்; அவனிஷ்டமே எல்லோர்க் கும் இஷ்டர்; மற்றுள்ளார் எல்லாரும் அவனுக்கு நித்ய பரதந்த்ரர்; தனித்தொருவருக்கும் ஒரு ப்ரவ்ருத்தியுமில்லை. ''எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போதொழியும் அழைப்பு'' (நான்முகன் திருவந்தாதி 38) என்று, அவன் நினையாதபோது த்ருணமாத்ரமும் சலிப்பிக்க ஶக்தனொருவனுமில்லை. இவ்வாசார்யன் ஹிதோபதேஶம் பண்ணி திருத்த வருகிறது, அமைத்த சோற்றிலே மாமியார் கைவைத்தாப்போலே அசித விஶேஷிதராய்க் கிடந்தவன்று, கரணகளேபரங்களைக் கொடுத்து ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶக்திகளையுண்டாக்கி வ்யபிசரியாதபடி வேதஶாஸ்த்ராதிகளை உபகரித்து ராமக்ருஷ் ணாதி$_3$ ரூபேந வந்தவதரித்து ஹிதோபதேஶம் பண்ணியும், து$_4$ர்வாஸனையாலே ஒருவரும் ஶாஸ்த்ர மர்யாதையிலே வாராதொழிந்தால், க்ருபை கரைபுரண்டு தானே யத்நம் பண்ணி ரக்ஷிக்கவேணுமென்று நினைத்து;

இவ்விபூதியில் லீலார்த்தமாகத் தான் பண்ணுவித்த கட்டளையை அதிக்ரமித்து ரக்ஷிக்க தனக்கே ஶக்ய மல்லாமையாலே, உச்சிவீடு விடுகிற ஒரு சமயத்தை நிரீக்ஷித்து விஶேஷகடாக்ஷம் பண்ணி, அத்வேஷாபி$_4$ முக்ய ஸத்ஸங்கங்களும் ஸாத்விக உதயங்களு

*முண்டாக்கி மோக்ஷாபேக்ஷையையும் பிறப்பித்து ஆசார்யன் என்று ஒருவனை அலங்கரித்து ததாஶ்ரயணோபயுக்த ஶமதமாதிகளை இவனுக்குண்டாக்கி அவனோடே சேரவேணுமென்கிற ருசியை பிறப்பித்து சேர்த்தபின்பிறே அவன் இவனுக்கு ஹிதோபதேஶம் பண்ணுவது. ஹிதோபதேஶம் பண்ணின பின்பு (278) "உபதே$_3$ஶோ நிரர்த்த$_2$க:" என்னும்படி, துர்வாஸனை மேலிடாமல், (279) "தம்ஹ தே$_3$வம் ஆத்மபு$_3$த்$_4$தி$_4$ ப்ரஸாதம்" என்றும்,*

**விளக்கம்**

இறைவன் அருளுடையவனாய் பேரின்பத்தின் பொருட்டு ஆந்மாக்களை விநியோகங் கொள்ளுமிடத்திலும், தான் அந்தர்யாமி யாக நின்று தலைவனாய் தாங்கப்படுபொருளாயும், அடங்கிய பொருளாயும் அடிமைப் பொருளாயுமிருக்கும் இலட்சணங்களை யுடைய நம்மாழ்வாரைத் திருமேனியாகவும்; பொறுமைக்கோர் இடமாகவும் உடைய இராமாநுசரைத் திருவடியாகவும் கொண்டு ஆசாரிய அவதாரத்தை எடுத்தவன் இறைவனே யாகையால், அவனே எல்லோரையும் ஆள்பவன்; அவனது விருப்பமே எல்லோருடைய விருப்பம்; பிறரெல்லாம் அவனுக்கு எப்போதும் அடிமையாவர். இஃதன்றி தனித்தொருவருக்கும் ஒரு செயலைச் செய்யும் தன்மையில்லை.

"எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போதொழியும் அழைப்பு" இறைவன் செயல்படாதபோது தேவர்கள் எவரும் ஒன்றும் செய்ய இயலாது, என்கிறபடி, இறைவன் நினையாதபோது ஒரு துரும்பையும் அசைப்

பதற்கு எவருக்கும் ஆற்றலில்லை. இவ்வாசாரியன் ஒருவனுக்கு உபதேசத்தால் திருத்தவருவது, அட்ட சோற்றிலே மாமியார் கைவத்தாற்போலே, பிரளய காலத்தில் சீவான்மாக்கள் யாவரும் தம்முடைய கைகால்களோடு சேர்ந்த உடம்பை அவ்வுலகத்திலே இழந்து அசித்தைப் போல் - சடப்பொருளைப்போல் கிடந்த அன்று, அவர்களுக்கு மீண்டும் கைகால் உறுப்புகளோடு சேர்ந்த உடலைக் கொடுத்துச் செயல் செய்யவும் செயல் தவிரவும் ஒன்றைப் பற்றி அறியவும் ஞானம் ஆகியவற்றைக் கொடுத்து, இராமன் கிருஷ்ணன் விஷ்ணு போன்ற அவதாரங்களைச் செய்து மக்களுக்கு வேண்டிய நன்மைசேர் உபதேசம் செய்தும், இம்மக்கள் தாம் செய்த தொன்மையான தீவினையின் பழக்கத்தாலே ஒருவரும் சாத்திரங்கள் கூறும்வழியில் நடவாதொழிந்தால், அப்போது இறைவனின் அருள் கரைபுரண்டு தானே முயன்று இவர்களைக் காக்க வேண்டுமென்று நினைத்து;

இவ்வுலகில் விளையாட்டின் பொருட்டுத் தான் செய்துவைத்த கட்டளையைக் கடந்து காப்பதற்குத் தனக்கே கூடாமையாலே, அடைமழை விடாது பெய்து கொண்டிருக் கிறபோது திடீரென நடுவானில் மேகங்கள் விலகி மழை நின்ற சமயத்தை எதிர்பார்ப்பதுபோல், இறைவன் வழி கெட நடந்து துன்பமெய்தி அல்லற்படுகின்ற இம்மக்களைக் காப்பதற்குச் சிறப்பான அருளைச்செய்து, தன்னிடத்தில் இவர்களுக்கு வெறுப் பின்மை, அன்பு, நல்லோர் நட்பு, ஸாத்தவிக குணம் போன்றவற்றை யுண்டாக்கி மோட்சத்தில் விருப்பத்தையும் பிறப்பித்த பின்பன்றோ அவர்களுக்கு இவ்ஆசாரியன் உபதேசம் செய்வது. இவ்வாறு, ஆசார்யன் நல்லுபதேசம் செய்த பின்னர் (278) "ஆசாரியன் உபதேசம்

வீண்'' என்னும்படி தீயப் பழக்கம் மேலிடாமல், (279) ''அந்த இறைவனே மனிதர்களுக்கு நல்லறிவை அளிக்கின்றான்'' என்றும்,

**271. மூலம்:**

***(280) ''ஏஷ ஏவ ஸாது$_4$ கர்மகாரயதி'' (கௌஷீதகி. உ.ப.) (281) ''ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி$_3$ ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச'' (கீதா. 15-15)*** என்றும் சொல்லுகிறபடியே, ஹ்ருதி ஸ்த்தனாய் நின்று ஆத்ம குணங்களைப் பிறப்பித்து, அபரமாத்மநி வைராக்யத்தை யுண்டாக்கி, ஸ்வகீய விஷயங்களில் காதல் கடல்புரைய விளைவித்து பரமார்த்தனாம்படி பண்ணி ப்ராப்தி ப்ரதிபந்தக ஸகலபாபநிவ்ருத்தியு மாம்படி அநுக்ரஹித்து ப்ராரப்த விமோசநந் தொடங்கி நித்ய கைங்கர்ய ப்ராப்தியளவுமுண்டான ப$_2$ல பரம்பரைகளை யடையும்படி பண்ணுவது, அவனுடைய அநிதரஸாதாரண க்ருத்யங்களிறே. பரமார்த்தமிதுவா யிருந்தாலும், அநாதியாக ஸம்ஸரித்துப் போருகிற இவனுடைய ஸமுத்தரணத்துக்கு ப்ரதமம் உபகாரந் தோன்றுவது, *(282) ''ஆத்ம நோஹ்யதி நீசஸ்ய யோகி$_3$த்$_4$யேய பத$_3$ார்ஹறதாம்-க்ருபையை வோபகர்தாரம் ஆசார்யம் ஸம்ஸ் மரேத்ஸத$_3$ா'' (?)* என்று, அநாதியாய் ஈச்வரனுமுளனாய், பிராட்டியுமுளளாய் ஆழ்வார்களும் மற்றும் ஆசார்யர்களும் எல்லாரும் ஆத்மரக்ஷணார்த்த மாகப் பிறந்திருக்கச் செய்தேயும், இந்த ஜந்மத்தில் தனக்கு இந்த லாபம் ஸ்வாசார்ய ஸம்ப$_4$ந்தத்வாரா உண்டாக் கினான். ஆகையாலே, ஸ்வாசார்யன் பக்கலியேயா யிருக்கும் இவ்வுபகாரத்திற்கு;

**விளக்கவுரை**

(280) "எந்த மனிதனை இறைவன் நற்கதி அடைவிக்க எண்ணுகிறானோ அவனை நற்கருமங்களைச் செய்யத் தூண்டுகிறான்" எனவும், (281) "அர்ச்சுன! யானே எல்லோருடைய இருதயத்திலும் இருந்து கொண்டு என் விஷயமான ஞானத்தையும் மறதியையும் அறிக்கிறேன்'' என்று எம்பெருமான் தானே கூறுகின்றபடி, எல்லோருடைய இருதயத்தில் நின்றும் நற்(ஆந்ம) குணங்களைப் பிறப்பித்து, பரமாத்மா அல்லாத சிற்றின்பங்களில் வெறுப்பையுண்டாக்கி, இறைவனாம் தன் விஷயங்களில் காதல் கடலைப் போன்று விளைவித்து, தன்னை அடையாததனால் மிக்க வருத்தத்தையுமுண்டாக்கி, தன்னையடையத் தடையான பாவங்களில் நின்றும் விடுவித்து அருளையீந்து பிராரப்த கருமங்களைப் போக்குவது முதலாக நித்திய கைங்கர்யத்தை அடைதல் ஈறான பயனின் வரிசைகளையடையும்படி செய்வது, அவ்இறைவனுடைய பிறர்க்கில்லாத தனிப்பெருஞ் செயலன்றோ.

உண்மையான மேம்பொருள் இதுவானாலும், பலகாலம் பிறவியில் அழுந்தித் துன்பப்படுகிற சீவனான இவனுடைய விடுதலைக்கு முதல் உபகாரத் தோன்றுவது, (282) "யோகிகளால் தியானிக்கத் தக்கவ னான இறைவன் ஆந்மா நன்மையையடையும் பொருட்டு ஆசாரியனையளித்தான்; அந்த ஆசாரியனோ தனக்கறி வின்மையைப் போக்குதல் முகத்தாலே அறியவேண்டிய அர்த்தங்களை அறிவித்ததலால் கிருபையோடு கூடின அந்த ஆசாரியனை எப்போதும் நினைத்தல் வேண்டும்" என்கிறபடி தொன்றுதொட்டு இறைவனுமுளனாய் பெரிய பிராட்டியுமுளளாய் ஆழ்வார்களும் மற்றும் ஆசாரியர் களும் ஆகிய

எல்லோரும் ஆந்மாக்களைக் காத்தற் பொருட்டுப் பிறந்திருக்கச் செய்தேயும், இப்பிறவியில் தனக்கு இந்தப்பேறு தன்னுடைய ஆசாரிய ஸம்பந்த மூலமாக உண்டாக்கினவன் இறைவனாகையாலே, தன்னாசாரிய னாலேயாயிருக்கும் இவ்வுபகாரத்திற்கு;

## 272. மூலம்:

முடிந்த நிலம் பார்த்தவாறே, ஸர்வகாரண பூ$_4$தனானவன் ஆகையாலே, அவனிடத்திலே பர்யவஸித்தன்றி நில்லாது. ஆகையாலே, "உபகார ஸ்ம்ருதிக்கு முதலடி ஆசார்யன் பக்கல் க்ருதஜ்ஞதை, முடிந்தநிலம் ஈச்வரன் பக்கல் க்ருதஜ்ஞதை" (ஸ்ரீவச.பூ. 326) என்றருளிச் செய்தது. இந்த ஆசார்யவதாரமும் அவனதேயாகையாலே, (283) "ஆசார்ய தே$_3$வோப$_4$வ" (தைத்-சீக்ஷா. 112) என்றும், (284) "கு$_3$ருரேவ பரம் ப்$_3$ரஹ்ம" (ப்ரபஞ்சஸாரம்.) என்றும், (285) "ஸாக்ஷாந் நாராயணோ தே$_3$வ:" (ஜயாக்.ஸம்) என்றும், (286) "ஐஹிகாமுஷ்மிகம் ஸர்வம்" ( ) (287) "மாதாபிதா யுவதய:" என்றும் பூர்ணாதி$_4$காரி விஷயத்தில் அநுஸந்திக்கக் குறையில்லை. ஆகையாலிறே, விபரீதா நுஷ்ட$_2$ாநங்கள் புகுராதபடி, (288) "ராமாநுஜார்யே கு$_3$ருரிதிச பத$_3$ம்ப$_4$ாதி" என்று, அவ்விடத்தில் அநிதர ஸாதாரணோபாயாத்மக ஆசார்யத்வம், எம்பெருமானா ரிடத்திலே பூர்வர்கள் எல்லோரும் அநுஸந்தித்தும் உபதேசித்தும் போகிறது. அதுக்குக் கருத்து, அன்றைகன்று மாயாப்ரவ்ருத்தமாய், தந்தாம் ஆசார்யர்கள் சொல்லுகிற விபரீதங்களைக் கேட்டு, அஜ்ஞரானவர் ப்ரவ்ருத்தித்துப் போகாதபடி எம்பெருமானாருடைய உக்தியநுஷ்ட$_2$ாநங்களை

**உத்தேட்மென்று எல்லோரும் அறிந்து உஜ்ஜீவிக்கும் படி நிர்ணயித்துப் போந்தார்கள். ஆகையாலே, தாம் ஒன்றை ஆசரித்து இது எம்பெருமானார் அருளிச் செய்த அநுஷ்ட$_2$ாநமென்று சொல்லுகிற வார்த்தை களைக் கேட்டு மருளாதே கு$_3$ருபரம்பராப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே அருளிச்செய்த அர்த்த விசேஷங்களுக்கு;**

**விளக்கம்**

எல்லைநிலம் பார்த்தவாறே எல்லார்க்குங் காரணமா னவன் இறைவனாகையாலே, அவனிடத்தளவு சென்றா லன்றி இவ்வுபகாரம் நில்லாது ஆகையாலே, "செய்த உதவியின் நினைவுகூர்தலுக்கு முதலடி ஆசாரியனிடத்து நன்றியுடனிருத்தல், இதற்கு எல்லைநிலம் இறைவனிடத்து நன்றியுடனிருத்தலாம்" என்று ஸ்ரீவசநபூடணத்தில் அருளிச் செய்யப்பட்டது. இவ் ஆசாரிய அவதாரமும் இறைவனே யாகையாலே, (283). "ஆசாரியனை தெய்வமாக உடைய வனாவாய்" என்றும், (284). "குருவே மேலான பரம் பொருள்" (285).

"நாராயணனாகிய தேவனே நேரே ஆசாரியனாகிறான்" (286). "இந்தவுலக செல்வமும் மேல் உலக செல்வம் ஆகிய எல்லாம் ஆசாரியனே" (287). "தாய் தந்தை மனைவி பிள்ளை மற்றைய உறவெல்லாம் எனக்கு (நம்மாழ்வாரே) ஆசாரியனே ஆவார்" என்று, நிறைஞானத் தவர்களான நம்மாழ்வார், எம்பெருமானார் போன்றோரை இறைவனாகவே நினைக்கக் குறையில்லை. ஆகை யாலன்றோ சாத்திரங்களுக்கு மாறுபட்ட ஆசார அநுட்டாநங் கள் புகுராதபடி, (288). "அந்த எம்பெருமானாரிடத்திலேயே

ஆசாரியபதம் நிறை பொருளுடையதாய் விளங்குகிறது; வேறொருவரிடம் அப்படி விளங்கவில்லை" என்று, அவ்விடத்தில் மற்றொருவர்க்கில்லாத தனிச் சிறப்புடைய நெறியாம் ஆசார்யத்வம் எம்பெருமானாரிடத்திலேயே பூர்வாசாரியர்கள் எல்லாரும் நினைத்தும் அதையே பிறர்க்குபதேசித்தும் போந்தனர் அன்றோ. அதற்குக்கருத்து, அன்றைக்கு அன்று பகவந்மாயையால் விளையக்கூடியதாய், தம்தம் ஆசாரியர்கள் கூறுகிற விபரீதப் பொருளைக் கேட்டு, குறையறிவுடையோர் தீயவொழுக்கத்தை மேற்கொள்ளாத வாறு எம்பெருமானாருடைய உபதேச அநுஷ்டாநங்களே சிறந்ததென எல்லாரும் அறிந்து உய்வடையும்படி பூர்வர்கள் நிர்ணயித்துப் போந்தனர். ஆகையாலே, தாம் ஒன்றை அநுஷ்டித்து இது, எம்பெருமானார் அருளிச்செய்த அநுஷ்டாந மென்று கூறுகிற வார்த்தைகளைக் கேட்டுமருளாமல் 'குருபரம்பராபிரபாவம்' முதலான நூற்களிலே அருளிச் செய்த சிறப்புடைய பொருள்களுக்கு;

## 273. மூலம்

பூர்வகு$_3$ரு வசநாநுஷ்ட$_2$ாந விரோதம் வாராதபடி நன்றாகவோர்த்து அர்த்த நிஶ்சயம் பண்ணுகிற பரம வைதிகரான அதிகாரிகளுடைய உக்திய நுஷ்ட$_2$ாநங் களை உத்தேஶ்யமென்று கொள்ளவேணும். மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்; "உளன்சுடர்மிகு சுருதியுள்" (திருவாய். 1- 1-7) என்று தொடங்கி பலவிடங்களிலும் வேதப்ராமாண்யம் அங்கீகரித்து, (289). "ஸர்வம் க$_2$ல்வித$_3$ம் ப்$_3$ரஹ்ம" (சாந். உப.) நேஹநா நாஸ்தி கிஞ்சந" (கட. உப.) ஏகோஹவை நாராயண ஆஸீத் ந ப்$_3$ரஹ்மா நேஶாந:" (மஹோ. உபநிஷத்) என்று தொடங்கிச் சொல்லுகிற, வேத

**வாக்கியங்கள் த்ராவிட வாக்வ்ருத்தியாலே விஶதீ கரித்து, முமுக்ஷுக்களுக்கு அறிய வேண்டும் அர்த்த விசேஷங்க ளெல்லாம் ஸ்வப்ரபந்த முகத்தாலே வெளியிட்ட பரம வைதிகாக்ரேஸரர் ஆகையாலேயிறே, ப்ரபந்நஜந கூடஸ்தராய் ஸகல சிஷ்ட அக்ரகண்ய சிரஸா வஹ்யராயிருக்கிறது. ஆகையாலே, எப்படிப் பட்ட ஜ்ஞாநாதிகரானாலும் வேதவேதாந்த விருத்த மாக அபதேப்ரவ்ருத்தரானால், லீலாவிஷயமாகை யொழிய க்ருபாவிஷயமாகப் பெறார்கள். ஜ்ஞாநாதிக மாத்ர மன்றிக்கே பரமவீதராகருமாய் அத்யந்த ப₄க்தியுக்தரு மாயிருந்து வைத்தும் ஸாஹஸ க்ருத்யங்களில் அந்வயித்தாராகில், ஏதாக நினைத் திருக்க வேணுமென்னில், ஸர்வேச்வரன் தன் லீலா ஸஹகாரியாக இட்டுக்கொண்ட பார்வையாக நினைத்து, அவரருகே தான் போகாதே கடக்கவர்த்திக்க வேணும். ஸர்வேச்வரன், நிரங்குச ஸ்வதந்த்ரனாய் பரமக்ருபா வானுமாய் போ₄க₃ லீலார்த்த விபூ₄தித்வய ஈச்வரனாகை யாலே, லீலாபோ₄க₃ங்களிரண்டும் அவனுக்கிஷ்டரஸங்களேயாய்.**

விளக்கவுரை

பூருவாசாரியருடைய உபதேசத்திற்கும் அநுட்டாநத் திற்கும் விரோதம் வாராதவாறு நன்றாக ஆராய்ந்து நிலை நின்ற பொருளைக் கூறுகிற பரமவைதிகரான அதிகாரிக ளுடைய பேச்சும் ஒழுக்கமுமே சிறந்ததெனக் கொள்ளுதல் வேண்டும். மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார், ''உளன் சுடர்மிகு சுருதியுள்'' - ''ஒளிமயமான வேதத்தால் கூறப்படு பவன் இறைவன்'' என்று தொடங்கி திருவாய்மொழியில் பலவிடங்களிலும் நம்மாழ்வார் வேதத்தைப் பிரமாணமாக

அங்கீகரித்து (289) ''காணப்படுகின்ற அறிவுடையப் பொருள்களும் அறிவிலாப் பொருள்களும், ஆகிய எல்லாம் பிரம்மமாகிய நாராயணனே, ''இவ்வுலகிலிருக்கும் அறிவுள்ளவையும் அறிவற்றவையுமான பலவிதமான பொருள்களும் இறைவன் நாராயணனைவிட்டு ஒன்றுமில்லை'' ''ஊழிப் பெருவெள்ளத்தில் நாராயணன் ஒருவனேயிருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை'' என்று தொடங்கிச் சொல்லுகிற வேதவாக்கியங்களைத் திராவிட வாக்காகிய திருவாய்மொழியாலே விரித்து, மோட்சத்திலே ஆசையுடையோர்க்கு அறியவேண்டும் பொருட்சிறப்பெல்லாம் தம்முடைய பிரபந்தமுகத்தாலே வெளியிட்ட மேலான வேதமார்க்கத்துக்கெல்லாம் தலைவர் ஆகையாலன்றோ, இந்நம்மாழ்வாரையே பிரபந்நர்க்கெல்லாம் முதல்வராய், சிட்டர்களில் தலைவராயிருப்போர் எல்லாரும் தம் தலைமேல் வைத்துக் கொண்டாடுகிறார்கள், ஆகையாலே, எப்படிப்பட்ட ஞான நிறைவுடையவரானாலும் வேத வேதாந்தத்திற்கு முரணாகக் கெட்டவழி நடப்போரானால், இறைவனது விளையாட்டிற்குக் கருவியாவாரொழிய அவன் இரக்கத்திற்கு விஷயமாகப் பெறார்கள்.

ஞானநிறைவுடைமை மாத்திரமன்றிக்கே, மேலான ஐம்புலன் விஷய வைராக்கியமுடையவருமாய் மேலான பக்தியுடையவருமாயிருந்தும் மேற்கூறப்பட்ட கெட்ட நடத்தையில் துணிவு கொள்வாராகில், அவர்களை எவ்வாறாக நினைக்க வேண்டுமெனின், இறைவன் இறப்புப் பிறப்பு என்னும் தனது விளையாட்டிற்குத் துணைக் கூட்டுக் கருவியாக வைத்துக் கொண்டுள்ளான் என நினைத்து, மறந்தும் அவர்கள் அருகே சிறந்த ஞான ஒழுக்கங்களையுடையோன் செல்லாமல் தொலைவில் நின்று வாழ

வேண்டும். எல்லோர்க்குந் தலைவனான இறைவன் தடுப்பாரிலாச் சுதந்திரனாய் மேலான அருளுடையவனாகையாலே பேரின்பத்தை நல்கும் உலகத்திற்கும், பிறப்பிறப்பை நல்கக்கூடியதால் இறைவனுக்கு விளையாட்டிற்கு இருப்பிடமான உலகமாகிய இரண்டிற்கும் தலைவனாகையாலே, விளையட்டும் போகமாகிற பேரின்பமும் அவனுக்கு விருப்பமான சுவையுடைமையாகையாலே;

**274. மூலம்**

*ஒரு காலத்திலே லீலாலோலனாய் சிலரையதுக்கு ஸஹகாரிகளாகக் கொண்டு, தந்மூலமாகச் சிலரை லீலையிலே விநியோகங் கொள்ளுவதும், ஒரு காலத்திலே தயாபரவசனாய் சிலரைத் தானே முக்தராகப் பண்ணி போகத்திலே கூட்டிக் கொள்வதும், சில ஆத்மாக்களை விலக்ஷண ஸம்பந்த முண்டாக்கி தந்மூலமாக ஸமுத்தரிப்பிக்குமதும், அவனுக்கு ஸ்வபாவமாகையாலே;*

*(290) "ஶ்ருதிர்நஷ்டா ஸ்ம்ருதிர்லுப்தா ப்ராயேண பதிதாத்$_3$விஜா: - அங்க$_3$நிச விஶீர்ணாநி ஹாவ்ருத்$_3$தே$_4$ா வர்த்த$_4$தேகலி:" (?)* என்று, கலிப்ரவ்ருத்தமாய், வேத வைதிக மர்யாதைகளைத் தப்பி எல்லாரும் நாஸ்திகராய் நஶிக்கப் புக்கவாறே, தயாபரவஶனாய் பராங்குஶ பரகால யதிவராதிக ளைப் பார்வையாக வைத்து தந்மூலமாகத் திருத்தப் பார்க்க, "நமனுக்கு இங்கு யாதுஒன்றுமில்லை - கலியுங் கெடுங்கண்டு கொள்மின்" *(திருவாய், 5-2-1)* என்னும்படி, கலிதோஷமெல்லாம் நீங்கி, "பெரிய கிருதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம், பெருக கரியமுகில் வண்ணன் எம்மான் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்,

*இரியப்புகுந் திசை பாடி எங்கும் இடங்கொண்டனவே" (திருவாய். 5-2-3) என்கிறபடியே, இனி லீலைக்கு விஷயம் ஒருவரும் இல்லை என்னும்படி கண்ட கண்டவிட மெல்லாம் வைஷ்ணவரேயாய், மஹதபிமானத்தாலே அநதிகாரிகளும் முக்தராம்படி கண்டு, "எல்லீரும் வீடு பெற்றால் உலகில்லை" (திருவாய். 4-10-6) என்கிற படியே, முக்தியோக்யமான அதிகாரி ஸம்பத்தி (பேறு) ஒன்று மின்றிக்கே, ப்ராதிகூல்ய நிவ்ருத்தி மாத்ரத்தாலே மஹதபி மான அந்தர்பூதராய், பாலமூக ஜடாந்த பங்குராதிகளும் முக்தரானால் ஶாஸ்த்ர மர்யாதை தப்பிப்போம் என்றும்,*

**விளக்கவுரை**

ஒருகால் விளையாட்டில் இன்பமுடையவனாய் அதற்குச் சிலரைத் துணையாகக் கொண்டு, அவ்வழியாலே சிலரை விளையாட்டிலே பயன்படுத்திக்கொள்வதும், ஒரு கால் அருளின் வசப்பட்டுச் சிலரை முக்தராகப் பண்ணி பேரின்பத்திலே கூட்டிக் கொள்வதும், சில ஆந்மாக்களை மிக்க சிறப்புடைய ஆசாரிய சம்பந்தத்தை யுண்டாக்கி அதன்வழி அவர்களைப் பிறவிப்பிணியிலிருந்து கடத்துவது அவ்விறைவற்கு இயல்பாகையாலே;

(290) "வேதம் அழிவுறும் தன்மையிலுள்ளது; தரும சாத்திரங்கள் அழிந்தன; இருபிறப்பாளரான அந்தணர் பெரும்பாலும் தாழ்ந்த நிலையை அடைந்தனர்; வேதாங்கங் களும் சிதறி விட்டன. இந்நிலையில் வயது முதிர்ந்தவனான கலி மிகவும் வளருகின்றான் என்னே! ஆச்சரியம்" என்று, கலி ஆட்சி செய்வதால், வேத வைதிக மரியாதைகளைத் தப்பி எல்லோரும் நாத்திகராய் அழியப் புகுந்ததும், இறைவன்

கருணையின் வசப்பட்டுப் பராங்குசர், பரகாலர், எதிராசர், மணவாள மாமுநிகள் ஆகிய இவர்களைப் பார்வை யாளர்களாக வைத்து அவர்கள் வாயிலாக இவ்வுலகத்தைத் திருத்தப் பார்க்க, ''நமனுக்கிங்கு யாதொன்றும் இல்லை - கலியுங் கெடுங்கண்டு கொள்மின்!'' என்று, கலியின் குற்றமெல்லாம் நீங்கி, ''பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக, கரிய முகில் வண்ணன் எம்மான் கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல், இரியப் புகுந்து இசை பாடி எங்கும் இடங் கொண்டனவே'' என்கிறவாறு, இனிமேல் எம்பெருமானது விளையாட்டுக்கு விஷயம் ஒருவரும் இல்லை என்னும்படி, காண்கின்ற இடமெல்லாம் ஸ்ரீவைஷ்ண வர்களே மிகுந்து பெரிய அபிமாநத்தாலே அதிகாரியல்லாத சிற்றறிவினரும் முக்தராகும்படியைக் கண்டு ஆழ்வார், ''எல்லீரும் வீடு பெற்றால் உலகில்லை'' என்னும்படி, முக்திக்குத் தகுதியான அதிகாரியாம் தன்னை ஒன்றுமின் றிக்கே, அறத்துக்கு விரோதியானவற்றை விடுதல் மாத்திரத்தாலேயே பெரிய அபிமாநத்திற்குட்பட்டவராய், பேதையர் ஊமையர் சிற்றறிவினர் குருடர், முடவர், செவிடர் ஆகியோரும் முக்தரானால் சாத்திரவரம்பு கெட்டுவிடும் என்றும், இவ்வுலகமும் அழிந்துவிடும் என நினைத்து, கெட்ட வொழுக்கங்கள் உண்டானாலல்லது இறைவன் லீலையிலே விநியோகங் கொள்ள மாட்டான்.

**275. மூலம்**

***லீலாவிபூதியும் குறைபடுமென்றும் நினைத்து நிஷித்த ப்ரவ்ருத்திகளுண்டானாலல்லது லீலையிலே விநியோகங் கொள்ளுகைக்கு அவகாஶமில்லாமையாலே, பூர்வத்தில் அசுரராக்ஷஸர், (291) ''அக்$_3$நிஹோத்ராஶ்ச வேத$_3$ாஶ்ச'' (ஸ்ரீராமாயணம்) என்கிறபடியே, வேத வைதிக***

*ஶ்ரத்தைக ளுமுண்டாய், தேவத்வேஷிகளுமாய், ஸாதுபாதகரு மாயிருக்கையாலே, வைதிக ஶ்ரத்தையைப் போக்கி விபரீத நிஷ்டராக்கியல்லது நஶிப்பிக்க வொண்ணாது என்று, ''திண்கழற்காலசுரர்க்குத்தீங் கிழைக்கும் திருமாலை'' (திருவாய் 3-5-2) என்கிறபடியே, பிராட்டியுந் தானும் ஓரிலக்குப் பார்த்து, ''கள்ள வேடத்தைக் கொண்டு போய்புறம் புக்கவாறும் கலந்த சுரரையுள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட உபாயங் களும்'' (திருவாய்மொழி 5-10-4) என்கிறபடியே,*

*தானே புத்தவேஷதாரியாய்ப் போய் அவர்களோடு உள்கலந்து மதிமயங்கப்பண்ணி, வைதிகஶ்ரத்தையை மாற்றி விபரீதாநுஷ்டாநபரராக்கியும் (292) ''ப்ருஹஸ்பதே ஶ்ருதி ஸ்ம்ருதிஷுஸர்வேஷாம் அதிஶயித ஜ்ஞாநாநாம் நித₃ர்ஶந த்வேந ஸங்கீர்த்தநாத்'' (?) என்று, அதிஶயித ஜ்ஞாநிகளுக்கெல்லாம் நிதர்ஶநபூதரான ப்ரஹஸ்பதியை, தந்மதஸ்தபகனாக்கி தந்மூலமாகச் சிலரை விபரீத ப்ரவ்ருத்தராக்கியும், இன்னமும் ''பலசமய மதி கொடுத்தாய்'' (திருவாய் 3-1-4) என்றும், ''சமயங்கட் கெல்லாம் பொருவாகி நின்றான்'' (திருவாய் 9-4-8) என்றும், சொல்லுகிறபடியே, தன் திருவுருவில் மனம் வைக்க மாட்டாதபடி, மற்றும்.*

**விளக்கம்**

முற்காலத்தில் அவுணர்களும் அரக்கர்களும் (291) ''அனலோம்புதலும் வேதத்தை ஓதுதலும் செய்தனர்'' என்கிறபடியே, அவர்களுக்கு வேத வைதிகச் செயல்களில் ஊற்றமுண்டாகி, தேவர்களை விரோதித்துப் பூசல் செய்வதும் நல்லோர்களைத் துன்புறுத்தியதாலே திருமாலாகிய

இறைவன், அவர்களுக்கு வேதத்திலுண்டான நம்பிக்கைப் போக்கிக் கெட்ட வழியில் நடக்கச் செய்தாலல்லது அவர்களை அழிக்க முடியாது என்று, ''திண்கழற்காலசுரர்க் குத்தீங்கி ழைக்கும் திருமாலை'' என்றபடி,

பெரிய பிராட்டியரான ஸ்ரீமகாலட்சுமியும் தானும் சேர்ந்து ஓரிலக்குப் பார்த்து, ''கள்ளவேடத்தைக் கொண்டு போய் புரம் புக்கவாறும் கலந்தசுரரையுள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட உபாயங்களும்'' என்கிறவாறு, தானே புத்த வேடத்தை ஏறிட்டுக் கொண்டுபோய் திரிபுரத்திலுள்ள அசுரர்களோடு உள் கலந்து மதிமயங்கப்பண்ணி வேதநம்பிக்கையை மாற்றி தீயவழி நடக்கச் செய்தும் (292) ''தேவ குருவான பிருகத்பதியானவன் வேதங்களிலும் தரும சாத்திரங்களிலும் வல்லவன் என்று தலைசிறந்த ஞானிகளெல்லோரும் புகழ்ந்தனர்'' என்று கூறியபடி, வியக்கத்தக்க ஞானிகளுக்கெல்லாம் தலைவனான பிருகத் பதியை; அவனுடைய மதத்துக்கு உரியவனாக்கி அதன் வழியாகச் சிலரைத் தீயவழி செல்லச் செய்தும், இன்னமும், ''பல சமய மதிகொடுத்தாய்'' என்றும், ''ஆறு சமயங்கட்கெல்லாம் பொருவாகி நின்றான்'' என்றும் திருவாய் மொழியில் ஆழ்வார் கூறுகிறபடியே, இறைவனான தனது அழகிய திருவுருவத்தில் அவர்கள் மனம் வைக்காதவாறும் மற்றும்,

**276. மூலம்:**

***அநேக பாஹ்யமதங்களையும் குத்ருஷ்டிக ளையும் கல்பித்து தத்தத் குணபுருஷர்களாலே தத்தத் மதங்களை ப்ரவ்ருத்திக்கப்பண்ணி, தந்மூலமாக அசுரப்ரக்ருதிகளை பத்தஸம்ஸாரியாக்கி, இவற்றை***

*அபிவ்ருத்தமாக்கிக் கொண்டாப்போலே இத்தர்ஶநத்திலும், க்யாதி லாபார்ச்ந தத்பரராய் நாம ரூபங்களை தரித்து ஸ்வரூபாநுரூப வ்ருத்திவிசேஷங்களொன்றுமின்றிக்கே ஸ்வரூப விரோதிகளையொன்றும் த்யஜிக்க மாட்டாதே, தேஹாத்மாபிமாநிகளாய் துரஹங்காரக்ரஸ்தராய், க்ருஷ்ண சிந்நங்களை தரித்துப்பின்னை யவனோடே எதிரிட்ட பௌண்ட்ரக வாஸுதேவனைப் போலேயும், அம்ருதார்த்திகளாய் தேவதாகோஷ்டியிலுட் புக்க ராஹுகேதுக்களைப் போலேயும், ஸ்வகார்யபரராய், வாநரா காரங்களை தரித்த சுகஸாரணரைப் போலேயும்,*

*திரிகிற பரஹிம்ஸா பரதார பரிக்ரஹ பரத்ரவ்யாபகார தத்பரரான ஆஸுரப்ரக்ருதிகள் வந்து கலந்தால், அவர்களை மோஹிப்பித்துத் தனக்கசலாக் குகைக்காக ஸஹகாரிகளாம்படி, சிலரைப் பார்வையிட்டு அவராலே நிதர்ஶநங்களைக் காட்டி, தந்மூலமாக நிஷித்தாநுஷ்டாந பரராக்கி லீலையிலே விநியோ கங்கொள்ளுகிறானென்று, ப்ரமாண பரதந்த்ரரானவர், ''தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு'' (திருவாய் 7-5-11) என்கிறபடியே, த்ருடசித்தராய் நின்று ஸர்வேஶ்வரனானாலும் எம்பெருமானாரேயானாலும் வாய்திறந்து சொன்னாலும் ஸ்வப்நாதிகளிலே நியமித்தாலும்,*

**விளக்கம்:**

பலவிதமான வேதத்திற்குப் புறமதங்களையும், அதற்கு அவப்பொருள்கூறும் கோணல் மதங்களையும் படைத்து, ராஜஸ தாமச முதலான அந்தந்த குணத்தையுடையவர்களாலே அந்தந்த மதங்களையும் பரப்பும்படி செய்து, அதன்வாயிலாக அசுர மனங்கொண்ட மக்களைப் போலே இந்த வைஷ்ணவ மதத்திலும், புகழுக்கும் பொருளுக்கும்

பூசைக்கும் மயங்கியவராய், இறைவன் பெயரையும் அவன் சிந்நத்தைத் தரித்து ஆந்மாவின் தன்மைக் கேற்ற செயல்கள் ஒன்று மின்றிக்கே, ஆந்ம இயல்புக்கு விரோதமானவற்றை விட்டொழிக்காமல், தேகத்தையே, உயிராக எண்ணி அதனைப் பெரிதாக விரும்புபவர்களாய் கெட்ட அகங்காரங் கொண்டவர்களாய், கிருஷ்ணனுடைய சிந்நங்களைத் தரித்து அக்கிருஷ்ணனோடு எதிரிட்ட பௌண்டரக வாசுதேவனைப் போலேயும், அமுதத்தை வேண்டி தேவர்கள் கூட்டத்தில் கலந்து புகுந்த இராகு கேதுக்களைப் போலேயும், தன்னுடைய பயனில் கண்ணு டையவராய், குரங்கு வேடத்தைத் தரித்த சுக சாரணரைப் போலேயும்,

திரிகிற பிறரைத் துன்புறுத்துதல், பிறர் மனைவியரைத் திருடுதல், பிறர்பொருளைத் திருடுதல் ஆகியவற்றில் ஈடுபடுகின்ற அசுரமனங் கொண்டவர்கள் வந்து கலந்தால், அவர்களை மயக்கித் தன்னை அடையாதவாறு செய்கைக்காக இறைவன் அவர்களைத் தனக்குத் துணையாக்கிக் கொண்டு அவர்களையே சிலர் பின்பற்றுவதற்கு எடுத்துக் காட்டாகக் காட்டி, அவர்கள் வழியாக கெட்ட ஒழுக்கத்தை மேற்கொள்ளும்படி செய்து, அவர்களை விளையாட்டில் உபயோகங் கொள்ளுகிறான் என்று, பிரமாணத்தைப் பின்பற்றுகிறவர், ''தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு'' என்கிறபடி உறுதியான மனத்தை யுடையவராயிருந்து, இறைவனாம் எம்பெருமானேயா னாலும், எம்பெருமானாரேயானாலும் வாய்திறந்து சொன் னாலும் அல்லது கனவுமுதலான நிலைகளிலே ஆணை யிட்டாலும்,

**277. மூலம்:**

*இந்த்ரவேஷதாரியாய் அம்பரீஷனை ப்ரமிக்க*

**வந்தாப் போலே பண்ணுகிற எண்ணிலாப் பெருமாய னானவனுடைய மாயாகார்யமென்று நினைத்து, அப்ராமாணிகக்ருத்யங்களை ஶிஷ்டாசாரமென்று ஆசரிக் கப் போகாது; அவரை தூஷிக்கவுங் கூடாது தான் கடக்க நின்று, ''அவன் மாயங் கண்டீர் அது அறிந்தறிந் தோடுமினே'' (திருவாய் 4-10-6) என்று ஆழ்வார் அருளிச் செய்தாப்போலே ஓடிப்போக வேணும். அவன், லீலா லோர்த்தமாப் பண்ணும் க்ருஷியை தூஷித்தானாகில் அதுவும், லீலாலோலனான அவனுக்கு இஷ்டமல்லாமை யாலே, இது கூடாதே என்று சொன்னால் அவனுக்கொரு த்ருஷ்ட விஷயத்தில் அநர்த்தம் தந்திடும். மாமியார் கச்சையென்று(?) அவ்விடத்தில் நில்லாதே, ப்ரமாண பராந்த்ரராய் விஶ்வஸிக்கத்தக்க அதிகாரிகளோடே இவ்வர்த்தஞ் சொல்லிக் கொண்டு கடக்கப் போகவேணும். இவ்வதிமாத்ர ப்ரவ்ருத்திக்கு ஐதிஹ்யம், எம்பெருமானார் தர்ஶநம் நிர்வஹித்துக் கொண்டு போருகிற காலத்திலே யாதவப்ரகாசன், இவருடைய வைபவமெல்லாங் கண்டிருந்தும், மாத்ருவசநத்தாலும் பகவத் ஆஜ்ஞை யாலும் அவரை யாஶ்ரயித்து, ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந் தத்திலே ப்ரவ்ருத்திக்கக் கண்டு தத் புத்ர ஶிஷ்யர்கள் ஸஹிக்கமாட்டாதே, இத்தர்ஶநத்திலே அபேத ப்ருவ்ருத்தி யுண்டாம்படி தூஷிக்க வேணுமென்று நினைத்து நம்பூர்வாசார்யர்கள்;**

விளக்கம்:

இந்திரனானவன் திருமால் வேடங்கொண்டு அம்பரீட மன்னனை மயக்க வந்தாற்போலே, இறைவன் செய்கிற மாயச் செயல் என நினைத்து பிரமாணங்களுக்கு எதிரான செயல்களை சிஷ்டாசாரமென்று மேற்கொள்ளக் கூடாது;

அப்படிப் பட்டவர்களைத் (தீயஒழுக்கமுள்ளவரைத்) தூற்றுதலுங்கூடாது. தான் எட்ட நின்று, ''அவன் மாயங்கண்டீர்! அது அறிந்து அறிந்து ஓடுமின்'' (திருவாய்மொழி 4-10-6) என்று ஆழ்வார் அருளிச் செய்தாற்போலே ஓடிப்போக வேண்டும். இறைவன் விளை யாட்டின் நிமித்தம் செய்யும் தொழிலை ஒருவன் தூற்றினா னாகில், அதுவும் விளையாட்டில் ஈடுபட்ட இறைவனுக்கு விருப்பமல்லாமையாலே இது கூடாதே என்று கூறினால், கூறினவனுக்கு இம்மையில் தீமைவிளையும். மாமியார் கச்சையென்று அவ்விடத்தில் நின்றால் பொல்லாங்கு எவ்வாறு விளையுமோ அவ்வாறே. எனவே, பிரமாணத்தின் படி ஒழுகவல்லார், அதிலே நம்பிக்கையுடையார்யாவரோ அப்படிப்பட்ட அதிகாரிகளோடு இப்பொருளைக் கூறிக் கொண்டு முன் சொன்ன அதிகாரியல்லாதாரைவிட்டு விலகி யிருக்க வேண்டும்.

''ஸர்வதர்மாந்'' என்ற சரமச்லோகத்துக்கு எதிர்த் தட்டான பொருளைக் கற்பிப்பவர் வரம்புகடந்த நிலைக்குச் சரித்திரம்; எம்பெருமானார் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தை வளர்த்துக் கொண்டு வரும்போது, யாதவப்ரகாசன் இவருடைய பெருமையெல்லாம் தெரிந்திருந்தும் அவன் தாய் வார்த்தையாலும் தேவப்பெருமான் கட்டளையாலும் எம்பெருமானாரைச் சரணடைந்து ஸ்ரீவைஷ்ணவ சிந்தாந்தத்தில் புகுந்தது கண்டு, அவனுடைய சீடர்களும் மக்களும் பொறுக்கமாட்டாமல் இந்தச் சமயத்துக்குத் தீய ஒழுக்கங்களைக் கற்பித்துத் தூற்றவேண்டும் என்று நினைத்து நம்முடைய பூருவாசாரியர்கள்;

**278. மூலம்:**

*(293) ''ப₄க்திரஷ்டவித₄ாஹ்யேஷா யஸ்மிந்ம்*

லேச்சே₂பி வர்த்ததே ஸவிப்ரேந்த்₃ரோ முநிஸ்ரீமாந்'' (ப₄ாரதம்) என்றருளிச் செய்த பகவதாஜ்ஞையாலே விலக்ஷண ஸம்பந்த ஸ்வீகாரத்தை அங்கீகரிக்க, அதுவே ஹேது வாக்கி ஸர்வவர்ண ஸாங்கர்யம் உண்டாக்கி, சரம ஶ்லோகத்திலே ஸர்வதர்மத்யாகத்தை விதித்ததே ஹேது வாக்கி, (294) ''இத₃ம் குரு - இத₃ம் மாகார்ஷீ'' என்கிற விரண்டும் த்யஜிக்க வேணுமென்று நிஷித்தா நுஷ்டா நத்தையும் ப்ரவேஶிப்பித்து, இது சரமதர்மமென்று சில க்ரந்தங்கள் கல்பித்து, தத்காலவர்த்திகளான சில ஆஶுரப்ரக்ருதிகளை மோஹிப்பிக்க அர்த்தகாம பரவஶருக்கு ஸஹகாரமாகையாலே, தாவாநலம் போலே வ்யாபித்து வாரா நிற்க, அக்காலத்திலே எம்பெருமானார் சிலரைப் பிடித்து ஶிக்ஷித்து க்ரந்தங்களை வாங்கி முறித்து தத்க்தமாக்கிப் பொகட்டாலும், கலிதோஷத்தாலே மீளவும் அன்றைக்கன்று அபிவ்ருத்தமாய் ஶிஷ்டர் கர்ஹிப்பர் என்று வெளியிடாதே, ஸ்வகோஷ்டிக்கநு குணமா னார்க்கே இது, ஶிஷ்டாசாரமென்று சொல்லிக்கொண்டு, இத்தர்ஶநத்துக்கு அநர்த்தகரராய்த்திரியா நின்று கொண்டு, பிள்ளைலோகாசார்யர் காலத்திலும், நீர் பண்ணினவிபரீத ப்ரஶ்நங்களைச் சிலர் சங்கிக்க, அதின்மேலே ஸ்ரீவசந பூஷண திவ்ய ஶாஸ்த்ரம் பகவதாஜ்ஞையாலே பிறந்த தென்று சில ஜ்ஞாநாதிகர் அருளிச்செய்வர்.

**விளக்கம்:**

(293) ''மிலேச்சனாயிருந்தாலும் - தாழ்ந்த சாதியில் பிறந்தவனானாயிலும் பகவானிடத்தில் முன்னர்க் கூறப் பெற்ற எட்டுவித பக்தியையுடையவ னாயிருந்தால் அவனை, அந்தணன், முனிவன், திருவாளன், கவிஞன்'' என்று அருளிச் செய்த பகவானது ஆணையாலே உயர்வான ஸம்பந்தத்தை

ஏற்றுக் கொண்டு அங்கீகரிக்க, அதையே காரணமாக்கி சாதிக் கலப்பை யுண்டாக்கி, சரமச்லோகத்தில் ஸர்வ தர்மத்தையும் விடுவதை விதித்திருப்பதை ஏதுவாக்கி, (294) ''இதைச் செய்- இதைச் செய்யாதே'' என்று ''நல்லதைச் செய்தலும் தீயன தவிர்த்தலும் வேண்டும்'' என வேதம் விதித்த இவ்விரண்டையும் விட்டுவிட வேண்டும் என்று சொல்லி தீயவொழுக்கத்தை உட்புகுத்தி, இதுவே மேலான இறுதியான தருமமென்று சில நூல்கள் எழுதி அக்காலத்திலுள்ள சில அசுரமனங்கொண்டவர்களை மயங்கச் செய்யவே, பணம் முதலிய பொருளிலும் இன்பத்திலும் வேட்கையுள்ள வர்களுக்கு இக்கெட்டவொழுக்கம் துணை செய்ய சௌகரியமாகையாலே, எரிக்கும் தீயைப்போல் எங்கும் பரவாநிற்க, அக்காலத்திலே எம்பெருமானார் அவர்களில் சிலரைப் பிடித்து தண்டித்து அந்த நூல்களை வாங்கி முறித்து நெருப்பிலிட்டார்;

அவ்வாறு செய்தும் கலியின் கொடுமையாலே அந்நூல் மீண்டும் அன்றைக்கன்று வளர்ந்து சான்றோர் பழிப்பர் என்று வெளியிடாதே, தங்கள் கூட்டத்தார்க்கே இது சிட்டாச்சாரம் என்று கூறிக் கொண்டு இந்த ஸ்ரீவைணவ சமயத்துக்குக்கேடு செய்து திரியாநிற்க, ஸ்ரீபிள்ளையுல காசிரியர் காலத்திலும் இந்தத் தொற்றுநோய் பரவி, 'நீர் கேட்ட விபரீதமான வினாக்களைக் கேட்டு ஐயமுற, அதன் பின்னர் ஸ்ரீவசநபூடணம் என்னும் திவ்விய சாத்திரம் இறைவன் அரங்கன் ஆணையிலே அவதரித்து எனச் சில நிறைஞானத்தர் அருளிச் செய்வர்.

**279. மூலம்:**

***பூர்வர்கள் ஸ்வப்ரபந்தங்களிலே ப்ராயச: அதிகார ஸ்வரூபம் ஶிக்ஷித்தால், ஆள்பற்றாதென்று ஶரண்ய***

***ப்ரபாவமே த்ருடதமமாகச் சொல்லி கொண்டு, தத்குணவிஶ்வாஸ பாஹுள்யமுண்டாக்கி அதிகாரி ஸ்வரூபம் காதாசித்கமாக ஸூசிப்பித்துக்கொண்டு போருகையாலே யதாவஸ்திதவேஷம் நன்றாக தெளிய மாட்டாதே, ஶரண்ய ப்ரபாவத்தையே பார்த்துத் தம் ஸ்வரூபம் கெட்டுப்போம்படி, ஸம்ஸாரபத்தராய் புத்ர தாராஸக்தசித்தராய் துர்விஷய அத்யந்த ப்ரவணராய் நாமரூபங்களொழிய ஸம்ஸாரிகளுக்கும் தங்களுக்கும் வாசியின்றிக்கே, இவ்விபரீதாநுஷ்டாநங்களெல்லாம் சொல்லிக் கொண்டு திரிகையாலே, அத்தை நிராக ரிக்கைக்கு ஹேதுவாகக் கொண்டு வசநபூஷண திவ்ய ஶாஸ்த்ரமருளிச் செய்கையாலே "உய்யநினைவு டையீர் உங்களுக்குச் சொல்லுகின்றேன்" (உ.ப.மாலை) என்று, உஜ்ஜீவநத்திலே இச்சையுடையவர்களுக்கு ஸ்ரீவசநபூஷ ணாதி நிஷ்டையுண்டாக வேணுமென்று அஸ்மதாசார் யோக்தம், பகவதாஶ்ரிதரானாலும் ஸஹவாஸாதிகளுக்கு அயோக்யரென்று சொல்லா நின்றீர், (295) "மத்$_3$ப$_4$க்தஜந வாத்ஸல்யம்" என்று, என்னையாஶ்ரித்தவர் பக்கல் தோஷபோக்யராயிருக்க வேணுமென்று, ஸர்வேஶ்வரன் தானே சொன்னானிறேயென்னில், அதுக்கர்த்தம்; அக்ருத்யகரணம் க்ருத்யாகரண பகவதாபசார பாகவதப சாராதி நிஷித்தாநுஷ்டாநம் போக்யமாகக் கொள்ளவேணு மென்று சொல்லுகிறதன்று.***

**விளக்கம்:**

பூருவாசாரியர்கள் மேற்சொன்ன ஸதாசாரங் களைத் தங்கள் பிரபந்தங்களிலே முறையை வலியுறுத்தி பிரபந்நரான அதிகாரி சுவரூபத்தைக் கண்டித்துச் சொன்னால், வைஷ்ணவத்துக்கு ஆள்பற்றாது என்று, இறைவனது பெருமையை மாத்திரம் உறுதிபட உயர்வாகச் சொல்லிக்

கொண்டு, இறைவனுடைய கல்யாண குணங்களில் அதிகமாக நம்பிக்கையை யுண்டாக்கி அதன் மூலமாக நல்ல ஆசாரத்தையுடைய அதிகாரியின் சுவரூபத்தைச் சிற்சில இடங்களில் உணர்த்தியிருப்பதன் உண்மையான வடிவத்தை நன்றாக அறியாத சில மந்தமதிகள், சரண்யனான எம்பெருமானது பெருமையை மாத்திரம் பார்த்துத் தம் இயல்பு கெட்டுப்போம்படி, ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டவ ராய் பிள்ளை மனைவி ஆகியோரிடத்துப் பற்று உள்ளங் கொண்டவராய்த் தாழ்ந்தவற்றில் மிகவும் ஈடுபாடுடை யவராய், வைஷ்ணவன் என்ற பேரும் உருவத்தையும் தவிர ஸம்ஸாரி களுக்கும் தங்களுக்கும் வேறுபாடில்லாமல், இப்படிப்பட்ட விபரீத அநுட்டாநங் களைக் கூறிக்கொண்டு திரிவதாலே, அவ்வாறு கூறுபவரைக் கட்டிப்பான் நிமித்தம் ஸ்ரீபிள்ளை லோகாசாரியர் ஸ்ரீவசநபூஷணம் அருளிச் செய்திருப்பதாலே, ''உய்ய நினைவுடையீர்! உங்களுக்குச் சொல்லுகின்றேன்'' உய்யிவில் ஆசையுடையோர்க்கு ஸ்ரீவசநபூஷணம் திருமந்திரம் போன்றவற்றில் நிஷ்டை யுண்டாக வேண்டுமென்று அடியேனுடைய ஆசாரியரான மாமுநிகள் கூறுவார்.

பகவானுடைய அடியாராயிருந்தாலும் ஸகவாசம் செய்தல் முதலானவற்றுக்குத் தகுதியுடையவர் அல்லர் என்றீர் முன்பு, (295) ''என்னுடைய பக்தரிடத்தில் குற்றங்காண்பது தகாது'' என்னுடைய பக்தரது குற்றத்தை நற்றமாகக் கொள்ள வேண்டும் என்று இறைவன் தானே கூறியுள்ளானே எனின், அதற்குப் பொருள், செய்யக் கூடாததைச் செய்தல், செய்யக்கூடியதை விட்டுவிடுதல், பகவதபசாரம், பாகவதாபசாரம், பிறர் பெருள் திருடுதல் முதலான கெட்ட ஒழுக்கங்களையெல்லாம் நற்றமாகக் கொள்ள வேண்டும் எனக் கூறவில்லை.

280. மூலம்:

அவ்விடத்தில், *(296)* "நாத்ர க₃ர்ஹா" என்றும், *(297)* "நிந்த₃ாம் குர்வந்தியே நரா:" என்றும், சொல்லுகிற படியே, கர்ஹிக்கக்கூடாதென்றும், நிந்தித்தானாகில் நிக்ரஹ பாத்ரனாமென்றும் சொல்லுகிறதே விவிக்ஷிதம். போக்யமாகக் கொள்கிறதென்? என்னில், தன்பாலே தாரகமாக வளருகிற வத்ஸைக் காலாலே மிதித்தாலும், தலையாலே தள்ளினாலும், பல்லாலே கடித்தாலும் தேனுவானது ஸஹித்துக் கொண்டு ஸுகரூபமாகக் கொள்ளுமாபோலே, பாகவதர், தன்னை பரிபவித்தாலும் பருஷோக்திகளை சொன்னாலும் அத்தைக் பெறுத்திருக்க வேணுமென்றும்;

இதுவன்றிக்கே விஷயப்ரவணன் படுக்கைத் தலையிலே அபிமதவிஷயமான ஸ்த்ரியானவள், போகஸமயத்திலே காலாலே தள்ளினாலும், உகிராலே கிள்ளினாலும், வாயாலே கவர்ந்தாலும் பருஷோக்தி களைச் சொன்னாலும், மற்றும் அநேகமான த்ரஸ்கார க்ருத்யங்களைச் செய்தாலும் ஒருவருக்கு வெளியிடாதே, அவையெல்லாம் பரம போக்யமாகக் கொள்ளுமாப் போலே, பாகவதரானால், தான் அபராதம் பண்ணா தொழிந்தாலும் தன்மேல் பிறர் சிதகுரைக்கிலும் அத்தைக் கேட்டுத் தன்னை தாடந பருஷோக்தி தர்ஜநபர்த் ஸநாதிகளாலே ஶிக்ஷித்தாலும், அது தனக்கு ஹிதம் செய்தாராக போக்யமாகக் கொண்டு, ஸர்வஜ்ஞரான;

விளக்கம்:

அவ்விடங்களில் (296) "பாகவதரை நிந்தனை செய்யாதே" என்றும், (297) "பாகவதர்களை நிந்தித்தால்

அவர்கள் நரகத்தை அடைவர்'' என்றும் கூறுகிறபடி, பாகவதரை நிந்திக்கக்கூடாதென்றும், நிந்தித்தானாகில் அவன் பகவானுடைய தன்டனைக்கு ஆளாவான் என்றும் கூறுவதையே கருத்தாகக் கொள்ள வேண்டும். பாகவதரது குற்றத்தை இன்பமாகக் கொள்ள வேண்டும், என்றது என்னெனின், தனது பாலையே தாரகமாகக் கொண்டு வளரும் கன்றானது, தன்னைக் காலாலே மிதித்தாலும், முட்டினாலும், கடித்தாலும் அப்பசுவானது அவற்றை பொறுத்து இன்பமாகக் கொள்ளுவது போல், பாகவதர்கள் தன்னைப் பழித்தாலும் கடுஞ்சொல் கூறினாலும் அவற்றைப் பொறுத்திருக்க வேண்டுமென்றும்;

இவை மாத்திரமன்றிக்கே பெண்ணுடன் புணர்ச்சி யிலீடுபட்டவன், படுக்கைத் தலையில் தன் விருப்பத்திற் கேற்ற மனைவியானவள் போகசமயத்தில் தன்னைக் காலாலே தள்ளினாலும், கிள்ளினாலும், கவ்வினாலும், கடுஞ்சொல் கூறினாலும் மற்றும் பல விதமாக அவமதித்தாலும், அவற்றை ஒருவருக்கும் வெளியிடாமல் அவற்றை மேலான இன்பமாகக் கொள்ளுதல் போலே, பாகவதரானால் தான் குற்றம் செய்திடாவிடினும், தன் மேல் பிற பாகவதர் பழியிடுவதும் அதைக் கேட்டுத் தன்னை அடித்தல் கடுஞ்சொற் கூறுதல், தள்ளுதல், மிரட்டுதல் முதலியவற்றால் தண்டித்தாலும் அவற்றால் நன்மை செய்தாராக எண்ணி,

**281. மூலம்:**

*பகவத் பாகவத விஷயங்களிலே வெளியிடாதே அவரையொழிய தன் செல்லாமையைச் சொல்லிக் கொண்டு 'மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்' என்றும் 'சங்கிப்பன் வினையேன்' என்றும் அவர் திருவுள்ளம்*

கலுஷமானத் துக்கு நொந்து அதுக்கு ஹேது தன்னுடைய புராதநகர்மமென்று தன்னையே நிந்தித்துக் கொண்டு அவரெப்படி ஸுப்ரஸந்நராவரோ அப்படியநுவர்த்தித்துக் கொண்டு ஓலக்கத்தில் தம்மை நிர்நிபந்தநமாக பரிபவித்த கந்தாடைத்தோழப்பரை அநுவர்த்தித்த நம்பிள்ளையைப் போலே ப்ரவர்த்திக்கவேணுமென்கை.

நிர்நிபந்தநமாக நம்மை பரிபவிக்கிற தென்னென்று ப்ரதிக்ரியைப் பண்ணப்போகாத மாத்ரமின்றிக்கே அது போக்யமாகக் கொள்ளுமது ஸ்வபக்ஷலக்ஷணமென்று சொன்னதித் தனையொழிய அக்ருத்யகரண சீலராய் தாஸீக்ருஹங் களிலே ஸஞ்சரித்துக்கொண்டு அர்த்தகாம நிமித்தமாகப் பரிபவம்பண்ணித் திரியாநின்றாலும் நீரேதியில்வாக நின்றாலும் அதுவே நம்மையாட்க் கொள்ளுமென்று சுஷ்க ப்ரியவசநங்களைச் சொல்லிக் கொண்டு ஒரு காசும் கொடுக்கமாட்டாதே வருந்தி ஒரு கைங்கர்யத்துக்கும் ஆளாகாதே ஸ்ரீபாததீர்த்தம் ப்ரஸாதிக்க வேணுமென்று, அத்தை ஸ்வீகரித்து அவருக்கு உகப்பாக வர்த்திக்க வேணுமென்று அருளிச் செய்தான் என்னப்போகாதிறே. ஸ்ரீகீதா ஶாஸ்த்ராதிகள், முன்பு எதுவாக நின்றாலும், பின்பு அநந்யபாக்காய்த் (தீயவழியில்) திரிந்தால் ஆதரணீயன் என்று சொல்லுகையாலே, இதுவே பொருளாகக் கொள்ள வேணுமிறே. இது பொருளல்லவாகில் பகவதபிப்ராயஜ்ஞரான ஆசார்யர்கள், நாத்திகரையும் ஆத்திகநாத்தி கரையும் மூர்க்கரெனவிட்டு நடுச்சொன்ன வசநபூஷணாதி ஶாஸ்த்ர வஶ்யரான ஆஸ்திகரையே ஆதரணீயரென்று சொல்லமாட்டாரிறே. ஆகையாலே, நாமரூபதாரண முடையவரானாலும் அவருடைய வ்யாபாரம் நிந்திக்கப் போகாதே, தன்பக்கல் அவர் குற்றஞ் செய்தால் அது

**போக்யமாகக் கொள்ள வேணுமென்று அதுவே பகவத பிப்ராயம், அவர் செய்கிற அக்ருத்யகரணாதிகள் போக்ய மாகக் கொண்டு; அதுவே தனக்கு ரக்ஷகமாக அநுஸந்திக்க வேணுமென்றால்;**

**விளக்கம்:**

நெஞ்சில் ஈரமின்றிக்கே இனியவசனங்களைக் கூறிக் கொண்டு ஆசாரியனுக்கு ஸம்பாவனையும் கொடுக்க மாட்டாமல், வருந்தி ஒரு கைங்கர்யத்தையும் செய்யாமல், 'ஸ்ரீபாததீர்த்தம் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்து அதனை ஏற்று அவருகப்பாக வாழ வேண்டும் என இறைவன் சாத்திரங்களில் அருளிச் செய்தான் என்று சொல்லப் போகாதிறே. ஸ்ரீகீதை பாஞ்சராத்திரம் ஆகியவற்றில், இறைவனை அடைவதற்கு முன்னர் ஒருவன் எவ்வாறு இருந்தாலும் பின்னர் வேறு பயனை எதிர்பாராமல் இறைவனுக்குக் கைங்கர்யம் செய்வதையே பயனாகக் கொண்டவன் மிகவும் ஆதரிக்கத் தகுந்தவன் என்று அவற்றில் கூறியிருப்பதாலே, இதையே பொருளாகக் கொள்ள வேண்டு மன்றோ? இது பொருளல்லவாகில், பகவானுடைய நினைவை அறிந்தவரான ஆசார்யர்கள் நாத்திகரையும் ஆத்திகநாத்திகரையும் மூர்க்கரென விட்டு நடுச்சொன்ன நற்கலைசேர் வசநபூஷணம் முதலான சாத்திரத்தில் நம்பிக்கைக் கொண்டவரான ஆத்திகரையே ஆதரிக்கத்தக்கவர் என்று மணவாளமாமுநிகளும் கூறியிருக்க மாட்டாரல்லவா? ஆகையாலே, வைணவப்பெயரும் சின்னமு முடையவரனாலும் அவருடைய செயல்களையிட்டு நிந்திக்கப் போகாதே, தன் பக்கல் குற்றஞ் செய்தால் அதை இனிமையாகக் கொள்ளவேண்டுமென்று அதுவே பகவானுடைய எண்ணம். இவ்வாறில்லாமல், அவர் செய்யும்

கெட்ட செயல்களையெல்லாம் இனிமையாகக் கொண்டு அதுவே தனக்குக் காப்பாக நினைக்க வேண்டுமென்றால்,

282. மூலம்:

*பர அவர யாதாத்ம்ய வித்தமரான நம்மாழ்வாராலே பலவிடங்களிலும், 'கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழு மின்'' என்றும் ''சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது - எழுவது பயனே'' ''திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது'', என்றும், ''கிறியென நினைமின் கீழ்மை செய்யாதே'' என்றும், ''வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது'' என்றும், ''சூதென்று களவும் சூதும் செய்யாது'' என்றும் அக்ருத்ய கரணாதி சீலராய், நரகத்திலே அழுந்தாதே, இவையெல்லாம் ''வேர் முதல் மாய்த்து - பற்றிலையாய் அவன் முற்றிலடங்கு'' என்று வாய்வாய் அடித்துக் கொண்டு ''இல்லை கண்டீர்! இன்பமந்தோ'' என்று, ஸம்ஸாரத்தில் ஸுகம் இல்லை கண்டீர்! அய்யோ! இவ்வர்த்தம் நானுபதேஶிக்க வேண்டுவதே என்று பரிதபிக்க வேண்டாவே? ''செய்தாரேல் நன்று செய்தார்'' (பெரியாழ்வார் திருமொழி 4.9.2) என்று இருந்து தாம் அத்தை போக்யமாகக் கொள்ளலாமிறே. இப்படிக் கூப்பிட்டது கேவல ஸம்ஸாரிகளுக்கன்றோ? வைஷ்ண வர்க்கென்று கூப்பிட்டாரோ? என்னில்,*

விளக்கம்:

மேம்பட்டவற்றையும் தாழ்ந்தவற்றையும் உண்மை யாக அறியக் கூடியவரான நம்மாழ்வாராலே பல இடங்களிலும், ''கழிமின் தொண்டீர்கள் கழித்துக் தொழுமின்'' என்றும், ''சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது - எழுவது பயனே'' என்றும், ''திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது'' என்றும், ....

''கிறியென நினைமின்கீழ்மை செய்யாதே'' என்றும், ''வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது'' என்றும், ''சூதென்று களவும் சூதும் செய்யாதே'' என்றும் செய்யத்தகாத செயலைச் செய்யக் கூடியவராய் நரகத்திலே அழுந்தாமல், இவையெல்லாம் ''வேர்முதல் மாய்த்து - பற்றிலையாய் அவன் முற்றிலடங்கு'' என்று வாய்வாய் அடித்துக்கொண்டு, 'இல்லை கண்டீர்! இன்பமந்தோ!' என்று, ஸம்ஸாரத்தில் சுகமே இல்லை கண்டீர்! அய்யோ! இப்பொருளை யான் உபதேசிக்க வேண்டுவதே என்று, ஆழ்வார் துன்பப்பட வேண்டாமன்றோ? ''செய்தாரேல் நன்று செய்தார்'' என்று எம்பெருமான் தன்னடியாரிடம் குற்றம் பார்க்கக் கூடாது என்றதைப் போல் ஆழ்வாரும் அடியார்கள் குற்றத்தை இன்பமாகக் கருதலாமல்லவா. ''திறமுடைய வலத்தால் தீவினைப் பெருக்காது'' என்று இவ்வாறு கூப்பிட்டது கேவல ஸம்ஸாரிகளுக்கன்றோ, வைஷ்ணவர்களையன்றோஎனின்,

**283. மூலம்:**

***'கழிமின் தொண்டீர்' என்று பகவத்விஷயத்தைப் பெற வேணுமென்று சாபலமுடையார் கழிக்கப் பாருங் கோள்! 'கழித்துத் தொழுமின்' அவனைத் தொழா நிற்கச் செய்தே, அதுவும் க்ரமத்திலே கழிகிறதென்று இராதே அவஶ்யம் கழித்தே தொழுங்கோள்! கழிமினென்று வைத்துக் கழித்தென்று, இதர விஷயத்தில் விரக்திதானே ப்ரயோஜனமாகப் போருமென்கை.***

***இப்படிக் கழித்துக் தொழுதால் நடுவேநின்று பகவத்ப்ராப்தியை விரோதிக்கிற ப்ரபல கர்மங்களைப் போக்கியிறே அபுநரா வ்ருத்தி லக்ஷணமோக்ஷத்தைத் தருமென்று சொல்லுகிறது, பாகவதருமாய் மோக்ஷா***

**பேஷையுடைய அதிகாரிகளுக்கோ கேவல ஸம்ஸாரி களுக்கோ நீயே விசாரித்துச் சொல்லிக் காட்டும், என்ன, இது கிடக்கினும், ''செய்தாரேல் நன்று செய்தார்'' என்று, அவன் சொன்னானே? என்னில், பிராட்டி சிதகுரைக்கி லிறே அது செய்யாரென்கிறது. சித குரைக்குமேல் என்றும் செய்தாரேல் என்றும் சொன்ன ஶப்தங்களிலே, கடகை யான பிராட்டி தோஷதர்ஶநம் பண்ணுவிக்க மாட்டாள் என்னும் அர்த்தமும், அவள் புருஷகாரமாக ஆஶ்ரயித்த வதிகாரி அக்ருத்யங்களைச் செய்யாரென்னுமிடமும் தோன்றாதோ?**

**விளக்கம்:**

'கழிமின் தொண்டீர்' என்று, பகவத்விஷயத்தைப் பெறவேண்டுமென்ற ஆசையுடையோர் தீயவிஷயத்தைக் கழிக்கப்பாருங்கள்; 'கழித்துத் தொழுமின்' அவனைத் தொழுதாலே காலக் கிரமத்தில் கழிகிறதென்று இராமல் அவசியம் கழித்தே தொழுங்கள் என்று ஆழ்வார் உபதேசமாகக் கொள்ளவேண்டும் 'கழிமின்' என்பதை கழித்து என்று வினையெச்சமாக்கி பகவத்விஷயத்தைத் தவிர்த்த பிறவிஷயத்திலீடுபாடற்ற வைராக்கியந்தானே பெரும் பயனாகத் தலைக்கட்டும் என்பதாம்.

இவ்வாறு இதர விஷயத்தைக் கழித்துத் தொழுதால் நடுவே நின்று பகவான் அடைதற்குத் தடையாய் நின்ற பலவிதமான புண்ணிய பாவ கருமங்களைப் போக்கியே மீண்டு வருதலில்லாத மோக்ஷத்தை இறைவன் தரும் என்று ''கிளரொளி'' என்னும் திருவாய்மொழியில் சொல்லுகிறது. இப்படிச் சொன்னது பாகவதருமாய் மோக்ஷத்தில் விருப்பமுடைய அதிகாரிகளுக்கோ அல்லது கேவல ஸம்ஸாரிகளுக்கோ என்பதை நீயே விசாரித்துக் காட்டுவாய்

என்ன, இது கிடக்கினும், ''செய்தாரேல் நன்று செய்தார்'' என்று, இறைவனே சொன்னானே எனின், பிராட்டியானவள் அடியார் மீது குற்றம் உரைக்கிலன்றோ, இறைவன் அது செய்யார் என்பது சிதகுரைக்குமேல் என்றும் செய்தாரேல் என்றும் கூறிய சொற்களிலே, இறைவனோடு சேதநரை (மக்களைச்) சேர்ப்பிப்பாளான பிராட்டி அவர்கள் குற்றத்தைக் காட்டிக் கொடுக்க மாட்டாள் என்ற பொருளும், அவளை புருஷகாரமாகக் கொண்டு இறைவனை அடைந்த அதிகாரிகள் தீய கருமங்களைச் செய்யமாட்டார்கள் என்னுமிடமும் தோன்றாதோ?

284. மூலம்:

*இப்படிக் கூடாத அகடிதங்கள் கூடினாலும், அவரை விட்டுக் கொடானென்று ஶரண்ய ப்ரபாவம் சொன்ன தித்தனை. "என்னடியார் அது செய்யார்" என்று, என்னடி யாராகில் அக்ருத்யம் செய்வாரோ? என்று, அவர் ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்து, செய்தாரேல் நன்று செய்தா ரென்று பின்பு தன் ஸ்வரூபம் சொன்னான் ஆகையாலே, செய்யாமை அவர்களுக்கு ஸ்வரூபம்; செய்தாலும் விடாமை தனக்கு ஸ்வரூபமென்றும் சொல்லுகிறதென்று விவக்ஷிதம்.*

*'நன்று செய்தார்' என்றது, பிறர் அவர்(கள்) மேல் தோஷம் சொல்லாதபடி தன் பக்ஷபாதம் வெளிப்படுத்தின தித்தனை. (298) "ஶிக்ஷயாப்யநக₄யந் க்ரோத₃ கரோதி ப்ரபு₄:" (ரஹஸ்யத்ரயஸாரம்) என்கிறபடியே தோஷம் உண்டானால், ராஜபுத்ர அபராதவத்தை தானே (மன்னனே) ஶிக்ஷிக்க வேணுமித்தனையொழிய, பிறர் சொல்லக்கூடாது என்னுமதுக்காக அப்படியருளிச் செய்தது. இது பொருளன்றின்கே அவனுக்கு உகப்பாம்*

***என்னில், மந்த்ரத்திலும் அவன்தான் சொல்லுமிடங்களிலும், ஆழ்வார் முதலானார் அருளிச் செயல்களிலும், தேவதாந்தர ஸாதநாந்தர விஷயாந்தரங்கள் ஸவாஸநமாக விட்டே பற்ற வேண்டும் என்று நியமிக்க நிமித்த மில்லையிறே.***

**விளக்கம்:**

இப்படிக் கூடாத சேராச்சேர்த்திகள் கூடினாலும், அவரை விட்டுக்கொடான் என்று இறைவனுடைய மகிமை களைச் சொன்னதன்றி வேறில்லை. ''என்னடியார் இது செய்யார்'' என்று, என்னடியராகில் செய்யத் தகாத செயலைச் செய்வாரோ? என்று அவர் அவரூபத்தை ஆய்ந்து, செய்தாரேல் நன்று செய்தார் என்று, பின்பு தன் ஸ்வரூபத்தை எம்பெருமான் சொன்னான் ஆகையாலே, செய்யாமை அவர்களுக்குச் ஸ்வரூபம்; செய்தாலும் விடாமை இறைவனுக்கு ஸ்வரூபம் என்றும் சொல்லுவதாகக் கருத்து.

''நன்று செய்தார்'' என்றது, பிறர் அவர்கள் மேல் குற்றஞ் சொல்லாதவாறு இறைவனான தன்னுடைய பக்ஷபாதத்தை வெளிப்படுத்தினானத்தனை (298) ''மன்னன் மகன் தவறிழைத்தால் அம் மன்னனே தண்டிக்க வேண்டுமே யல்லது பிறர் தண்டிக்கலாகாது'' என்றபடி, மன்னனது மகனுக்கு மன்னன் அளிக்கும் தண்டனையைப் போலே, தன்னடியார் செய்யுங் குற்றத்தை இறைவன் தானே தண்டிக்க வேண்டுமன்றி பிறர் அக்குற்றத்தைக் கூறக்கூடாது என்பதற்காகவே அவ்வாறு அருளிச் செய்தது. இது பொருளல்லவாகில் பாகவதர்கள் எக்குற்றத்தைச் செய்தாலும் அவனுக்கு (இறைவனுக்கு) உகப்பாகும் என்றால், திருமந்திரத்திலும் அவ்விறைவன் தான் சொல்லுமிடங்

களிலும், ஆழ்வார் முதலானார் அருளிச் செயல்களிலும், பிற தேவர்களைத்தொழுதல் பிற உபாயங்களை மேற் கொள்ளுதல் ஐம்புலனில் ஈடுபாடு ஆகியவற்றை முழுவதும் விட்டே இறைவனைப் பற்ற வேண்டும் எனக் கூறத்தேவை யில்லையன்றோ?

**285. மூலம்:**

***இது என் ஜீயா! மற்றொன்றைச் சொல்லாதே ஆழ்வாரை ஆப்த தமராகவும் அவரருளிச்செய்த திருவாய் மொழியே ப்ரமாணமாகவும் அருளிச் செய்யாநின்றீர். இதுக்குக் கருத்தென்? என்னில், (299) "விஷ்ணோர் விஶேஷாதி$_4$ஷ்ட$_2$ாநமய: பிண்ட$_3$ாக்$_3$நிவந்மதம்" (?) என்று, திவ்யாசித் விக்ரஹத்தைக் காட்டிலும், இவரை விஶேஷ அதிஷ்டாந மாகக் கொண்டு தப்தாய: பிண்டவத் ஸ்வரூபம் மிகவும் நிறம்பெற்று அங்குப்போலே லீலாலோல க்ருபா பாரதந்த்ர்யங்கள் கலந்திருக்கை யன்றிக்கே, "காருண்யாத் ஶாஸ்த்ர பாணிநா" என்கிறபடியே, கேவல காருண்யத்தாலே ஶாஸ்த்ர பாணியாய்;***

***"பொய்கலவாது என்மெய் கலந்தான்" (திருவாய் மொழி 1-8-5) என்று, தாமஸ ஜனமோஹநார்த்தமாகப் பொய்ந்நூல் சொல்லுகிற அவதாரங்கள் போலன்றிக்கே, பொய்கலவாதபடி அவரோடே கலந்து, "மக்$_3$நாநுத்$_3$த$_4$ரதே" என்று, ஸம்ஸாரஸாகர மக்ந ஜந ஸமுத்தரணமே ப்ரயோஜ நமாக சேதநருக்கு ஹிதாம்ஶத்தில் வேண்டும் அர்த்தங்க ளெல்லாம், "இன்கவி பாடும் பரமகவிகளால் தன்கவிதான் தன்னைப் பாடுவியாது - இன்று நன்குவந்து என்னுட னாக்கி என்னால் தன்னை, வன் கவிபாடும்" (திருவாய் மொழி 7-9-6) என்கிறபடியே,***

**விளக்கம்**

இது என்? ஐயா, மற்றொன்றைச் சொல்லாதே ஆழ்வாரையே நம்பத் தகுந்தவரில் மேலானவராயும், அவரருளிச் செய்த திருவாய்மொழியையே சான்றாகவும் கூறுகின்றீர், இதுக்குக் கருத்தென்? எனின், (299) ''இரும்புத் துண்டத்தில் நெருப்பானது எவ்வாறு நிறைந்துள்ளதோ? அவ்வாறே விஷ்ணுவானவர் ஆசாரியனது சரீரத்தில் நிறைந்து நிற்கிறார்'' என்று, தன்னுடைய திவ்யமங்களமான திருமேனியைக் காட்டிலும் இந் நம்மாழ்வாரது திருமேனியில் விசேடமாக உட்புகுந்து நெருப்பில் காய்ச்சப்பட்ட இரும்புத் துண்டத்தில் நெருப்பே முழுவதும் நிறைந்திருத்தல் போலே ஆழ்வார் திருமேனியில் மிகவும் நிறம் பெற்றிருப்பதுபோல், தன்னுடைய திவ்ய மங்களமான திருமேனியில் லீலையும் கருணையின் வசப்படுதல் ஆகிய இரண்டும் சேர்ந்திருத்த லின்றிக்கே, ''இறைவன் ஆசாரியனாய் அவதரித்து கருணையாலே சாத்திரங்கள் ஆகிய கைகளைக் கொண்டு மக்களைப் பிறவிக் கடலிலிருந்து எடுக்கிறான்'' என்கிறபடி, கேவல சாத்திரமாகிய கையைக் கொண்டு;

**''பொய்கலவாதுஎன்மெய் கலந்தான்''** என்று, தாமச குணமுள்ள மக்களை மயக்கி விபரீத பொருள் சொல்லும் ஜைந புத்த அவதாரங்கள் போலன்றிக்கே, பொய்கலவாதபடி நம்மாழ்வா ராகிய அவரோடே கலந்து, ''பிறவிக்கடலில் அழுந்திக் கிடப்பவர்களைத் தூக்குவ தற்காக'' என்று, ஸம்ஸாரக் கடலில் அழுந்தியுள்ளவர்களைக் கடத்தச் செய்வதே பயனாக மனிதருக்கு நன்மை புரிதற்காகத் தேவையான (அர்த்தங்களை) மெய்ப் பொருளை, ''இன்கவி பாடும் பரம கவிகளால்தன் கவிதான் தன்னைப் பாடுவியாது - நன்கு வந்தென் உடனாக்கி என்னால் தன்னை வன்கவி பாடும்'' என்கிறபடி,

**286. மூலம்**

***வ்யாஸ பராசராதிகள் முதலாழ்வார் முதலானாரிருக்க, அவர்களாலே பாடுவியாதே ஸகலஉபநிஷத் ஸாரமான சாந்தோக்கிய ஸாமத்தோடொத்த திருவாய் மொழியாகிற ப்ரபந்தராஜத்தாலே வெளியிடுகையாலும், இவ்வாழ்வாரும் மற்றுள்ளாரைப்போலே ப்ராக்ருத த்ரவ்ய தாரகபோஷக போக்யராயிருக்கையன்றிக்கே, "உண்ணுஞ் சோறு பருகுநீர்" முதலானவையெல்லாம் அவனேயாக பால்யாத்ப்ரப்ருதி ஸ்தந்யாத் யநபேக்ஷிதராய் ததேகாநுபவபரராயிருக்கையாலே, ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தநமாக வருகிற ப்ரம விப்ரலம்ப ப்ரமாதா ஶக்தி தோஷங்களில்லாதவராகையாலும்;***

***மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார்களெல்லாம் இவர்க்கு அவயவங்களாயிருக்கையாலும் இவருடைய உக்திய நுஷ்டாநங்களே ப்ரமாணமாக அங்கீகரிக்கையாலும் சொல்லினேன் என்ன, இதுக்கு தாத்பர்யமாயிற்று. இனி, ஆசார்ய ஸ்வரூபம், (300) "ஆசார்யதே$_3$வோப$_4$வ" (தைத்.சீக்ஷா.11) என்றும், (301) "ஸாக்ஷாந் நாராயணோ தேவ:" (நாரதீயம்.) என்றும், (302) "ஆசார்யஸ்ஸஹரிஸ்ஸாக்ஷாத்" (ப்ரபஞ்ச ஸாரம்) என்றும், (303) "கு$_3$ருரேவ பரம் ப்$_3$ரஹ்ம" (ப்ரபஞ்ச ஸாரம்) என்று ஸாக்ஷாந் நாராயணனாகவும் சொல்லா நின்றது.***

**விளக்கம்**

வியாசர் பராசரர் முதலாழ்வார்கள் ஆகியோரிருக்க அவர்களால் கவிபாடுவித்துக் கொள்ளாமல் எல்லா உபநிடதங் களின் ஸாரமான சாந்தோக்கிய ஸாமவேதத்தோடு ஒத்ததான பிரபந்தங்களில் அரசனாக விளங்கும்

திருவாய்மொழியை வெளியிடுகை யாலும், இவ்வாழ்வாரும் மற்றுள்ள ஏனைய ஆழ்வார்களைப் போலே பிரகிருதியின் பரிணாமமான சோறு நீர் வெற்றிலை போன்ற உணவுப் பொருள்களை உண்ணாமலிருப்பதோடன்றி அவை யெல்லாம் ''உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை யெல்லாம் எம்பெருமான்'' என்று அவனேயாகக் குழவிப் பருவத்திலிருந்து முலைப்பாலை விரும்பாதவராய் ஐம்பூத சேர்க்கையால் வந்த உடல் தொடர்பால் வருகிற பொய்யறிவு வஞ்சனை மயக்கவுணர்வு சக்தியில்லாமை முதலான குற்றங்களில் லாதவராகையாலும்;

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற மற்றைய ஆழ்வார்க ளெல்லாம் இவர்க்கு தலை, கண், முகம், மார்பு போன்ற உறுப்புகளா யிருப்பதாலும் இவரது சொல்லையும் அநுட்டாநங்களையுமே அவ் ஆழ்வார்கள் அங்கீகரிக்கை யாலும் இந்த நம்மாழ்வாரையே இத்தரிசநத்திற்கு முதன்மைபெற்ற ஆசாரியராகச் சொல்லினேன் என்று எறும்பியப்பா அவர்கள் கூறவும், இவையே இதற்குப் பொருளாயிற்று. இனி, ஆசாரிய ஸ்வரூபம் என்பது, (300) ஆசாரியனே தெய்வமாகக் கொள்க'' என்றும், (301) ''நாராயண னாகிய தேவனே நேரே ஆசாரியனாகிறான்'' என்றும், (302) ''ஹரியே ஆசாரியனாக நேரே தோன்றுகி றான்'' என்றும், (303) ''குருவே பரம்பொருளாவன்'' என்று, ஆசாரியனை நேரே நாராயணனாகவும் சாத்திரம் சொல்லா நின்றது.

**287. மூலம்:**

***நம் முதலிகள் எல்லாரும், ''ஈச்வரனைப் பற்றுகைக் கையைப் பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி; ஆசார் யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் கார்யங் கொள்ளு***

*மோபாதி" (ஸ்ரீவசநபூஷணம். 430) என்று, ஏக வ்யக்தி யாகவும், ஆசார்யன் இருவர்க்குமுபகாரகன் என்று, பிந்நவ்யக்தியாகவும் சொல்லா நின்றார்கள்; இதிலிருக்கும் படியை அருளிச் செய்ய வேணுமென்ன, கேவல பகவத்ஸ்வரூபம் என்னவுங்கூடாது, கேவல பரிசுத்த ஆத்ம ஸ்வரூபம் என்னவுங் கூடாது, நரங்கலந்த சிங்கமென்று நரத்வ ஸிம்ஹத்வங்கள் இரண்டுங் கூடின நரஸிம்ஹாவதாரம் போலே அத்யத்புதமாயிருப்ப தொன்று எங்ஙனே? என்னில், கேவல பகவத்ஸ்வரூப மென்றால்? குருபரம்பரையெல்லாம் ஒன்றேயாய், ஸ்வரூப ஐக்யதோஷம் வரும்;*

*ஆத்ம ஸ்வரூபமென்றால், அநேக ப்ரமாண விரோதம் வரும் ஆகையாலே, (304) "ப$_3$லப$_4$த்ரஸ் த்ருதீயஸ்து" (நாரதீ. யாதவாத்ரி.மாஹாத்ம்யம்.1.32) என்று, பலபத்ரராமன் சேஷாவதாரமாயிருக்கச் செய்தேயும்,*

**விளக்கம்**

நம்பூருவாசாரியர்கள் எல்லோரும், "எம்பெருமானைப் பற்றுதல், கையைப் பிடித்துக் காரியங்கொள்வதுபோல, ஆசாரியனைப் பற்றுதல், காலைப்பிடித்துக் காரியம் கொள்வது போல" என்று, ஆசாரியனையும் இறைவனையும் சேர்த்து ஒருவராகவும், ஆசாரியன் சீடனுக்கும் இறைவனுக்கும் மிகவும் உதவி புரிபவன் என்று வேறாகவும் சொல்லியிருக்கிறார்கள்; இவற்றை விளக்கியருள வேண்டும் என்று சேநாபதியாழ்வான் வினவ அதற்குப் பதிலளிக்கிறார் எறும்பியப்பா. ஆசாரியனை வெறும் பகவான் என்று சொல்லவுங் கூடாது, வெறும் பரிசுத்த ஆத்மா என்றும் சொல்லக் கூடாது; நரங்கலந்த சிங்கம் என்று மனித உருவும் சிங்கவுருவுங்கூடிய நரசிங்க அவதாரம் போலே மிகவும்

ஆச்சரியப்படத்தக்கதாயிருக்கும். ஆசாரியன் ஸ்வரூபம் (ஸ்வரூபம் - தன்மை) எவ்வாறு எனின், பகவானே ஆசாரியன் என்றால், குருபரம்பரையில் வரும் ஆசாரியர்களை எல்லோரும் ஒருவரே என்று சொன்னால், எல்லோரும் ஒருவரே என்னும் குற்றம் வரும்;

பகவதம்சம்கலவாத வெறும் ஆத்மஸ்வரூப மென்றால், பல பிரமாணங்களுக்கு விரோதம் வருமாகை யால், (304) ''முதல் அவதாரம் ஆதிசேடனாகவும், இரண்டாவது இலக்குமண அவதார மாகவும், மூன்றாவதாக பலராமாவதாரமாகவும் அநந்தன் அவதரித்தான்'' என்று பலராம அவதாரம் ஆதிசேடன் அவதாரமாயிருக்கச் செய்தேயும்.

**288. மூலம்:**

*நிஷ்க்ருஷ்ட பகவதம்ஶமும் கலந்து இதுவுமொரு பகவதவதாரமாய் தஶாவதார அந்தர்பூதமானாபோலே, ஆதேயத்வ விதேயத்வ ஶேஷத்வ லக்ஷணங்களை யுடைய முக்ய தநுபூதராய் பரமைகாந்திகளான விலக்ஷண ஆத்மாக் களை யதிஷ்டித்து தப்தாய: பிண்டவத் பஹிஸ்புரணமாக அத்யுஜ் வலமாய் நின்றுள்ள விலக்ஷ ணாத்ம விசிஷ்ட பகவத் ஸ்வரூபமென்று கொள்ளவேணு மென்று, ஜநந்யாசார்யர் அருளிச் செய்தார் ஆகையாலே, பரத்வாதி பஞ்சப்ரகாரங்களிற் காட்டிலும் இது, பகவத் விலக்ஷண அவதாரமாயிருக்கும். (305) ''விசேஷண பே$_4$தாத்$_3$ விஶிஷ்ட பே$_4$த$_3$:'' (?) என்று, நிஷ்க்ருஷ்ட பகவத்ஸ்வரூபத் துக்கும் ஆசார்ய ஸ்வரூபத்துக்கும் விஶேஷண விஶேஷ்ய பேதமுண்டாகப் பெறுகையாலே, விஶிஷ்ட பேதமுண்டாய், விஶேஷணத்வாரா பேதமும் விஶேஷ்யத்தாலே அபேதமாக இரண்டும் சொல்லலாமா*

*யிருக்கும். இந்த ஆசார்யத்வம் அநிதர ஸாதாரணமாக ஆழ்வாரிடத்திலிருக்குமது, ஒன்றாகையாலே, அவர் சரண ஸ்தாநீயராய் எம்பெருமானாரே, ஸர்வ உத்தாரகா சார்யரென்னும் அர்த்தம் ஸர்வகுர்வபிப்ராய ஸித்தமா யிருக்கும்.*

**விளக்கம்:**

வடிக்கட்டிய பகவதம்சமும் கலந்து இதுவும் ஒரு பகவதவதாரமாய் தசாவதாரத்தில் சேர்ந்தவாறுபோலே, பகவானாலே தாங்கப்படுதல், அவனுக்கு வசப்பட்டிருத்தல், அடிமையாயிருத்தல் ஆகிய இலக்கணங்களையுடைய ஆந்மாக் களை உட்புகுந்து, நெருப்பில் காய்ச்சப்பெற்ற இரும்புத்துண்டம் புறத்தே சுடர்விட்டு மிக்கு ஒளிர்வதுபோலே இராநின்ற சிறப்புடன் கூடிய பகவத் ஸ்வரூபம் என்று கொள்ள வேண்டும் என ஜநந்யாசார்யர் அருளிச் செய்தாராகையாலே பகவானுடைய பரத்துவம் வியூஹம் விபவம் முதலான ஐந்து நிலைகளிற் காட்டிலும் நம்மாழ்வார் ஸ்வரூபத்தில் சேர்ந்த இது பகவத் விலட்சண அவதாரமாயிருக்கும் (305) ''சிறப்புடைய வேறுபட்ட பொருளோடு கூடியிருந்தே வேறுபட்டிருப்பது'' என்று வடிகட்டிய பகவத் ஸ்வரூபத்துக்கும் ஆசாரிய ஸ்வரூபத் துக்கும் அடை, அடைகொளி என்னும் வேற்றுமை யுண்டாகையாலே, கூடி யிருக்கும் வேறுபாடுமுண்டாகி, அடையாலே வேறுபாடும், அடைகொளியாலே வேறு பாடின்மையும் ஆகிய இரண்டு தன்மையும் சொல்லும்படி யாயிருக்கும். இப்படி இறைவனும் ஆழ்வாரும் சேர்ந்த ஆசாரியராயிருக்கும் தன்மை நம்மாழ்வார் ஒருவரிடத் திலேயே இருக்கும் ஆகையாலே, அவருடைய திருவடி யாயிருக்கும் எம்பெருமானாரே எல்லார்க்கும் உயர்ந்த

ஆசாரியர் என்னும் பொருள் எல்லா ஆசாரியராலும் ஒருமுகமாக அங்கீகரிக்கப்பட்ட பொருளாகும்.

289. மூலம்:

*இவ்வர்த்தம், இந்த வ்யக்தி நமக்கடியுமாய் நங்கார் யத்துக் கடவதுமாயிருக்குமென்று, ஆழ்வார் தாமே அருளிச் செய்தாராகையாலே, அவரிடத்திலே தன்னுடைய அநந் யார்ஹ ஶேஷத்வாத்யாகாரங்களை அநுஸந்தித்துக் கொண்டு;*

*(306)''ஜகதாசார்யரசிதே ஸ்ரீமத் வசநபூ₄ஷணே - தத்வஜ்ஞாநஞ்ச தந்நிஷ்டாம் தே₃ஹிநாத யதீந்த்ரமே'' (ஸ்ரீவசந.பூ.தனியன்) என்று, ப்ரார்த்தித்துக் கொண்டு, ஆநுகூல்யவ்ருத்திகளுக்கு ஶக்தியில்லையானால், ''இடகிலேன் ஒன்றட்ட கில்லேன் (திருவாய்.4-7-9) என்கிற அநுதாபத்தோடே, ப்ராதிகூல்யங்களெல்லாம் ஸவாஸநமாக விட்டு, எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றிருக்கிற வதிகாரிகளுமாய், பரம விலக்ஷண ருமான வீதராகரோடே கூடி வசநபூஷணாதி ரஹஸ்யார்த்த அநுபவத்தாலே கால க்ஷேபம் பண்ணிக்கொண்டு;*

விளக்கம்:

இப்பொருளை ஆழ்வார்தாமே, 'இவ்விராமாநுசன் நமக்கு அடியராய், உலகைத் திருத்துவதாகிய நமது காரியத்திற்கடவராயி ருக்குமென்று அருளிச் செய்கையாலே, அந்த இராமாநுச ரிடத்திலே தந்தாமுடைய பிறர்க்குரிமையில்லா திருத்தல், அடிமையாயிருத்தல், வசப்பட்டிருத்தல் போன்ற நிலைகளை அநுசந்தித்துக் கொண்டு;

(306) ''முக்கோல்முநிவர்க்கெல்லாம் அரசாக விளங்கும் எதிராசரே! ஸ்வாமியே! பிள்ளைஉலகாசாரியராலே இயற்றப் பெற்ற ஸ்ரீமத் வசநபூஷணம் என்னும் திவ்விய சாத்திரத்தில் உண்மை ஞாநத்தையும், அதிற்கூறியவாறே ஒழுகும் ஒழுக்கத்தையும் எனக்குத் தந்தருள வேண்டும்'' என்று எம்பெருமானாரைப் பிரார்த்தித்துக் கொண்டு பணத்தையோ திரவியத்தையோ ஆகியவற்றைக் கொண்டு திவ்வியதேசங்களில் கைங்கர்யஞ் செய்ய சக்தியில்லை யானால், ''இடகிலேன் ஒன்றட்ட கில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன், கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித்து ஏத்த கில்லேன்'' என்று, இயலாமையை நினைத்து மனம்வருந்தியும் வைஷ்ணவத்துக்கு விரோதமான எல்லாவற்றையும் முழுவதும் விட்டு, எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றிருக்கக் கூடிய அதிகாரிகளாய், மிக்க சிறப்புடையவருமான ஐம்புலன் விஷயத்தில் ஈடுபாடு அற்றவரோடு கூடி ஸ்ரீவசநபூஷணம் ஆசார்யஹிருதயம் போன்ற இரகசிய நூல்களின் அநுபவத்தாலே காலங்கழித்துக் கொண்டு;

**290. மூலம்:**

***(307) "இத$_3$ம்தேநாதபஸ்காய" (கீதா.18.67) என்கிற படியே, அதபஸ்கர் முதலான அநதிகாரிகளுக்கு இப்பரமார்த்தங்களை வெளியிடாதே அத்யந்த பக்தியுக் தர்க்கே சொல்லிக் கொண்டு, (308) ''ராமாநுஜம் ப்ரபந்நாயே ரக்ஷாதீ$_3$க்ஷாக்ருபாநிதி$_4$ம் கரம்வக்ஷஸி நிக்ஷிப்ய நித்$_3$ராம் குர்வந்தி நிர்ப$_4$யா:'' (?) என்கிறபடியே, நிர்பயராக ஸுகமே இருங்கோளென்று அருளிச் செய்தருளினார்.***